# வெற்றியின் அபாயம்

தாவோ மூன்று நிதியங்கள்

பாகம் - ஒன்று

ஓஷோ

தமிழில்:
நா. ரமணி

லா வோட் ஸுவின்
தௌதஜிங் என்ற புத்தகக் குறிப்புகள்
சிலவற்றின் மேல்
ஓஷோ பேசியது.




**கவிதா** பப்ளிகேஷன்
தபால் பெட்டி எண் : 6123
8, மாசிலாமணி தெரு, பாண்டிபஜார்
தி. நகர், சென்னை–600 017

Published by:
**KAVITHA PUBLICATION**
8, Masilamani Street, Pondy Bazaar,
T.Nagar, Chennai - 600 017.
Ph: 2436 4243, 2432 2177 Telefax: 044-24364243
e-mail: kavitha_publication@yahoo.com
website: www.kavithapublication.in

**VETRIYIN ABAAYAM - TAO - Part I**



| | |
|---|---|
| Translated by | : **N.Ramani** |
| Coordination by | : **Swami Amano Manish** |
| Publishing Editor | : **Sethu Chockalingam** |
| First Edition | : August, 2002 |
| Second Edition | : 2007 |
| Third Edition | : August, 2011 |
| Pages | : 336 |
| Price | : **Rs. 150.00** |
| Laser | : Galaxy, Chennai - 600 024. |
| Printed at | : Asian Printers, Chennai - 14 |

# முன்னுரை

புழுக்கமான இரவு. பருவ மழை ஏறக்குறைய முடிந்துவிட்டது. இந்தியாவுக்கு வந்து இரண்டாவது மழைக்காலத்தைக் கடந்துவிட்டேன். கரும்பச்சையில் காடு முழுக்கச் செழிப்பு வெடித்துக் கிளம்பியிருக்கிறது. ஆழ்ந்த நிழலில் சிவப்புப் பூக்கள் கறுப்பாகத் தெரிகின்றன.

குருவின் வீட்டு வாசலில் சிலரோடு காத்திருக்கிறேன். காவி உடை அமைதி. ஆவல் கொப்புளிக்கும் முகங்கள். காட்டுக்குள் இரவில் மிருகங்களின் சரசரத்த நடமாட்டம் போல அடங்கிய குரல்களில் பேசிக் கொள்கிறார்கள்.

நானோ எதையும் எதிர்பார்த்து நிற்கவில்லை. எதிர்பார்ப்புகளும் அவற்றின் நூற்றுக்கணக்கான போலித் தோற்றங்களும் நிழல்களும் என்னிடமிருந்து ஒதுங்கிப் போயாகிவிட்டன. இந்த எதிர்பார்ப்புகளும் நானும் ஒருவருக்கொருவர் சலித்துப் போனவர்களாகிப் போய்விட்டோம். ஒருவருக்கொருவர் இல்லாதவர்களாகிப் போய்விட்டோம். சலிப்பை யெல்லாம் தாண்டிவிட்டவளாகிப் போய்விட்டேன்.

நீண்டகாலமாகத்தான் நாமெல்லாம் காத்திருக்கிறோம். நானும்தான் காத்திருக்கிறேன்.

கடைசியாக வாயிலைத் தாண்டி வீட்டின் ஒரு பக்கத்தில் கல் பரவியிருக்கும் பாதை வழியாக நடக்கிறோம். நாங்கள் ஒவ்வொருவரும் அவரவர் உலகத்தில் இருக்கிறோம். திடீரென அவர் தெரிகிறார். கறுத்த நாற்காலியில் பிரகாசமாக அவர் தெரிகிறார். சற்றே மாநிறம். வெகு சுவாதீனமாக அமர்ந்திருக்கிறார். மெல்லிய உடை. அவரைச் சுற்றி ஒளியும் இருட்டும் ஒன்றுக்குள் ஒன்றாகப் படர்ந்திருக்கின்றன. ஒரு கால் மேல் இன்னொரு கால் கழட்டிவிட்டிருக்கும் ஒரு காலணி. சிற்ப நேர்த்தியில் தெரியும் பாதம். விழுந்து வணங்கத் தூண்டும் அழகு.

எங்கள் காலணிகளைக் கழட்டிவிட்டு விரைகிறோம். அவருடைய பாதம் காந்தமாக இழுக்க திடீர் உற்சாகத்தோடு எங்கள் கால்கள் பளிங்குத் தரையில் விரைகின்றன. அவருக்கு முன் அமைதியாக அமர்கிறோம். அவருடைய பார்வையே அவராகிப் போக பிறர் எல்லோரும் எங்கள் கண்களுக்குத் தப்பிப் போய்விட்டார்கள். ஊடுருவிப் பார்க்கக் கூடிய அளவுக்குக் கண்ணாடியாகிப் போனதாக உணர்கிறோம். தன்னந்தனியர்

களாகிப் போனோம். அவரோடு அவருடையவர்களாக அவருக்குள் முழுக்க அங்கே இருப்பதை உணர்கிறோம்.

புன்னகைக்கிறார். அவரைச் சுற்றி அரைவட்டமாக உட்கார்கிறோம். கதை சொல்கிறவரைச் சுற்றிக் குழந்தைகள் உட்காருவதைப் போல... கிறிஸ்துமஸ் மரத்தைச் சுற்றி உட்கார்ந்து கொள்வதைப் போல... நம்பவே முடியாத அளவுக்கு அன்பு அடர்ந்து போய் ஓர் உருவமாக ஆகிப்போனவரைச் சுற்றி உட்கார்ந்து கொள்கிறோம்.

ஒரு குழந்தையின் நிஷ்களங்கமான முழுமையான புன்னகை. நாங்கள் இதுவரைக்கும் அதைப் போன்ற புன்னகையைப் பார்த்ததே இல்லை. முக்காடுகள் அனைத்தையும் நீக்கிவிட்டவராக, நிறைவானவராக, சித்தராக, முகிழ்ந்தவராக, மீண்டும் குழந்தைமைக்குள் வெடித்துக் கிளம்பிப் புன்னகையோடு உட்கார்ந்திருக்கிறார். மானுடம் முகிர்ந்த மனிதரான அவர் மானுடத்தை வென்றவராக அமர்ந்திருந்தார். நம் அனைவருக்குள்ளுமான மானுடத்தை அதன் திரண்ட பிரமாதத்திலும் ஆழ்ந்த ஆழத்திலும் உணர்ந்து கொண்டவராக அமர்ந்திருந்தார்.

அவருடைய அருட்பிரகாசத்துக்கு முன் என் மனதைப் பற்றித் தொங்கிக் கொண்டிருந்த எல்லா எண்ணங்களும் மறைந்து போய்விட்டன. வெறுமனே வேடிக்கை பார்ப்பதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியாதவனாகிப் போனேன்.

எண்ணங்கள் எல்லாமும் உடலின் கையறு நிலையின் சலனங்களாகிப் போய்விட்டன. அவரோடு இருக்கவேண்டும் என்ற என் விருப்பம், அவர் என்னோடு பேசுவதை உணர்தல் - இதற்கான என் ஏக்கத்தை வெறுமனே வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

எங்களில் சிலரோடு பேசுகிறார். காதல் அல்லது தியானத்தில் சில பிரச்சனைகள் - என்ன செய்வது - ஒருவருக்கு எதைக் கண்டாலும் பயம் - அவருக்கு ஒரு தீர்வு - பயத்தின் நடுமத்தில் இருந்துகொண்டு தியானத்தில் ஆழ்ந்து ஆஆ என்று சொல்லிப் பார்த்துக்கொள் - பிறகு தாயின் மார்பில் சலனமற்றுக் கிடக்கும் குழந்தையாகத் தன்னைப் பார்த்துக்கொள்வது - அந்தச் சக்திப் பிரவாகத்தை உணர்வது - இப்படித் தொடர்கிறது.

பிறகு என்னைப் பார்க்கிறார். நான் ஏதாவது சொல்கிறேனா என்று காத்திருக்கவில்லை. ஆச்சரியத்தில் விழுந்திருந்த என்னிடம் பேசுகிறார். ''மாதுரி! மாலை நீ தீர்க்கமான முடிவு எடுக்க வேண்டிய நேரம்'' என்கிறார். ஆமாம் என்கிறேன். தலையாட்டுகிறேன். ஏற்கெனவே எனக்குத் தெரிந்தது ;நான் என்பதைப் போல... தெரிந்தும் தெரியாமல் இருந்துவிட்டதைப் போல ..

ஒரு சின்ன டார்ச் லைட்டை எடுக்கிறார். அதன் குறுகிய வெளிச்சக் கற்றையை என் மூன்றாவது கண் மேல் பாய்ச்சுகிறார். "அசையாமல் உட்கார். கண்களை மூடிக்கொள்." என்கிறார். புருவத்துக்கு மேல் நெற்றியின் நடுவில் அந்த லைட்டின் வெளிச்சத்தைப் பாய்ச்சுகிறார்.

நான் எனக்குள் இருந்து பார்க்கிறேன். அந்த விளக்கு எனக்குள்ளிருக்கும் சலனங்களை ஒவ்வொன்றாகக் காட்ட அதைக் கவனித்துக் கொண்டிருக்கிறேன். இருட்டில் மட்டுமே இருந்து பழகிப் போன வண்டுகள் மீது திடீரென வெளிச்சம் பட்டதைப் போல இருந்தது. இருண்ட மூலையில் கரப்பான்களும் பூச்சிகளுமாகக் கூடு கட்டி ஒண்டிக் கிடந்தவை மேல் விழுந்த வெளிச்சம். அவை எழுந்து சிதறி ஓடுகின்றன.

பிறகு இருந்ததெல்லாம் ஒரு சக்தி மலர்களாகப் பூத்துக் கிடந்தது மட்டுமே. சலனங்களின் சின்னஞ்சிறு பிறப்புகள். சில பிறப்புகள் நிச்சயமற்றுத் தெரிந்தன. சில சிரமமாகத் தெரிந்தன. நடுமத்தில் உஷ்ணத்தின் நெருக்குதல். பிறகு எல்லாமும் முடிந்துவிட்டது. கண்களைத் திறக்கிறேன். தன் சக்தியெல்லாம் திரண்ட பார்வையோடு என்னைப் பார்க்கிறார். தன் ஜீவனெல்லாம் திரண்டிருக்க அவர் என்னைப் பார்க்கிறார். ஜீவன் ததும்பும் அந்நியோன்யமான குரலில் பேசுகிறார்.

"இப்போதிருந்து சும்மா அப்படியே சாதாரணமாக இருந்துவிடு."

நான் சரியென்கிறேன். ஓ என்கிறேன். தலையை ஆட்டுகிறேன். அருவமாக ஆனால் ஊடுருவிப் பார்க்கும் படியான ஒரு குழப்பம். அந்த இடத்தில் நான் இல்லை என்ற ஓர் ஆச்சரியம். ஒளியில் குளித்து வாய் பிளந்து நிற்கும் ஒரு முட்டாளைப் போன்ற உணர்வு. அவர் தொடர்கிறார்.

"சும்மா அப்படியே சாதாரணமாக இருந்துவிடு. உன் நடை வெகு சாதாரணமாக இருக்கட்டும். எப்படி நடக்கவேண்டும் என்று நினைக்கிறாயோ அப்படி நட. எதிர்காலத்தைக் கழித்துக் கட்டிவிடு. எல்லா குறிக்கோள்களையும் உடைத்துப் போட்டு விடு. உனக்கு எதிர்காலம் என்ற ஒன்று இல்லை. சந்தோஷமாக இரு. செய்வதற்கு ஏதுமில்லை. எல்லா முயற்சிகளையும் விட்டுவிடு.

நான் தியானம் செய்ய வேண்டுமா? கேட்கிறேன்.

"செய்ய வேண்டுமென்று நினைத்தால் செய்." அவருடைய பிரகாசம். இருப்பு. முழுமை என்னைக் குருடாக்கிவிடுகின்றன. என் கண்கள் தெறித்துப் போக விரும்புகின்றன. மறுபடி பார்க்க வேண்டும் என்றும் தோன்றுகிறது.

"அப்படியே தியானம் செய்தாலும் அதில் எந்த முயற்சியும் இருக்கக்கூடாது. தியானிக்க வேண்டும் என்றிருந்தால் செய். அதை

அனுபவி. ஆனால் எங்கேயோ எதையோ சென்று அடைய வேண்டும் அல்லது சாதிக்க வேண்டும் என்று நினைக்காதே. தியானிக்கத் தோன்ற வில்லை என்றால் அதைப் பற்றி எந்தக் குற்றக் குறுகுறுப்பும் பட்டுக் கொள்ளாதே. மாதுரிக்குப் பிரதி பிரவசம் தேவையில்லை. மாதுரிக்கு வேண்டியதெல்லாம் பிரைமரி தெரபிதான்.''

''அவ்வளவுதான். எல்லாமும் அவ்வவுதான். இதைச் செய்ய வேண்டும் அதைச் செய்யவேண்டும் என்பதெல்லாம் இல்லை. நான் சொல்வதெல்லாம் சாவகாசித்திரு என்பதுதான். சுவாதீனமாக இரு.''

எனக்குள் ஊடுருவிப் பார்த்துப் பேசுகிறார். ''இனி எந்தப் பிரச்சனையும் இல்லை. எந்தப் பிரச்சனையையும் இங்கே கொண்டு வராதே. சரிதானே? புரிகிறதா? இன்றிரவிலிருந்து எல்லாக் கட்டு திட்டத்தையும் விட்டு விடு. சரியா மாதுரி?'' இது போதும் என்பதைப் போல இருந்தது.

நான் தலையாட்டுகிறேன். என் மனம் அவரது சொற்களை விழுங்கிக் கொண்டிருக்கிறது. இருந்தாலும் சும்மா அப்படியே இருக்க என்னால் முடியுமா என்று கேட்கிறேன். அவர், ''சாவதானமாக இரு. சாதாரணமாக இரு'' என்கிறார். பிரச்சனை ஒன்றைச் சொல்ல வேண்டும் என்ற என் விருப்பத்தை உதாசீனம் செய்கிறார்.

அவரது கால்களில் விழுந்து வணங்குகிறேன். திரும்பிப் போய் என் இடத்தில் உட்கார்ந்தபோது சிரிப்பில் மலர்ந்திருந்தேன். பாதியாக மடங்கி விழுகிறேன். கவனித்துக் கொண்டே இருக்கிறேன். தன் கவனம் கரு ணையை முழுக்க எங்கள் ஒவ்வொருவரிடமும் பாய்ச்சிக் கொண்டே இருக்கிறார்.

தரிசனம் முடிந்தது. மலர்ச்சியின் புன்னகை என்னிடம் நிறைந் திருந்தது. அவர் எழுந்து வீட்டுக்குள் நகர்ந்தபோது பிறரோடு சேர்ந்து நானும் வணங்குகிறேன். காலணியைக் காலில் மாட்டிக் கொள்ளும் போதும் மலர்ந்து சிரித்துக்கொண்டே இருக்கிறேன். வாயிலைத் தாண்டி இருட்டில் சைக்கிளை ஓட்டிப் போனபோதும் அதே சிரிப்பு இருட்டோடு இருட்டாக என்னிடம் தொற்றிக் கொண்டே வருகிறது.

அசாதாரணமாக இருக்கவேண்டும் என்று நினைத்திருந்தேன் என்பதையே நான் நினைத்துப் பார்த்ததில்லை. ஆனால் அடுத்த நாள் என்னைக் கோபமும் கடுகடுப்பும் ஆட்கொண்டன. பொறியில் மாட்டிக் கொண்ட எலியைப் போல முழித்தேன். தப்பித்துப் போவதற்கான வழிகள் எல்லாமும் அடைபட்டுப் போயிருக்கக் கண்டேன். இதுதான் அதுதான் என்பது இல்லை. இனி எந்தப் பிரச்சனையும் இல்லை. இனி என்ன செய்வது என்ற கேள்வி இல்லை. ஆனால் கட்டுப்பாடுகள் அனைத்தையும் உதறி எறிந்துவிட வேண்டும். வேண்டும் என்றா சொன்னேன்? இல்லை

அப்படியில்லை. இதுதான் அதுதான் என்பதுதான் இல்லையே! சுவாதீனமாக இரு. சந்தோஷமாக இரு. எந்தப் பிரச்சனையும் இல்லாமல் இரு. எந்தப் பிரச்சனையும் இல்லாமல் இருக்கவேண்டும் என்பதில் கூட வேண்டும் என்பது இல்லை. என் ஆட்டத்தையெல்லாம் வெட்டித் தள்ளிவிட்டார். எரிச்சலில் கொதித்து வெடித்துக் கொண்டிருந்தவள் அடங்கிப் போனேன். அடுத்த நாள் வந்தது. அதற்கு அடுத்த நாளும் வந்தது. ஒவ்வொரு நாளிலும் நான் ஒரு நிகழ்வாகிப் போனேன். அவர் சொன்னது இன்னமும் எனக்குள் இறங்கிக் கொண்டே இருக்கிறது. சாதாரணமாக இருப்பது. என் வாழ்வில் இணைபிரியாது என்னோடு இருந்துவிட்ட அந்த முயற்சிகளின் பாற்பட்ட தன்னுணர்வு இனி எந்த முயற்சியைக் கைக் கொள்ளவும் பல நூறு தடவை தன்னையே பார்த்துக் கொள்கிறது. முயற்சிகள் யாவும் கழிந்துவிட்டன என்று நம்ப வேண்டியிருக்கிறது.

எந்தக் கவலையும் அவசியமில்லை என்று நம்புவது ஆழ்ந்த மலைச்சரிவுகளுக்கு இடையே இழுத்துக் கட்டிய கயிற்றின் மேல் நடப்பதைப் போன்றது. முயற்சி என்பது என்னோடு படிந்து விட்டிருந்தது. அதைச் சுற்றிப் பல எண்ணங்கள் படிந்து வட்டமிட்டுக் கொண்டிருந்துவிட்டன. தூர தூரத்தே இருந்து வரவழைத்துப் பண் படுத்திப் பயிரிட்டு வளர்த்து விட்டிருந்த எண்ணங்கள் அவை. புத்த கங்கள், நான் சந்தித்த மனிதர்கள், பள்ளி என்று எல்லாத் திக்குகளில் இருந்தும்தான்.

இன்னும் கொஞ்சம் சிரமப்பட்டு முயற்சி செய்யேன். இதைச் செய்தால் போதும். பெரும் வெற்றிதான். இந்த ரகசியத்தைத் தெரிந்து கொள். பிறகென்ன? எல்லோரும் உன் மீது கரிசனமாக இருப்பார்கள். உன்னை விரும்புவார்கள். உன்னைத் தெரிந்து கொள்வார்கள். - இப்படியெல்லாம் என் மனம் என்னிடம் சொல்லிக் கொண்டே இருந்துவிட்டது.

ஆனால் பகவான் இப்போது இந்த நாடகம் எல்லாம் வேண்டாம் என்று சொல்லிவிட்டார். கணத்துக்குக் கணமான சலனங்கள் - வெறுமையின் சலனங்கள் - இயல்பான சலனங்கள் - கரப்பான் பூச்சிகளின் அடையாகிப் போன மனத்தைச் சரியாகப் பார்த்து இனம் கண்டு கொள்வது. சேவகனாகிப் போன மனத்தை, நண்பனாகிப் போன மனத்தை, பழைய சட்டையாகிப் போன மனத்தை அப்படியே பார்த்துத் தெரிந்துகொள்வது - எண்ணங்களுக்கிடையேயன்றி அவற்றுக்குள்ளாகப் போகச் சலனப் படாமல் இருப்பது.

மூன்று மாதங்கள் நீண்ட பிரதிபிரசவத்தில் எனக்குள்ளிடமிருந்து எதையெதையெல்லாம் வெளியே இழுத்துப் போட்டு மறுபடி வாழ முடியுமோ அதையெல்லாம் வாழ்ந்து பார்த்துவிட்டேன். தியானத்தின்

போது மன அலைகள். உருவெளித் தோற்றங்கள், அடுக்கடுக்கான எண்ணங்கள் என்று இவற்றுள் குதித்து உடலின் திசுக்களில் இருந்து அவற்றை வெளியேற்றினேன். அவை ஓடி ஒளிந்தபோது ஏற்பட்ட அதிர்வுகளின் வெடிப்பை உணர்ந்தேன். எனக்குள்ளே போகப் போக என்னோடேயேமுட்டி மோதிக் கொண்டேன்.

தியானத்தில் சாதனை மேல் சாதனைதான். எண்ணங்களின் சாற்றையெல்லாம் உறிஞ்சித் துப்பிவிட்டேன். இருந்தும் இன்னும் அப்படி உறிஞ்சித் துப்ப எண்ணங்கள் இருந்து கொண்டேயிருக்கக் கண்டேன். இன்னமும் எண்ணங்களும், உணர்வுகளும், வலிகளும் வேண்டும் என்ற முயற்சியே வாழ்வாக இருந்தது. என்ன அருமையாகத் தியானம் செய்கிறேன் என்று சிலாகித்த ஓர் எண்ணம். எவ்வளவு நல்ல பெண் நான் என்று பாராட்டிக் கொண்ட ஓர் எண்ணம். என்ன கடுமையான உழைப்பு என்னுடையது என்று தட்டிக்கொடுத்த ஓர் எண்ணம். எவ்வளவு பிரமாதமான விசுவாசம் என்று பாராட்டிய ஓர் எண்ணம். பிரமாதமானவள்தான். எப்போதும் இப்படியே இருக்கப் போகிறேனாக்கும். இப்படியான எண்ணங்கள் எனக்குத் தேவைப்பட்டன. ஆனால் அதில் எந்த ஆச்சரிய உணர்வும் இருந்ததில்லை. எண்ணங்களுக்கு இடையே நகர்தல் இருந்ததில்லை.

லாவோத் சூ வெகு சாதாரணமானவர். சாதாரணமானவர் அன்றி வேறு எவருமல்லாதவர். எண்ணங்களுக்கு இடையே வெகு சாதாரணமாகத் திரிந்தவர். எண்ணங்கள் யாவும் மனத்தில் இருந்து வருபவை. அசாதாரணமாக இருக்கவேண்டும் என்ற ஆசையின் வெளிப்பாடுகள். அசாதாரணமாக இருக்கவேண்டும் என்ற ஆசைதான் உலகில் மிகச் சாதாரணமான விஷயம் என்று பகவான் சொல்கிறார்.

லாவோத் சூவின் சாதாரணமோ வெகுவாகப் பரந்தது. முழுமையானது, அசாதாரணமாக இருக்கவேண்டும் என்ற சாதாரணமான ஆசையை அப்படியே ஏற்றுக்கொண்டு கரைத்துவிடுவதுதான் சாதாரணமாக இருக்கும் நிலைமாற்றம். மிகச் சரியான ஜீவனின் முடிவான சாதாரணத்துவம். சாதாரணமான அழகான இயல்பின் பகுதி. இதைத் தவிர்த்துவிடத்தான் நாம் சுற்றிச் சுற்றி ஓடிக் கொண்டிருக்கிறோம். நானும் ஓடிக் கொண்டிருந்தவள்தான். அதைத்தான் நான் செய்ய முடியும். என் மனம் செய்ய முடிந்தது அதுதான்.

சாதாரணம் என்ற அந்த வார்த்தையே அதிர்ச்சி தருவதாக இருந்தது. அந்த வார்த்தையின் எளிமையே அதன் அதிர்ச்சி தரும் விளைவு களுக்குக் காரணமாக இருந்தது. அந்த அதிர்ச்சிக்குப் பின்னால் எதுவோ மலர்கிறது. ஓர் இறப்போ? ஒரு நிம்மதியோ? நீங்காத மென்மையான ஒரு

பிரக்ஞையோ? எதுவாக இருந்தாலும் அது முயற்சிகளைச் கண்ட வைத்து இல்லாத தாக்குவது என்பது தெளிவு.

மனதைப் பற்றிப் பேசியது போதும். இதோ இங்கே உட்கார்ந்திருக்கிறேன். அருமையாக இருக்கிறது. எழுதிக் கொண்டிருக்கிறேன். சுகமாக இருக்கிறது. யாருக்காக எழுதுகிறேன் என்பதும் என்ன எழுதுகிறேன் என்பதும் எழுதும் நான் யார் என்பதும் சரியாகத் தெரியாததால் கொஞ்சம் பயமாக இருக்கிறது.

அதோ அங்கே தோட்டத்து வழியே யாரோ ஒருவர் காவித் தலைப்பாகையோடு நடக்கிறார். சுற்றுச் சுவரின் கம்பி முனைகள் வழியாகத் திராட்சைக் கொடி அன்னியோன்னியமாக ஊர்ந்து கொண்டிருக்கிறது. லாவோத் சூ யார் என்பதோ அவரைப் பற்றி என்ன எழுதுவது என்பதோ எனக்குத் தெரியாது. என்னைப் பற்றி எழுதலாம்தான். ஆனால் அதில் உள்ளீடு ஏதும் இருக்காது. பெரியதொரு கட்டெறும்பு கை வழியே ஊர்கிறது.

காலையில் திறந்தவெளி அரங்கில் பகவான் லாவோத் சூ பற்றிப் பேசுகிறார். தோட்டத்துப் பச்சை சுற்றியிருக்கக் கவனித்துக் கேட்கிறேன். நன்றியோடு வாங்கிக் கொள்கிறேன். அனுபவித்துக் கேட்கிறேன். சுற்றிலும் பறவைகளின் கிளுகிளுத்த ஓசை. பக்வான் லாவோத் சூவாக ஆகிப் போகிறார். ஒரு பறவையைப் போலத் தன்னையே சுற்றிச் சுற்றிப் பார்க்கிறார். அவர் சொல்வதைப் புரிந்துகொண்டிருக்கிறேன். அங்கே உட்கார்ந்திருக்கும் எனக்கு இயற்கையின் வடிவம் என் வடிவமாக ஆகிப் போய்த் தெரிந்தது. யாரோ ஒருவருடைய இருப்பை - லாவோத் சூவின் இருப்போ? என்னுடைய இருப்புத்தானோ? - அனுபவித்து அமர்ந்திருக்கிறேன்.

எண்ணங்கள் சலித்துப் போய்விட்டன. காலை நேரத்துச் சுதாரிப்பில் அமைதியாக இருப்பதற்கு நன்றியுடையவளாகிப் போனேன். பிளந்த நீருக்குள் அமிழ்ந்து போகும் தக்கை போல உணர்வுகள் அமிழ்ந்து விட்டன. வெய்யிலில் கிடக்கும் பாறைகளின் மேல் நீர்த்தாரை ஓடுவதைப் போன்ற தெளிவு இருந்தது. யார் இந்தக் கிழட்டு இளைஞர் லாவோத் சூ என்று புரிந்துகொண்டும் புரிந்துகொள்ளாமலும் இருக்கிறேன். அது ஒரு கையறு நிலைதான். சும்மா அப்படியே இருப்பது. அற்புதமும் சாதாரணமும் ஒன்றிப் போவது. பரவசமும் உலகாயதமும் ஒன்றாகிப் போனது. பயமும் கவிதையும் கைகோர்த்துக் கொண்டது. எதுவுமில்லாதது. வார்த்தைகளற்றது. சும்மா இருப்பது...

**மா பிரேம் மாதுரி**

# பொருளடக்கம்

ஒன்று

## பரிபூரண தாவோ

சொல்லால் விளக்க முடியும் என்ற தாவோ
பரிபூரண தாவோ அல்ல.

உலக மக்கள் அழகை அழகு எனத் தெரிந்து
கொள்ளும்போது
அசிங்கம் பிறக்கிறது.
உலக மக்கள் ஒழுக்கத்தை ஒழுக்கம் எனத்
தெரிந்து கொள்ளும்போது
ஒழுங்கீனம் தலை தூக்குகிறது.

எனவே
இருத்தலும் இல்லாதிருத்தலும் வளர்தலில்
ஒன்றை ஒன்று சார்ந்தவை.
முடித்தலில் சுலபமானதும் கடினமானதும்
சார்ந்திருக்கின்றன.
மாறுபாட்டில் நீண்டதும் கட்டையானதும்
சார்ந்திருக்கின்றன.
இடத்தால் உயர்ந்ததும் தாழ்ந்ததும்
சார்ந்திருக்கின்றன.
லயத்தில் தொனியும் குரலும் சார்ந்திருக்கின்றன.
சேர்ந்திருப்பதில் முன்பும் பின்பும் சார்ந்திருக்கின்றன.

அதனால்தான் ஞானி
செயல்படாமலேயே எதையும் நிர்வகிக்கிறார்.
வார்த்தைகளின்றியே சாத்திரத்தைப் போதிக்கிறார்.

எல்லாமுமே தோன்றி வருகின்றன.
அவரோ எதிலிருந்தும் திரும்பிக் கொள்வதில்லை.
எல்லாமே அதுவாய்த் தோன்றி வருகின்றன.

அவர் எதிலிருந்தும் திருப்பிக் கொள்வதில்லை.

அவற்றுக்கு ஜீவன் அளிக்கிறார்

ஆனால் எதையும் தன்னுடையதென்று
கொள்வதில்லை.

செயல்படுகிறார். எதையும் கையகப்படுத்திக்
கொள்வதில்லை.

சாதிக்கிறார். சாதித்த பெருமையைத்
தனதென்பதில்லை.

எந்தப் பெருமைக்கும் சொந்தம் கொண்டாடுவதில்லை
என்பதால்

எந்தப் பெருமையையும் அவரிடமிருந்து நீக்கிவிட
முடிவதில்லை.

என்னுடைய கடமைகளில் ஒன்று என்ற அளவிலேயே மகாவீரரைப் பற்றிப் பேசுகிறேன். அவரோடு எப்போதும் நான் உளமாற இருந்ததே யில்லை. அவர் சொல்வதெல்லாம் கூட்டல், கழித்தல், வகுத்தல், பெருக்கல் தான். அவர் ஒரு மெய்ஞ்ஞானி அல்லர். அவருடைய ஜீவிதத்தில் கவித்துவம் இல்லை. உயர்ந்தவர். தெளிவு பெற்றவர். ஆனால் அகன்ற தொரு பாலைவனம் போன்றவர். எங்கேயும் ஒரு சிறு சோலையும் இல்லை.

சமணனாகப் பிறந்து விட்டேன், சில கடன்களைச் செலுத்த வேண்டியிருக்கிறது. கடனே என்று அவரைப் பற்றிப் பேசுகிறேன் என்றால் உளமாற அவரோடு நான் இல்லை என்பதால்தான். அறிவின் எல்லைக்குள் நின்று பேசுகிறேன். என்னைத் தவிர்த்த இன்னொருவர் என்ற அளவில்தான் பேசுகிறேன். அவர் எனக்குள் இல்லை. நானும் அவருக்குள் இல்லை.

அப்படியேதான் மோஸஸும் முகம்மதுவும். அவர்களைப் 'பற்றிப் பேசவேண்டும் என்ற எழுச்சி எனக்கில்லை. சமணனாகப் பிறக்காதிருந்தால் மகாவீரரைப் பற்றிப் பேசியே இருக்கமாட்டேன்.

முகம்மதியச் சீடர்களும் யூதச் சீடர்களும் என்னிடம் பலதடவையும் ''முகம்மது அல்லது மோஸஸ் பற்றிப் பேசக் கூடாதா?'' என்று கேட்டிருக்கிறார்கள்.

விளக்கம் தருவது சிரமம்தான். அவர்களைப் பார்க்கும்போது, பேசினால்தான் என்ன என்றிருக்கும். ஆனால் முகம்மது அல்லது மோஸஸ் எழுதியதைப் படிக்கும்போது வேண்டாமே என்று தோன்றிவிடும். என் மனதில் அதற்கான மணியோசை கேட்பதில்லை. அப்படியே பேசினாலும் என் வார்த்தைகளில் ஜீவன் இருக்காது. மகாவீரரைப் பற்றியாவது கடமை என்று வைத்துக் கொண்டு பேசவேண்டும். ஆனால் அவர்களைப் பற்றிப் பேசவேண்டிய கடமை எனக்கு ஏதுமில்லையே!

அவர்கள் எல்லோரும் ஒரே வகையினர்தான். நிறையத்தான் கணக்குப் போட்டுப் பேசுகிறவர்கள். ஏதோ ஒரு பக்கத்தின் முடிவு அவர்களுக்குத் தெரியாது. ஒற்றை ஸ்வரங்கள். லயம் சேர்ந்த ஸ்வரங்களின் ராகமல்ல.

ஒற்றை ஸ்வரத்திலும் ஓர் அழகு இருக்கிறது. ஆரவாரமில்லாத அழகு அது. ஆனால் அது விரைவில் சலித்துப் போய்விடும். ஏதோ ஒரு சமயம் கேட்கலாம். தொடர்ந்து அதையே கேட்பது என்றால் சலித்துப் போய்விடும். உடனே அதை நிறுத்திவிடத் தோன்றும்.

மகாவீரர், மோஸஸ், முகம்மது என்ற இவர்கள் எல்லோருமே ஒற்றை ஸ்வரங்கள்தான். சிக்கலற்றவர்கள். ஆரவாரமற்றவர்கள். அழகானவர்கள் கூடத்தான். ஆனால் அப்போதைக்கப்போதுதான். ஆனாலும் மகா வீரரையோ மோஸஸையோ முகம்மதுவையோ வழியில் பார்த்தால் வணங்குவேன். உடனே நழுவி ஓடியும் போய்விடுவேன்.

கிருஷ்ணனைப் பற்றிப் பேசுகிறேன். பன்முகப்பட்டவர். மனித இயல்புகளுக்கு மீறியவர். அற்புதங்கள் செய்கிறவர். ஆனால் அவர் ஒரு புனைகதையேயன்றி எதார்த்தமான மனிதரல்ல. அவருடைய அசாதா ரணமே அவர் சாதாரணமாக இருக்கச் சாத்தியமற்றவர் என்பதைத் தெளிவுபடுத்திவிடுகிறது.

இந்த உலகில் அவ்வளவு அசாதாரணமானவர்கள் இருக்கமுடியாது. அவர்கள் கனவுகளாக மட்டுமே இருக்க முடியும். புனைகதைகள். சமுதாயக் கனவுகள். எல்லோருமாகச் சேர்ந்து கனவு கண்டுகொண்டு இருந் திருக்கிறார்கள். அழகானவை. ஆனால் நம்ப முடியாதவை.

கிருஷ்ணரைப் பற்றிப் பேசுகிறேன். அப்படிப் பேசுவதை ரசிக்கிறேன். என்றாலும் ஓர் அழகான கதையைக் கேட்பதைப் போல அல்லது சொல்லுவதைப் போலவே ரசிக்கிறேன். ஆனால் அது அர்த்தமுள்ளதல்ல. பிரபஞ்சப் பேச்சல்ல.

யேசு கிருஸ்து பற்றிப் பேசுகிறேன். ஆனால் உள்ளூற இரக்கத்தோடு பேசுகிறேன். அவரோடு சேர்ந்து துன்புறுவேன். அவருடைய சிலுவையைக் கொஞ்ச நேரம் சுமந்திருப்பேன். என்றாலும் நாங்கள் இணை கோடு களாகத்தான் இருப்போம். சந்தித்துக்கொள்ள மாட்டோம்.

துக்கித்திருப்பவர் அவர். மானுடத்தின் மொத்தத் துக்கத்தையும் சுமந்து நிற்கிறவர். அவரால் சிரிக்கவே முடியாது. அவரோடு பழகினால் உன்னையும் துக்கம் பற்றிக் கொள்ளும். நீயும் உன் சிரிப்பை இழந்துவிடுவாய். அவரைச் சுற்றி எப்போதும் ஒரு சோகப் படலம் படர்ந்திருக்கிறது. அவருக்காக மனம் வருந்துவேன். ஆனால் அவரைப் போல இருக்கத் துணியமாட்டேன். அவராடு கொஞ்ச தூரம் நடந்து

அவருடைய சுமையைப் பகிர்ந்து கொள்வேன். பிறகு பிரிந்து போய்விட வேண்டியதுதான். நல்லவர். மிக நல்லவர். அமானுஷ்யமாக நல்லவர்.

ஸாரதுஸ்ட்ரா பற்றிக் கூட எப்போதாவது ஒரு முறை பேசுவதுண்டு. ஆனால் ஒரு நண்பரை விரும்புவதைப் போலத்தான் அவர் மீது விருப்பம் வைத்துப் பேசுகிறேன். அறம் பேசுகிறவர் அல்ல. வெகு சுத்தமாக இருக்க வேண்டும் என்பவரல்ல. அவர் வாழ்வை ரசிக்கிறவர். வாழ்வு தரும் ஒவ்வொன்றையும் ரசிக்கின்றவர். நல்ல நண்பர். அவரோடு எப்போதைக்கும் இருந்து விடலாம். நட்பு நல்லது. ஆனால் நட்பே எல்லாமுமாகிவிடாது.

புத்தரைப் பற்றிப் பேசுகிறேன். அவர் மீது எனக்குப் பிரியம் உண்டு. பல நூற்றாண்டுகளாக, பல பிறவிகள்தோறும் அவர் மீது பிரியம் வைத்தவனாகவே இருந்திருக்கிறேன். பிரமாதமான அழகு அவருடையது. அசாதாரணமான அழகுப் பொலிவு.

ஆனால் அவரும் இவ்வுலகத்தைச் சார்ந்திருப்பவராகத் தெரிய வில்லை. மண்மீது கால் பதித்து நடப்பவராகத் தெரியவில்லை. வானத்தில் பறக்கும்போது மண்ணில் கால் பதிப்பது எப்படி? அவரைப் பின் தொடர்ந்து போக முடியாது. அவர் எங்கே இருக்கிறார் என்று தெரிந்தால்தானே பின் தொடர முடியும்? அவர் ஒரு மேகத்தைப் போல. சமயத்துக்கு அவரைச் சந்திக்க நேர்கிறது. அதுவும் அது தற்செயலான சந்திப்புத்தான்.

அவருடைய சிறப்பின் நுண்மை எந்த அளவுக்கு என்கிறாயா? மண்ணில் வேர் பதிக்க முடியாது போய்விடும் அளவுக்கு. வேறு ஏதோ ஓர் உயர்ந்த தளத்துக்கு என்று ஆகிப்போனவர் அவர். அந்த வகையில் அவரும் ஒற்றைப் பரிமாணக்காரர். மண்ணும் விண்ணும் அவருள் சந்தித்துக் கொள்வதில்லை. சொர்க்கத்தின் தன்மையான சுகம் இருக்கும் அவரிடம் மண்ணின் மாண்பு இல்லாமல் போய்விட்டது. சுடர்விட்டு எரியும் தீக்கொழுந்து. ஆனால் திரிக்கு எண்ணெய் தரும் விளக்கு இல்லாதவர். உயர உயர எழுகிறார். மண்ணோடு அவரை இருத்திப் பிடிக்க ஏதும் இல்லை.

அவர் மீது எனக்குப் பிரியம் உண்டு. அவரைப் பற்றிப் பேசும்போது உளமாறப் பேசுகிறேன். என்றாலும் அந்த இடைவெளி இருக்கத்தான் செய்கிறது. அன்பெனும் பிரவாகத்தில் அந்த இடைவெளி இருக்கத்தான் செய்யும். நெருங்கி நெருங்கிப் போய்க் கொண்டிருக்கும்போதே கடக்க முடியாத இடைவெளி இருந்து கொண்டே இருக்கிறது. மிக நுட்பமான நெருக்கத்திலும் ஓர் இடைவெளி இருக்கிறது. அதுதான் அன்புடைய வர்களின் வேதனையே.

லாவோட் சூவைப் பற்றி முழுக்க முழுக்க வித்தியாசமாகப் பேசுகிறேன். அவரோடு எனக்கு எந்தப் பந்தமும் இல்லை. ஏதோ ஒரு வகையில் பந்தப்பட்டிருக்கக் கூட ஓரளவு இடைவெளி தேவை. அவர் மீது எனக்குப் பிரியம் என்று சொல்ல முடியாது. அது எப்படித் தன் மீதே ஒருவர் பிரியம் கொள்வது? லாவோட் சூவைப் பற்றிப் பேசும் போது என்னைப் பற்றியே நான் பேசுவதைப் போல இருக்கிறது. அவரோடு என் ஜீவன் ஒருமித்துப் போய்விடுகிறது. அவரைப் பற்றிப் பேசும்போது என்னையே, என் முகத்தையே ஒரு கண்ணாடியில் பார்த்துக் கொண்டு பேசுவதைப் போல இருக்கிறது. அவரோடு இரண்டறக் கலந்துவிடுகிறேன். கலந்து விடுவது கூட இல்லை. அவரே நான். நானே அவர்.

சரித்திர ஆசிரியர்கள் அப்படி ஒருவர் இருந்தார் என்பதைக் கூடச் சந்தேகிக்கிறார்கள். எனக்கு அப்படி எந்தச் சந்தேகமும் இல்லை. எப்படி நானிருப்பதை நானே சந்தேகத்தோடு பார்ப்பது? நான் காரிய சாத்தியம் என்று ஆகிப்போன அதே கணம் அவர் எனக்கு உண்மையாகிப் போனார். சரித்திரம் அப்படி ஒருவர் இருந்திருக்கவே இல்லை என்று நிரூபிக்கலாம். இனி வரும் நாட்களில் லாவோட் சூவைப் பற்றிப் பேசும்போது வேறொருவரைப் பற்றிப் பேசுகிறேன் என்பதில்லை. என்னைப் பற்றியே பேசுகிறேன். லாவோட் சூ வேறொரு பெயரிட்டுக் கொண்டு பேசுவதைப் போல. வேறு ஒரு நாம ரூபம்! வேறு ஒரு பிறவி!

லாவோட் சூவிடம் மகாவீரரைப் போல கணித நுண்மை கிடையாது. என்றாலும் தம் பைத்தியக்காரத்தனத்தில் தர்க்க ரீதியாக இருக்கிறார். அவருடையது ஒரு பைத்தியக்காரத்தனமான தர்க்க வாதம். அவர் சொல்லிப் போனதற்குள் நுழைந்து பார்க்கும் போது உனக்கே தெரியவரும். அது மிக வெளிப்படையாகத் தெரிவதில்லை. அவருக்கே உரித்தானதொரு தர்க்க வாதம் இருக்கிறது. முட்டாள்தனமாகத் தோன்றுவது. முரண் பாடுகளின் மூட்டையாகத் தெரிவது. ஒரு பைத்தியக்காரனுடையது. அவர் சொற்களில் உறுதி திண்மையாக இருக்கிறது.

ஒரு குருடன் கூட மகாவீரரின் தர்க்க வாதத்தைப் புரிந்துகொள்ள முடியும். லாவோட் சூவின் தர்க்க வாதத்தைப் புரிந்து கொள்ளவோ நீ உனக்கெனப் புதியதொரு ஜோடிக் கண்களைப் படைத்துக் கொள்ள வேண்டியிருக்கும்.

அவருடைய தர்க்க வாதம் மிக நுண்மையானது. சாதாரண தர்க்க வாதமல்ல. உள்ளுறைந்திருக்கும் வாழ்வின் தர்க்கம். மிக நுட்பமான வாழ்வின் தர்க்கம். மேம்போக்கில் முட்டாள்தனமாகத் தெரியும். ஆழ்ந்து

பார்க்கும்போதோ அதில் ஒருமிப்புக் காணப்படும். அதை ஊடுருவிப் பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டும். லாவோட் ஸுவைப் புரிந்து கொள்ள ஒருவன் தன் மனதை முற்றிலும் மாற்றிக்கொள்ள வேண்டும்.

உன்னை மாற்றிக் கொள்ளாமலேயே மகாவீரரைப் புரிந்துகொள்ள முடியும். இருவரும் ஒரே தளத்தில் இருக்கிறீர்கள். என்னதான் உன்னைவிட வெகுதூரம் முன்னேறிப் போய்விட்டிருந்தாலும், இருவரும் இருப்பது ஒரே தளத்தில்தான். சேருமிடத்துக்கு அவர் போய்ச் சேர்ந்திருந்தாலும் அப்படியே.

லாவோட் ஸுவைப் புரிந்துகொள்ள முயலும்போது அவர் நெளிந்து வளைந்து போவது தெரிகிறது. கிழக்கே போகிறார் கொஞ்சம். அடுத்து மேற்கு நோக்கித் திரும்பி விடுகிறார். கிழக்குத்தான் மேற்கு என்கிறார். மேற்குத்தான் கிழக்கு என்கிறார். இரண்டும் ஒன்றே, ஒன்றாக இருப்பவை தான் என்கிறார். எதிர்மறைகளின் ஒருங்கிணைவில் அவருக்கு அவ்வளவு ஆழ்ந்த நம்பிக்கை. வாழ்க்கையும் அப்படித்தானே இருக்கிறது!

லாவோட் ஸு வெறுமனே வாழ்க்கைக்காகப் பேசுகிறவர் அல்ல. வாழ்க்கை முட்டாள்தனமானது என்றால் லாவோ ஸுவும் முட்டாள் தனமானவர்தான். வாழ்வுக்கு முட்டாள்தனமான தர்க்கம் பொருந்தி வருமென்றால் லாவோட் ஸுவுக்கும் அது பொருந்தி வரும்.

லாவோட் ஸு வாழ்வைப் பிரதிபலிக்கிறார். எதையும் அதனோடு சேர்த்துப் பார்த்துப் பேசுவதில்லை. அதற்குப் புறம்பானது எதிலிருந்தும் எதையும் எடுத்துக் கொள்வதில்லை. என்ன இருக்கிறதோ அதை அப்படியே ஏற்றுக் கொள்கிறார்.

புத்தரின் ஆன்மிகத்தைப் புரிந்துகொள்வது வெகு சுலபம். மிக எளிமையானது. அதைத் தெரிந்து கொள்ளாமல் போவது துர்லபம். அந்த அளவுக்கு அவர் அசாதாரணமானவர்.

ஆனால் லாவோட் ஸுவின் ஆன்மிகத்தைப் பார்ப்பது சிரமம். உன்னைப் போலவே அவர் மிகச் சாதாரணமானவர். உன்னுடைய புரிதலில் ஒரு வளர்ச்சி இருக்கவேண்டும். உன்னைத் தாண்டி புத்தர் ஒருவர் போனால் உயர்ந்த மனிதரொருவர் போவதைப் பார்த்த உடனே தெரிந்துகொள்ள முடியும். உயர்ந்த மனிதரொருவரின் பொலிவு அவரைச் சூழ்ந்திருக்கிறது. அவரைத் தவறவிடுவது சிரமம். முடியாது என்றே கொள்ளலாம்.

லாவோட் சு உன் பக்கத்து வீட்டுக்காரராக இருக்கலாம். மிகச் சாதாரணமானவராக இருப்பதாலேயே அவரைத் தெரிந்து கொள்ளாமல் இருக்கிறாய். ஓர் அசாதாரணமான சாதாரணம். அதுதான் அதன் அழகே.

அசாதாரணமானவர் ஆகிவிடுதல் மிகவும் எளியது. சிறிது முயற்சி செய்தால் போதும். அவ்வளவுதான். சீர் செய்து கொள்ளவேண்டும். பழக்கங்களை வழக்கப்படுத்திக்கொள்ள வேண்டும். சிறிது ஆழ்ந்த அக ஒழுக்கம்தான் அது. மிகச் சீரமையானவராக ஆகிவிடலாம். உலகத்துக்குப் பரிச்சயம் இல்லாத அளவுக்குச் சீர்மை. ஆனால் சாதாரணமாக இருப்பதே மிக அசாதாரணமானது.

எந்த முயற்சியாலும் எந்தப் பயனும் கிடைக்காது. பயிற்சியோ வழிமுறைகளோ சாதனையோ செய்து இதைச் சாதிக்க முடியாது. புரிதல் மட்டுமே வேண்டும்.

புத்தராவதற்குத் தியானம் துணை செய்யும். லாவோட் சு ஆவதற்குத் தியானம் ஒன்றும் செய்ய முடியாது. தெளிவு வேண்டும். வாழ்வு எப்படி இருக்கிறதோ அப்படியே புரிந்து கொள்ளும் தெளிவு. தைரியமாக அதை வாழும் தெளிவு. வாழ்விலிருந்து தப்பித்துக் கொள்வதல்ல. அதனிடமிருந்து மறைந்து ஓடுவதல்ல. அதைத் தைரியமாக எதிர்கொள்வது. நல்லதோ கெட்டதோ, தெய்விகமானதோ அசுரத்தனமானதோ, சொர்க்கமோ நரகமோ - அப்படியே எதிர் கொள்வது.

லாவோட் சுவாக இருப்பது அல்லது லாவோட் சுவைத் தெரிந்து கொள்வது மிகச் சிரமமான காரியம். லாவோட் சுவைத் தெரிந்து கொள்ள முடியுமானால் ஏற்கெனவே லாவோட் சுவாக ஆகிவிட்டாய் என்று பொருள். புத்தரைத் தெரிந்துகொள்ள புத்தராக வேண்டும் என்பதில்லை. லாவோட் சுவைத் தெரிந்துகொள்ள லாவோட் சுவாக ஆகிவிட வேண்டும்., இல்லையேல் முடியாது.

கன்ஃப்யூஸியஸ் ஒருமுறை லாவோட் சுவைப் பார்க்கப் போனாராம். லாவோட் சு அப்போது, முதியவர். கன்ஃப்யூஸியஸோ இளைஞர். லாவோட் சுவைப் பற்றி யாருக்கும் தெரியாது. கன்ஃப்யூஸியஸைத் தெரியாதவரே இல்லை. அரசர்களும் பேரரசர்களும் தம் சபைகளுக்கு அவரை அழைத்துக் கௌரவப்படுத்தினார்கள். அறிஞர்கள் ஆலோசனைக்கு அணுகினார்கள். அன்றைய சீனாவில் அவரே மிகப் பெரிய அறிஞர்.

எப்படியோ தமது விஷய ஞானமெல்லாம் பிறருக்கு உதவும்படியாக இருக்கலாம், தமக்கல்ல என்று அவர் அறிந்திருக்க வேண்டும். தான்

தனக்கெனப் பெற்றுக் கொள்வதற்கு அதில் ஏதுமில்லை என்று நினைத்திருக்க வேண்டும். ஒரு நிபுணராகப் பிறருக்கு உதவி செய்ய முடிந்த அவருக்குத் தனக்குத்தானே உதவியாக இருக்க முடியவில்லை.

எனவே தனக்கு யார் உதவ முடியும் என்று ரகசியமாகத் தேட ஆரம்பித்தார். சாதாரண அறிஞர்கள் இவரைத் தேடி வருகிறார்கள். எனவே அவர்களால் பயனில்லை. பெரிய அறிஞர்கள் தமது பிரச்சனைகளை இவரிடம் கொண்டு வந்தார்கள். அவர்களாலும் பயனில்லை. இவ்வளவு பெரிய உலகத்தில் எங்காவது யாரோ ஒருவர் இருக்கவேண்டும். ரகசியத் தேடலில் முனைந்தார்.

தனக்கு உதவி செய்யக் கூடியவராக யாராவது இருப்பார்களா என்று பார்த்துவரத் தன் சீடர்களை அனுப்பி வைத்தார். அப்படிப்பட்ட ஒருவர் - மிக வயதானவர் இருப்பதாக அவர்கள் தகவல் சொன்னார்கள். அவருடைய பெயர்கூட யாருக்கும் தெரியவில்லை. மூப்பர் என்றுதான் எல்லோரும் சொன்னார்கள். லாவோட் சு என்றாலே முதியவர் என்றுதான் பொருள். அது ஒரு பெயரே அல்ல.

எங்கே பிறந்தவர் என்று யாருக்கும் தெரியாது. அம்மா யார், அப்பா யார் என்று தெரியாது. தொண்ணூறு வயதானவர். என்றாலும் அவரைப் பார்த்தவர்கள் மிகச் சிலரே. அதுவும் அவரைப் புரிந்து கொள்ளுமளவுக்குச் சரியான கண்ணோட்டமுள்ள அரிய சிலரே அவரைச் சந்தித்திருக்கிறார்கள். அரியவர்களுக்கே ஆனவர் அவர். மிகச் சாதாரணமானவர் என்றாலும் அரிய மனதினருக்கே உரித்தானவர்.

மூப்பர் என்று அறியப்பட்ட ஒருவர் இருக்கிறார் என்ற சேதி கேட்டு அவரைப் பார்க்க கன்ஃப்யூஸியஸ் போனார். லாவோட் சுவைப் பார்த்தவுடனே மிகத் தெளிவான ஒருவரை, மிகச் சிறந்த அறிவொருங்கிணைப்புள்ள ஒருவரை, மிகப் பிரமாதமான தர்க்கக் கூர்மை உள்ள ஒருவரை, ஒரு மேதையைச் சந்தித்திருக்கிறோம் என்பதை உணர்ந்து கொண்டார்.

அங்கே என்னவோ இருக்கிறது என்று தெரிந்தது. ஆனால் பிடிபடவில்லை. என்னவோ ஒன்று தெளிவில்லாமல் அற்புதமாய் இருப்பது தெரிந்தது. என்னதான் வெகு சாதாரணமாகத் தெரிந்தாலும் அவர் சாதாரணமானவர் அல்ல என்பது தெரிந்தது. ஏதோ ஒன்று மறைந்திருக்க வேண்டும். ஒரு பொக்கிஷத்தைச் சுமந்து கொண்டிருக்க வேண்டும்.

கன்ஃப்யூஸியஸ், ''ஒழுக்கம் பற்றி என்ன சொல்கிறீர்கள்? எப்படி நல்ல நடத்தையைக் கற்றுக் கொள்வது?'' என்று கேட்டார். கன்ஃப்யூஸியஸ் அறநெறி பேசுகிறவர். நல்ல நடத்தைதான் மிகப் பெரிய சாதனை என்று நினைத்திருக்க வேண்டும்.

லாவோட் சூ பலமாகச் சிரித்துக் கொண்டார். ''நீ ஒழுக்கம் கெட்டவன் என்றால்தான் ஒழுக்கத்தைப் பற்றிய சிரத்தை உனக்கு இருக்க வேண்டும். உனக்கென நலன் எதுவும் இல்லையென்றால்தான் நன்னடத்தை பற்றிய கேள்வியே எழுகிறது. அநாவசியக் கவலையும் இருப்பதில்லை. ஒழுக்கமான ஒருவருக்கு ஒழுக்கம் என்ற வார்த்தை இருப்பதே தெரியாது. எனவே முட்டாளாக இருக்காதே. எதையும் பயிற்சியின் முயற்சியின் மூலம் பெற வேண்டும் என்று நினைக்காதே. இயல்பாக இரு'' என்றார்.

அந்த மனிதரின் தர்க்கம் கன்ஃப்யூஸியஸை அதிர வைத்தது. அதைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. தப்பித்து ஓடினார். பனிச்சரிவிலிருந்து தப்பி ஓடுகிறவனைப்போல ஓடிப் போனார்.

ஒரு மரத்தடியில் காத்துக் கொண்டிருந்த அவருடைய சீடர்களுக்குத் தம் கண்களையே நம்ப முடியவில்லை. பேரரசர்கள் பலரையும் பார்த்துவிட்டு எந்தப் பதற்றமும் இல்லாமல் வந்தவரா இவர்? இப்படி நடுங்கிக் கொண்டிருக்கிறாரே! உடல் முழுக்க வியர்த்து விறுவிறுத்துப் போயிருக்கிறாரே! நம்பவே முடியவில்லை. என்ன நடந்தது? இந்த லாவோட் சூ என்ன செய்துவிட்டார்? கேட்டதற்கு கன்ஃப்யூஸியஸ், ''பொறுங்கள். கொஞ்சம் சுதாரித்துக் கொள்கிறேன். இந்த ஆள் மிகவும் ஆபத்தானவர்'' என்றார்.

தொடர்ந்து, ''யானைகள் போன்ற பெரிய மிருகங்களைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவை எப்படி நடக்கின்றன என்பது எனக்குத் தெரியும். கடலுக்குள் மறைந்திருக்கும் பிராணிகளைப்பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன். அவை எப்படி நீந்துகின்றன என்பது எனக்குத் தெரியும். ஆயிரக்கணக்கான மைல் தூரம் பறக்கும் பெரிய பறவைகள்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவை எப்படிப் பறக்கின்றன என்பது எனக்குத் தெரியும். ஆனால் இந்த மனிதர் ஒரு டிராகன். இவர் எப்படிப் பறக்கிறார் என்பது யாருக்கும் தெரியாது. அவருடைய பக்கம் போய்விடாதீர்கள். மரணத்தைப் போன்றவர்'' என்றார்.

இதுதான் ஒரு குருவின் இலக்கணம். குரு மரணத்துக்கு ஒப்பானவர். பக்கம் போனால், நெருங்கிப் போனால் பயந்துவிடுவாய். நடுங்கிப்

போவாய். இன்னதெனத் தெரியாத மரண பயம் கவ்வும். அவரைப் பார்க்க கன்ஃப்யூஸியஸ் மறுபடி போகவே இல்லையாம்.

லாவோட் சு ஒருவகையில் மிகச் சாதாரணமானவர். இன்னொரு வகையில் மிக அசாதாரணமானவர். புத்தரைப்போல அசாதாரணமானவர் அல்ல. முழுக்க வேறொரு வகையில் அசாதாரணமானவர். அவருடைய அசாதாரணம் வெளிப்படையானதல்ல. மறைந்திருக்கும் ஒரு பொக்கிஷம். கிருஷ்ணரைப்போல அற்புதங்கள் எதுவும் செய்தவர் அல்ல. அவருடைய ஒட்டுமொத்தமும் ஓர் அற்புதம். அவருடைய நடை, பார்வை, பாவனை என்று அத்தனையிலும் ஓர் அற்புதம் தெறித்தது. அவருடைய ஜீவிதம் முழுக்க ஓர் அற்புதம்.

யேசு கிருஸ்துவைப்போல அவரிடம் சோகமில்லை. வாய்விட்டு அவரால் சிரிக்க முடியும். அடிவயிற்றிலிருந்து பொங்கி எழும் சிரிப்பு. சிரித்துக் கொண்டே பிறந்தவராம் அவர். குழந்தைகள் அழுது கொண்டுதான் பிறக்கின்றன. ஆனால் அவரோ சிரித்துக் கொண்டே பிறந்தாராம்.

உண்மையாகத்தான் இருக்கவேண்டும் என்று எனக்கும் படுகிறது. லாவோட் சுவைப் போன்ற ஒருவர் சிரித்துக் கொண்டுதான் பிறந்திருக்க வேண்டும். யேசுவைப்போல வருத்தம் தோய்ந்தவர் அல்ல. அவரால் சிரிக்க முடியும், அட்டகாசமாகச் சிரிக்க முடியும்.

ஆனால் அந்தச் சிரிப்பின் அடி ஆழத்தில் துக்கம் இருந்திருக்கிறது. உன்னைப்பற்றிய சோகம். ஜீவிதம் முழுவதையும் பற்றிய சோகம். அவருடைய சிரிப்பு மேம்போக்கானதல்ல.

ஸாரதூஸ்ட்ராவும் சிரிக்கிறவர். அவருடைய சிரிப்பு வித்தியாச மானது. அதில் சோகமில்லை. லாவோட் சுவிடம் யேசுவின் சோகம் இருக்கிறது. ஆனால் யேசுவைப்போலச் சோக வயப்பட்டவர் அல்ல. ஸாரதூஸ்ட்ராபோலச் சிரிக்கிறார். ஆனால் ஸாரதூஸ்ட்ராவின் சிரிப்பல்ல அவருடையது. அவருடைய சோகத்தில் ஒரு சிரிப்பு இருக்கிறது. அவருடைய சிரிப்பில் ஒரு சோகம் இருக்கிறது. எதிரிடையானவற்றின் சந்திப்பு அவர். சுருதி கலையாத ஒரு பாடல்.

நினைவில் வைத்துக் கொள். அவரை நான் வியாக்கியானம் செய்யவில்லை. எனக்கும் அவருக்குமிடையே எந்தத் தூரமும் இல்லை. என் மூலமாக அவர் உங்களோடு பேசுகிறார். வேறோர் உடல். வேறொரு பெயர். வேறொரு பிறவி. ஆனால் அதே ஆத்மா.

இனி சூத்திரத்தைப் பார்ப்போம்.

**சொல்லால் விளக்க முடியும் என்ற தாவோ
பரிபூரண தாவோ அல்ல.**

முதலில் இந்தச் சூத்திரங்கள் எப்படி வந்தன என்பதைச் சொல்லிவிடுகிறேன். அவற்றைப் புரிந்துகொள்ள உதவியாக இருக்கும்.

தொண்ணூறு வருடம் லாவோட் சூ வாழ்ந்தார். வாழ்வதைத் தவிர வேறு எதுவும் செய்யவில்லை. முழுமையாக வாழ்ந்தார். சீடர்கள் பல முறை அவரை எழுதி வைக்கச் சொல்லிக் கேட்டுக் கொண்டார்கள். அவரோ சொல்லால் விளக்க முடிந்த தாவோ மெய்யான தாவோ ஆக முடியாது என்றார். மெய்யைச் சொல்லில் வடிக்க முடியுமானால் அப்போதே அது பொய்யாகிவிடுகிறது. எனவே தாம் எதையும் சொல்லப் போவதில்லை. எழுதப் போவதில்லை என்றார்.

அப்படியானால் சீடர்கள் அவரோடிருக்கும் போது என்ன செய்து கொண்டிருந்தார்கள்? அவரோடு இருந்திருக்கிறார்கள். அவ்வளவே. அதுதான் சத்சங்கம் என்பது. அவரோடு ''இருப்பது''. அவரோடு வாழ்ந்தார்கள். அவரோடு பழகினார்கள். அவருடைய ஜீவிதத்தை உள்வாங்கிக் கொண்டிருந்தார்கள்.

அவரோடு இருந்து அவருக்கெனவே இதயத்தைத் திறந்து வைத்துக் கொண்டிருந்தார்கள். அவரோடு இருந்து வேறு எதையும் நினைக்க முடியாத அளவுக்கு வாழ்ந்திருந்தார்கள். அவரோடு இருந்து மேலும் மேலும் மௌனத்தில் தோய்ந்து கொண்டிருந்தார்கள். அந்த மௌனத்தில் அவர்களிடம் அவர் வந்து சேர்ந்தார். அவர்களிடம் வந்து அவர்களுடைய கதவுகளைத் தட்டினார்.

தொண்ணூறு வருடங்களுக்கு எதையும் எழுதி வைக்கவோ பேசவோ மறுத்துவிட்டார். அதுதான் அவருடைய அடிப்படை நோக்கு. சத்தியத்தைச் சொல்லில் வடிக்க முடியாது. சொல்லித் தர முடியாது. சத்தியத்தைப் பற்றி ஏதாவது சொன்ன அந்தக் கணமே அது அசத்தியமாகிப் போகிறது. சொல்வதே அதைப் பொய்யாக்கி விடுகிறது.

அதைச் சொல்லித்தரவே முடியாது. அதிக பட்சம் அதைக் குறிப்பால்தான் காட்ட முடியும். அந்தக் குறிப்பு உன்னுடைய ஜீவிதமாக இருக்க வேண்டும். உன்னுடைய மொத்த வாழ்வாக இருக்க வேண்டும். வார்த்தைகளால் அதைக் குறிக்க முடியாது. அவர் வார்த்தைகளுக்கு எதிரானவர். மொழிக்கு எதிரானவர்.

அவர் வழக்கமாகக் காலை நேரத்தில் உலாவப் போவாராம். அப்போது பக்கத்து வீட்டுக்காரர் ஒருவர் அவரோடு போவதுண்டு. அவர் மௌனத்தில் உறைந்தவர். பேசுவது அவருக்குப் பிடிக்காது எனத் தெரியுமாதலால் அந்தப் பக்கத்து வீட்டுக்காரர் மௌனம் காத்தார்.

''ஹலோ!'' என்று சொல்வதற்குக்கூட அனுமதியில்லை. அந்த நாள் எப்படியிருக்கிறது என்று எதுவும் சொல்லிவிடக் கூடாது. ''ஆஹா! காலைப் போது எவ்வளவு அழகாக இருக்கிறது!'' என்று சொன்னால் அது அதிக வாயாடித்தனமாகிவிடும். லாவோட் சூ மௌனமாகப் பல மைல் தூரம் நடப்பார். பக்கத்து வீட்டுக்காரரும் கூட இருப்பார்.

பல வருடங்களாக இப்படி நடந்து கொண்டிருந்திருக்கிறது. ஒரு முறை பக்கத்து வீட்டுக்காரருக்கு ஒரு விருந்தாளி வந்திருந்தார். வந்தவர் காலையில் உலாவப் போகும்போது உடன்போக விரும்பவே அழைத்துப் போனார். வந்தவருக்கு லாவோட் சூவைப் பற்றித் தெரியாது. அவருடைய பழக்கங்கள் பற்றியும் எதுவும் தெரியாது. கூட இருந்த இரண்டு பேரும் எதுவும் பேசாமல் மௌனமாக வெகு நேரம் இருக்கவே, இவர் திணறிப் போனார். ஏன் அவர்கள் அப்படிப் பேசாமல் இருக்கவேண்டும் என்பதை அவரால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. அந்த மௌனம் அவருக்கு ஒரு பெரிய சுமையாக ஆகிவிட்டது.

மௌனமாக இருப்பது எப்படி என்பது தெரியாதவர்களுக்கு மௌனம் சுமையாகத்தானாகிவிடும். பேசுவதன்மூலம் ஏதாவது தெரிவிக்கிறாய் என்கிறாயா? இல்லை. பேசுவது ஒரு சுமையிறக்கம் - அவ்வளவுதான்.

பார்க்கப் போனால் வார்த்தைகள் மூலம் தொடர்பு கொள்வதென்பது நடப்பதேயில்லை. பிறரோடு தொடர்பு கொள்வதைத் தவிர்க்கத்தான் பேச்சு பயன்படுகிறது.

பேசுவதைக் கொண்டு உன்னைச் சுற்றி வார்த்தைகளினால் ஆன திரை ஒன்றை இழுத்துவிட்டுக் கொள்கிறாய். உன்னுடைய உண்மையான நிலை என்னவென அந்தத் திரையைத் தாண்டிப் பார்க்க முடிவதில்லை. வார்த்தைகளைக் கொண்டு உடை உடுத்திக் கொள்கிறாய்.

கூட நடந்து கொண்டிருந்த அந்த மனிதருக்கு, தான் நிர்வாண மாகிவிட்ட உணர்வு தொற்றிக் கொண்டது. மூச்சு முட்டியது. சங்கடத்தில் நெளிந்தார். தர்ம சங்கடமாக இருந்தது. எனவே சூரியன் உதித்த போது,

''என்ன ரம்மியமான சூரியன்! பாருங்களேன். என்ன அழகான பிறப்பு இந்தச் சூரியோதயம்!'' என்றார்.

அவர் சொன்னது அவ்வளவுதான். வேறு எந்த மறு மொழியும் இல்லை. லாவோட் சூவுக்கு இது பிடிக்காது என்பது பக்கத்து வீட்டுக் காரருக்குத் தெரியும். என்றாலும் எதுவும் சொல்லமாட்டார் என்பதும் தெரியும்.

திரும்பிப் போய்ச் சேர்ந்தபின் லாவோட் சூ அவரிடம், ''நாளையிலிருந்து அந்த ஆளைக் கூட்டிக் கொண்டு வந்துவிடாதே, வாயாடி!'' என்றாராம்.

அவர் ''என்ன அருமையான சூரியன்! என்ன அருமையான காலை நேரம்!'' என்பதை மட்டும்தானே சொல்லியிருந்தார். அதுவும் இரண்டு மூன்று மணிநேரம் தொடர்ந்து நடந்த போதும் இவ்வளவுதான் அவர் சொன்னது. லாவோட் சூவோ, ''இந்த வாயாடியை மறுபடி கூட்டிக்கொண்டு வந்துவிடாதே. ரொம்பத்தான் பேசுகிறான். பயனில்லாத பேச்சு. எனக்குக் கண்ணிருக்குது. சூரியன் அழகாக உதிப்பதை நானே பார்த்துக் கொள்ள முடியும். அதைச் சொல்லிக்காட்ட வேண்டிய அவசியம் என்ன?'' என்று சொல்லி விட்டார்.

லாவோட் சூ ஆழ்ந்த மௌனத்திலேயே வாழ்ந்தார். தான் உணர்ந்து கொண்ட சத்தியம் பற்றிப் பேசுவதைத் தவிர்த்தார். பின்வரும் தலைமுறைகளுக்காக எழுதி வைக்க வேண்டும் என்பதை ஏற்றுக் கொள்ளவே இல்லை.

தொண்ணூறு வயதானபோது தம் சீடர்களை விட்டு நீங்கினார். விடைபெறும்போது, ''இனி அந்த மலைகளை நோக்கிப் போகிறேன். இமாலயத்துக்குப் போகிறேன். சாவதற்குத் தயாராகிக்கொள்ள அங்கே போகிறேன். மக்களோடு இருப்பது நல்லதுதான். நீங்கள் வாழும் உலகத்தில் இருப்பது நல்லதுதான். ஆனால் சாவு சமீபிக்கும்போது ஏகாந்தமாக இருப்பதே நல்லது. அப்போதுதான் பரிசுத்த ஏகாந்தமாக உலக மாசு ஏதுமில்லாமல் ஆதி மூலத்துக்குப் போய்ச் சேரமுடியும்'' என்றார்.

சீடர்களுக்கோ வெகு வருத்தம். பாவம் அவர்களால் என்ன செய்யமுடியும்? சில நூறு மைல்கள் தூரம் அவரைத் தொடர்ந்து போனார்கள். போகப்போக அவர்களைத் திரும்பிப்போக வைத்துவிட்டார்.

தனியாக எல்லையைக் கடந்தார். அப்போது எல்லையில் இருந்த காவல்காரன் அவரைச் சிறைப்படுத்திவிட்டான். காவல்காரனும் அவருடைய சீடன்தான். ''நீங்கள் ஒரு புத்தகம் எழுதித் தராவிட்டால் எல்லை தாண்டிப் போக விடமாட்டேன். அந்த அளவுக்காவது நீங்கள் மானுடத்துக்கு ஏதாவது செய்தாக வேண்டும். ஒரு புத்தகம் எழுதுங்கள். அது நீங்கள் செலுத்த வேண்டிய கடன். இல்லையென்றால் எல்லையைக் கடந்து போக விடமாட்டேன்'' என்றான். இப்படியாக லாவோட் சூ தன் சீடன் ஒருவனாலேயே மூன்று நாட்கள் சிறை வைக்கப்பட்டார்.

அருமையான நிகழ்ச்சி. அதில் எவ்வளவு அன்பு தோய்ந்திருக்கிறது என்று பார். வற்புறுத்தலால் எழுதிய புத்தகம் லாவோட் சூவின் சின்னஞ்சிறிய புத்தகம் - ''தாவோ த ஜிங்.'' எழுதித் தீர வேண்டியிருந்தது. இல்லாவிட்டால் போக முடியாதே. காவல்காரனிடம் அதிகாரம் இருக்கிறது. ஏதாவது பிரச்சனை செய்துவிடலாம். எனவே லாவோட் சூ எழுதியே ஆக வேண்டிய கட்டாயம் உருவாகி விட்டது. மூன்றே நாட்களில் முடித்துவிட்டார்.

அந்தப் புத்தகத்தின் முதல் வரி -

**சொல்லால் விளக்க முடியும் என்ற தாவோ**
**பரிபூரண தாவோ அல்ல**

முதன்முதலாக அவர் சொன்னது அதுதான். எதைச் சொல்லிவிட முடியுமோ அது சத்தியமாக முடியாது. இதுதான் அந்த நூலுக்கு அறிமுகம். உன்னைச் சிலிர்த்தச் சுதாரித்துக்கொள்ள வைக்கிறது. வார்த்தைகள் இனி வரப்போகின்றன. வார்த்தைகளுக்கு இரையாகிப் போய்விடாதே.

வார்த்தைகளற்றதை நினைவில் நிறுத்து. மொழியால் சொற்களால் சொல்லிவிட முடியாததை நினைவில் நிறுத்து. தாவோ வெளிப்படுத்த லாம்தான். ஆனால் ஒரு ஜீவனிடமிருந்து இன்னொரு ஜீவனுக்குத் தெரியப்படுத்துவது. குருவோடு இருக்கும்போது தெரிவிப்பது. ஒன்றும் செய்யாமல் எந்தச் சாதகமும் மேற்கொள்ளாமல் இருக்கும்போது தெரிவிக்கப்படுவது. குருவோடு வெறுமனே இருக்கும்போது தெரிவிக்கப் படுவது.

சத்தியத்தை ஏன் சொல்ல முடியாது? அதில் என்ன சிரமம்? சத்தியத்தைச் சொல்லிவிட முடியாது என்பதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. முதலாவதும் முதன்மையானதுமான காரணம் சத்தியம் எப்போதும் மௌனத்தில் உணரப்படுவதாகும். மனதின் குறக்களி

நின்றுவிடும்போது சத்தியம் உணரப்படுகிறது. மோனத்தில் உணர்ந்ததை ஓசையில் வெளிப்படுத்துவது எப்படி?

அது ஓர் அனுபவம். எண்ணமல்ல. எண்ணம்தான் என்றால் அதை வெளிப்படுத்திவிடுவதில் சிரமம் ஏதும் இருக்க முடியாது. எவ்வளவுதான் சிக்கலான எண்ணமென்றாலும் எப்படியாவது அதை வெளிப்படுத்தி விடலாம். அதில் பிரச்சனையே இல்லை. கேட்பவருக்குப் புரியாமல் போய்விடலாம். அதனாலென்ன? வெளிப்படுத்த முடிகிறதே.

ஐன்ஸ்டீன் உயிரோடிருந்தபோது அவர் சொன்னதைப் புரிந்து கொண்டவர்கள் உலகம் முழுக்கப் பன்னிரெண்டு பேரே இருந்தார்கள் என்று சொல்வார்கள். அது போதுமே! ஒருவர் புரிந்து கொண்டால்கூடச் சொல்லியாகி விட்டது என்று பொருள். இப்போதோ புரிந்துகொள்ள ஒருவர்கூட இல்லை. பல நூற்றாண்டுகளுக்குப் பின் புரிந்துகொள்ள ஒருவர் வரலாம். அப்படியானாலும்கூடச் சொல்லியாகிவிட்டது என்றாகிப் போகிறது. ஒருவர்கூடப் புரிந்து கொள்ளலாம் என்ற சாத்தியம்கூடச் சொல்லியாகிவிட்டது என்றாகிப் போகிறது.

சத்தியத்தைச் சொல்லிவிட முடியாது. அதைச் சென்று சேர்வது மௌனத்தின் மூலம். சப்தமற்று எண்ணமற்றுப் போய்ச்சேர வேண்டியது சத்தியம். மனம் கழன்று விழுந்துவிட மனம் கழிந்தவனாய்ச் சத்தியத்தைச் சேர்கிறாய். மனம் கழிந்து விடவேண்டும் என்பது சத்தியத்தைச் சென்று சேர ஒரு முன் நிபந்தனை எனும்போது அதே மனதைக் கொண்டு சத்தியத்தை எப்படி வெளிப்படுத்துவது?

புரிந்துகொள்ள முடியாத மனம் அதை வெளிப்படுத்துவது எப்படி? இதை ஒரு விதியாகக் கொள். எதை மனது அடைய முடியுமோ அதை மனது வெளிப்படுத்த முடியும். எதனை மனதால் அடைய முடியாதோ அதை மனதைக் கொண்டு வெளிப்படுத்த முடியாது. எல்லா மொழிகளும் வியர்த்தமானவை. சத்தியத்தை வெளிப்படுத்த முடியாது.

அப்படியானால் இந்தச் சாத்திரங்கள் எல்லாம் என்ன செய்கின்றன? லாவோட் சூ என்ன செய்துவிட்டுப் போயிருக்கிறார்? உபநிடதங்கள் என்ன செய்கின்றன? சொல்லிவிட முடியாததைச் சொல்வதற்கு முயல்கின்றன. அப்படியாவது தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் உனக்குத் தோன்றட்டும் என்பதற்காக.

சத்தியத்தைச் சொல்லிவிட முடியாது. ஆனால் சொல்ல முயல்வதில் சொல்லில் அடக்க முடியாததைத் தெரிந்துகொள்ளும் ஆவல் கேட்பவனுக்குத் தோன்றும். ஒரு தாகத்தை ஏற்படுத்தலாம்.

ஏற்கெனவே தாகம் உனக்குள் இருக்கிறது. கொஞ்சம் தூண்டிவிட வேண்டியிருக்கிறது. உன்னிடம் ஆனந்தமில்லை. பரவசமில்லை. அப்படியானால் உனக்குள் தாகம் இருக்கிறது என்று பொருள்.

உன் இதயம் கனன்று கொண்டிருக்கிறது. அந்தத் தீயை அணைக்க நீரைத் தேடுகிறாய். நீரைக் காணோம். ஊற்றைக் காணோம். வழி? உன் தாகத்தை அடக்கப் பார்க்கிறாய். தீர்க்க முடியாது என்கிறபோது வேறென்ன செய்வது? அதைத் தவிர வேறு வ்ழியில்லை. அடக்கியாவது வைக்காவிட்டாலும் பெருகிப் பரவி வாழ்வதற்கே விடாது அடித்துவிடும். எனவே தாகத்தை அடக்கிக் கொள்கிறாய்.

லாவோட் சூவைப் போன்ற ஞானிக்கு சத்தியத்தைச் சொல்லிவிட முடியாது என்று தெரிந்திருக்கிறது. ஆனால் அதைச் சொல்லும் முயற்சியே ஒன்றைத் தூண்டிவிடும். அடக்கி வைத்த தாகத்தை அது மேலுக்குக் கொண்டு வரும். அப்படித் தாகம் மேற்கிளம்பும்போது ஒரு தேடல், விசாரம் ஆரம்பமாகிவிடுகிறது. அதற்கெனவே அவர் உன்னை அசைத்து விட்டாயிற்று.

**சொல்லால் விளக்க முடியும் என்ற தாவோ**
**பரிபூரண தாவோ அல்ல.**

அதிகபட்சம் தொடர்புடையதாயிருக்கும். அவ்வளவுதான்.

உதாரணமாக ஒளியைப் பற்றிக் குருடன் ஒருவருக்குச் சொல்லலாம். என்றாலும் ஒளியைப் பற்றி எதுவும் தெரிவிக்க முடியாது என்பது நமக்குத் தெரிகிறது. அவனுக்கு ஒளி ஓர் அனுபவமாவதில்லையே.

என்றாலும் ஒளியைப் பற்றி அவனிடம் பேசலாம். ஒளியை உண்டாக்கும் விதிகளைப் பற்றிச் சொல்லலாம். குருடன்கூட ஒளியைப் பற்றித் தெரிந்த விஞ்ஞானியாகலாம். அதில் நிபுணராகலாம். அதில் எந்தச் சிரமமும் இல்லை. ஆனால் அவன் ஒளியைப் பற்றிப் புரிந்துகொள்ள முடியாது. இத்தனையும் தெரிந்துகொள்ளும் அவன் ஒளியின் பொருண் மையைப் புரிந்துகொள்ள முடியாது.

ஒளியெனும் அனுபவம் அவனுக்குக் கிடைக்காது. எனவே ஒளியைப் பற்றி ஒரு குருடனிடம் சொல்வது அனைத்தும் சார்புடையது மட்டுமே. ஒளியைப் பற்றிச் சொல்கிறோம். ஒளியைத் தருவதில்லை. ஒளியை வெளிப்படுத்த முடியாது.

கடவுளைப்பற்றிக் கொஞ்சம் சொல்லலாம். கடவுள் சொல்லப் படாதவர். காதலைப்பற்றிக் கொஞ்சம் சொல்லலாம். காதல் சொல்லப் படாதது. சொல்லப்பட்ட கொஞ்சம் சார்புடையது. கேட்பவன், அவனுடைய புரிதல், அவனுடைய அறிவுப் பிடிப்பு, அவனுடைய பயிற்சி, புரிந்து கொள்ள வேண்டும் என்கிற அவனுடைய வேட்கை - இவற்றைச் சார்ந்ததே அது. குருவைச் சார்ந்தது. அவரைப் பொருத்தது. அவர் சொல்லும் விதம், சொல்வதற்கு அவர் கையாண்ட முறைகள் - இவற்றைப் பொருத்தது. அப்படியாகப் பலதையும் சார்ந்ததாக இருக்கிறது. தன்னளவிலான ஓர் அனுபவமாவதில்லை. சத்தியம் சொல்லப்படாதது என்பதற்கு இதுதான் முதல் காரணம்.

சத்தியம் ஓர் அனுபவம் என்பதால் சொல்ல முடியாதது என்பது இரண்டாவது காரணம். சத்தியம் மட்டுமா - எந்தவொரு அனுபவத்தையும் வெளிப்படுத்திவிட முடியாது. காதலைப் பற்றி ஒருவர் வந்து உன்னிடம் சொல்ல காதல் என்பது இன்னதென உனக்குத் தெரியாதபோது அவர் சொல்வதெல்லாம் வெறும் வார்த்தைகளாகத்தான் இருக்கும். அகராதியில் இருக்கும் வார்த்தைகள். புரியவில்லையென்றால் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். ஆனால் பொருள் உனக்குள் இருக்கிறது. அனுபவத்தின் மூலமே அது வெளிப்படுகிறது.

யாரையாவது காதலித்திருந்தால் காதல் என்ற வார்த்தைக்குப் பொருள் புரியும். வெற்றுப் பொருள் அகராதியில் இருக்கிறது. மொழியில் இருக்கிறது. இலக்கணத்தில் இருக்கிறது. ஆனால் அனுபவ பூர்வமான பொருள், ஜீவனுள்ள பொருள் உனக்குள் இருக்கிறது. அனுபவித்த உடனேயே வார்த்தையின் வெறுமை நீங்கிவிடுகிறது. அதற்கு உள்ளீடு வந்துவிடுகிறது. நான் எதையாவது சொல்ல அதற்கு நீ உன் அனுபவத்தைக் கொண்டுவராதவரை அது வறட்டுத்தனமாக இருக்கிறது. உன்னுடைய அனுபவம் வந்து சேரும்போது அது முக்கியத்துவம் பெறுகிறது. இல்லையென்றால் வறட்டுத்தனமாகவே இருக்கிறது. வார்த்தைகள், வெறும் வார்த்தைகள், வெறும் வார்த்தைகள்தான்.

அனுபவிக்கவில்லையென்றால் சத்தியத்தை எப்படி வெளிப் படுத்துவது? அன்றாட வாழ்வில்கூட அனுபவிக்காததை வெளிப்படுத்த முடியாது. வெறும் வார்த்தைகளைத்தான் சொல்ல முடியும். பாத்திரம் வந்து சேரும் - காலிப் பாத்திரம். வெற்று வார்த்தைகள் உன்னை நோக்கிப் பயணிக்கும். அதைக் கேட்கும்போது அதைப் புரிந்து கொண்டதாக நினைத்துக் கொள்வாய். அகராதி தரும் பொருள் தெரியுமல்லவா? ஆனால்

தவறத்தான் விட்டுவிடுவாய். ஜீவிதமான அனுபவம் வழியாகவே உண்மையான அதிகாரபூர்வமான பொருளைப் பெறுவாய்.

நீயாகப் புரிந்துகொள்ள வேண்டும். வேறு வழியே இல்லை. குறுக்கு வழி ஏதுமில்லை. சத்தியத்தை மாற்றிக் கொடுக்க முடியாது. திருடிக்கொண்டு வரமுடியாது. இரவல் வாங்கிக்கொள்ள முடியாது. விலைக்கு வாங்கிக்கொள்ள முடியாது. இரந்து பெற்றுக்கொள்ள முடியாது. வேறு எந்த வழியும் இல்லை. உன்னிடம் இல்லையென்றால் உன்னிடம் இருக்க முடியாது. பிறகென்ன செய்வது?

ஒரே வழி - நானே வலியுறுத்திச் சொல்லத்தான் வேண்டும் - ஒரே வழி அதனை அனுபவித்தவரோடு இருப்பதுதான். அந்த அனுபவத்துக்குப் போய்ச் சேர்ந்தவரோடு இருப்பதுதான். அற்புதமாக ஒன்று உனக்கு மாற்றித் தரப்பட்டுவிடும். வார்த்தைகளால் அல்ல. அது ஒரு சக்தி. துள்ளிக் குதித்து வந்து சேர்வது.

எரிந்து கொண்டிருக்கும் ஒரு விளக்கின் பொறி இன்னொரு விளக்குக்குத் துள்ளிக் குதிப்பதைப் போலத்தான். எரியாத விளக்கை எரியும் விளக்குக்குப் பக்கத்தில் கொண்டு போனால் போதும். பொறி துள்ளிக் குதித்துப் போய்ச் சேரும். அப்படித்தான் ஒரு குருவுக்கும் சீடருக்கும் இடையே நடப்பதும். சாத்திரங்களைத் தாண்டிய ஒரு கடத்தல். ஒரு சக்தியின் கடத்தல். சேதியின் வெளிப்பாடல்ல. ஜீவிதத்தின் கடத்தல். வார்த்தைகளின் அதிர்வுகள் அல்ல.

**சொல்லால் விளக்க முடியும் என்ற தாவோ**
**பரிபூரண தாவோ அல்ல.**

இந்த நிபந்தனையை நினைவில் நிறுத்து.

இப்போது சூத்திரத்துக்குள் நுழைந்து பார்ப்போமா?

உலக மக்கள் அழகை அழகு எனத் தெரிந்துகொள்ளும்போது அசிங்கம் பிறக்கிறது.

உலக மக்கள் ஒழுக்கத்தை ஒழுக்கம் எனத் தெரிந்துகொள்ளும்போது ஒழுங்கீனம் தலைதூக்குகிறது.

லாவோட் சு நியதிகளைக் குலைப்பவர். சொல்கிறார் பார். ஒழுங்கைப் பற்றி நினைத்துப் பார்க்கும் அந்தக் கணமே ஒழுங்கீனமும்

தோன்றிவிடுகிறது. கடவுளைப் பற்றி நினைத்த அந்தக் கணமே அசுரன் தோன்றிவிடுகிறான். நினைப்பது என்பதில் எதிரிடையானவை சார்ந்தது தானே? அது ஒரு துவித முறைமை. நினைத்துப் பார்ப்பதில் ஆழ்ந்ததொரு முரண்பாடு இருக்கிறது. நினைத்துப் பார்ப்பதில் நேரிடை வெட்டு இருக்கிறது. அது ஒரு துணிவான நிகழ்வு. அதனால்தான் எண்ணங்களைக் கழித்துவிட்ட நிலை பற்றி இவ்வளவு அக்கறை. அப்போதுதான் நீ ஒன்றாக இருப்பாய். இல்லையேல் இரண்டாக, பிரிந்து போனவனாக, பகிர்ந்து விடப்பட்டவனாக, இரட்டை ஆளாக இருப்பாய்.

மேற்றிசையில் இந்த இரட்டைத் தன்மை நாளுக்கு நாள் அதிகமாகிப் பரவலாகிக் கொண்டே இருக்கிறது. காரணம் மேற்கத்திய மதங்கள் அனைத்துமே இரட்டை மதங்கள். மக்களை அவை பிரித்து வைக்கின்றன. கடவுள் நல்லவர் என்றால், தீமைக்கு எங்கே வடிவம் காண்பது? சாத்தானைப் படைக்க வேண்டியிருக்கிறது. கடவுளைக் கற்பித்த அதே கணத்தில் சாத்தானைப் படைத்தாயிற்று.

லாவோட் சு கடவுளைப் பற்றிப் பேசவேயில்லை. எப்போதும் பேசவில்லை. ஒருமுறைகூடக் கடவுள் என்ற வார்த்தையைப் பயன்படுத்தவில்லை. கடவுள் என்று சொன்னால் அப்போதே பின் கதவு வழியாகப் பேயை உள்ளே நுழைய விட்டாயிற்று. கதவைத் திற. இரண்டும் ஒன்றாக நுழைகின்றன.

> **எண்ணம் எப்போதும் முரண்பாடுகளின் வழியே.**
> **உலக மக்கள் அழகை அழகு எனத் தெரிந்துகொள்ளும்போது**
> **அசிங்கம் பிறக்கிறது.**

அழகை மறந்துவிடும்போது அதற்கு நேரிடையான அசிங்கம் என்ற ஒன்று இல்லாமல் போய்விடுகிறது. உலகம் அழகு மட்டுமே உள்ள தாகிவிடுகிறது. ஒழுக்கம் என்ற வார்த்தையை மறந்துவிடும்போது ஒழுங்கீனம் என்ற வார்த்தை தானாகவே இல்லாமல் போய்விடுகிறது.

யாரும் அமல்படுத்த வராதபோது உலகில் ஒழுங்கு தானாகவே இருக்க வருகிறது. ஒழுங்கைக் கொண்டுவர நினைக்கிறவர்கள் எல்லோருமே குறும்புக்காரர்கள். அவர்கள்தான் ஒழுங்கின்மையைக் கொண்டு வருகிறவர்கள்.

இதைப் புரிந்துகொள்வது சிரமம்தான். நமது மனதை இந்த இரட்டை ஆட்கள் பழக்கி வைத்திருப்பதால்தான் இந்தச் சிரமம். கடவுளைப்

பிடித்துக்கொள். சாத்தானை விட்டுவிடு என்கிறார்கள். நல்லவனாக இரு என்று சொல்லி உடனே தீயவனாக இருக்காதே என்கிறார்கள். எவ்வளவுக்கு நல்லவனாக இருக்க முயல்கிறாயோ அந்த அளவுக்கு உள்ளே அல்லதை உணர்கிறாய்.

கவனித்திருக்கிறாயா? நலன்களைப் பெற முயற்சி செய்கிற மகான்கள் எல்லோருமே நமது பாவம் பற்றிய உணர்வை எப்போதுமே அனுபவித்துக் கொண்டு இருப்பதைக் கவனித்திருக்கிறாயா? இல்லையென்றால் அகஸ்டினுடைய ''வாக்கு மூலங்கள்'' என்ற நூலைப் படித்துப் பார்.

வாழ்க்கை முழுக்க மகானாக இருக்கும் முயற்சியில் கழியும்போது பாவம் பற்றிய உணர்வு பலமாகத் தாக்குகிறது. எந்த அளவுக்கு மகானாக இருக்க விரும்புகிறாயோ அந்த அளவுக்குப் பாவங்களால் சூழப் பட்டிருப்பதை உணர்கிறாய்.

நல்லவனாக இருக்க முயன்று பார். எவ்வளவு கெட்டவனாக இருக்கிறாய் என்பது தெரிந்துவிடும். அன்புடையவனாக இருக்க முயன்று பார். அப்போதுதான் வெறுப்பும் கோபமும் பொறாமையும் என்னுடையது என்ற உணர்வும் பொங்கி வருகின்றன. அழகாக இருக்க முயன்று பார். அப்போதுதான் உன் அசிங்கங்கள் ஒன்றுக்குப் பின் ஒன்றாகத் தெரியவரும்.

இந்த முரண்பாட்டைக் கழித்துப் போடு. இரட்டைத்தனத்தைக் கழித்துவிடு. எளிமையாக இரு. எளிமையாக இருக்கும்போது நீ யார் என்பதே உனக்குத் தெரியாது. அழகும் அசிங்கமும் இல்லாமல் போய்விடும்.

ஸூஃபி கதை ஒன்று..

குரு ஒருவர் யாத்திரையில் இருந்தார். தன் சீடர்களோடு ஒரு சத்திரத்துக்குப் போய்ச் சேர்ந்தார். ஓரிரவு தங்கிப் போகத்தான். சத்திரத்துக் காவல்காரன் தனக்கு இரண்டு மனைவியர் என்று அவரிடம் சொன்னான். ஒருத்தி அழகு. மற்றவள் அசிங்கமானவள்.

''இதில் பிரச்சனை என்னவென்றால் அசிங்கமானவளைக் காதலிக்கிறேன். அழகானவள் மேலோ வெறுப்புத்தான்'' என்றான்.

''என்னப்பா பிரச்சனை? என்ன காரணம்?'' என்று குரு கேட்டார்.

ஆனால் அதற்கு இன்னும் கொஞ்சம் ஆழ்ந்த திருப்பம் ஒன்று கற்பித்துப் பார்க்கலாம்.

பல வருடங்களுக்குப் பிறகு அதே குரு அதே சத்திரத்துக்கு மறுபடியும் போகிறார். சத்திரக்காரன் அவரிடம் வருகிறான்.

''எனக்கொரு குழப்பம். ஒரு முறை ஒரு ஸூபி குரு இங்கே வந்தார். அவரிடம் சொன்னேன். அவர் தீர்த்து வைத்தார். ஆனால் அதிலிருந்து எல்லாமே தலைகீழாக மாறிப் போய்விட்டது. அசிங்கமானவள் தன் எளிமையைப் பற்றிய கர்வம் மிகுந்தவளாகிவிட்டாள். என் பிரியமும் போய்விட்டது. உடலால் மட்டுமல்ல. எல்லா வகையிலும் அவள் அசிங்கமாகிவிட்டாள். அழகானவளோ அழகைப் பற்றிய தன் உணர்வே தன் அழகைக் கெடுத்துவிட்டது என்று தெரிந்து கொண்டாள். அதை விட்டுவிட்டாள். இப்போது அவள்மீது எனக்கு அலாதிப் பிரியம் வந்துவிட்டது. உடலால் மட்டுமல்ல. எல்லா வகையிலும் அழகாகி விட்டாள்'' என்றான்.

அவன் குருவிடம், ''இதைக் கொஞ்சம் விளக்குங்களேன்'' என்றான்.

''அதோடு விட்டுவிடு. நான் எதையாவது சொல்லப் போகக் கதை மீண்டும் திரும்பிவிடப் போகிறது.''

தன்னுணர்வே ஒரு வியாதி. தன்னுணர்வு இல்லாமல் இருப்பதே தெளிவு. ஞானம் அதைப் பற்றியதுதான். தன்னுணர்வைக் கழித்துவிடுதல். ஆனால் முரண்பட்ட இரண்டுக்கிடையே சிக்கிக்கொண்டிருக்கும் வரையிலும் எப்படித் தன்னுணர்வைக் கைவிடுவது?

எப்போதுமே தேர்வு செய்து கொண்டிருக்கிறாய். அழகாக இருக்கத் தேர்ந்து விடும்போது அசிங்கம் உன் நிழலாகிப் போகிறது. ஆத்திகனாக இருக்கத் தேர்ந்துவிடும்போது நாத்திகம் உன் நிழலாகிப் போகிறது. மகானாக இருக்கத் தேர்ந்துவிடும்போது பாவம் உன் நிழலாகிப் போகிறது. தேர்வு செய்தாலே சங்கடம்தான். தேர்வுகளே வாழ்வை இரண்டாகப் பிளந்துவிடுகின்றன.

தேர்வுகள் எதுவும் செய்யாதே. வாழ்க்கை அப்படியே நகர்ந்து பாயட்டும். சமயத்துக்குக் கடவுளாகத் தெரிகிறது. சமயத்துக்கு அதுவே சாத்தானாகத் தெரிகிறது. இரண்டிலுமே அழகிருக்கிறது.

தேர்வுகள் எதுவும் செய்யாதே. மகானாக இருக்க முயன்றால் மகாத்மியம் மெய்யானதாகாது. சற்று கர்வம் இருந்தாலும் அத்தனையும் பாழ். அசிங்கம்தான். அதனால்தான் பாவிகள் பலரும் கடவுளைச் சென்று சேர்ந்திருக்கிறார்கள் என்பேன். மகான்கள் பலரும் கடவுளைத் தவறவிட்டுவிடுகிறார்கள். பாவிக்குத் தான் பாவி என்ற உணர்வு இருப்பதாலேயே எளிமையானவனாகி விடுகிறான்.

இன்னொரு கதை சொல்லட்டுமா?

ஒருமுறை மகான் ஒருவர் சொர்க்கத்தின் கதவுகளைத் தட்டிக் கொண்டிருந்தார். அதே சமயம் அவருக்குப் பக்கத்தில் நின்ற பாவி ஒருவன் அதே கதவுகளைத் தட்டினான். மகானுக்கு அந்தப் பாவியை நன்கு தெரியும். ஒரே ஊர்க்காரர்கள். இரண்டு பேரும் ஒரே நாளில் செத்துப் போனவர்கள்.

கதவுகள் திறந்தன. ஸெயின்ட் பீட்டர், வாயிற்காப்பவர் என்று யாரும் மகான் பக்கம் திரும்பவேயில்லை. பாவியை வரவேற்றனர். மகானுக்கு ஒரே வருத்தம். பாவியை சொர்க்கத்தில் வரவேற்பார்கள் என்று அவர் எதிர்பார்க்கவே இல்லை.

ஸெயின்ட் பீட்டரைப் பார்த்து, "இது என்ன? இப்படியா என்னை அவமானப்படுத்துவது? ஒரு பாவியை இப்படி வரவேற்று என்னை உதாசீனம் செய்வது ஏன்?" என்று கேட்டார்.

பீட்டர், "அதனால்தான். நீ எதிர்பார்க்கிறாய். அவனிடம் எதிர்பார்ப்பில்லை. சொர்க்கத்துக்கு வந்து சேர்ந்துவிட்டேனே என்ற நன்றியுணர்வுதான் அவனிடம் இருக்கிறது. நீயோ சொர்க்கத்தைச் சம்பாதித்துவிட்டதாக நினைக்கிறாய். அவன் கடவுளின் கருணையை உணர்கிறான். நீயோ உன் முயற்சியால் சொர்க்கத்துக்கு வந்துவிட்டதாக நினைக்கிறாய். உனக்கு அது ஒரு சாதனையாகத் தெரிகிறது. சாதனை என்ற நினைப்பே அகங்காரத்தின் வடிவம்தான். அவன் பணிவாக இருக்கிறான். தான் சொர்க்கத்துக்கு வந்து சேர்ந்திருப்பதை அவனால் நம்பவே முடியவில்லை" என்றார்.

எனவே பாவி அடைய முடியும். மகான் தவற விட்டுவிட முடியும். மகான் தன் மகாத்மியத்தால் நிறைந்தவராக ஆகிப்போனால் கடவுளைத் தவற விட்டுவிடுவார்.

லாவோட் சு சொல்கிறார்:

உலக மக்கள் அழகை அழகு எனத் தெரிந்து கொள்ளும்போது அசிங்கம் பிறக்கிறது.

உலக மக்கள் ஒழுக்கத்தை ஒழுக்கம் எனத்
தெரிந்துகொள்ளும்போது ஒழுங்கீனம் தலைதூக்குகிறது.

எனவே,

*இருத்தலும் இல்லாதிருத்தலும் வளர்தலில் ஒன்றை ஒன்று சார்ந்தவை.*

இரண்டையும் பயன்படுத்திக்கொள். எதையும் தேர்வு செய்யாதே. வாழ்க்கை ஒன்றை ஒன்று சார்ந்தவற்றால் ஆனது. பாவத்துக்கும் ஒரு பயன் இருக்கிறது. அதையும் பயன்படுத்திக் கொள். இல்லையானால் அது எதற்கு இருக்க வரவேண்டும்?

எந்த நோக்கமும் இல்லாமல் எதுவும் வாழ்க்கையில் இருக்க வருவதில்லை. எந்தப் பயன்பாடும் இன்றி எப்படி ஏதாவது இருக்க முடியும்? வாழ்க்கை ஓர் அலங்கோலமல்ல. அது அர்த்தமுள்ளதொரு பிரபஞ்சம்.

இருத்தலும் இல்லாதிருத்தலும் வளர்தலில்
ஒன்றை ஒன்று சார்ந்தவை.

எனவே இரு. அதே சமயம் இல்லாதுமிரு.

முடித்தலில் சுலபமானதும், கடினமானதும் சார்ந்திருக்கின்றன.

மாறுபாட்டில் நீண்டதும், கட்டையானதும் சார்ந்திருக்கின்றன.

இடத்தால் உயர்ந்ததும், தாழ்ந்ததும் சார்ந்திருக்கின்றன.

லயத்தில் தொனியும், குரலும் சார்ந்திருக்கின்றன.

சேர்ந்திருப்பதில் முன்பும், பின்பும் சார்ந்திருக்கின்றன.

முரண்பட்டவை எதிரிடையானவை அல்ல. ஒன்றை ஒன்று இட்டு நிரப்புபவை என்கிறார். அவற்றைப் பிரித்துப் பார்க்காதே. பிரித்தல் அவற்றைப் பொய்யாக்குகிறது. அவை ஒன்றை ஒன்று சார்ந்த ஏகம். வெறுப்பின்றி அன்பு இருப்பதெப்படி? கோபமின்றிக் கருணை இருப்பதெப்படி? மரணமின்றி வாழ்வு இருப்பதெப்படி? துயரமின்றி மகிழ்ச்சி இருப்பதெப்படி? நரகமின்றிச் சொர்க்கம் இருப்பதெப்படி?

நரகம் சொர்க்கத்துக்கு எதிரிடையானதல்ல. இட்டு நிரப்புவது. ஒன்றாக இருப்பவை. ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள்போல.

ஒன்றைத் தேர்ந்து மற்றதை விட்டுவிடாதே. இரண்டையும் அனுபவி. இரண்டும் இருக்கட்டும், விடு. இரண்டுக்குமிடையே லயம் ஏற்பட்டுவிடும். தேர்வு செய்யாதே. பிறகென்ன? உன் வாழ்க்கை மாறுபாடுகளின் கச்சேரியாகிவிடும். அதுதான் சாத்தியமான மிகச் சிறந்த வாழ்க்கை. ஒரு வகையில் மிகச் சாதாரணமானதும் மறு வகையில் மிக அசாதாரண மானதுமாக ஆகிவிடும்.

அதனால்தான் புத்தர் மண்ணில் கால் பாவாதவர் என்கிறேன். வானத்தில் மிதக்கிறவர். லாவோட் சூவிடமோ விண்ணும் மண்ணும் சந்தித்துக் கொள்கின்றன. தன்னுடைய பூரணத்திலும் புத்தரிடம் நிறைவு இல்லை. பூரணம் அடையவில்லையென்றாலும் லாவோட் சூவிடம் நிறைவு இருக்கிறது.

புரிகிறதா? நன்றாக அசை போட்டுப் பார்.

பூரணத்திலும் புத்தரிடம் நிறைவு இல்லை. மண்ணைச் சார்ந்தது எதுவும் இல்லாமல் போய்விட்டது. ஓர் ஆவியைப்போல உலகுக்குப் புறம்பானவர். உடல் இல்லாதவர். உடலில் இருந்து விடுபட்டுப் போய்விட்டவர். வேரில்லாத மரம்.

நீங்களோ வேர்கள். தளைக்காத வேர்கள். மரம் தளைக்கவில்லை. புத்தர் வெறும் மலர்கள். நீங்கள் வெறும் வேர்கள். லாவோட் சூ இரண்டுமே.

புத்தர் அளவுக்குப் பூரணமானவராகத் தெரியவில்லை. எப்படி முடியும்? அடுத்த பகுதி இருந்து கொண்டேயிருக்கிறதே. ஆனால் அவர் முழுமையானவர். நிறைந்தவர். பூரணமாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் நிறைந்துவிட்டவர்.

இந்த இரண்டு வார்த்தைகளையும் எப்போதும் நினைவில் வைத்திருக்க வேண்டும். பூரணமானவராக இருக்க முயலாதே. நிறைந்தவனாக இருக்க முயற்சி செய்.

பூரணமாக இருக்க முயன்றால் புத்தரைப் பின்பற்றுவாய். மகாவீரருக்குப் பின்னால் போவாய். யேசுவைத் தொடர்ந்து போவாய். நிறைந்தவனாக இருக்க முயலும்போதுதான் லாவோட் சூவுக்கு அருகில் இருப்பது என்னவென்று தெரியும். லாவோட் சூவைப் பின்பற்றுவது என்ன என்று தெரியும்.

தாவோ நிறைவு. நிறைவு பூரணமாக இருப்பதல்ல. அதில் குறைகள் இருக்கும். ஏனென்றால் அது எப்போதும் உயிர்த்திருப்பது. பூரணமானது. செத்துப் போனது. பூர்த்தியாகிவிடும் எதுவும் செத்துப் போனதுதானே? அது எப்படி உயிர்த்திருக்க முடியும்? உயிரோடிருக்கக் காரணம் இல்லையே. மறுபகுதியை மறந்துவிடாதே.

உயிர்ப்பு முரண்பாடுகளுக்கிடையேயான இறுக்கத்தில் இருக்கிறது. எதிரிடையானவற்றின் சந்திப்பில் இருக்கிறது. முரண்பட்டதை மறுக்கும் போது பூரணமாகிப் போகலாம். நிறைவடைய முடியாது. ஏதோ ஒன்று இல்லாமல் போய்விடுகிறது. எவ்வளவுதான் பிரமாதமானவராக இருந்தாலும் புத்தர் ஒன்றை இழந்தவர்தான். லாவோட் சு அவ்வளவு அழகானவர் அல்ல. அவ்வளவாகப் பூர்த்தியானவர் அல்ல.

புத்தரும் லாவோட் சுவும் உனக்கெதிரே நிற்கிறார்கள் என்று வைத்துக்கொள். லாவோட் சு சாமானியராகத் தெரிவார். புத்தர் அற்புதப் பொலிவோடு தோன்றுவார்.

சொல்வதைக் கேட்டுக்கொள். ஆயிரக்கணக்கான புத்தர்கள் லாவோட் சுவுக்குள் இருக்கிறார்கள். அவர் மண்ணில் ஆழ வேரூன்றியவர். இவர் மண்ணில் வேர் பாய்ச்சி நின்றிருக்க அவர் உயர் வானில் நிற்கிறார். இவர் மண்ணும் விண்ணும் இரண்டுமேயாக இருக்கிறார். முரண்பாடுகளின் சந்திப்பாக இருக்கிறார்.

மூன்று வார்த்தைகளை நினைவில் நிறுத்த வேண்டியிருக்கிறது. முதலாவது பிறவற்றைச் சார்ந்திருப்பது. இரண்டாவது எதையும் சாராதிருப்பது. மூன்றாவது ஒன்றையொன்று சார்ந்திருப்பது.

புத்தர் சாராதிருப்பவர். நீங்கள் சார்ந்திருப்பவர்கள். மனைவியைச் சார்ந்திருக்கும் கணவன். மகனைச் சார்ந்திருக்கும் தந்தை. சமூகத்தைச் சாந்திருக்கும் தனிமனிதன். ஆயிரக்கணக்கான சார்புகள். நீங்கள் சார்புடையவர்கள்தான்.

புத்தர் ஒரு மலைச் சிகரத்தைப் போலத் தன்னளவில் உயர்ந்து நிற்கிறார். உலகத்தோடான தனது சம்பந்தங்கள் அனைத்தையும் வெட்டிவிட்டவர். மனைவி, மக்கள், மகன், தந்தை என்று எல்லாப் பந்தங்களையும் வெட்டிவிட்டவர். எல்லாவற்றையும் துறந்துவிட்டு எதையும் சாராத தூணாக இருக்கிறார். நீ ஒரு பகுதி - புத்தர் ஒரு பகுதி - தனித்தனிப் பகுதிகள்.

நீ அசிங்கமானவனாக இருக்கலாம். அவரிடமோ அதீத அழகு. உன் அசிங்கம் இருப்பதாலேயே அவருடைய அழகு இருக்கிறது. நீ மறைந்து

போனால் புத்தரும் மறைந்து போவார். உன்னுடைய மடமையால் அவர் ஞானியாகத் தெரிகிறார். நீயும் ஞானியாகி விட்டால் அவர் ஞானியாக இருக்கமாட்டார்.

லாவோட் சூ ஒன்றை ஒன்று சார்ந்திருக்கும் ஒரு நிகழ்வு. அவருடைய வாழ்க்கை ஒன்றை ஒன்று சார்ந்திருப்பதன் வடிவம். சாராதிருப்பதும், சார்ந்தேயிருப்பதும் இரண்டு வெவ்வேறு துருவங்கள். இரண்டுக்கும் நடுவே வாழ்வு இணக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும். அந்த நிலையில் ஒன்றை ஒன்று சார்ந்திருப்பது சாத்தியமாகிறது.

ஒவ்வொன்றும் பிற ஒவ்வொன்றையும் சாந்திருக்கிறது. எல்லாமும் ஒன்றோடொன்று தொடர்புடையதாகியிருக்கின்றன. ஒரு பூவைக் காயப்படுத்தும்போது ஒரு நட்சத்திரத்தைக் காயப்படுத்துகிறாய். எல்லாமும் ஒன்றை ஒன்று சார்ந்திருப்பதால் எதுவும் தனித் தீவாக இருப்பதில்லை.

தனித்த தீவாக வாழ நினைத்தால் அது சாத்தியம்தான். என்றாலும் அதில் ஓர் அமானுஷ்யம் இருக்கும். அது ஒரு புனை கதையாகிவிடும். ஒரு கனவாகிவிடும். லாவோட் சூ ஒன்றை ஒன்று சார்ந்திருப்பதில் நம்பிக்கை வைத்தவர். எதையும் இருக்கும் நிலையிலேயே எடுத்துக்கொள். எந்தத் தேர்வும் செய்யாதே என்கிறார்.

மிக எளிதாகத் தோன்றுகிறது. ஆனால் இது மிகவும் கடினமானதாகும். மனம்தான் எப்போதும் தேர்வு செய்வதில் முனைப்பாக இருக்கிறதே! மனம் வாழ்வதே இந்தத் தேர்வுகள் செய்வதில்தானே! தேர்வுகள் இல்லையெனில் மனம் இற்று விழுந்துவிடுகிறது. இதுதான் லாவோட் சூவின் நெறி. மனதை எப்படிக் கழித்துக் கட்டுவது? தேர்வுகள் செய்யாதிருந்துவிடுவது. அதனால்தான் அவர் எந்தத் தியான முறையையும் பரிந்துரைக்கவில்லை. ஏனெனில் அந்த நிலையில் தியானத்துக்குத் தேவையேயில்லை.

தேர்வுகள் எதையும் செய்யாதே. வாழ்க்கை எப்படி உன்னை வந்து அடைகிறதோ அப்படி அதை வாழ்ந்துவிடு. அப்படியே மிதந்து கொண்டிரு. இங்கே அங்கே என்று எங்கேயும் போய்ச் சேர நினைக்காதே. எந்த இலக்கையும் நோக்கி நகராதே. அந்தந்தக் கணத்தை அதனதன் முழுமையில் அனுபவி. எதிர்காலத்தைப் பற்றியோ கடந்த காலத்தைப் பற்றியோ கவலைப்படாதே. அப்படி இருந்தால் உனக்குள்ளிருந்து ஒரு ராகம் எழுந்து வரும். தாழ்ந்ததும் உயர்ந்ததும் உனக்குள் சந்தித்துக் கொள்ளும். அப்போது ஒருவிதமான பொக்கிஷம் உனக்குக் கிடைக்க வரும்.

உயர்ந்தது மட்டுமே உன்னிடம் இருக்கிறது என்றால் நீ வறியவன்தான். பள்ளத்தாக்கின் செழுமை இல்லாத மலை முகட்டைப்

போல. பள்ளத்தாக்கில் ஓர் ஆழம் இருக்கிறது. ஓர் அற்புதம் இருக்கிறது பள்ளத்தாக்குகளில்தான் கவிதையின் ஆத்மா இருக்கிறது.

மலை முகடு கணக்கைப்போல வெறுமையானது. பள்ளத்தாக்கின் நிழல்களும் அற்புதங்களும் நகர்ந்து கொண்டிருக்கின்றன. பள்ளத் தாக்கில்லாத முகடு வறியது. முகடில்லாத பள்ளத்தாக்கும் வறியது. ஏனென்றால் அங்கே இருட்டுத்தான் கவிந்திருக்கும். சூரியன் அங்கே போய்ச் சேரமாட்டான். ஈரத்தின் சொதசொதப்பும் இருட்டும் வருத்தமும்தான் அங்கே இருக்கும். மிக வளமையான சாத்தியக் கூறு பள்ளத்தாக்கும் முகடும் ஒருங்கே இருப்பதுதான்.

நீட்ஷே எங்கோ ஓரிடத்தில் சொல்லியிருக்கிறார். நீட்ஷேவின் மனது ஊடுருவிப் பார்க்கும் திறன் பெற்ற சில மனங்களில் ஒன்று. இந்த ஊடுருவும் பார்வையே அவரைப் பைத்தியமாக்கிவிட்டது. மனத்தின் சுமை மிக அதிகமாகிவிட்டது. தாங்க முடியாத அளவுக்குப் போய்விட்டது.

வானத்தைச் சேர நினைக்கும் மரம் மண்ணில் ஆழமாக வேர்விட வேண்டும் என்கிறார். நரகத்தின் அடி ஆழத்துக்கு வேர்கள் போனால்தான் இலைகள் சொர்க்கத்துக்குப் போய்ச்சேர முடியும். சொர்க்கத்தையும் நரகத்தையும், உயரத்தையும் ஆழத்தையும் ஒருசேர மரம் தொட்டு நிற்க வேண்டியிருக்கிறது.

மனிதனுக்கும் இது பொருந்தும். உன்னுடைய உட்புறத்தின் மையத்தில் அசுரனும் கடவுளும் ஒருசேரச் சந்திக்க வேண்டும். அசுரனைக் கண்டு பயந்துவிடாதே. அப்படிப் பயந்துவிட்டால் உன் கடவுள் எளியவராகிப் போவார்.

கிறித்துவ யூதக் கடவுளர் அப்படி மலினப்பட்டுப் போனவர்கள். கிறித்துவ முகம்மதிய யூதக் கடவுளரிடம் எந்த உறைப்பும் இல்லை. உப் பிடாத பண்டம் என்பதால் எந்தச் சுவையும் இல்லாமல் போய்விடுகிறது. அசுரத்தனம்தான் அந்த உப்பு. அவை இரண்டும் ஒன்றிணைய வேண்டும்.

முரண்பாடுகளுக்கு இடையே கட்டுக்கோப்பான இணக்கம் இருக்கிறது. இருப்பதும் இல்லாததும், கடினமானதும் சுலபமானதும், நீளமானதும் கட்டையானதும், உயர்ந்ததும் தாழ்ந்ததும் என்றிப்படி.

**லயத்தில் தொனியும் குரலும் சார்ந்திருக்கின்றன.**
**சேர்ந்திருப்பதில் முன்பும் பின்பும் சார்ந்திருக்கின்றன.**

**அதனால்தான் ஞானி**
**செயற்படாமலேயே எதையும் நிர்வகிக்கிறார்.**

இதைத்தான் லாவோட் சூ ஓவேய் என்கிறார். ஞானி செயற்படாமலேயே எதையும் நிர்வகிக்கிறார். மூன்றுவிதமான சாத்தியங்கள் இருக்கின்றன.

ஒன்று, செயல்பட்டுக் கொண்டிருந்து செயற்படாமையை மன்னித்துவிடுவது - லோகாயவாதியாக இருப்பாய்.

இரண்டு, செயலைக் கழித்துக் கட்டிவிடு. இமாலயத்துக்குப் போய்ச் செயல்படாமல் இருந்துவிடு. பிறவுலகு சார்ந்தவனாகப் போவாய்.

மூன்று, சந்தைக் கடையில் வாழ். சந்தைக் கடையை உனக்குள் வாழ விட்டுவிடாதே. செயல்வயப்படாது செயல் புரி. உள்ளே ஸ்திரமாக இருந்து நகர்ந்து கொண்டிரு.

உங்களிடம் பேசிக் கொண்டிருக்கிறேன். எனக்குள்ளோ மௌனம் இருக்கிறது. ஒரே சமயத்தில் பேசிக் கொண்டும், பேசாமலுமிருக்கிறேன். நகர்ந்து கொண்டிரு. என்றாலும் நகராது நிலைத்திரு. செயல்படு. என்றாலும் செயல்படாதவனாக இரு. செயலும் செயலின்மையும் சந்தித்துக் கொள்ளமுடியுமானால் சுருதி கலையாத பாடல் ஒன்று தோன்றும். அப்போது அழகானதொரு நிகழ்வாகி விடுகின்றாய்.

அசிங்கத்தோடு ஒப்பிட்டு அழகாகத் தோன்றுவதல்ல அது. அசிங்கத்தையும் உள்ளடக்கிக் கொண்ட அழகு.

ரோஜாச் செடிப் பக்கம் போ. பூவையும் முள்ளையும் பார். முட்கள் பூவுக்கு எதிரானவையல்ல. பூவுக்குக் காவலாயிருப்பவை. பூவுக்குக் காவல்காரர்கள். பூவின் பத்திரத்துக்குக் காரணமாக இருப்பவை.

உண்மையாகவே அழகானவர், உண்மையாகவே சுருதி கூடியவர், எதையும் ஒதுக்கித் தள்ளுவதில்லை. மறுத்து ஒதுக்குவது இருத்தலுக்கு முரணானது. எல்லாவற்றையும் உள்ளிழுத்துக்கொள்ள வேண்டும். அதுதான் கலை. ஒதுக்கி வைத்தால் நீ கலைஞனல்ல. எல்லாவற்றையும் உள்வாங்கிக் கொண்டு பயன்படுத்திக்கொள்ள வேண்டும். வழியில் ஒரு பாறை கிடக்கிறதா? ஒதுங்கிப் போகாதே. காலடி வைக்கப் பயன்படுத்து.

**அதனால்தான் ஞானி,**
**செயற்படாமலேயே எதையும் நிர்வகிக்கிறார்.**

இமாலயத்துக்குத் தப்பிப் போவதில்லை. உலகத்தில் இருக்கிறார். தன் காரியங்களை நிர்வகிக்கிறார். ஆனாலும் செயற்படுவதில்லை. உள்ளே செயற்பாடு அற்ற நிலை. செயலெல்லாம் புறத்தேதான். தன் மையத்தில் செயலற்றவராக இருக்கிறார். அதைத்தான் லாவோட் சூ வூவேய் என்கிறார். புயலின் கண்ணைக் கண்டு கொள்வது. புறத்தே புயல். மையத்திலோ நிச்சலனம். எதுவும் நகர்வதில்லை.

வார்த்தைகளின்றிச் சாத்திரத்தைப் போதிக்கிறார். இங்கே நானும் வார்த்தைகளின்றி ஒரு சாத்திரத்தைப் போதித்துக் கொண்டிருக்கிறேன். வார்த்தைகளைப் பயன்படுத்துகிறேனே என்கிறாயா? ஆமாம் நான் போதித்துக் கொண்டுதானிருக்கிறேன், வார்த்தைகளில்லாமல். ஏனென்றால் என் அடி ஆழத்தில் எந்த ஒரு வார்த்தையும் ஜனிப்பதில்லை.

என் வார்த்தை உங்களுக்காக. எனக்காகவல்ல. ஆமாம். என் வார்த்தைகள் உங்களுக்கானவைதான். எனக்கானவை அல்ல. நான் அதனைப் பயன்படுத்துகிறேன். என்னை அது பயன்படுத்திக் கொள்வதில்லை.

உன்னோடு பேசிக்கொண்டிருக்கும் அதே கணம் நான் பேசாதவனாகிப் போகிறேன். நான் எனக்காகப் பேசுவதில்லை. எனவே எனக்குள் பேச்சில்லை. பேசாதபோது நான் மௌனமாகத்தானே இருக்கிறேன்? பேசும்போதும் என் மௌனம் பாதிக்கப்படுவதில்லை. என் பேச்சு என் மௌனத்தைத் தொடுவதில்லை.

**வார்த்தைகளின்றியே சாத்திரத்தைப் போதிக்கிறார்.**
**எல்லாமுமே தோன்றி வருகின்றன.**
**அவரோ எதிலிருந்தும் திரும்பிக் கொள்வதில்லை.**

அவர் எப்போதும் தப்பித்து ஓடுவதில்லை. எதையும் மறுத்து ஒதுக்குவதில்லை. எதையும் துறப்பதில்லை. அதுதான் என்னுடைய சன்னியாசத்தின் பொருள். சன்னியாசம் என்ற வார்த்தை துறந்துவிடுவதைக் குறிக்கிறது. நான் எதையும் துறக்கச் சொல்லவில்லை.

பிறகு ஏன் உங்களைச் சன்னியாசிகள் என்கிறேன்? லாவோட் சூவின் கருத்துப்படி சன்னியாசிகளாக நீங்கள் இருக்கிறீர்கள் என்பதால்தான். துறந்துவிடு என்றாலும் துறக்காதிரு. உலகில் இரு என்றாலும் அதற்கு அயன்மைப்பட்டு இரு. இதுதான் முரண்பாடு களின் சந்திப்பு.

நகரச் சொல்லவில்லை. கழித்துவிடச் சொல்லவில்லை. குடும்பத்தை உதறிவிட்டு வரச் சொல்லவில்லை. இதற்கெல்லாம் எந்தத் தேவையு மில்லை.

நீ எங்கிருக்கிறாயோ அங்கே அப்படியே இரு. ஆனால் அடி ஆழத்தில் உயர்ந்ததொன்று இருக்கிறது. கடந்திருப்பது. அதை மறந்துவிடாதே.

உன் மனைவியோடு இருக்கும்போது அவளோடு இரு. அதேசமயம் உன்னோடும் இரு. அதைத்தான் சொல்கிறேன். உன்னை மறந்துவிட்டு உன் மனைவியோடு இருக்கும்போது நீ லோகாயதவாதி ஆகி விடுகிறாய். இப்போதோ எப்போதோ தப்பித்து ஓடுவாய். அப்படி இருப்பது அவ்வளவு துயரத்தை உனக்குத் தரப்போகிறது. அதையெல்லாம் விட்டு உதறித் தள்ளிவிட்டு மலைகளை நாடி ஓடிப் போகிறாய்.

இரண்டுமே இரண்டு ஓரங்கள். சத்தியம் எந்த ஓரத்திலும் இருப்பதல்ல. சத்தியம் இரண்டு முனைகளையும் தனக்குள் அடங்கி இருக்க வைப்பது. அது இரண்டாகவும் இருக்கிறது. எதுவொன்றுமாக இருப்பதில்லை.

**எல்லாமே அதுவாய்த் தோன்றி வருகின்றன.**

**அவர் எதிலிருந்தும் திருப்பிக் கொள்வதில்லை.**

**அவற்றுக்கு ஜீவன் அளிக்கிறார்.**

**ஆனால் எதையும் தன்னுடையதென்று கொள்வதில்லை.**

உன் குழந்தைகள்மேல் பாசம் வை. ஆனால் அவர்கள் உனக்குச் சொந்தமாக வேண்டும் என்று கொள்ளாதே. கணவனை மனைவியை நேசி. ஆனால் அவர்களை ஆட்படுத்த நினைக்காதே.

ஆட்படுத்த நினைக்கும் அந்தக் கணத்தில் நீ ஆட்பட்டுப் போகிறாய். ஆட்படுத்தாதே. ஆட்படுத்தினால் ஆட்படுகிறவனின் மையத்தைச் சிதைக்க முயல்கிறாய். அதற்கு அவன் உன்னை விடப் போவதில்லை.

மற்றவனின் மையத்தைச் சிதைக்க முயன்றால் அந்த முயற்சியில் உன் நடுமத்தைச் சிதைத்துக் கொள்கிறாய். பிறகென்ன? புயலின் கொந்தளிப்புத் தான். நடுமத்தின் அமைதியிருக்காது.

உலகத்தில் இரு. என்றாலும் அதில் இருக்காதே. உனக்குள் ஏதோ ஒன்று கடந்திருக்கப் போகிறது. வானில் மிதந்து கொண்டிருக்கிறது. மண்ணில் வேர்கள். விண்ணில் இலைகள்.

**அவற்றுக்கு ஜீவன் அளிக்கிறார்.**

**ஆனால் எதையும் தன்னுடையதென்று கொள்வதில்லை.**

**செயல்படுகிறார். எதையும் கையகப்படுத்திக்**
**கொள்வதில்லை.**

**சாதிக்கிறார். சாதித்த பெருமையைத் தனதென்பதில்லை.**

வெறுமனே வாழ்கிறார். முழுமையின் ஒரு பகுதியாக வாழ்கிறார். தனக்கென எந்தப் பெருமையைக் கற்பித்துக் கொள்வது? ஒன்றோடு ஒன்று இசைவுற இணைந்த முழுமை, இந்த இருத்தல், அப்படியாக இருத்தல் - என்ற இந்த முழுமையின் ஒரு பகுதியாக வாழ்கிறார். அவர் அதனுடைய பகுதி. பிறகெப்படித் தனக்கென எந்தப் பெருமையும் கற்பித்துக் கொள்வது? ஓர் அலை தனக்கென எந்தச் சிறப்பையும் கற்பித்துக் கொள்ள முடியுமா என்ன? அலையானது கடலின் ஒரு பகுதிதானே?

**செயல்படுகிறார். எதையும் கையகப்படுத்திக்**
**கொள்வதில்லை.**

**சாதிக்கிறார். சாதித்த பெருமை தனதென்பதில்லை.**

**பெருமை எதற்கும் சொந்தம் கொண்டாடுவதில்லை.**

**எந்தப் பொருளையும் அவரிடமிருந்து நீக்கிவிட**
**முடிவதில்லை.**

இதுதான் லாவோட் சூவின் வேடிக்கையான தர்க்கம். தர்க்க பூர்வம் அத்தனையும் அவரிடம் உண்டு. என்றாலும் தனக்கென ஒரு தர்க்கவாதம் கொண்டவர். சொல்கிறார் பாருங்கள்:

**எந்தப் பெருமைக்கும் சொந்தம் கொண்டாடுவதில்லை**
**என்பதால்**

**எந்தப் பெருமையையும் அவரிடமிருந்து நீக்கிவிட**
**முடிவதில்லை.**

சொந்தம் கொண்டாடினால் அந்த உரிமையைத் தட்டிக் கழித்து நீக்கிவிடலாம். அப்படி எந்தச் சொந்தமும் கொண்டாடாதபோது சொந்தம் என்று கொள்ளாத எந்தப் பெருமையை மறுத்துப் பேச முடியும்?

இன்னார் நானென்று நீ சொன்னால் நீ அன்னார் அல்லவென்று நிரூபிக்கலாம். ஏனென்றால் எல்லோருமே ஏதோ ஓர் இன்னார் என்று சொல்லித்தானே திரிந்து கொண்டிருக்கிறார்கள். அதற்குப் போட்டி போட்டுக் கொள்கிறார்கள். அன்னார் நீயில்லை என்று நிரூபிக்கும்போது இன்னார்தான் நான் என்று சொல்வதை மறுத்துவிட முடியும்.

ஆனால் எந்தச் சொந்தமும் கொண்டாடாதபோது நான் எவருமில்லை என்று கொள்ளும்போது அதை எப்படி மறுத்து நிரூபிப்பது? எவரொருவரும் இல்லையென்பதில் எவரோ ஒருவராகிவிடுகிறாய். அதை யாரும் மறுத்து நிரூபிக்க முடியாது. உனக்குப் போட்டியாக வரவும் முடியாது.

ஜெயிக்கிறவனாக இருக்கவேண்டும் என்று முயலும்போது தோற்கடிக்கப்படுகிறாய். அலெக்ஸாண்டர்களையும் நெப்போலியன் களையும் ஹிட்லர்களையும் கேட்டுப் பார். ஜெயிக்கவேண்டும் என்ற முயற்சியின் பிரயத்தனத்தாலேயே தோற்றுப் போனவர்கள்.

லாவோட் சூ சொல்கிறார்: ஜெயித்தவனாக இருக்க முயலாதே. யாரும் உன்னைத் தோற்கடிக்க முடியாது. வெகு நுட்பமான வாதம். வாழ்வின் அடிப்படையான தர்க்கவாதம். சொந்தம் கொண்டாடாதே. உன்னுடைய சொந்தம் அனைத்தும் நிறைவேற்றம் அடைகிறது. ஜெயிக்க முயலாதே. உன்னுடைய ஜெயிப்பு தனிமுதலாகி விடுகிறது. எந்த முயற்சியும் செய்யாதே. வெறுமனே அப்படியே இரு. எதையெல்லாம் வேண்டி முயற்சி செய்கிறாயோ அத்தனையும் தாமாக உன்னை வந்து சேரும்.

எதையும் கேட்காதவன், எந்த வகையிலும் வென்றவனாக இருக்க முயலாதவன், எந்த லட்சியத்தையும் நிறைவேற்றப் பாடுபடாதவன், திடீரென எல்லாமும் நிறைவேறிப் போவதைக் காண்கிறான். வாழ்க்கை தன் ரகசியங்களை அவனோடு பகிர்ந்துகொள்ளத் தானாக வந்து சேர்கிறது. தன்னுடைய செல்வத்தைப் பகிர்ந்துகொள்ள வருகிறது.

எதையும் கேட்காதவன் காலியாகிப் போனவன் ஆகிப் போகிறான். காலியாகிப் போனதற்குள் வாழ்க்கை தன் ரகசியங்களையும் செல்வத்தையும் கொட்டி நிறைக்கிறது.

வாழ்க்கை வெறுமையை வெறுக்கிறது. நீ காலியாகிப் போன பாத்திரமாகிப் போனால் எல்லாமும் தாமாக உன்னிடம் வந்து சேர்கின்றன. மு[illegible]ற்சி செய்தால் தோற்றுவிடத்தான் போகிறாய். எந்த முயற்சியும் செய்யாதபோது வெற்றி சர்வ நிச்சயம். வெற்றியடைய வேண்டுமானால்

முயற்சி எதுவும் செய்யாதே என்று நான் சொல்லவில்லை. அதுவல்ல நான் சொல்வது. வெற்றி ஒரு முடிவல்ல. அது ஒரு விளைவு. அவ்வளவுதான்.

லாவோட் சுவின் வார்த்தைகளையோ என்னுடைய வார்த்தைகளையோ கவனித்துக் கேட்கும்போது முயன்றால் வெற்றியடையப் போவதில்லை என்று சொல்வதன் தர்க்கப்பூர்வ உண்மை புரியும். நீ முயன்றால் உன்னைத் தோற்கடிக்கப் பலர் போட்டியிட்டுக் கொண்டிருக்கிறார்களே!

இந்தப் போட்டியே ஆகிப் போய்விட்ட உலகில் வெற்றியடைவதெப்படி? யாரும் வெல்வதில்லை. எல்லோருமே தோற்றுத்தான் போகிறார்கள். எல்லோரும்தான் சந்தேகமின்றித் தோற்றுப் போகிறார்கள். இதிலிருந்து எவரும் தப்பிப்பதில்லை.

வெல்ல நீ முயலாதபோது வெல்கிறாய் என்றும் லாவோட் சு சொல்கிறார். மனம் பேராசைப்படுகிறது. இதுதான் சரி. இதுதான் வெல்லும் வழி என்கிறது. லட்சியத்தைக் கைக்கொள்ள மாட்டேன். அப்போதுதான் என் லட்சியம் நிறைவேறும் - இப்படிச் சொல்வதும் ஒரு முடிவைக் கேட்பதாகத்தான் ஆகிப் போகிறது. நீ மாறிப் போகவில்லை. லாவோட் சுவைப் புரிந்துகொள்ளவில்லை.

எதையும் கேட்காதபோது எந்தப் பெருமையும் கொண்டாடாதபோது புகழ், பெயர், வெற்றி, லட்சியம் என்று தேடாதபோது ஜெயம் நிச்சயம்.

பிரபஞ்சம் முழுக்கக் காலியாகிப் போன உனக்குள் பாய்கிறது. நீ நிறைவேற்றம் அடைகிறாய். இது ஒரு விளைவு. முடிவல்ல. எதிர்பார்த்துப் போய்ச் சேர்ந்து அடைவது முடிவு. அதைப்பற்றி நினைத்துக்கூடப் பார்க்காதபோது வந்து சேர்வது விளைவு. அதைப்பற்றிய ஏக்கமில்லை. அதைப்பற்றிய நினைவுமில்லை. இருத்தலின் உள்ளுறை விதியின் ஒரு பகுதியாக நிகழ்கிறது. அந்த விதிதான் தாவோ.

> **எந்தப் பெருமைக்கும் சொந்தம் கொண்டாடுவதில்லை என்பதால்**
>
> **எந்தப் பெருமையையும் அவரிடமிருந்து நீக்கிவிட முடிவதில்லை.**

லாவோட் சுவைப் புரிந்துகொள். உன்னுடைய உள்மனதின் பேராசையைப் புரிந்துகொள். அந்தப் பேராசை சொல்லலாம் - அதுதான் சொல்லிக்கொண்டே இருக்கிறதே...

ஒவ்வொரு நாளும் எத்தனை பேர் என்னிடம் வருகிறார்கள்! வருகிறவரிடம் ''தியானம் செய். பலனை எதிர்பார்க்காதே'' என்கிறேன்.

அவர்கள், ''பலனைக் கேட்காவிட்டால் பலன் தானாகக் கிடைத்துவிடுமா?'' என்கிறார்கள்.

நான், ''ஆமாம், கிடைக்கும். கேட்டுவிடாதே'' என்கிறேன்.

அவர்களும் சரியென்கிறார்கள். சில நாட்கள் கழித்து வருகிறார்கள். ''காத்துக் கிடந்தோம். இன்னும் நடக்கவில்லையே'' என்கிறார்கள்.

அங்கேதான் தவறு நடக்கிறது. காத்துக் கிடக்கக் கூடாது. ஒரு முடிவுக்காகக் காத்திருக்கலாம். ஒரு விளைவுக்காகக் காத்திருக்க முடியாது. விளைவு உன்னையோ, உன் காத்திருப்பையோ சார்ந்ததல்ல. அது தானாக நிகழ்கிறது.

காத்திருக்க நீ இருக்க வேண்டியதில்லை. காத்திருத்தலிலும் ஓர் ஏக்கம் இருக்கிறது, எதிர்பார்ப்பு இருக்கிறதென்றால் விளைவு நிகழாது.

ஆசைப்படாதே, நடக்கும். கேட்காதே, தரப்படும். யேசு ''கேள், தரப்படும்'' என்றார். ''தட்டு, கதவு திறக்கும்'' என்றார்.

லாவோட் சு, ''கேட்காதே, கிடைக்கும்'' என்கிறார். ''தட்டாதே, கதவு எப்போதும் திறந்திருக்கும்'' என்கிறார். பார்க்க உனக்குக் கண்ணிருந்தால் போதும்.

நானும் சொல்கிறேன். லாவோட் சு வெகு ஆழத்துக்குப் போகிறார். யாரும் போயிராத ஆழம். லாவோட் சுதான் மிகப்பெரிய திறவுகோல். அவரைப் புரிந்துகொண்டால் எல்லாப் பூட்டுக்களையும் திறந்து விடுவாய். அவரைப் புரிந்துகொள்ள முயற்சி செய்.

அந்தப் புரிதலில் இருந்து எந்த முடிவையும் எதிர்பார்க்காதபோது புரிதல் சுலபமாகிறது. புரிதலை அப்படியே அனுபவி.

இந்தக் கிழவரோடு ஒரு யாத்திரை போய்க்கொண்டிருப்பதை அனுபவி.

இந்தக் கிழவர் அழகானவர். அசிங்கத்துக்கு எதிரிடையான அழகல்ல.

இந்தக் கிழவர் ஞானி. மூடத்தனத்துக்கு எதிரிடையான ஞானம் அல்ல.

இந்தக் கிழவர் தெளிந்தவர். தெளிவற்றவருக்கு எதிரிடையான தெளிவல்ல.

இந்தக் கிழவர் நிறைந்தவர். நீ அவருள் இருக்கிறாய். புத்தர்கள் இருக்கிறார்கள். அவர் இருவருமானவர்.

அவரைப் புரிந்துகொண்டால் இனிப் புரிந்துகொள்ள ஏதுமில்லை.

மகாவீரர்களை, புத்தர்களை, கிருஷ்ணர்களை மறந்துவிடலாம்.

லாவோட்சு மட்டும் போதும். அவரே அனைத்துப் பூட்டுகளுக்குமான ஒரே சாவி.



# இரண்டு

## சாதாரணமாயிருத்தல்

முதல் கேள்வி:

**தப்பான இடத்துக்கு வந்து விட்டேனோ? சாதாரணமாகவும் சந்தோஷமாகவும் இருக்க வேண்டும். காதலிக்க ஒரு பெண் வேண்டும். காதலிக்கும் ஒரு பெண் வேண்டும். கூடிக்களித்து மகிழ நண்பர்கள் வேண்டும். எனக்கு ஞானமெல்லாம் வேண்டாம். தப்பான இடத்துக்கு வந்து விட்டேனோ?**

தெளிவடைவது பற்றிப் பல நூற்றாண்டுகளாகத் தவறாக உணர்ந்து போதித்து வந்திருக்கிறார்கள். அதனால்தான் ஞானோதயம் பற்றி உனக்குள் குழப்பம். ஞானோதயம் என்ற வார்த்தையே இந்த உலகத்துக்குத் தொடர்பற்றதாக, வேறோர் உலகத்துடையதாகத் தெரிகிறது. சாவுக்குப் பின்னால் அல்லது செத்துப் போனவர்களுக்கு நடக்கும் ஒன்றாகத் தெரிகிறது. இது முழுக்கத் தவறு.

மகிழ்ச்சியாக இருக்கத் தெளிவன்றி வேறு எந்த உபாயமும் இல்லை. சாதாரணமாக இருக்க வேண்டுமென்றால் தெளிவின்றி அது சாத்தியமில்லை. காதலித்து, காதலிக்கப்பட வேண்டும் என்றால் தெளிவின்றி அது சாத்தியமில்லை.

ஞானம் பற்றிய என்னுடைய கொள்கையை நீ புரிந்துகொள்ள வேண்டும். அது சாதாரணமாக இருப்பது. ஆரோக்கியமாக இருப்பது. விழிப்போடு இருப்பது. முழுமையாக இருப்பது. நிறைவாக இருப்பது.

ஒவ்வொரு மனமும் ஏதோ ஓர் அசாதாரணத்தை நாடிக்கொண்டே இருக்கிறது. அதுதான் ஆணவம் என்பது. ஏதோ ஒரு குறிப்பிட்ட ஒருவராக இருக்கவேண்டும் என்று விரும்புவது. எவருமாக இல்லாதிருக்கப் பயப்படுவது. வெறுமையைக் கண்டு பயப்படுவது. உள்ளிருக்கும் வெறுமையை எதைக்கொண்டும் நிரப்பிக்கொள்வது.

ஒவ்வொரு மனிதனும் ஓர் அசாதாரணத்தைத் தேடி ஓடிக்கொண்டே இருக்கிறான். அதுவே துயரத்தைத் தோற்றுவிக்கிறது. அசாதாரணமாக இருப்பது சாத்தியமே இல்லை. எவருமில்லாதது, எதுவாகவும் இல்லாதிருப்பது - அதுவே உன்னை ஆக்கி வைத்திருககும் மூலகம்.

எப்படித்தான் முயன்றாலும் அசாதாரணத்தைச் சாதிக்கவே முடியாது. ¡லெக்ஸாண்டர்கள் தோற்றுப் போனார்கள். இயல்பின் அளவிலேயே ாத்தியமில்லை என்பதால் நீ இன்னாரென ஒருவராக இருப்பது முடியவே முடியாது.

எவருமற்றவராகத்தான் இருக்க முடியும். அப்படி எவருமற்றவராக இருப்பதில் எந்தத் தவறும் இல்லை. பார்க்கப் போனால் எவருமற்றதனத்தை ஏற்றுக்கொள்ளும்போது பல திசைகளில் இருந்தும் பரவசம் உனக்குள் பாய்கிறது. துயரம் கழிந்து ஒதுங்கிப் போய்விடுகிறது.

துயரம் ஆணவத்தின் நிழல். லட்சியம் தேடி ஓடும் மனிதன் துயரம். அதைச் செய்யமுடியாமல் போவதாலேயே துயரம். இயல்புக்கு மாறானதைச் செய்து கொண்டிருக்கிறாய். செய்ய முயன்று தோற்றுப் போகிறாய். எனவே விரக்தியடைகிறாய். துயருறுகிறாய்.

நரகம் என்பது இயலாததன் முடிவானதே அன்றி வேறு எதுவுமில்லை. இயல்பற்றதொரு முயல்வு. சொர்க்கம் என்பது இயல்பாக இருப்பதேயன்றி வேறு எதுவுமில்லை.

நீ எவரொருவருமில்லை. எந்தப் பெயருமில்லாமல் எந்த வடிவுமில்லாமல் எவராகவும் இல்லாமல்தான் நீ பிறக்கிறாய். இன்னாரென எவராகவும் இல்லாமல்தான் நீ சாகப் போகிறாய். பெயரும் வடிவமும் மேம்போக்கானவை. அடி ஆழத்தில் நீ வெறும் வெளி.

அந்த வெளி மிக அழகானது. ஏனென்றால் நீ இன்னார்தான் என்று ஆகிப் போனால் வரையறைக்குட்பட்டுப் போகிறாய். யாரையும் எவராகவும் இருக்க கடவுள் விடுவதில்லை என்பது மிக நல்லதுதான். யாரோ ஒருவராகிப் போனால் வரையறைகளுக்குள் குறுகிப் போகிறாய். கோடுகளுக்குள் அடைக்கப்பட்டு விடுகிறாய்.

கடவுள் அதை அனுமதிப்பதில்லை. யாரொருவராகவும் இல்லா திருக்கும் சுதந்திரத்தைக் கடவுள் உனக்கு அளித்திருக்கிறார். வரையறைக் குட்படாது அந்தமில்லாது இருக்கும் சுதந்திரம். நீதான் அதற்குக் தயாராகவில்லை.

என்னை பொருத்தவரை ஞானோதயம் இதைச் சார்ந்ததுதான். தெரிந்துகொள்வது, உணர்ந்துகொள்வது, தான் எவரொருவருமில்லை என்ற உண்மையை ஏற்றுக்கொள்வது - அப்போது திடீரென முடியாததை நோக்கிய முயல்வை நிறுத்திவிடுகிறாய். காலணிகளை இறுகக் கட்டிக் கொண்டு ஓட எத்தனிப்பதை விட்டு விடுகிறாய். அதிலிருக்கும் முட்டாள் தனத்தைத் தெரிந்து கொண்டு அதை விட்டு விடுகிறாய்.

உனக்குள் சிரிப்பு தொற்றிக்கொண்டு படர்கிறது. அமைதியானவ னாகி விடுகிறாய். பதற்றத்தைத் தணித்துக் கொள்கிறாய். யாரோ ஒருவராக இருக்கவேண்டும் என்ற முயற்சியே தொல்லைகளைத் தருவிக்கிறது.

யாரோ ஒருவராக இருக்கவேண்டும் என்ற நினைப்பே உன்னை அன்பில்லாதவனாக்கி விடுகிறது. ஆசையுள்ள மனதில் அன்பு இருக்காது. ஏனென்றால் அவன் முதலில் தன் ஆசையை நிறைவேற்றிக்கொள்ள வேண்டியிருக்கிறது. தன் அன்பை அவன் தியாகம் செய்து கொண்டேதானிருப்பான்.

லட்சியமும் ஆசையும் கொண்டவர்களைக் கவனித்துப் பார். பணத்தைத் தேடுகிறவர்கள் காதலைத் தள்ளிப் போடுகிறார்கள். நாளைக்குப் பணம் சேர்ந்தபின் காதலித்துக் கொள்ளலாமே! ஆனால் இப்போதைக்கு முடியாது. நடைமுறை சாத்தியமில்லை. இப்போதைக்கு அதற்காக எதுவும் செய்ய முடியாது.

காதல் அவர்களுக்குச் சாவகாசமான ஒரு சமாச்சாரம். இப்போதைக்கு லட்சியத்துக்குப் பின்னால் ஓட வேண்டியிருக்கிறது. பணத்துக்குப் பின்னால் ஓடலாம். அதிகாரத்துக்குப் பின்னால் ஓடலாம். கௌரவம், அரசியல் - எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம்.

பிறகெப்படிக் காதலிப்பது? இங்கே இப்போது இருப்பது அவர் களுக்கு முடியாது. காதல் இங்கேயான இப்போதான சமாச்சாரம் ஆயிற்றே. காதல் நிகழ்காலத்தது. லட்சியம் எதிர்காலத்தது. காதலும் லட்சியமும் எப்போதும் சந்தித்துக்கொள்வதில்லை.

உன்னால் காதலிக்க முடியாது. காதலிக்க முடியாது என்றால் பிறர் எப்படி உன்னைக் காதலிப்பது? ஒன்றாக இருக்கத் தயாராக இருக்கும் இருவருக்கிடையேயான ஆழ்ந்த தொடர்பே காதல். இப்போதைய சமாச்சாரம். நாளையதல்ல. கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் முழுக்க மறந்துவிட்டு இந்தக் கணத்தை நிறைத்து இருப்பது காதல். கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் மறந்து விடுதலும் இந்தக் கணத்தை

நிலையில் கொள்வதும் காதல். உயிர்த் துடிப்போடு கூடிய இந்தக் கணத்தை நிலையில் வைத்திருப்பது. காதல் இந்தக் கணத்துச் சத்தியம்.

லட்சியத்துக்குப் பின்னால் ஓடும் மனது எப்போதும் இங்கே இருக்க முடியாது. அது போய்க்கொண்டே இருக்கும். ஓடிக்கொண்டே இருக்கும். ஒருவன்மீது அன்பு வைப்பதெப்படி? எப்போதும் ஒரு பந்தயத்தில் ஓடிக்கொண்டிருக்கிறேன். போட்டியின் ஓட்டம்தான். அவனுக்கு நேரமே இருப்பதில்லை. அல்லது லட்சியத்தில் ஜெயித்தபின் - பணம் சேர்த்தான பின், அதிகாரத்தைக் கையில் எடுத்துக்கொண்ட பின், சொத்து சேர்த்துக்கொண்ட பின் - சாவகாசமாகக் காதலிக்கலாம் என்று நினைக்கிறான். அது நடக்கப்போவதே இல்லை. ஏனென்றால் அவன் குறிக்கோளை அடையப்போவதே இல்லை.

ஆசைகள் என்றும் நிறைவேறுவதில்லை. ஆசையின் இயல்பே அதுதான். ஒரு லட்சியத்தை அடைந்தானபின் அல்லது ஓர் ஆசையைப் பூர்த்தி செய்தபின் ஓராயிரம் லட்சியங்களும் ஆசைகளும் வந்து சேர்கின்றன. அதை நீ தொடர்ந்து கொண்டிருக்கும்வரை அது நிற்கப் போவதில்லை. அதைப் புரிந்துகொண்டால் நின்று போய்விடுகிறது.

ஆனால் அதற்கு மேலும் மேலும் சக்தியைக் கொடுத்துக் கொண்டேயிருந்தால் எப்படிக் காதலிக்கப் போகிறாய்? அதனால்தான் யாரோ ஒருவராக இருக்கவேண்டும் என்ற துடிப்பில் மக்கள் துயரத்தில் அமிழ்ந்து விடுகிறார்கள். காதலைப் பெற முடியவில்லை. காதலிக்கவும் முடியவில்லையென்றால் துயரம்தானே?

காதல் ஒரு பரவசம். மனமற்ற நிலையின் பரவசம். இந்தக் கணத்தின் பரவசம். ஆசையும் லட்சியமும் கழிந்துபோன ஒரு பரவசம். ஏகாந்தத்தின் பரவசம்.

காதலர்கள் இருக்குமிடத்தில் இன்னாரென எவரும் இருப்பதில்லை. காதல் மட்டுமே இருக்கிறது. வெளியே பார்க்க இருவராகத் தெரியலாம். ஆனால் உள்ளேயோ கதையே வேறு. அவர்கள் இருவர் அல்லர்.

சந்தித்துக் கொண்ட அதே கணத்தில் இரண்டாக இருத்தல் மறைந்து போகிறது. காதல் மட்டுமே இருக்கிறது. பாய்கிறது. உள்ளே ஏதுமற்றுப் போகாத வரையிலும் இது எப்படிச் சாத்தியம்? உள்ளே யாருமில்லாது எதுவுமில்லாது காலியாகிப் போக உனக்கும் உன் காதலிக்குமிடையே எந்தத் தடையும் இல்லாமல் போய்விடும்வரை இது எப்படிச் சாத்தியம்? நீ யாராவது ஒருவராக இருந்து உன் காதலியோ காதலியாகவோ அல்லது வேறு யாரோ ஒருவராக இருந்து நீங்கள் சந்தித்துக் கொள்ளும்போது

அங்கே நால்வர் இருக்கிறார்கள். யாருமற்ற உண்மையான இரண்டு பேர் பின்னால் மறைந்திருக்க, யாரோ ஒருவராகிவிட்ட பொய்யான இருவர் கைகுலுக்கிக்கொண்டு காதல் சைகைகள் செய்துகொண்டு இருக்கிறீர்கள்.

வேடிக்கை பார்த்துச் சிரிக்க நல்ல நாடகம் இது. காதலர்கள் சந்திக்கும்போது யாருமில்லாது போகிறார்கள். இரண்டு யாருமில்லாத வர்கள் இரண்டு பேராக முடியாது. யாராகவும் இல்லாத இருவர் எப்படி இரண்டு பேராக முடியும்? ஒன்றுமில்லாததற்கு வரையறுக்கும் கோடுகள் இல்லை. இரண்டு ஒன்றுமில்லாதவை ஒன்றாகிப் போகின்றன. யாரோ இரண்டு பேர் இரண்டு பேராகவே நிலைத்துப் போகிறார்கள்.

அதனால்தான் காதல் அவ்வளவு அசிங்கமானதாகப் போய்விட்டது. எதை நானல்ல காதல் என்று சொல்கிறாயோ அந்தக் காதல். உன்னுடைய காதல் அசிங்கமானது, மிக அசிங்கமானது. அது அப்படித்தான் ஆகிப் போகும்.

உலகத்திலேயே மிக அழகானதாக இருக்கவேண்டியது காதல். அது மிகமிக அசிங்கமானதாகிப் போய்விட்டது. எப்போதும் சச்சரவிட்டுக் கொண்டு சண்டையிட்டுக் கொண்டு ஒருவருக்கொருவர் துயரத்தைத் தந்துகொண்டு காதலை மிக அசிங்கப்படுத்தி விட்டார்கள்.

சாத்ரே ''மற்றவர் நரகம்!'' என்றார். உன்னுடைய காதலைப் பற்றித்தான் அப்படிச் சொல்கிறார். தனியாக இருக்கும்போது சகஜமாக இருக்கிறாய். காதலன் அல்லது காதலியோடு இருக்கும்போது இறுக்கமாகிப் போகிறாய்.

தனியாக வாழவும் முடியவில்லை. அடி ஆழத்தில் யாருமில்லாமல் போய்விடுவோமோ என்ற அச்சம் உலுக்குகிறது. ஒரு தாகம், ஒரு பசி வருத்துகிறது. எனவே தனியாக இருக்க முடியவில்லை.

நகர்ந்துகொண்டே இருக்க வேண்டியிருக்கிறது. யாராவது ஒருவரோடு இருக்கவேண்டும் என்றிருக்கிறது. அப்படி யாராவது ஒருவரோடு இருக்கும் அந்தக் கணத்தில் துயரம் வந்து கவிந்துவிடுகிறது.

எல்லா உறவுகளும் துயரம் தவிர வேறு எதையும் தருவதாக இல்லை. தெளிவு கிடைக்காத வரை காதல் ஒரு சச்சரவாக, ஒரு மோதலாகவே இருக்கிறது. என்றாலும் மெல்ல மெல்ல அதற்குப் பழகிப் போகிறாய்.

இதற்கென்ன பொருள்? மெல்ல மெல்ல மந்தமாகிப் போகிறாய் என்றுதான் பொருள். மரத்துப்போய் விடுகிறாய். அதனால்தான் உலகம்

ஜீவனற்றதாக, சுவாரசியமற்றதாகப் போய்விடுகிறது. நாறுகிறது. எல்லா உறவுகளும் உளுத்துப்போய் அசிங்கமாகிப் போய்விட்டன.

எனவே உண்மையாகவே காதலிக்கவும், காதலிக்கப்படவும் வேண்டுமானால் நீ எங்கே எப்படி இருக்கிறாயோ அங்கே அப்படி சாத்தியமில்லை. அதிலிருந்து மறைந்துவிட வேண்டும்.

இதை விட்டு விலகிப் போக வேண்டும். எதுவுமற்ற சுத்தமான நிலை மட்டுமே உன்னோடிருக்க நீ விலகி வந்துவிட வேண்டும். அப்போதுதான் காதல் எனும் மலர் விரிய முடியும். விதைகள் இருந்தென்ன? உள்ளம் பாறையாக இருக்கும்வரை விதைகள் முளைப்பதில்லை.

சாதாரணமானவனாயிருக்க வேண்டுமா? காதலிக்க வேண்டுமா? நண்பர்கள் வேண்டுமா? அனுபவிக்க வேண்டுமா? ஞானம் என்பது இதெல்லாம்தானப்பா!

ஆனால் பூசாரிகளிடமோ ஸ்தாபன ரீதியாகப் போய்விட்ட மதத்துக்கோ தேவாலயங்களுக்கோ போனால் அங்கே ஞானதத்துக்கு வேறு பொருள் தந்திருப்பதைப் பார்ப்பாய். அவர்கள் காதலுக்கு எதிரானவர்கள். சாதாரணமாக இருப்பதற்கு எதிரானவர்கள். தோழமைக்கு எதிரானவர்கள். துய்த்தலுக்கு எதிரானவர்கள். உன்னுடைய இயல்பு, இயல்பாக எதையெல்லாம் வேண்டுகிறதோ அத்தனைக்கும் எதிரானவர்கள். அவர்கள் மிகப்பெரிய விஷந்தூவிகள்.

என்னிடம் வந்திருக்கிறாய் என்றாலே சரியான இடத்துக்கு வந்து சேர்ந்திருக்கிறாய் என்று பொருள். என்னுடைய ஞானம் இவ்வுலகத்தது என்ற வகையில் சரியான இடத்துக்கு வந்து சேர்ந்திருக்கிறாய் என்றாகிறது.

வேறு எந்த உலகமும் இல்லை என்று நான் சொல்லவில்லை. இந்த உலகத்து வாழ்வு மட்டுமே வாழ்வு என்று சொல்லவில்லை. தவறாகப் புரிந்துகொள்ளாதே. நான் அப்படிச் சொல்லவே இல்லை.

அடுத்த உலகம் இந்த உலகத்தைச் சார்ந்தது என்கிறேன். விண் மண்ணைச் சார்ந்தது என்கிறேன். உயரப்போக வேண்டுமானால் ஆழ வேர்விட வேண்டும் என்கிறேன். இந்த உலகில் வேர் பதித்தால் அடுத்த வாழ்வில் மலர்கள் மலரும் என்கிறேன்.

அந்த வாழ்வு இந்த வாழ்வுக்கு எதிரிடையானது அல்ல. பார்க்கப்போனால் இந்த வாழ்வின் விகசிப்பே அந்த வாழ்வு. கடவுள் இந்த உலகுக்கு எதிரானவர் அல்ல. இந்த உலகுக்குப் புறம்பாகிப் போனவர்

அல்ல. அவர் இதற்குள் இருக்கிறார். இதில் மறைந்திருக்கிறார். இந்த உலகத்தை எதிர்த்துப் போய்த்தான் கடவுளைத் தேடவேண்டும் என்பதில்லை. அப்படிப் போனால் அவரைக் காணமுடியாது. அவர் இங்கே இப்போது மறைந்திருக்கிறார்.

இந்த வாழ்வுக்குள் ஆழப்போய்ப் பார்க்கவேண்டும். ஆழத்தில் தேடவேண்டும். அவரைக் கண்டுகொள்ள அதுவொன்றே வழி. இந்த வாழ்வு முழுக்க இருத்தல், முழுக்க ஒரு கோயிலேயன்றி வேறெதுவு மில்லை. அவர் அதற்குள் மறைந்திருக்கிறார். அதிலிருந்து தப்பி ஓடாதே.

நான் இந்த வாழ்வுக்கு எதிரானவன் அல்ல. பார்க்கப்போனால் நான் எதற்கும் எதிரானவன் அல்ல. இருப்பது ஒவ்வொன்றுக்கும் ஒரு பயன்பாடு, நோக்கம் இருக்கிறது. எனவே நான் அனைத்தையும் சார்ந்தவன். கடவுள் என்ன பைத்தியக்காரரா? எந்தப் பயனும் இல்லாமல் எதையாவது படைத்து இருக்க வைத்திருப்பதற்கு?

இருத்தலில் நோக்கமிருக்கிறது. பொருளிருக்கிறது. இந்த வாழ்வு இருக்கும் ஒரு நிஜமெனில் அடுத்த வாழ்வு. இந்த வாழ்வு இல்லாமல் இருக்கமுடியாது. இதுதான் அதற்கு அடிப்படை.

ஆனால் என்னிடம் வரும்போது உன்னுடைய அபிப் பிராயங்களோடேயே வருகிறாய். என்னிடம் நீ வந்துசேர உன்னிடம் நான் ஞானத்தைப்பற்றிப் பேச, அதை நீ எப்படிப் புரிந்து வைத்திருக்கிறாயோ அதே கண்ணோட்டத்தோடு பார்க்கிறாய்.

என்னிடம் நீ வந்து சேர, உன்னிடம் நான் துறவைப்பற்றிப் பேசும்போது துறவை நீ எப்படிப் புரிந்து வைத்திருக்கிறாயோ அப்படியே பார்க்கிறாய். நான் சொல்வது வேறு. நீ புரிந்துகொள்வது வேறு.

உன்னுடைய மொழியின் வார்த்தைகளில் நான் பேச வேண்டி யிருக்கிறது. வார்த்தைகள் மாசு படிந்து போனவை. கோடிக்கணக்கான மக்கள் பல கோடிக்கணக்கான முறை கோடி கோடி அர்த்தத்துடனும் தொனியுடனும் பேசப்பேச வார்த்தைகளுக்குக் கோடிக்கணக்கான வடிவங்கள் வந்து சேர்ந்துவிட்டன.

ஞானி, ஒரு மனிதன். தனக்குள் ஏதுமில்லாத ஏகாந்தத்தைத் தெரிந்து வைத்திருப்பவன். அதற்கு எதிராகப் போராடாதவன். அதை அனுப விக்கிறவன். அந்தப் பரவசத்தில் இருக்கிறவன்.

தன் ஏகாந்தத்தை அனுபவிப்பதன்மூலம் அவன் பிறர் தன்னோடு தொடர்புகொள்ளத் தயாராக இருக்கிறான். அவனுடைய அற்புதத்தைப் பிறர் அவனோடு சேர்ந்து அனுபவிக்கலாம். திறந்த கதவுகள் நண்பருக்கும் காதலர்களுக்கும் விடுத்த அழைப்புகள். பங்கிட்டுக்கொள்ள அவன் தயார். கொடுக்க அவன் தயாராக இருக்கிறான்.

உன்னுடைய ஏகாந்தத்தைக் கொடுக்கும்போது பிறருக்குக் கொடுப்பதைப்பற்றி எந்தப் பயமும் உனக்கு இருக்காது. ஏனென்றால் அந்த ஏகாந்த்த்தைக் கொடுத்துத் தீர்த்துவிட முடியாது. கொடுத்துக்கொண்டே இருந்தாலும் வாரி வாரி வழங்கிக் கொண்டிருந்தாலும் அதைத் தீர்த்துவிட முடியாது.

வரையறைகளுக்கு உட்பட்டதே தீர்ந்து போகிறவை. அதனால்தான் அவை துயரம் தருகிறவையாகின்றன. தீர்ந்துபோய் விட்டால் துயரம். எனவே கொடுப்பதற்குப் ப்யப்படுகிறாய்.

ஏற்கெனவே தன்னிடம் ஒன்றுமில்லையென்கிறவன் கொடுப்பதற்கு ஏன் பயப்பட வேண்டும்? அவன் தன்னை முழுக்கக் கொடுக்க முடியும். அது சாத்தியம் இல்லையெனில் காதல் சாத்தியம் இல்லை. காதல் புனிதமானது. அதில் பாவம் ஏதுமில்லை. காதல் என்று சொல்லத் தகுந்ததெல்லாம் புனிதமானது. காதல் உலகுக்குள் நுழையும்போது பரிசுத்தமான உலகுக்குள் நுழைகிறாய். காதலிக்கும்போது தெய்வத்தின் சந்நிதானத்துக்குள் நுழைகிறாய்.

அனுபவி. துயரப்படாதே. முகத்தைத் தூக்கி வைத்துக் கொள்ளாதே. துயரப்பட வைக்க அல்ல நான் இங்கே இருப்பது. ஏற்கெனவே துயரம் கொண்டவன் நீ. உன்னுடைய சோகத்தோடு இன்னும் கொஞ்சம் சோகத்தைச் சேர்க்கமாட்டேன்.

உன்னுடைய பிறப்புரிமையான பரவசத்தைக் காண நீ விழித்துக் கொள்ள வேண்டும் என்கிறேன். அது எங்கும் நிறைந்திருக்கிறது. ஆனால் அதை எப்படிச் சென்று சேர்வது என்பதை மறந்துவிட்டாய். தவறான திசைகளில் போய் அலைப்புறுகிறாய். இருக்கும் இடத்தை விட்டு இல்லாத இடம் தேடி எங்கெங்கோ அலைகிறாய். அது உள்ளே இருக்க வெளியே தேடுகிறாய். தூரத்து நட்சத்திரங்களில் அதை நீ தேடிக் கொண்டிருக்க அது உனக்கு நேர் எதிரில் நிற்கிறது.

ஆங்கிலத்தில் இரண்டு அழகான வார்த்தைகள் இருக்கின்றன. *Obvious* - நேர் எதிரில் இருப்பது என்று பொருள். நேர் எதிரில் என்ற பொருள் தரும் இலத்தீனிய மூலச் சொல்லில் இருந்து வந்தது.

அடுத்த வார்த்தை Problem இதற்கு மூலச்சொல் கிரேக்க மொழியில் இருக்கிறது. அந்த மூலச் சொல்லுக்குப் பொருளும் நேர் எதிரில் என்பதுதான்.

இரண்டு சொற்களுக்கும் மூலச்சொற்களின் பொருள் ஒன்றுதான். நேர் எதிரில் இருப்பதுதான் பிரச்சனையே. ஏனென்றால் அதை நீ பார்க்கத் தவறி விடுகிறாய். தூரத்தில் இருப்பதைப் பார்க்க அலையும் கண்களுக்குப் பக்கத்தில் இருப்பது தெரியாமல் போய்விடுகிறது.

நேர் எதிரில் இருப்பதே பிரச்சனையாகிப் போய்விட்டது. ஞானம் என்பது அப்படி நேர் எதிரில் இருப்பதைத் தெரிந்து கொள்வதுதான். அதைத் தெரிந்து கொள்ளும்போது பிரச்சனை மறைந்து போகிறது.

பிரச்சனையற்ற வாழ்வை வாழ்வதே ஞானத்தோடு வாழ்வதாகிறது. அது முழுக்க வித்தியாசமான ஒரு ஜீவிதம். சாதனைகளுக்கும் அதற்கும் தொடர்பில்லை. படிப்புக்கும் அதற்கும் தொடர்பில்லை. முயற்சி, சாதகம் என்பவற்றோடும் அது தொடர்புடையதல்ல.

வேண்டியதெல்லாம் அதைக் கவனிக்க, பார்க்க, நேர் எதிரில் இருப்பதைத் தெரிந்து கொள்ளக் கொஞ்சம் சுறுசுறுப்பு. அவ்வளவுதான்.

தீர்வு நீ நினைத்திருப்பதை விடவும் அருகாமையில் இருக்கிறது. தூரத்தில் போய்த் தேடாதே. உனக்குள் இருக்கிறது. அதற்குள் நீ தங்கிப் போகும்போது அதற்குள் மையம் கொள்ளும்போது அதில் வேர்விட்டு நிற்கும்போது உனக்கு எல்லாவற்றிலிருந்தும் விடுதலையை நான் தருகிறேன்.

போ, போய்க் காதலி!

அப்போது அதை நீ அனுபவிக்க முடிகிறது. அதைச் சுவைக்க முடிகிறது. அதனுடைய ஆழ்ந்த சாத்தியங்களைத் துளைத்துவிட முடிகிறது.

ஆழ்ந்து போகும்போதெல்லாம் தெய்விகத்தைக் காண்கிறாய்.

காதலில் ஆழப் போ. கடவுளைக் காண்பாய்.

சாப்பிடும்போது நன்கு சாப்பிடு. கவனத்தோடு விழிப்போடு சாப்பிடு.

கடவுளைக் காண்பாய்.

உபநிடதங்கள் அன்னம் பிரம்மம் என்கின்றன. உணவே கடவுள். முடிந்த பரவசத்துக்குக் காமம் சகோதரன். இரட்டைப் பிறவிகள் அவை என்கின்றன.

காமம் - ஆமாம், காமமும் முடிந்த பரவசமும் இரட்டைச் சகோதரர்கள்தான். அதை வெகுவாகத்தான் நிந்தித்து விட்டாய். ஏணியின் கடைசிப் படியாக இருந்தாலும் ஏணியினுடையதுதான் அதுவும். மிக உயரத்தில் இருக்கும் படியும் கடைசிப் படியும் இரண்டும் ஏணிக்குச் சொந்தமானவையே. பார்க்கப்போனால் எல்லாமும் கடவுளுக்குச் சொந்தமானவை. எல்லாமும் தெய்விகம்.

இதுதான் ஞானம். எல்லாவற்றிலும் தெய்விகத்தின் துடிப்பைக் காண்பது. சமயம் எதற்கும் எதிரிடையானதல்ல. தெய்விகத்தை எங்கெங்கும் காண்பதற்கான ஒரு தேடுதல்தான் சமயம். அதுவோ அங்கே உனக்காகக் காத்துக் கிடக்கிறது.

சரியான இடத்துக்குத்தான் வந்திருக்கிறாய். உன் மனம் இதிலிருந்து தப்பித்துப் போகத் துடிக்கும். ஏனென்றால் இங்கே மனம் மரணித்துப் போகும்.

உனக்குச் சரியான இடம், மனதுக்கோ தவறான இடம். உன் ஜீவிதத்துக்கு முற்ற முழுக்கச் சரியான இடம். ஆனால் உன் ஆசை அபிலாஷைகளுக்கு, உன் அகங்காரத்துக்கு, உன் பெருமிதத்துக்கு, உன் முட்டாள்தனங்களுக்கு இந்தக் கணம் மிகத் தவறான இடமொன்று இருக்கிறதென்றால் அது இந்த இடம்தான்.

நீயே முடிவெடுத்துக் கொள். முட்டாள்தனமாக இருக்க வேண்டு மானால் தப்பித்து ஓடிவிடு. பிறகென்ன? உன் மனம் உன்னை முட்டா ளாக்கிக் கொண்டே இருக்கும். காதலிக்கிறாய், அனுபவிக்கிறாய் என்று தவறாகக் கற்பிதம் செய்துகொண்டேயிருக்கும்.

ஆனால் உனக்குத் தெரியும், உன்னிடம் காதலில்லை என்பது. உனக்குத் தெரியும், நீ அனுபவித்துக் கொண்டிருக்கவில்லை என்பது.

மனம் நீ துய்ப்பதாகக் கற்பிதம் செய்துகொண்டேயிருக்கும். நீயோ எதையும் துய்க்க முடிவதில்லை.

நீ அங்கே இருந்தால்தானே துய்ப்பதற்கு? நீயே இல்லை யெனும்போது துய்ப்பதெங்கே? எந்தவிதத்திலும் ஒருங்கிணைந்த ஜீவனாக நீயிருப்பதில்லை.

அங்குமிங்கும் அலைந்து நீ உன்னையே ஏமாற்றிக் கொண்டிருப்பாய். ஆனால் உன்னை ஒரு பெண் காதலிக்க வேண்டுமானால், காதலிக்க உனக்கு ஒருத்தி இருக்கவேண்டுமானால் ஜீவிதத்தை நீ அனுபவிக்க வேண்டுமானால் அதற்கான சாவிகளை நான் உனக்குத் தருகிறேன்.

இரண்டாவது கேள்வி:

**லாவோட் சூ மிக அரிய தேடுதல் கொண்டவர் என்கிறீர்கள். பிறகு எப்படி அவரை நிறைவானவர் என்று சொல்வது?**

அவர் நிறைவானவர் என்பதாலேயே மிக அரிய தேடுதல் கொண்டவராக இருக்கிறார். மனம் நிறைவைக் கண்டு பயப்படுகிறது. முழுமையையே எப்போதும் தேடிக் கொண்டிருக்கிறது.

இந்த இரண்டு பக்கங்களையும் புரிந்துகொள்ள முயற்சி செய். முழுமையும் நிறைவும்.

முழுமையில் அகங்காரம் முழுமையாக இருக்க முடியும். எப்போதும் முழுமையாக இருக்கவேண்டும் என்றுதான் அகங்காரம் முயன்றுகொண்டே இருக்கிறது.

முழுமையாக இருக்கவேண்டுமானால் நிறைவை விட்டுவிட வேண்டியிருக்கிறது.

தெளிவோடு இருக்கவேண்டுமானால் முட்டாள்தனத்தை விட்டுவிட வேண்டியிருக்கிறது. அறியாமையை எதிர்த்துப் போராட வேண்டியிருக்கிறது.

முழுமையான தெளிவு வேண்டுமென்றால் அறியாமையின் எல்லாச் சாத்தியங்களையும் வெட்டி எறிய வேண்டியிருக்கிறது. முட்டாள்தனத்தின் எல்லாச் சாத்தியங்களையும்தான். பைத்தியக்காரத்தனத்தின் எல்லாச் சாத்தியங்களையும்தான்.

ஆனால் நிறைவானவர் முழுக்க வித்தியாசமானவர். தன் முட்டாள்தனத்திலும் தெளிவுடையவராக இருக்கிறார். தான் ஏதும் அறியாதவன் என்று தெரிந்து வைத்திருப்பதே அவருடைய அறிவாகிறது.

அவரிடம் முரண்பட்டவை சந்தித்துக் கொள்கின்றன.

லாவோட் சூ சொல்கிறார்:

என்னைத்தவிர எல்லோருமே அறிவாளிகளாகத்தான் தெரிகிறார்கள். நான் ஒரு முட்டாளாகத் தோன்றுகிறேன். ஒவ்வொருவரும் புத்திசாலியாக இருக்க முயல்கிறார். விஷயம் தெரிந்தவராக, அறிவாளியாக இருக்க முட்டாள்தனத்தை வெட்டி விடுகிறார். அதிலிருந்து தப்பி மறைந்து கொள்கிறார். அதை அடக்கி வைத்து விடுகிறார்.

ஆனால் முட்டாள்தனத்துக்கென்று ஓர் அழகிருக்கிறது. அஃது ஞானத்தோடு சேர்த்து வைக்க முடியுமானால் அதுவும் அழகானதாகி விடுகிறது.

நிறைவின் பருமாணத்தில் மிகப்பெரிய ஞானி மிகப்பெரிய முட்டாளாகவும்தான் இருக்கிறார். அவ்வளவு எளிமை. அவ்வளவு அறியாத்தனம். முட்டாள்களாகத் தோன்றுகிறார்கள்.

பலருக்கும் லாவோட் சூ ஒரு முட்டாளாகத்தான் தெரிந்திருப்பார். அவர் அப்படித்தான் இருந்தார். இரண்டுமாக...

அதுதான் சிரமமே. மனம் முழுமையை நாடுகிறது. லாவோட் சூவிடம் யார் போவார்கள்? அவர் ஞானியும் முட்டாளுமாக இருக்கிறாரே. அது எப்படி இரண்டுமாக ஒருவர் இருப்பது என்பது உனக்குப் புரிவதுகூட இல்லை. அது எப்படிச் சாத்தியம்?

ஒரு ஸூபி மெய்ஞ்ஞானி யாத்திரையின்போது ஓர் ஊருக்குப் போய்ச் சேர்ந்தார். அவர் போய்ச் சேருமுன்பே அவருடைய கீர்த்தி போய்ச் சேர்ந்திருந்தது. எனவே ஊர்மக்கள் எல்லோரும் திரண்டு தங்களுக்கு ஏதாவது போதிக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள்.

அவர், ''முட்டாளாகவும் இருப்பதால் நான் ஞானியல்லன். என்னுடைய போதனைகள் உங்களைக் குழப்பிவிடும். எனவே சும்மாயிருந்து விடுங்கள்'' என்றார்.

எவ்வளவுக்கு அவர் தவிர்த்தாரோ அவ்வளவுக்கு மக்கள் அவருடைய பொலிவால் கவரப்பட்டார்கள்.

கடைசியில் அவரும் விட்டுக்கொடுத்துப் பேச ஆரம்பித்தார். அவர்கள் முகம்மதியர்கள். அதனால் அவர் அந்த வெள்ளிக்கிழமை மசூதிக்கு வர ஒப்புக்கொண்டு ''எதைப்பற்றிப் பேசுவது?'' என்று கேட்டார்.

அவர்கள், ''வேறென்ன, கடவுளைப் பற்றித்தான்'' என்றார்கள்.

அப்படியே அவரும் வந்து சேர்ந்தார். ஊர் முழுக்கத் திரண்டிருந்தது. மேடையில் ஏறிய அவர் ஒரு கேள்வி கேட்டார்: ''நான் கடவுளைப்பற்றி என்ன சொல்லப் போகிறேன் என்பது உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டார்.

அவர்கள், ''இல்லை, தெரியாது'' என்றார்கள்.

''அப்படியானால் அதனால் எந்தப் பயனும் இருக்கப் போவதில்லை. ஏனென்றால் தெரியாததைப்பற்றிப் பேசக்கேட்டுப் புரிந்துகொள்ள முடியாது. ஓரளவுக்குத் தயாராக இருக்க வேண்டியிருக்கிறது. நீங்களோ தயாராக இல்லை. நான் பேசுவது வியர்த்தம். நான் பேசவில்லை'' என்று சொல்லிவிட்டு மசூதியில் இருந்து நடையைக் கட்டினார்.

ஊர்க்காரர்களுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. மறுபடியும் அவரிடம் போய் மன்றாடினார்கள்.

அடுத்த வெள்ளியன்று மீண்டும் அதே கேள்வி. ஊர்க்காரர்கள் சுதாரித்துக் கொண்டார்கள். ''எதைப்பற்றிப் பேசப் போகிறேன் என்பது தெரியுமா?''

''தெரியும்'' என்றார்கள்.

அவரோ, ''அப்படியானால் பேசவேண்டிய அவசியம் இல்லையே. உங்களுக்கு ஏற்கெனவே தெரியுமென்றால் அதோடு முடிந்து போய் விட்டதே. எதற்கு எனக்குத் தொல்லை? உங்களுக்கும் கால விரயம்'' என்று சொல்லிவிட்டு நடையைக் கட்டினார்.

ஊர் மக்களுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. இந்த ஆளை வைத்துக்கொண்டு என்ன செய்வது?

என்றாலும் அவர்களுக்கு ஆவல் அதிகமாகித்தான் விட்டது. அவர் எதையோ மறைக்கவேண்டும் என்று நினைத்தார்கள். எனவே எப்படியோ அவரை மறுபடியும் மசூதிக்கு வர வைத்து விட்டார்கள்.

வந்தார். மறுபடி அதே கேள்வி. ''நான் எதைப்பற்றிப் பேசப் போகிறேன் என்பது தெரியுமா?''

ஊர்க்காரர்கள் புத்திசாலித்தனமாகச் சொன்னார்கள். ''பாதி தெரியும். மீதி தெரியாது.''

பிறகும் அவர், ''அப்படியானால் நான் பேசவேண்டிய அவசியம் ஏதுமில்லை. தெரிந்தவர்கள் தெரியாதவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கலாமே'' என்றார்.

இவரைத்தான் ஞானியும் முட்டாளும் என்பது. முட்டாள்தனம் கொண்டவராகத் தெரிகிறார். என்றாலும் முட்டாள்தனத்திலும் தெளிவை வெளிப்படுத்துகிறார்.

ஞானியாகத் தெரிகிறார். ஆனால் முட்டாள்தனமாக நடந்து கொள்கிறார்.

வாழ்வில் ஆழப் போகப்போக வாழ்வைப் புரிந்துகொள்ளக் கொள்ள மொத்தத்தையும் தேர்ந்துவிடுவது மதிப்புடையது என்று தெரிகிறது. அப்படியானால் எதையும் தேர்ந்தெடுக்க எதையும் விட்டுவிட வேண்டியதில்லை என்றாகிப் போகிறது.

தேர்வு செய்தாலே முழுமையைக் கூறு போட்டுப் பார்ப்பது என்றாகிப் போகும். அப்படிப் பார்க்கும்போது பின்னப்பட்டுப் போகிறாய். கொன்றுவிடுகிறாய்.

வாழ்வில் ஞானமும் முட்டாள்தனமும் ஒன்றாக இருக்கின்றன. அதைக் கூறு போட்டுப் பார்த்தால் ஞானம் தனியாகவும், மௌடிகம் தனியாகவும் பிரிந்து போய்விடும். இரண்டுமே செத்துப் போகும்.

மிகப்பெரிய வாழ்கலையே அவை இரண்டையும் ஒன்றாக வளரவிடுவதில்தான் இருக்கிறது. அவற்றுக்கிடையே சமன்பாடு இருக்கவேண்டும். அந்தச் சமன்பாட்டில் ஞானம் முட்டாள்தனத்தைச் சுமந்திருக்கும். முட்டாள்தனம் ஞானத்தைச் சுமந்திருக்கும். அப்போது நீ நிறைந்தவனாகிறாய்.

அதனால்தான் சொன்னேன், லாவோட் சூவை நாடிப் போகிறவர்கள் மிகமிக அரிதானவர்கள் என்று. சிலசமயம் ஞானியாகவும், சிலசமயம் முட்டாளாகவும் நடந்து கொள்வதால் கோமாளியைப் போலத்தான் தெரிவார். அவரை நம்பவே முடியாது. அவர் என்ன செய்வார் என்பதை முன்கூட்டியே யூகிக்க முடியாது. அடுத்த கணம் என்ன செய்வார் என்பது யாருக்கும் தெரியாது.

அந்தக் கணத்தை அந்தக் கணத்தில் வாழ்கிறவர். அவர் சொல்வதை வைத்துக்கொண்டு சாத்திரம் எழுத முடியாது. அவர் ஞானி மட்டுமல்ல, முட்டாளும் கூட. அந்த முட்டாள்தனம் உன்னை அலைக்கழித்துவிடும்.

மேம்போக்கில் அவர் ஸ்திரமானவர் அல்ல. அடி ஆழத்தில் ஸ்திரத்தன்மை கொண்டவர். நிறைவான ஸ்திரத்தன்மை. எந்த அளவுக்கு ஸ்திரத்தன்மை என்கிறாயா? அவருடைய ஞானமும் மௌடீகமும் ஸ்திரமானவை என்ற அளவுக்கு. ஆனால் அதைத் தெரிந்துகொள்ள அடி ஆழத்துக்குப் போகவேண்டும்.

மேம்போக்கான உரசல் போதாது. பழக்கம் போதாது. அவரைத் தெரியும் என்பது போத்தாது. சத்சங்கம் தேவை. அவருடைய ஜீவிதத்தை

ஆழமாகப் பங்கிட்டுக்கொள்ள வேண்டும். அப்போதுதான் அவருடைய நிறைவைப் புரிந்துகொள்ள முடியும்.

புத்தர் ஒரு ஞானி. மகாவீரர் ஒரு ஞானி. அவர்களிடம் ஒரு துளி மௌடீகத்தையும் பார்க்க முடியாது. அவர்கள் பூரணமானவர்கள்.

லாவோட் சு அப்படிப்பட்டவர் அல்ல. சுவாங் சு அப்படிப்பட்டவர் அல்ல. லியா சு அப்படிப்பட்டவர் அல்ல. அவர்கள் முரண்பாடுகளின் வடிவங்கள். முரண்வாதம் கொண்டவர்கள். அவர்களின் அழகே அதில்தான் இருக்கிறது.

புத்தர் சலிப்புத் தருகிறவர். இன்றைய புத்தரைப் புரிந்துகொண்டால் நேற்றைய புத்தரையும் நாளைய புத்தரையும் புரிந்து கொண்டாயிற்று. அவர் அந்த அளவுக்கு ஸ்திரமானவர். சுத்தமானவர். தர்க்க வசப்பட்டவர். நேர்கோட்டில் நகர்கிறவர்.

லாவோட் சு வளைந்து நெளிந்து போகிறவர். ஒரு பைத்தியக்காரனின் ஓட்டம். அவர் எழுதி வைத்ததைப் படித்தால் இது புரியும். பைத்தியக் காரனின் போக்குத்தான் என்று தெரிந்து கொள்ளலாம்.

மேலோட்டமாகப் பார்த்தால் அவர் கூற்றுகளில் பொருளேதும் இருப்பதில்லை. பொருள் பொதிந்தவைதான். ஆனால் அந்தப் பொருளைப் புரிந்துகொள்ள நீ மாறிப் போயாக வேண்டியிருக்கிறது.

புத்தர் மேலோட்டமானவர். தர்க்கவாதி. பகுத்தறிவுவாதி. அவரைப் புரிந்துகொள்ள வியாக்கியானங்கள் தேவையில்லை. அவருடைய ஜீவிதத்துக்குள் நுழையாமலேயே அவரைப் புரிந்துகொள்ளலாம். புரிந்துகொள்ள ஏதுவானவர்.

லாவோட் சு அப்படியல்ல. இந்த நிறைவு வேறு. இந்த உலகை ஏற்றுக் கொள்கிறார். அடுத்த உலகையும் ஏற்றுக் கொள்கிறார். இரண்டையும் முழுக்க ஏற்றுக் கொள்கிறார். அடுத்த உலகைப்பற்றி அதீதக் கவலை இல்லை. இந்த உலகத்திலிருந்தே அடுத்த உலகம் தோன்றி வரப்போகிறது என்றால் அதைப்பற்றிய கவலை ஏன்? இதை எவ்வளவு அழகாக முடியுமோ அவ்வளவு அழகாக, எவ்வளவு நிறைவாக முடியுமோ அவ்வளவு நிறைவாக வாழ்ந்துவிடு. அது இதனிடம் இருந்து அழகாகவும் நிறைவாகவும் இயல்பாகத் தோன்றி வரும். அது இயல்பான ஜனிப்பாக இருக்கப் போகிறது.

லாவோட் சுவை நேராகச் சந்தித்தால் அவர் ஒரு புதிராகத்தான் தோன்றுவார். ஒரு சமயம் ஒன்று சொல்வார். இன்னொரு சமயம்

இன்னொன்று சொல்வார். முதல் வாக்கியத்தில் ஒன்றை வலியுறுத்தி அடுத்த வாக்கியத்திலேயே அதை மறுத்துப் பேசுவார்.

அதனால்தான் அவரை அறிந்து கொள்கிறவர்கள் அரியவர்கள் என்கிறேன். அதனால்தான் லாவோட் சூவின் பெயரால் எந்த மதமும் தோன்றவில்லை.

ஸ்தாபன ரீதியான மதத்தில் பூரணம் வேண்டும். அதில் அறிவார்ந்த மனம் இருக்கவேண்டும். உனக்குத் தோதுவானதாக இருக்கவேண்டும். எனவே தனித்தனியாகத்தான் தேட்டமுடையவர்கள் மட்டுமே அவரிடம் போய்ச் சேர்கிறார்கள். ஸ்தாபன ரீதியான மதத்துக்குக் கூட்டத்தின் மேல்தான் அக்கறை. கூட்டத்தோடும் மந்தையோடும்தான் அது இருக்க முடியும்.

லாவோட் சூ மாசுமறுவற்றவராக இருக்க முடியும். அவரிடம் எந்த விட்டுக் கொடுத்தலும் இல்லை. அவருடைய நிறைவு புரிந்து கொள்வதைத் தாண்டியதாகி விடுகிறது. அதனால்தான் அரியவர்களே அவரைப் போய்ச்சேர முடியும்.

எந்த அளவுக்கு ஒருவர் நிறைவானவர் ஆகிறாரோ அந்த அளவுக்குப் புரிந்துகொள்ள முடியாதவர் ஆகிப் போகிறார். ஏனென்கிறாயா? கடவுளைப் போன்றவராகிப் போய்விடுவதால்தான்.

மனிதன் விளைவித்த பூங்கா போன்றவர் அல்ல. இயல்பாக வளர்ந்து மண்டிக் கிடக்கும் காடு. அங்கே சட்டதிட்டங்கள் இல்லை. திட்டமிடல்கள் இல்லை. திட்டமிடாத இயல்பான வளர்ச்சி. அதுதான் அதன் அழகே.

என்னதான் அழகாக இருந்தாலும் மனிதன் அமைத்த பூங்காவில் மனிதனின் அடையாளங்கள் தெற்றெனத் தெரியும். எல்லாமும் அவனால் கட்டுப்படுத்தப்பட்டு, வடிவு தரப்பட்டு, நிர்வகிக்கப்பட்டு, நிர்ணயிக்கப் பட்டவை. வடிவு நேர்த்தி கொண்டவை.

வனத்தில் வடிவு நேர்த்தியில்லை. எந்தத் தர்க்கரீதியான வடிவங்களும் இருப்பதில்லை. கடவுள் ஒரு தோட்டக்காரர் என்றால் பைத்தியம் பிடித்த தோட்டக்காரராகத்தான் இருக்கவேண்டும்.

அவர் ஏன் அப்படி ஒரு வனத்தை வர வைத்திருக்க வேண்டும்? புத்தர் ஒரு பூங்கா. லாவோட் சூ அடர்ந்த வனம். உள்ளே போனால் காணாமல் போய்விடுவாய். ஒவ்வோர் அடியிலும், திருப்பத்திலும் பயம்தான். ஒவ்வொரு நிழலும் உன்னைப் பயமுறுத்தும்.

அதனால்தான் கன்ஃப்யூஸியஸ் அவர் பக்கம் போய்விடாதே என்றார். யாருக்கும் அவருடைய போக்கு புரிபடாது. மிக மோசமான பைத்தியக்காரராக இருப்பார் அல்லது நிறைவான ஞானியாக இருப்பார். ஆனால் யாருக்கும் அவர் யார் என்று தெரியாது.

மூன்றாவது கேள்வி:

**பிரபஞ்சத்தோடு இணைந்துவிட வேண்டும் என்ற வேட்கை எனக்கு இருக்கிறது. ஆனால் பிரிந்து கிடக் கிறேன். கவலைப்பட்டு, வீடிழந்து கிடக்கிறேன். ஏன்?**

**எது என்னைப் பிடித்துப் பின்னால் இழுத்து வைத் திருப்பது? என்ன செய்வது?**

பிரபஞ்சத்தோடு இணையவேண்டும் என்ற வேட்கையே உன்னைப் பிடித்து நிறுத்தி வைத்திருக்கிறது. அதை விட்டுவிடு. இணைந்து விடுவாய்.

ஆழ்ந்த வேட்கை இருந்தால் இணையமுடியாது. அந்த வேட்கை உன்னைப் பிரித்து வைத்திருக்கும். ஆசைப்படுகிற அந்த ஆள் யார்? யாருடையது இந்த ஆசை? ஆழ்ந்த ஆசை அதிகமான அகங்காரம்தான். அடக்கி வைப்பதும்தான்.

பிரிந்திருக்கிறாய் என்று யார் உன்னிடம் சொன்னது? இணையவேண்டும் என்று யார் சொன்னது? எப்போதுமே பிரபஞ்சத்தில் இருந்து பிரிந்திருக்காத நீ ஏன் உன்னையே இப்படி விரட்டிக்கொண்டு இருக்கிறாய்? நீ ஏற்கெனவே இணைந்திருக்கிறவன்தான்.

எவ்வளவு வித்தியாசமான மனோபாவங்கள் பார்த்தாயா? பிரபஞ்சத்தோடு இணைந்தே இருக்கிறாய். பிரிந்திருக்கவில்லை என்கிறார் லாவோட்சு. எப்போதுமே நீ பிரிந்திருக்கவில்லை. பிரித்து வைக்கப்படவும் இல்லை.

அது எப்படிச் சாத்தியம்? தெய்விக சாகரத்தின் பிராணி நீ. அதை தாவோ என்று சொல். வேறு ஏதாவது பெயர் வைத்துக்கொள். எப்படிப் பிரிந்திருக்க முடியும்?

எனவே முதல் அனுமானமே தவறு. பிரிந்திருக்கிறேன் என்ற அனுமானம். அந்த அனுமானத்தின் பேரில் பிறக்கும் வேட்கையும் தவறானதுதான்.

இணைய முயன்றால் பிரிந்தேதான் இருப்பாய். நன்கு கவனித்துப் பார்த்துக்கொள். நீ பிரியவே இல்லை. உனக்குள் மூச்சு விட்டுக்கொண்டு இருப்பது யார்? நீ என்கிறாயா? உனக்குள் சிந்திப்பது யார்? நீயென்று நினைக்கிறாயா? உனக்குள் பிறந்திருப்பது யார்? ஏதாவது தெரிகிறதா? உனக்குள் பிறந்திருப்பது, உனக்குள் வாழ்வது, உனக்குள் மூச்சுவிட்டுக் கொண்டிருப்பது - அதுதான் நிறைவானது.

எப்படி இணைவது என்பதெல்லாம் வெறும் எண்ணங்கள். எண்ணங்கள் இருக்கும்வரை இணைவது இயலாதது. நிலைமையைப் பார்த்துத் தெளிந்துவிடு. நீ ஏற்கெனவே அதற்குள் இருக்கிறாய்.

லின் சி தன் குருவிடம் போனபோது, கண்களில் நீர் வழிய அழுதுகொண்டே போனாராம். எப்படிப் புத்தராவது என்று குருவிடம் கேட்க, அவர் கன்னத்தில் ஓங்கி அறைந்தாராம்.

அதிர்ச்சியுற்ற லின் சி "இது என்ன? ஏதாவது தவறாகக் கேட்டுவிட்டேனா?" என்றாராம்.

அவர். "ஆமாம். இதுதான் ஒருவர் கேட்கக் கூடியதிலேயே மிகத் தவறானது. இன்னொரு தடவை கேட்டால் இன்னும் பலமாக அடித்துவிடுவேன். இது என்ன முட்டாள்தனம்? நீ ஏற்கெனவே புத்தர். புத்தராவது எப்படி என்று கேட்கிறாயே!" என்றார்.

புத்தராவது எப்படி என்ற பொறிக்குள் சிக்கிக் கொண்டால் கோடிக்கணக்கான பிறவிகளுக்கு உனக்கு ஒன்றும் புரியப் போவதில்லை. நீ எப்போதும் புத்தராகவே இருந்து கொண்டிருக்கிறாய்.

புத்தருடைய வாழ்விலேயே இதை விளக்க ஒரு நிகழ்ச்சி நடந்தது. தன்னுடைய பூர்வாசிரமத்தில் ஒரு புத்தரைப்பற்றிக் கேள்விப்பட்டார். எனவே அவர் இருக்கும் இடத்துக்குப் போய்க் கால்களைத் தொட்டு வணங்கினார்.

ஆனால் பெரிய ஆச்சரியம் அவருக்குக் காத்துக் கொண்டிருந்தது. புத்தரின் கால்களைத் தொட்டு வணங்கியபோது அந்தப் புத்தர் இவருடைய கால்களைத் தொட்டு வணங்கினார்.

இவர், "ஆச்சரியமாக இருக்கிறதே. நான் ஒன்றும் தெரியாதவன். அதனால் உங்கள் கால்களைத் தொட்டு வணங்கினேன். தேடுகிறவன். நீங்கள் ஏன் என்னை வணங்கினீர்கள்? நீங்கள் ஏற்கெனவே ஞான சித்தி பெற்றவர் அல்லவா?" என்றார்.

அந்தப் புத்தர் வாய்விட்டுச் சிரித்தார். "உனக்குத் தெரியாது. நீ யார் என்பது உனக்குத் தெரியாது என்பது எனக்குத் தெரியும். என்னைத் தெரிந்துகொண்ட உடனே ஜீவிதம் முழுக்க என்ன என்று தெரிந்து கொண்டேன். உனக்கு இன்னும் தெரியாமல் இருக்கலாம். நீ யார் என்பதைத் தெரிந்துகொள்ள இன்னும் கொஞ்சம் காலமாகும்" என்றார்.

புத்தராவது ஒரு சாதனையல்ல. நீ யாரென்பதைத் தெரிந்து கொள்வதுதான். அது ஒரு வகையில் மறந்து போனதை நினைவுக்குக் கொண்டுவருவது.

எனவே எப்படிப் பிரபஞ்சத்தோடு இணைவது என்று என்னைக் கேட்காதே. அப்படி இணையவேண்டும் என்ற வேட்கை இருக்கிறதா? வேட்கை எவ்வளவுக்கு இருக்கிறதோ, அந்த அளவுக்கு அப்படி இணைந்துவிடுவது சிரமமாகிவிடுகிறது. ஆசையே தடை. ஆசையை விட்டுவிட்டுச் சுற்றுமுற்றும் பார்த்துக்கொள்.

நீ யார்? கடவுள் இருக்கிறார். நீயல்ல. நீ என்பதே தவறான ஒரு கருத்து. ஓர் எண்ணம் - தலையில் ஒரு குமிழ் - ஒரு காற்றுக் குமிழ் - அவ்வளவே.

அதிகமான வேட்கை வருத்துகிறதா? தலைதான் சூடாகிப் போகும். வேறு எதுவும் நடக்கப் போவதில்லை. சூடாகிப்போன ஒரு காற்றுக் குமிழ்.

கொஞ்சம் குளிர்ந்துவிடு. சுற்றுமுற்றும் பார்த்துக்கொள். நீ எப்போதுமே சமுத்திரத்துக்குள்ளேயே இருந்து கொண்டிருக்கிறாய். வேறு எங்கேயும் போய் இருக்கவில்லை. வேறு எந்த இடமும்தான் இல்லையே.

கடவுளைத்தவிர, தாவோ தவிர வேறு எந்த வெளியும் இல்லை. எனவே இணையவேண்டும் என்ற வேட்கையின் முட்டாள்தனத்தை எவ்வளவு விரைவில் புரிந்துகொள்கிறாயோ அவ்வளவுக்கு நல்லது. எதைத் தேடிக்கொண்டு அலைகிறாயோ அதுவாக நீ ஏற்கெனவே இருக்கிறாய்.

இதுதான் ஞானியர் எல்லோருடைய போதனையும். எதைத் தேடிக்கொண்டு அலைகிறாயோ அதுவாக நீ ஏற்கெனவே இருக்கிறாய். நீதான் ஏற்கெனவே உனது குறிக்கோள். உன் யதாஸ்தானத்தை விட்டு நகரவே இல்லை.

அழகான கதையொன்று உண்டு. கொஞ்சம் கொச்சையாகத் தெரியும். ஆனால் ஜென் புத்த மதத்தினரால் மட்டுமே அதைச் செய்யமுடியும். குருவின்மேல் வைத்த அன்பு, புத்தரின்மேல் வைத்த மதிப்பு, சமயத்துக்கு அவர்களைக் கொஞ்சம் கொச்சையாகப் பேச வைக்கும்.

குரங்கொன்று புத்தரிடம் வந்த கதை.

குரங்கு மனிதனுக்கு ஒரு குறியீடு. மனித மனமே குரங்கு. சார்லஸ் டார்வின் அதைத் தெரிந்து கொள்வதற்குள் நீண்டகாலம் ஓடிவிட்டது. மனிதர்கள் குரங்குத்தனமானவர்கள் என்பது நமக்கு வெகுகாலமாகத் தெரிந்துதான் இருக்கிறது.

மனதைக் கவனித்துப் பார். எப்போதும் எதையாவது உளறிக்கொண்டே இருக்கிறது. பிறகு மரத்தின் மேலிருக்கும் குரங்கைப் பார். ஒற்றுமை தெரியும்.

குரங்கொன்று புத்தரிடம் வந்தது. சாதாரணக் குரங்கல்ல. குரங்குகளின் அரசன். சரியான குரங்குதான்.

குரங்கு புத்தரிடம், ''நான் புத்தனாக வேண்டும்'' என்றது.

புத்தர், ''குரங்காக இருக்கும்வரை புத்தராகிப் போனவர் என்று யாரைப்பற்றியும் நான் கேள்விப்பட்டதே இல்லை'' என்றார்.

குரங்கோ, ''என்னுடைய சக்தியைப்பற்றி உங்களுக்குத் தெரியாது. நான் சாதாரண குரங்கல்ல'' என்றது.

''எந்தக் குரங்கும் தன்னைச் சாதாரண குரங்கு என்று எடுத்துக் கொள்வதில்லை. எல்லாக் குரங்குகளும் தம்மை அசாதாரணமான குரங்கு என்றுதான் நினைத்துக் கொள்கின்றன. அது குரங்குத்தனத்தின் ஒரு குணம்'' என்றார்.

புத்தர் ''நான் சாதாரண குரங்கல்ல. என்ன சொல்கிறீர்கள்? நான் குரங்குகளுக்கு அரசன்'' என்றது.

புத்தர், ''சரி. அப்படி அசாதாரணமாக எந்தச் சக்தியை நீ எனக்குக் காட்டமுடியும்?'' என்றார்.

''நான் உலகத்தின் கடைக்கோடி வரைக்கும் தாண்டிப் போகமுடியும்.'' வாழ்நாள் முழுக்க மரங்களில் தாவிக் கொண்டிருந்த குரங்கு. தாவும் கலை கற்ற குரங்குதான்.

''சரி சரி. என் உள்ளங்கையில் உட்கார்ந்து உலகைக் கடக்கத் தாவு பார்க்கலாம்'' என்றார்.

முயன்று முயன்று பார்த்தது. அபாரமான குரங்கு. அம்புபோலத் தாவியது. வெகுதூரம் தாண்டித் தாவியது. தாவல் பல மாதங்கள், பல

வருடங்கள் என்று தொடர்ந்தது. உலகின் கடைக்கோடிக்குப் போய்ச்சேர்ந்தது.

சிரித்துக் கொண்டது. ''பார், பார். உலகின் கடைக்கோடி..'' எட்டிப் பார்த்தது. ஐந்து தூண்களுக்கு அப்பால் வெறும் வெளி. இனி என்ன? திரும்பிப்போக வேண்டியதுதான். ஆனால் கடைசிவரை போய்விட்டு வந்ததற்குச் சாட்சி வேண்டுமே. அந்தத் தூண்களில் ஒன்றின் மேல் மூத்திரம் பெய்துவிட்டுத் திரும்பியது.

பல வருடங்கள் தாண்டித் தாண்டி கிளம்பிய இடத்துக்கு வந்து சேர்ந்தது. புத்தரைப் போய்ச் சேர்ந்தவுடன், ''உலகின் கடைக்கோடிக்குப் போய்விட்டு வந்துவிட்டேன்'' என்றது.

புத்தர், ''சுற்று முற்றும் பார்'' என்றார்.

அவர் இருந்த இடத்தைவிட்டு நகரவே இல்லை. அவருடைய விரல்களே தூண்களாக இருந்தன. ஒரே நாற்றம். மூத்திர வீச்சம்.

கண்களை மூடிக்கொண்டு குரங்கு அங்கேயே இருந்திருக்கிறது. கனா கண்டு கொண்டிருந்திருக்க வேண்டும்.

மனமும் கண்களை மூடிக்கொண்டு இருக்கும் ஒரு குரங்குதான். நீ எங்கேயும் போயிருக்கவில்லை. எப்போதும் இங்கேயும் இப்போதும்தான் இருக்கிறாய். இதைத்தவிர வேறு எதுவும் இல்லை.

கண்களைத் திறந்து பார். கொஞ்சம் கண்களைத் திறந்து பார். உனக்குச் சிரிப்புத்தான் வரும். நீ எப்போதும் அனைத்தையும் கடந்தவனில் போய்விட்டுத்தான் நிற்கிறாய். இணைந்துகொள்ள எந்தத் தேவையும் இல்லை. வேண்டியது எல்லாம் எங்கே இருக்கிறாய், என்னவாக இருக்கிறாய் என்ற விழிப்புணர்வுதான்.

வேட்கையின் முட்டாள்தனத்தை விட்டுவிடு. ஆசை ஒரு தடை. ஆழ்ந்த ஆசை பெரிய தடை. ஆசை மனதுக்கு மேக மூட்டமிடுகிறது. ஆசை உன்னைச் சுற்றி ஒரு புகைப் படலமாகிப் போகிறது. பிறகெப்படி எதார்த்தத்தைத் தெரிந்துகொள்வது?

**நான்காவது கேள்வி:**

**முரண்பட்டவைகளின் லயம்பற்றிப் பேசினீர்கள். எனக் கென்னவோ வெறுப்பு அன்பைக் கொல்வதாகத்தான் படுகிறது.**

*கோபம் கருணையைக் கொல்கிறது. பிறகெப்படி நான் அந்த லயத்தைக் காண்பது?*

நீ சொல்வது முழுக்கத் தவறு. வெறுப்பு அன்பையும் கோபம் கருணையும் கொல்ல முடியுமானால் அன்பும் கருணையும் இருக்கவே முடியாது.

அப்படித்தான் என்றால் அதற்குள் நீ மாட்டிக்கொள்வாய். அதிலிருந்து வெளியேறவே முடியாது. பலகோடி ஆண்டுகளாகவே வெறுப்போடேயே வாழ்ந்துவிட்டாய். அன்பைக் கொன்றிருக்க வேண்டுமே! பலகோடி ஆண்டுகளாகக் கோபத்தோடு வாழ்ந்துவிட்டாய். கருணையைக் கொன்றிருக்க வேண்டுமே!

ஆனால் பார். அன்பு இன்னமும் இருக்கிறது. வெறுப்பு வந்து போகிறது. அன்பு நீங்காமல் நிற்கிறது. வெறுப்பு அன்பைக் கொல்ல முடியவில்லை. இரவு பகலைக் கொல்ல முடியவில்லை. வெளிச்சம் இருட்டைக் கொலை செய்து விடவில்லை. இல்லைதான் - வெளிச்சமும் அன்பும் இன்னமும் இருக்கின்றனவே!

எனவே முதலில் புரிந்துகொள்ள வேண்டியது இன்னமும் அவற்றைக் கொன்றாகவில்லை என்பதுதான். அது ஒன்று.

அடுத்தது நீ உண்மையாகவே அன்புடையவன் ஆகும்போது மட்டுமே சாத்தியமாவது. நீ இதுவரை உண்மையாக அன்பு செலுத்தியதே இல்லை. அதுதான் பிரச்சனையே. வெறுப்பல்ல பிரச்சனையாகிப் போனது.

இருட்டல்ல பிரச்சனை. வெளிச்சம் இல்லாமல் போய்விட்டதுதான் பிரச்சனை. வெளிச்சம் இருக்கிறதென்றால் இருட்டு இல்லாமல் போய்விடுகிறது. நீ இதுவரை அன்பு செலுத்தியதே இல்லை. கற்பனை செய்து கொள்கிறாய். கனவு கண்டுகொண்டு இருந்துவிட்டாய். நேசித்ததே இல்லை.

நேசி. நேசிக்க ஆரம்பித்த உடனே வெறுப்பு மறைந்துவிடும் என்று சொல்லவில்லை. அதுவல்ல நான் சொல்ல வந்தது. வெறுப்பு சண்டைக்கு இட்டுச் செல்லும். எல்லோருக்கும்தான் பிழைத்திருக்க ஆசை. வெறுப்பு போராட வைக்கும். எந்த அளவுக்கு நேசிக்கிறாயோ அதே அளவுக்கு வெறுக்கவும் செய்கிறாய்.

ஆனால் இதில் ஓர் ஆச்சரியம். வெறுப்பு நிலையானதல்ல. அன்பை அது கொன்றுவிடுவதில்லை. அன்பை அது வலுப்படுத்தத்தான் செய்கிறது.

அன்பு வெறுப்பை உள்வாங்கிக் கொள்கிறது. ஒருவரை நீ நேசிக்கிறாய் என்றாலும் சில கணங்களில் அவரை வெறுக்கவும்தான் செய்கிறாய். ஆனால் அதனால் அன்பு சிதைக்கப்படுவது இல்லை. அன்புக்கு அப்போது மதிப்பு கூடித்தான் போகிறது.

வெறுப்பு என்பது என்ன என்கிறாய்? விலகிப்போக நினைப்பதுதான். அன்பு என்பது என்ன என்கிறாய்? கூடிக் கலக்க நினைப்பதுதான். வெறுப்பு பிரிவுக்கான ஒரு மனநிலையின் வெளிப்பாடு. விலகிப்போக நினைப்பது. அன்பு மணந்துகொள்ள வைப்பது. நெருங்கிப் போவது கூட இருக்கப்போவது. ஒன்றாகி விடுவது.

வெறுப்பு இரண்டாகிப் போவது. ஒருவருக்கொருவர் சார்பிலலாத இருவராகிப் போவது. அன்பு ஒன்றாகிப் போவது. ஒருவரை ஒருவர் சார்ந்திருப்பது.

வெறுக்கும்போது காதலனையோ காதலியையோ விட்டு நீங்கிப் போகிறாய். ஆனால் அன்றாட வாழ்வில் விட்டுப் போனால்தானே திரும்பி வந்து கூட முடிகிறது!

சாப்பிடுவதைப் போலத்தான். பசிக்கிறது. சாப்பிடுகிறாய். பசி போய்விடுகிறது. காதலும் உணவைப் போலத்தான். காதலிக்கும்போது சாப்பிடும் நிறைவை உணர்கிறாய். மிக நுட்பமான உணர்வு காதல். ஆத்ம வயமானது என்றாலும் அதுவும் ஓர் உணர்வுதான். அது ஊட்டமளிக்கிறது.

காதலிக்கும்போது ஒரு பசி அடங்கிப் போகிறது. திருப்தி தருகிறது. ஆனால் திடீரென விலகிப்போகும் போக்கு ஆரம்பிக்கிறது. விலகிப் போய்விடுகிறீர்கள்.

பிறகென்ன? மறுபடி பசி. நெருங்கிவர வேண்டியிருக்கிறது. கூடியிருக்க வேண்டியிருக்கிறது. ஒருவருக்குள் ஒருவர் புதைந்து போய்விட வேண்டியிருக்கிறது.

சாப்பிட்ட நான்கைந்து மணி நேரத்துக்குச் சாப்பாடு மறந்து போய்விட்ட சமாச்சாரம். தொடர்ந்து சமையல் அறையிலோ அல்லது உணவகத்திலேயோ இருந்துகொண்டே இருக்கிறாயா என்ன? போய்விடுகிறாய். ஆனால் ஆறு மணிநேரம் கழித்துத் திரும்புகிறாய். பசி வந்துவிட்டதே!

காதலுக்கு இரண்டு பக்கம். பசியும் நிறைவும். காதலைப் பசி என்று தவறாகப் புரிந்துகொள்கிறாய். வெறுப்பு வெறுப்பல்ல. அன்பைத்

தூண்டுகிற ஒரு சூழல்தான் ஒரு பகுதியே என்பதைப் புரிந்துகொள்கிறாய். அது அன்பின் மதிப்பை அதிகப்படுத்துகிறது.

கோபம் கருணையின் ஒரு பகுதியாகி விடுகிறது. கருணையை மதிப்பு வாய்ந்ததாக்கி விடுகிறது. கோபத்துக்கு இடமில்லாத கருணை மலட்டுத்தனமானது. அதில் எந்த வேகமும் இருக்காது.

கோபத்துக்கு இடமில்லாத காதலில் சலிப்புத்தான் இருக்கும். பிறகென்ன? சம்சாரம் சிறைச்சாலையாகிப் போகும். அதைவிட்டு நகர முடியாமல் சிக்கிக்கொள்வாய். வெறுப்போடு கூடிய காதலில் சலிப்பிருக்கிறது. அதில் ஒரு சுதந்திரம் இருக்கும்.

தினம் தினம் தள்ளிப்போட்டுக் கொண்டிருப்பதாலேயே விவா கரத்துகள் நடக்கின்றன என்பது வாழ்வைப் பற்றிய என் கணக்கின் விடை. தினம் தினமும் மனத்தளவில் விவாகரத்து நடந்து கொண்டேயிருப்பதால் ஒரு நாள் திருமணம் முழுக்கக் கொல்லப்படுகிறது. ரத்தாவதற்கு முன்பே விவாகம் சிதைந்து போகிறது.

நான் சொல்வதைச் சரியாகப் புரிந்து கொண்டாயென்றால் அதைத் தள்ளிப் போட்டுக் கொண்டே இருக்காதே. தினமும் விவாகத்தை ரத்துச் செய்துவிட்டுப் புதுமணம் செய்துகொள். பகலும் இரவும் போல, பசியும் நிறைவும் போல, வேனிலும் குளிர்காலமும் போல, வாழ்வும் சாவும் போல அது ஒரு லயமாக இருக்கவேண்டும்.

அப்படித்தானிருக்க வேண்டும். காலையில் காதல். மதியம் வெறுப்பு. காதலிக்கும்போது முழுக்கக் காதலி. வெறுக்கும்போது முழுக்க வெறுத்துவிடு. பிறகென்ன? அதில் ஓர் அழகு இருக்கக் காண்பாய். நிறைவின் அழகு.

நிறைவான வெறுப்பும் ஓர் அழகுதான், நிறைவான காதலின் அழகைப்போல. மொத்தமான கோபமும் ஓர் அழகுதான், முழுக் கருணையின் அழகைப்போல. பூரணத்தின் அழகு.

கோபம் மட்டுமே என்றால் அசிங்கம். மலை உச்சியில்லாத பள்ளத்தாக்கைப்போல மூளியாகிப் போகும். மலையுச்சியும் கூட இருக்க பள்ளத்தாக்கு அழகானதொரு காட்சியாகிப் போகிறது. மலையுச்சியி லிருந்து பார்க்கும்போது பள்ளத்தாக்கு வெகு அழகு. பள்ளத்தாக்கிலிருந்து பார்க்கும்போது மலையுச்சி வெகு அழகு.

நீ நகர்ந்து கொண்டிருக்கிறாய். இவ்விரண்டு கரைகளுக்கு இடையே உன் வாழ்வெனும் நதி நகர்ந்து கொண்டிருக்கிறது.

நகர்ந்து போகப்போக வெறுப்பு காதலுக்கு எதிரிடையானதல்ல - இட்டு நிரப்புவது என்பதைப் புரிந்துகொள்வாய்.

கோபம் கருணைக்கு எதிரிடையானதல்ல - இட்டு நிரப்புவது என்பதைப் புரிந்துகொள்வாய்.

ஓய்வு பணிக்கு எதிரிடையானதல்ல - இட்டு நிரப்புவது என்பதைப் புரிந்துகொள்வாய்.

இரவு பகலுக்கு எதிரிடையானதல்ல - இட்டு நிரப்புவது என்பதைப் புரிந்துகொள்வாய்.

இரண்டிரண்டாகவே அவை முழுமையடைகின்றன.

காதலிருத்திருக்கவில்லை என்பதாலேயே வெறுப்பைக் கண்டு பயந்து போகிறாய். உன்னிடம் காதலின் வலிமை இல்லையென்பதாலேயே பயந்து போகிறாய். வெறுப்பு அதைத் தொலைத்துக் கட்டிவிடும் என்று பயந்து போகிறாய்.

காதலிக்கிறாயா இல்லையா என்பதே உனக்கு இரண்டர்த்தமாக இருக்கிறது. அதனால்தான் வெறுப்பையும் கோபத்தையும் கண்டு பயந்து கிடக்கிறாய். வீட்டை முழுக்க இடித்துத் தள்ளிவிடுமோ என்ற பயம் உனக்கு. அப்படி ஒரு வீடு இருக்கிறதா என்பதைப்பற்றிக் கூட உனக்கு நிச்சயமாகத் தெரிந்திருக்கவில்லை. அது கற்பனைதானோ என்பதும் நிச்சயமில்லை உனக்கு.

கற்பனைதானென்றால் வெறுப்பு அதைத் தகர்த்துவிடும். நிஜமெனில் வெறுப்பு அதை மேலும் வலிவானதாக்கிவிடும். புயலுக்குப் பின்னர் அமைதிதானே? வெறுப்புக்குப் பின் காதலர்கள் புதிதாக ஒருவருக்குள் ஒருவர் புகுந்துகொள்ளத் தயாராகிவிடுகிறார்கள். முதன்முறையாகச் சந்தித்துக் கொள்கிறவர்களைப்போலப் புத்தம் புதியவர்களாக மறுபடி மறுபடி சந்திக்கிறார்கள். ஒவ்வொரு தடவையும் முதல் தடவையாக...

காதலர்கள் எப்போதுமே முதன்முறையாகச் சந்தித்துக் கொள்கிறவர்கள்தான். இரண்டாவது சந்திப்பு என்றாலே காதல் பழையதாகிப் போய்விட்டது என்று பொருள். அலுத்துப் போய்விடும்.

காதலர்கள் தினம்தினம் காதல் வயப்படுகிறார்கள். புத்தம் புதிய காதல். காதலியைப் பார்க்கும்போது இதற்கு முன் பார்த்தவளைப் போலவே இருப்பதில்லை. அவ்வளவு புத்தம் புதியவளாக இருக்கிறாள். காதலனைப் பார்க்கும்போது முன்பின் தெரியாதவனைப்போல இருக்கிறான். பிறகென்ன? மறுபடி காதல்தான்.

வெறுப்பு காதலைச் சிதைப்பதில்லை. காதலின் சலிப்பைத்தான் சிதைக்கிறது. அது ஒருவிதமான சுத்தம் செய்வதாகிப் போகிறது. அதைச் சரியாகப் புரிந்துகொண்டால் நன்றி பாராட்டுவாய். வெறுப்புக்கும் நன்றியுடையவனாக இருந்தால் புரிந்துகொண்டவனாகிப் போகிறாய். உன்னுடைய காதலை இனி எதுவும் அழிக்க முடியாது.

இப்போதுதான் முதன்முறையாக நீ வேர்விட்டு நிற்கிறாய். புயலைத் தாங்கி உள் வாங்கிக்கொள்ள முடியும். புயல் உன்னைப் பலமாக்கிவிட்டுப் போகிறது. புயல் உன் மதிப்பை அதிகமாக்கி விட்டுப்போகிறது.

வாழ்க்கை இரட்டைத்தனமானது என்று கொள்ளாதே. அதை ஒரு தீராத போராட்டம் என்று எடுத்துக் கொள்ளாதே. அப்படியானதல்ல வாழ்க்கை. எனக்குத் தெரியும். எனக்கு அனுபவம் இருக்கிறது. அதனால் வாழ்க்கை அப்படிப்பட்டதல்ல என்கிறேன்.

வாழ்க்கை ஒன்றேதான். ஏகத்துவம் கொண்டது. எல்லாமும் அதில் அங்கங்குப் பொருந்தி நிற்கின்றன. அவை அப்படியே பொருந்தியிருக்க எப்படி விடுவது என்பதைத்தான் நீ கற்றுக்கொள்ள வேண்டும். அவற்றை ஒன்றாகப் பொருந்தியிருக்க விட்டுவிடு. வாழ்க்கை ஓர் அழகான முழுமை.

வெறுப்பில்லாத உலகம் சாத்தியம்தான் என்றால் அப்படிப்பட்ட உலகை நான் தேர்ந்தெடுக்க மாட்டேன். அதில் ஜீவனிருக்காது. சலிப்புத்தான் இருக்கும்.

அதில் இனிமையிருக்கலாம். ஆனால் அந்த இனிமை திகட்டும் இனிமையாகத்தான் இருக்கும். உப்புக்காக ஏங்க வைத்துவிடும்.

கோபமில்லாத உலகம் சாத்தியம்தான் என்றால் அப்படிப்பட்ட உலகில் வாழத் தேர்ந்தெடுக்க மாட்டேன். கோபமில்லாத கருணையில் ஜீவனிருக்காது.

முரண்பாடுகள் ஓர் இறுக்கத்தைத் தரும். அந்த இறுக்கத்தில் ஒரு வலிவு இருக்கும். சாதாரண இரும்பைக் காய்ச்சிக் குளிர வைத்தால் வலிவு சேர்ந்துவிடும். தீயின்றி இரும்பு ஸ்டீல் ஆக முடியாது. எவ்வளவுக்குக் காய்ச்சுகிறோமோ அந்த அளவுக்கு வலிமை சேரும்.

கருணை கோபத்தினுள் போய்விட்டு வெளியே வரும்போது கோபத்தில் எந்த அளவு சூடு இருந்ததோ அந்த அளவுக்குக் கருணையில் குளிர்ச்சி இருக்கும்.

புத்தரிடம் கருணை இருந்தது. அவர் ஒரு போர்வீரரும்கூட, சத்திரிய குலத் தோன்றல். வெகு ரௌத்திரத்தோடு வாழ்ந்திருக்க வேண்டும். திடீரெனக் கருணையில் குளிர்ந்துவிட்டார்.

மகாவீரரும் ஒரு சத்திரியர்தான். இது கொஞ்சம் வேடிக்கையாகத் தெரியும். என்றாலும் அதில் ஒரு முறைமை இருக்கிறது. சாத்விகத்தைப் போதித்தவர்கள் எல்லோருமே சத்திரிய குலத்தில் இருந்து வந்தவர்கள்.

எந்தப் பிராம்மணனும் அகிம்சையைப் போதிக்கவில்லை. ஒரே ஒரு பிராம்மணரைத்தான் அவதாரம் என்று முன்னிலைப்படுத்தியிருக்கக் காண்கிறோம். பரசுராமர். ஆனால் அவரோ மிகக் கோபக்காரராக இருந்திருக்கிறார். வன்முறையை நாடிய பிராம்மணர்.

சமணர்களில் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்கள் அனைவரும் சத்திரியர்களே. புத்தர் ஒரு சத்திரியர். அவர்களோ அகிம்சையைப் போதித்தார்கள். கருணை பற்றிப் பேசினார்கள். வன்முறையை வாழ்ந்து அனுபவித்தவர்கள். அதற்குள்ளே போய்க் கடந்து வந்துவிட்டவர்கள்.

ஒரு பிராம்மணர் அகிம்சைவாதி என்றால் அவரது அகிம்சை மேலோட்டமாகத்தான் இருக்கும். நெருப்புக்குள் புகுந்து வந்துவிட்ட சத்திரியனிடம்தான் உண்மையான கருணை இருக்கும். அல்லது அப்படிப்பட்ட கருணைக்கான சாத்தியங்கள் இருக்க முடியும்.

எனவே உனக்குள் தூர விலகிப் போயிருக்கும் முரண்பாடுகள் பொருது நிற்கின்றன என்றால் ஒன்றை விட்டுவிட்டு இன்னொன்றைத் தேர்ந்துவிடாதே. இரண்டையுமே இருக்க விட்டுவிடு.

பெரியதொரு வீடாக விசாலமாக இருந்துவிடு. "என்னிடம் கருணை மட்டுமே இருக்கும். கோபமே இருக்காது. அன்பே என்னிடம். வெறுப்பே இல்லை" என்றெல்லாம் சொல்லாதே. வறியவனாகிவிடுவாய்.

விசாலமான அறைகளைக் கொண்டிரு. அவற்றுக்கிடையே சண்டை மூட்டிவிட வேண்டிய அவசியமில்லை. சண்டையேயில்லை. சண்டை உன் மனதிலிருந்து தோன்றுவது. நீ கற்றுக் கொண்டதிலிருந்து கிளம்புவது. உன்னை வளர்த்த விதத்தின் விளைவு. உன்னை ஒரு மாதிரியாக ஆக்கி வைத்திருப்பதன் கோலம்.

உலகம் முழுக்க உன்னிடம், "அன்பாயிரு. வெறுக்காதே" என்கிறது. எப்படி வெறுப்பின்றி அன்பாயிருப்பது?

யேசு, ''உன் விரோதிகளையும் நேசி'' என்கிறார். நானோ ''காதலனையும் வெறு'' என்கிறேன். இரண்டும் சேர்ந்தால்தான் முழுமையாகும். இல்லையென்றால் யேசு சொன்னது அரைகுறையாகத்தான் இருக்கும்.

''எதிரியை நேசி'' என்கிறார். நீ வெறுக்க மட்டுமே செய்கிறாய். ''அன்பையும் காண்பி'' என்கிறார். என்றாலும் அடுத்த பகுதி அவரிடம் இல்லாமல் போய்விட்டது.

நான் சொல்கிறேன். ''நண்பர்களை வெறுத்து விடு. காதலரிடமும் வெறுப்புக்கொள்.'' பயமே வேண்டியதில்லை. போகப்போக நண்பனும் விரோதியும் ஒன்றுதான் என்று தெரிந்து கொள்வாய். எதிரியை வெறுத்து நேசிக்கிறாய். நண்பனை நேசித்து வெறுக்கிறாய். இரண்டும் ஒன்றுதான். இங்கிருந்து அங்கே அல்லது அங்கிருந்து இங்கே. அவ்வளவுதான். பிறகென்ன? நண்பனே எதிரி. எதிரியே நண்பன். வித்தியாசங்கள் விலகிப் போகின்றன.

உனக்குள்ளே ஒரு போராட்டம் நடக்க விடாதே. இரண்டையும் இருக்க விடு. இரண்டுமே தேவை. ஒவ்வொன்றும் ஓர் இறக்கை. இரண்டு இறக்கைகள் இருந்தால்தான் பறக்க முடியும்.

கடைசிக் கேள்வி:

**லாவோட் சூ பிரமாதமானவராக இருக்கலாம். சத்தியத்தின் சிகரமாக இருக்கலாம். ஆனால் அவருடைய உயர்வே நமக்கு அவரைப் பயனற்றவராக்கிவிடுகிறதே! மகாவீரர் அல்லது மோஸஸ் அல்லது முகம்மது எதார்த்தமானவர்களாக, நமக்கு உதவும்படியாக இருக்கி றார்கள் என்று சொல்லலாம் அல்லவா?**

அவர்கள் அப்படித்தான். அவ...,விட எதார்த்தமானவர்கள். உதவுபடியானவர்கள். உங்களை முழுக்கத் திருத்துவதில்லை என்பதாலேயே உதவுபடியாகத் தோன்றுகிறார்கள். நடைமுறை சாத்தியக்காரர்கள்தான். முகம்மதுவும் மோஸஸும் உன் மனத்தோடு பொருந்தி வருவதால் நடைமுறை சாத்தியமானவர்கள் ஆகிறார்கள். அதனால்தான் அப்படித் தோன்றுகிறார்கள். எது நடைமுறை சாத்தியம் என்று நீ நினைக்கிறாயோ அதையே அவர்களும் நடைமுறை சாத்தியம் என்று நினைக்கிறார்கள்.

லாவோட் சூ உன் மனதிலிருந்து முழுக்க வேறுபட்டவர். அதனால்தான் முழுக்கத் திருத்துவது சாத்தியம் என்றாகிறது. முகம்மது உன்னைத் திருத்தியமைக்கப் போவதில்லை.

நீ ஒரு முகம்மதியனாகிவிடலாம். நல்லவனாகிவிடலாம். சிறந்த குணங்கள் உள்ளவன் ஆகிவிடலாம். என்றாலும் அதே பாட்டையில்தான் இருப்பாய். உன் பருமாணத்தில் மாற்றம் இருக்காது.

மகாவீரரோடு இருந்தும் அப்படியேதான். சிறந்தவனாகலாம். என்றாலும் அதே ஆள்தான். கொஞ்சம் மாற்றங்கள், கொஞ்சம் சீர்மை, கொஞ்சம் அரிதாரம், கொஞ்சம் ரிப்பேர்கள் - என்றாலும் அதே ஆள்தான்.

லாவோட் சூவுடன் இருந்தால் நீ முழுக்க அழிக்கப்பட்டு விடுவாய். புனர் ஜென்மம் எடுப்பாய். அவரே இறப்பும் ஈடேற்றமுமாகிறவர்.

அது ஏன் அப்படி என்பதைப் புரிந்துகொள்ள முயன்றுபார். மகாவீரரைப் புரிந்துகொள்ள முடியும். அவருடைய கணக்கெல்லாம் உன் மனக்கணக்குத்தான். அவருடைய தாக்கம் உன் சிந்தனையைத் தாண்டிப் போவதில்லை. அதனால்தான் அவர் நடைமுறைவாதியாகத் தெரிகிறார்.

அவரைப் பின்பற்றியவர்கள் எல்லோருமே வியாபாரிகளாவது தற்செயலான விஷயமல்ல. கணக்குப் போட்டுப் பார்க்கிறவர்கள், வியாபாரிகள், நடைமுறைவாதிகள். சமணர்கள் எல்லோரும் வியாபாரிகளாக இருப்பது தற்செயலான விஷயமல்ல. அவர்கள் கணக்கில் புலிகள். தந்திரக்காரர்கள். யூதர்களும் அப்படியே இருப்பது தற்செயலான விஷயமல்ல. சமணர்களும் யூதர்களும் ஒன்றே போலத்தான். சமணர்கள் இந்திய யூதர்கள். ஏன் அப்படி? மகாவீரர் நடைமுறைவாதி. மோஸஸும் நடைமுறைவாதிதான்.

ஒரு கதை நினைவுக்கு வருகிறது. ஆதிகாலத்திய கதை. தன் பத்துக் கட்டளைகளை ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு சமுதாயத்தைக் கட்வுள் தேடிக் கொண்டிருந்தார். உலகத்தில் நெறிகெட்டுப் போய் ஒழுங்கீனம் மலிந்து போய்விட்டது. ஒழுக்கம் தேவைப்பட்டது.

ஒவ்வொரு மக்களாய்ப் போய்க் கேட்டுப் பார்த்தார். யாரும் சம்மதிக்கவில்லை.

இந்துக்களிடம் போனார். ''உங்களுக்காக என்னிடம் பத்துக் கட்டளைகள் இருக்கின்றன. வாழ்வின் மொத்த தத்துவமே அத்தனைதான்'' என்றார்.

இந்துக்கள், ''சரிதான். உதாரணத்துக்கு ஒன்றைச் சொல்லுங்கள்'' என்றார்கள்.

''உண்மையாக இரு. நேர்மையாக இரு.''

இந்துக்களோ ''இந்த மாயா உலகில் அது சிரமம். இந்த மாயையில் ஓரளவுக்கு உண்மையற்றதும் தேவை. இந்தக் கனவுலகில் எப்படி ஒருவன் எப்போதும் உண்மையானவனாக இருப்பது? சிரமம். எதற்கு அனாவசியமாகச் சிரமப்பட வேண்டும்?'' என்று சொல்லிவிட்டார்கள்.

வேறு சமுதாயங்களையும் கேட்டுப் பார்த்தார். சிலர் காமத்தை விட்டுவிடுவது சிரமம் என்றார்கள். சிலர் துரோகம் செய்யாவிட்டால் வாழ்க்கையில் சுவாரசியம் இருக்காதென்றார்கள். கணவன் மனைவி துரோகமே வாழ்க்கையில் சுவாரசியமானது என்றார்கள். எனவே நேர்மையாக இருப்பது மிக அதிகமான எதிர்பார்ப்பு. வாழ்க்கையில் எந்த மதிப்பும் இருக்காது. இப்படியெல்லாம் சொல்லிவிட்டார்கள்.

கடவுளுக்கு விரக்தியே வந்துவிட்டது. எங்கே போனாலும் அவரை ஏற்றுக்கொள்ள யாரும் இல்லை.

மோஸஸிடம் போனார். அவரிடம், ''உங்களுக்கென்று என்னிடம் பத்துக் கட்டளைகள் இருக்கின்றன'' என்றாராம். அவரோ, ''என்ன விலை?'' என்றுதான் கேட்டாராம்.

சொல்லும்போதே பதற்றம். அவர்களை விட்டால் இனி யாருமில்லை. ''வாங்கிக் கொள்கிறீர்களா?''

மோஸஸ் ''என்ன கட்டளைகள்?'' என்று கேட்பார் என்றுதான் எதிர்பார்த்தார். அவரோ ''என்ன விலை?'' என்று கேட்டாராம்.

கடவுள், ''இலவசம்'' என்றாராம்.

மோஸஸ், ''அப்படியானால் இரண்டு பத்துக்களைக் கொடுங்கள்'' என்றாராம்.

யூதர்கள் கணக்குப் போடுகிறவர்கள். தந்திரக்காரர்கள். புத்திசாலிகள். உலக மக்களில் இரண்டு சதவிகிதம். ஆனால் நோபல் பரிசுகளில் பதினெட்டு சதவிகிதம் வாங்குகிறவர்கள். இரண்டு சதவிகித மக்கள் பதினெட்டு சதவிகிதம் பரிசுகள். நம்ப முடியாத விஷயம்தான்.

இரண்டு சதவிகித்தினர். ஆனால் எல்லாமும் அவர்களுடைய கைகளில். எங்கே பார்த்தாலும் இருக்கிறார்கள். ஆனால் எல்லோரும் துரத்திக் கொண்டேதான் இருக்கிறார்கள்.

என்றாலும் காரியவாதிகள். தந்திரமானவர்கள். இந்த நூற்றாண்டை ஆண்ட மூவரும் யூதர்கள். மார்க்ஸ், ஃப்ராய்டு, ஐன்ஸ்டீன். உலகத்தை முழுக்க ஆண்ட மூவர். மூவரும் யூதர்கள்.

எப்படி நடந்தது? புரிந்துகொள்வது மிகச் சுலபம். அவர்கள் காரியவாதிகள். லாவோட் சூ நடைமுறைவாதியல்ல. காரியவாத மில்லாததைச் சிலாகித்தவர்.

இன்னொரு கதை.

லாவோட் சூ தன் சீடர்களோடு போய்க் கொண்டிருந்தபோது ஒரு காட்டு வழியாகப் போனார். ஒரு பெரிய அரண்மனை வேலை நடந்து கொண்டிருந்தது. நூற்றுக்கணக்கானோர் மரங்களை வெட்டிக் கொண்டிருந்தனர். காடு முழுக்க வெட்டியாகிவிட்டது. ஒரு பிரம்மாண்ட மான மரம் மட்டும் அப்படியே இருந்தது. பத்தாயிரம் பேர் அதன் நிழலில் உட்காரலாம். அவ்வளவு பிரம்மாண்டமான மரம். தன் சீடர்களை அனுப்பிக் காடு முழுவதும் மொட்டையடித்த பின் அந்த ஒரு மரத்தை மட்டும் யாரும் வெட்டாமல் விட்டு வைத்திருக்கும் காரணத்தைத் தெரிந்துவரச் சொன்னார்.

அவர்களும் போய், ''இந்த மரத்தை மட்டும் ஏன் விட்டு வைத்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்கள்.

அருமையான பதில் வந்தது. ''அதுவா? இது பிரயோசனமில்லாத மரம். ஒவ்வொரு கிளையிலும் ஏகப்பட்ட முண்டும் முடிச்சும். என்ன செய்வது இதை வைத்துக்கொண்டு? நேராயிருந்தாலாவது தூண்கள் செய்யலாம். அதுவுமில்லை. தட்டுமுட்டுச் சாமான்கள் செய்யலாம் என்றாலும் முடியாது. வெட்டி எரிக்கலாம் என்றாலோ கிளப்புகிற புகையின் விஷத்தில் கண்கெட்டுப் போகும். எந்தப் பிரயோசனமும் இல்லை. அதனால்தான்'' என்றார்கள்.

திரும்பிப் போய்ச் சொன்னார்கள். லாவோட் சூ சிரித்தார். ''இந்த மரத்தைப் போலத்தான் இருக்க வேண்டும். பிழைத்திருக்க வேண்டுமானால் இந்த மரத்தைப் போலத்தான் இருக்கவேண்டும். எந்தப் பிரயோசனமும் இல்லாமல் இருக்கவேண்டும். யாரும் எந்தத் தீங்கும் செய்யமாட்டார்கள். நேராக இருந்தால் வெட்டி எடுத்துப்போய்த் தூணோ தட்டுமுட்டுச் சாமானோ செய்துவிடுவார்கள். அழகாக இருந்தால் சந்தையில் விற்கப்படும் பண்டமாகிப் போவாய். இந்த மரத்தைப்போல எந்தப் பிரயோசனமும் இல்லாமல் இருந்து விடு. யாரும் எந்தத் தொந்திரவும் செய்ய மாட்டார்கள். சௌகரியத்துக்கு வளரலாம். ஆயிரக்கணக்கானோர் உன் நிழலில் இளைப்பாறலாம்'' என்றார்.

லாவோட் சூ ஓர் ஊர் வழியாகப் போய்க் கொண்டிருந்தார். அந்த ஊரின் இளைஞர்கள் எல்லோரையும் கட்டாயப்படுத்தி ராணுவத்தில் சேர்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு கூனனைக் கண்டார்கள். லாவோ சூ, ''அவனிடம் போய் அவனை மட்டும் ஏன் விட்டு வைத்திருக்கிறார்கள் என்று கேட்டு வாருங்கள்'' என்றார்.

''அவன், என்னை வைத்துக்கொண்டு என்ன செய்வது? பாருங்கள், நான் கூனன்'' என்றான்.

திரும்பி வந்தவர்களிடம் லாவோட் சூ, ''நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். இந்தக் கூனனைப்போல இருந்து விடுங்கள். கொலை செய்யவோ, செய்யப்படவோ உன்னை இழுத்துக்கொண்டு போக மாட்டார்கள்'' என்றார்.

உன்னுடைய மனதிலிருந்து முழுக்க வேறுபட்ட தாக்கம் லாவோட் சூவினுடையது. ''கடைசி ஆளாக இரு'' என்கிறார். ''இல்லாதவனைப் போல இரு. யாருக்கும் தெரியாதவனாக இருந்துவிடு. முதலானவனாக இருக்க முயலாதே. தூக்கில் போட்டுவிடுவார்கள்'' என்கிறார்.

போட்டி போடாதே. உன் மதிப்பை நிருபிக்க முயலாதே. தேவையே இல்லை. பியோசனம் இல்லாதவனாக இருந்து அனுபவி.

இது காரிய சாத்தியமான வாதமல்ல. ஆனால் அவரைப் புரிந்துகொண்டால் இதுதான் விவேகம், அடி ஆழத்தின் விவேகம் என்பதைத் தெரிந்துகொள்வாய். வாழ்க்கை அனுபவிக்க வேண்டியது. கொண்டாட வேண்டியது. எப்போதும் பயனைச் சார்ந்தே இருப்பதல்ல.

வாழ்க்கை ஓர் அங்காடிப் பண்டமல்ல. ஒரு கவிதை. ஒரு கவிதையைப் போல, பாடலைப் போல, நடனம் போல, சாலையோரத்து மலர் போல இருக்கவேண்டும். குறிப்பிட்ட யாருக்காகவும் மலராமல் காற்றில் மணத்தைக் கலக்க விட்டுக்கொண்டு, விலாசமில்லாமல் எவரொருவராகவும் இல்லாமல் தன்னையே அனுபவித்துக்கொண்டு தானாகவே இருந்துகொண்டு இருக்கவேண்டும்.

லாவோட் சூ, ''புத்திசாலியாக இருக்க முயன்றால், பிரயோசனம் உள்ளவனாக இருக்க முயன்றால், உன்னைப் பயன்படுத்திக் கொள்வார்கள். காரியவாதியாக இருந்தால் ஏதோ ஓர் இடத்தில் நுகத்தைப் பூட்டி விடுவார்கள். பிரயோசனமானவர்களை உலகம் விட்டு வைப்பதில்லை'' என்கிறார்.

''இதையெல்லாம் விட்டுவிடு. ஒரு கவிதையாக இருக்க வேண்டுமானால், ஒரு பரவசமாக இருக்கவேண்டுமானால், பயன்பாட்டை மறந்துவிடு. உனக்கு நீ உண்மையாக இரு. நீயாகவே இரு.''

''உன் காரியத்தைச் செய்'' என்பது ஹிப்பிகளின் வார்த்தை. லாவோட் சு உலகத்தின் முதல் ஹப்பி. நீயாக இரு. உன் காரியத்தைக் கவனி. வேறு எதைப்பற்றியும் கவலைப்படாதே'' என்கிறார்.

விற்கப்படுவதற்காக அல்ல நீயிருப்பது. பயனுள்ளவனாக இருப்பதைப்பற்றி நினைக்காதே. ஆனந்தமாக இருப்பதை எண்ணிப்பார். ஆனந்தமாயிரு. அந்த ஆனந்தத்தில் இருந்து ஏதாவது தோன்றிப் பாய்ந்தால் அதைப் பகிர்ந்துகொள். ஆனால் பயனுள்ளவனாக இருக்க உன்னைக் கட்டாயப்படுத்தாதே. அதிலிருந்துதான் தற்கொலைகள் வருகின்றன. தற்கொலை எண்ணம் கொண்டவனாகிவிடாதே.

லாவோட் சுவை விட எல்லா ஞானிகளும் காரியசாத்திய வாதிகள்தான். அதனால்தான் பிறரைக் கவர்கிறார்கள். அதனால்தான் பெரிய ஸ்தாபனங்களைக் கொண்டிருக்கிறார்கள்.

உலகத்தில் பாதி கிருத்துவர்கள், இந்துக்கள், சமணர்கள், முகம்மதியர்கள், சீக்கியர்கள் - எல்லோருமே பயனைக் கருத்தில் கொண்டவர்கள்.

லாவோட் சு அவர்களிடமிருந்து தள்ளி நிற்கிறார். தனியாக நிற்கிறார். தனிமையின் ஜீவிதம் லாவோட் சு.

ஆனால் அவர் அரிதானவர். அவரைப் புரிந்து கொண்டால் நீயும் அரிதானவனாகிப் போவாய். தனிச்சிறப்புப் பெற்றவனாகிவிடுவாய்.

வழியா? சாதாரணமாக இருப்பதுதான். சாதாரணமாக இருந்து அசாதாரணமாகிப் போவது. கடைசியில் இருந்து முதல் ஆளாக ஆகிப் போவது. உரிமை கொண்டாடாமல் இருப்பதுதான் வழி. உரிமை கொண்டாடாமல் இருந்துவிட்டால் உரிமையை உன்னிடமிருந்து யார் எடுத்துக்கொண்டு போய்விட முடியும்? எதுவுமில்லாமல், எவரொருவரும் இல்லாமல் இருப்பது. அப்படித்தான் நீ ஸ்தூலமாக, யாரோ ஒருவராக ஆகிப் போகிறாய். ஜீவிதம் முழுக்க ஆனந்தப்படும் ஒருவர். ஜீவிதம் முழுக்க ஆசீவதிப்பவர். ஜீவிதம் முழுக்கக் கொண்டாடுபவர்.

❑

மூன்று

## தாவோவின் இயல்பு

தாவோ ஒரு காலிப் பாத்திரம்
அதன் பயன்பாடோ அனந்தம்
ஆழம் காணமுடியாது.
பள்ளத்தாக்கின் ஆன்மா பற்றி
பள்ளத்தாக்கின் ஆன்மா மரணிப்பதில்லை.
அதைப் புரிதலுக்கப்பாற்பட்ட பெண்மை என்பர்.
புரிதலுக்கப்பாற்பட்ட பெண்மையின் தலைவாயில்
வானுக்கும் மண்ணுக்கும் வேர்.
தொடர்ந்து எப்போதும் தொடர்ந்து
இருப்பது அது.
அதிலிருந்து மொண்டு கொள்.
அது உனக்கு எளிதில் சேவகம் செய்யும்.

லாவோட் சூவின் உலகம் தத்துவம், சமயம், அற உலகங்களில் இருந்து முழுக்க மாறுபட்டது. அது ஒரு நெறி கூட அல்ல. லாவோட் சூ எதையும் சொல்லித் தரவில்லை. அதுவாக இருக்கிறார்.

அவர் போதிக்கிறவர் அல்ல. அவர் ஒரு ஜீவிதம்.

உனக்குத் தர எந்தச் சாத்திரமும் அவரிடம் இல்லை. அவர் தன்னைத்தானே உனக்குத் தருகிறார். தன்னைத்தான் உன்னோடு பகிர்ந்து கொள்கிறார்.

அவர் தத்துவவாதியாக இருந்திருந்தால் எல்லாமும் சுலபமாகிப் போயிருக்கும். அவரைப் புரிந்து கொண்டிருப்பாய்.

அவர் ஒரு தத்துவமல்ல என்பதாலேயே அற்புதமாகிப் போனவர்.

அவர் தத்துவத்துக்கு எதிரானவர் அல்ல. ஏனென்றால் இரண்டுமே தர்க்கவாதத்தைச் சேர்ந்தவை. அவர் வித்தியாசமானவர். தத்துவமும் தத்துவ எதிர்ப்பும் இரண்டுமே தர்க்கவாதத்தைச் சேர்ந்தவை. எனவே தத்துவ எதிர்ப்பும் ஒரு தத்துவம்தான்.

நாகார்ஜுனர் தத்துவ எதிர்ப்பாளர். என்றாலும் அவர் ஒரு தத்துவவாதியே. அவர் பேச்சும் வாதமும் விவாதமும் ஒரு தத்துவ வாதியுடையவை போலவே இருக்கின்றன. தத்துவத்தை எதிர்த்து வாதிடுகிறார். என்றாலும் அவருடைய வாதம் தத்துவவாதம்தான்.

தர்க்கவாதம் ஒரு வேசிமகள்.

ஒரு கதை.

லாவோட் சூவின் மிகச் சிறந்த சீடர்களில் ஒருவரான லீ சூ சொன்னது. லாவோட் சூ, ஸுவாங் சூ, லீ சூ ஆகிய மூவரும் தாவோவின் முப்பெரும் தூண்கள்.

லாவோட் சூ வாய்பாடுகளில் பேசுகிறார். விளக்கங்கள் தருவதில்லை. லீ சூவும் ஸுவாங் சூவும் லாவோட் சூவின் சீடர்கள் என்பதால் வாதிட முடியாதவர்கள். கதைகள் சொல்கிறார்கள். நிகழ்ச்சிகளை விவரிக்கிறார்கள். ஒற்றுமைகளை வெளிக்கொண்டு வருகிறார்கள்.

இதை மறந்துவிடக் கூடாது. தாவோ விளக்க முடியாதது. ஒற்றுமைகளை வெளிக்கொண்டு வரலாம். குறிப்புகள் காட்டலாம். தாவோ

விவாதிக்கப்படுவதல்ல. காட்ட முடியும். எனவே அவரோடு உணரும் நெஞ்சம் வேண்டும். இங்கே மனதைப் பற்றிய எந்தக் கேள்வியும் இல்லை.

வீசூ தம் ஊரில் நடந்த ஒரு கதையைச் சொல்கிறார். அந்த ஊரிலேயே மிகப்பெரிய பணக்காரர் ஆற்றைக் கடந்து கொண்டிருந்தார். ஆற்றில் அப்போது வெள்ளம். படகு நட்டாற்றுக்குப் போனபோது புயற்காற்று அடிக்க அந்தப் படகு ஆற்றில் கவிழ்ந்தது. படகுக்காரன் எப்படியோ தப்பித் துக் கொண்டான். ஆனால் அந்தப் பணக்காரரைக் காப்பாற்ற முடியவில்லை. முழுகிப் போனவரைக் கண்டுபிடிக்கப் பெரிய அளவில் முயற்சிகள்.

ஒரு மீனவன், ஓர் உடலைக் கண்டெடுத்தான். ஆனால் அதைத் தரவேண்டுமானால் நிறையப் பணம் வேண்டும் என்றான். குறைத்துக் கொள்ளத் தயாரில்லை. அவ்வளவு பணம் தருவதா? சொந்தக்காரர்கள் ஆலோசனை கேட்க ஒரு தர்க்கவாதியிடம் போனார்கள். சட்ட ஆலோசனைக்கு இன்னொருவரிடம் போனார்கள். சட்டப்படி ஏதாவது செய்ய முடியுமா என்று கேட்கத்தான்.

வக்கீல், ''கவலையே வேண்டாம். என் ஃபீஸைக் கொடுத்து விடுங்கள். நான் வழி காண்பிக்கிறேன்'' என்றார். பணத்தை வாங்கிக் கொண்டபின், ''பொறுங்கள். அவன் செத்துப்போன உடலை வேறு யாருக்கும் விற்க முடியாது. அவன் விட்டுக் கொடுத்துத்தான் ஆக வேண்டும். யார் அதை வாங்கிக்கொள்ளப் போகிறார்கள்? எனவே பொறுங்கள். போதும்'' என்றார்.

இரண்டு மூன்று நாட்கள் கழிந்தன. மீனவனுக்குக் கவலையாகிப் போய்விட்டது. உடல் நாற்றமெடுக்க ஆரம்பித்தது. அவர்கள் என்ன கொடுத்தாலும் போதும் என்று ஒப்புக்கொள்ளத் தயாராகிவிட்டான்.

வேறு யாரும் வாங்கிக்கொள்ள மாட்டார்களே! அவனுக்கும் உண்மை உறைத்தது. ஆனால் எந்த முடிவும் எடுக்குமுன் ஒரு வக்கீலோடு கலந்து கொள்ளலாமே என்று நினைத்தான்.

அதே ஆள்தான்.

தன் பணத்தைக் கேட்டு வாங்கிக் கொண்டான். பிறகு, ''கொஞ்சம் பொறு. அவர்கள் அந்த உடலை வேறு எங்கிருந்தும் வாங்க முடியாது. விட்டுக் கொடுத்துத்தான் ஆகவேண்டும்'' என்றான்.

தர்க்கம் ஒரு வேசிமகள். விலை மாது. ஒன்றை ஆதரித்தும் பேசும். மறுத்தும் பேசும். யாருக்கும் சொந்தமில்லாதது. எனவே தர்க்கத்தை வைத்துக்கொண்டு தத்துவத்துக்குச் சாதகமாகப் பேசலாம். எதிர்த்தும் பேசலாம்.

லாவோட் சு தத்துவத்துக்கு எதிரானவர் அல்ல. ஏனென்றால் அவருக்குத் தர்க்கம் தெரியாது. புத்தர் தத்துவத்தை எதிர்த்தவர். அதை எதிர்த்து வாதாடுகிறார். நாகார்ஜுனர் தத்துவத்தை மறுப்பவர். அதை எதிர்த்து வாதிடுகிறார்.

லாவோட் சு அப்படியல்ல. அவர் வாதிடுவதே இல்லை. வெறுமனே சொல்லிப் போகிறார். இதையும் அதையும் சொல்லி உன்னை எதிலும் நம்பிக்கை கொள்ள வைக்க முயல்வதில்லை. இல்லவே இல்லை.

பிறரெல்லோரும் ஏதோ ஒரு வகையில் உன்னை ஒப்புக்கொள்ள வைக்க முயல்கிறார்கள். லாவோட் சு அப்படி எதுவும் செய்வதில்லை. வெறுமனே ஒன்றைச் சொல்லிவிட்டுப் போகிறார். உனக்கு ஏற்புடையதா இல்லையா என்பதைப்பற்றிய கவலையெல்லாம் அவருக்கு இல்லை.

ஆனால் மெய்மறக்கச் செய்வதில் வல்லவர். ஆசை வார்த்தைகள் பேசுகிறார். தொடர்ந்து பேசிக் கேட்க வைக்கிறார். உன் நெஞ்சின் அடி ஆழத்தில் தடம் பதிக்கிறார். அவரை மறுத்துப் பேசவும் முடிவதில்லை. அவர்தான் வாதம் எதுவும் புரிவதில்லையே!

அதுதான் அவருடைய அழகும் பலமும். வெறுமனே சத்தியத்தைச் சொல்லிப்போகிறார். ஒரு நெறியை விட்டுவிட்டு இன்னொரு நெறிக்கு மாறக் கூடியவர்களைத் தேடி அலைவதில்லை. அவரைப் பின்பற்றி நீ நடக்கவேண்டும் என்று எதிர்பார்ப்பதில்லை: நீ தயார் என்றாலும் ஏற்றுக்கொள்ள அவர் தயார் இல்லை.

ஆனால் மயக்குகிறார். வெகு நளினமான மறைமுகமான மயக்கும் முயற்சி. அதில் ஆளுமை இல்லை. பெண்மையின் நளினம் இருக்கிறது.

இரண்டு வழிகளில் மயக்கலாம். ஆண் மகன் மயக்க முயலும்போது ஆளுமை தெறிக்கிறது. எல்லா முன்முயற்சியும் அவனிடமிருந்தே வருகிறது. பொறி வைத்துப் பிடிக்கிறான்.

பெண் ஓர் ஆணை மயக்குவது முழுக்க வேறொரு வகையில். அவள் ஆரம்பித்து வைப்பதில்லை. பொறி வைப்பதில்லை. ஆணுக்குப் பின்னால் அலைவதில்லை. பார்க்கப்போனால் தனக்கு எந்த அக்கறையும் இல்லை என்பதைப்போலப் பாசாங்கு செய்கிறாள்.

ஆணின் முயற்சிகள் தவறிப் போகலாம். பெண்ணின் முயற்சிகள் தவறுவதே இல்லை. அதுதான் பெண்மையின் மயக்கு. அவள் வைக்கும் பொறி மிக நுண்ணியது. அதிலிருந்து வெளியேற முடிவதில்லை. அதில் எந்தச் சந்தும் இருப்பதில்லை.

உன்னை விரட்டாமல் விரட்டிப் பிடிக்கிறாள். உன் கனவுகளில் உன்னை ஆள்கிறாள். எந்த அக்கறையும் காண்பிப்பதில்லை. என்றாலும் உன் ஜீவிதத்தில் அழுந்தப் பதிந்த பாடமாகிப் போகிறாள். அதுதான் பெண்மையின் தந்திரம். லாவோட் ஸுவுக்குப் பெண்மையின் ஆளுமைமீது மிகப் பற்றுதல். அவரிடம் அதைக் காண்கிறோம்.

லாவோட் ஸுவின் உலகம் தர்க்கவாதம்பாற்பட்டதல்ல. ஒப்புவமை தருவது. இதை நினைவில் நிறுத்து.

தர்க்கவாதம் நேரிடையானது. புலப்பட்டுத் தெரிவது. அதை ஏற்றுக் கொள்கிறாய். அல்லது அதைச் சொல்கிறவனிடம் அது அப்படியில்லை என்று சொல்லி நீ சொல்வதை ஏற்றுக்கொள்ள வைக்கிறாய். பின்பற்றுகிறாய். அல்லது பின்பற்ற வைக்கிறாய். அதுவும் இல்லையெனில் விரோதியாகிப் போகிறாய்.

ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருக்கிறது. தர்க்கம் என்றாலே மனம் சுறுசுறுப்பாக இருக்க வேண்டியிருக்கிறது. அது மிகச் சுலபம். அதில் எந்தச் சிரமமும் இல்லை. எல்லோரும்தான் வாதிடுகிறார்கள். ஏறக்குறைய எல்லோருமே தர்க்கவாதிகள்தான். சரியோ தவறோ அவரவர் அளவுக்கு அவரவர் ஒரு தத்துவ ஞானிதான்.

பிறரைப் புரிந்துகொள்ளும் வழியில் போய் லாவோட் ஸுவைப் புரிந்துகொள்வது என்பது முடியாத காரியம். உன்னுடைய வாதப் பிரதிவாதங்களை ஓரம் கட்டி வைக்க வேண்டியிருக்கிறது. அவர்தான் தர்க்கத்தைக் கையில் வைத்துக்கொண்டு என்னை விரட்டுவதில்லையே! உனக்கெதிராக வாதிடுகிறாரா? இல்லையே! அவருக்கு எதிராக வாதிடுவதில் அர்த்தமில்லை. அவர்தான் எந்த வாதத்தையும் எடுத்து வைக்கவில்லையே! வெறுமனே ஓர் ஒப்புவமை தருகிறார். அவ்வளவுதான்.

ஒப்புவமை என்பது என்ன? எனக்கு ஓர் அனுபவம் என்று வைத்துக்கொள். உனக்கு அந்த அனுபவம் ஏற்பட்டதே இல்லை. பிறகு எப்படி நான் அதை நீ விளங்கச் சொல்வது?

ஒப்புவமைதான் ஒரே வழி. உன்னுடைய அனுபவங்களில் ஏதோ ஒன்று ஏதோ ஒரு வகையில் என்னுடையதைப்போல என்றால் அதைப்போல இது என்கிறேன். இதுதான் அதுவென்றோ அதுதான் இதுவென்றோ சொல்வதில்லை. ஏதோ ஒரு வகையில் ஒன்றைப்போல இன்னொன்று என்கிறேன். புரிந்துகொண்ட அந்தச் சின்னஞ்சிறு ஒற்றுமை ஒரு பாலமாக நம்மை இணைக்கிறது.

அதனால்தான் தெய்விகப் பரவசம் காதலர்களின் அணைப்பைப் போல என்கிறார்கள். ஒருமித்த சம்போகம் என்கிறார்கள். காமத்தின் உச்சத்தைப்போல என்கிறார்கள். இது ஓர் ஒப்புவமை.

இதுதான் அது என்பதில்லை. இல்லவே இல்லை. எதுவும் வேறு எதுவுமாக முடியாது. உன்னுடைய அனுபவத்தில் அதைத் தவிரப் பாலமாவது வேறு எதுவுமில்லை என்கிறார்கள்.

யேசு கிறிஸ்து அன்பே கடவுள் என்கிறார். இது ஓர் ஒப்புவமை. உன் வாழ்வில் உயர்ந்தது அன்பு. கடவுளின் ஜீவிதத்தில் கீழானது அன்பு. கடவுளுடைய அடியும் மனிதனுடைய முடிவும் அன்பில் சந்திக்கின்றன. அது ஓர் எல்லைக்கோடு.

மனிதனால் சாதிக்க முடிந்ததில் மிக உயர்ந்தது அன்பு. அதுவே தெய்விகத்தின் பாதம். பாதத்தைக் கண்டுகொண்டால் பரமனைக் கண்டுகொள்ளலாம். அதனால்தான் யேசு அன்பே கடவுள் என்கிறார்.

அன்பு கடவுளாகிவிடும் என்பதில்லை. ஆனால் உன்னுடைய அனுபவத்தில் இருக்கும் வேறு எதைக் கொண்டும் ஓர் ஒப்புவமை காட்ட முடிவதில்லை.

எனவே லாவோட் சு சொல்வதை வார்த்தைக்கு வார்த்தை எடுத்துக்கொள்ளாதே. அவர் சொல்வதெல்லாம் சில உவமைகளே.

''பள்ளத்தாக்கின் ஆன்மா'' என்பார். இது ஓர் உவமை. எதையோ சொல்கிறார். பள்ளத்தாக்கைப் பற்றி ஏதுமில்லை. உனக்குப் பள்ளத்தாக்கு பற்றித் தெரியும். அதில் ஆரம்பித்து வேறொன்றைப் புரிந்துகொள்ள வைக்கிறார். உனக்குத் தெரிந்திராத வேறொன்றை உணர வைக்கிறார். உனக்குத் தெரிந்ததில் இருந்து தொடங்கி உனக்குத் தெரியாத ஒன்றுக்கு இட்டுப் போகிறார்.

ஒப்புவமை என்பதே தெரிந்த ஒன்றைச் சொல்லித் தெரியாத ஒன்றை உணர்த்துவதுதான். ''பள்ளத்தாக்கின் ஆன்மா'' எனும்போது பலதையும் குறிக்கிறார்.

ஒப்புவமை எப்போதுமே பொருள் பொதிந்தது. தர்க்கம் குறுகியது. ஒப்புவமை விரிந்தது. முடிவில்லாதது. எவ்வளவுக்கு அதில் தேடித் திரிகிறாயோ அவ்வளவுக்கும் மேல் அதில் இருக்கக் காண்கிறாய்.

தர்க்கத்தைத் தீர்ந்து போக வைத்துவிடலாம். ஒப்புவமைக்கு முற்றுப்புள்ளி கிடையாது. அதனால்தான் தாவோ த ஜிங், பகவத் கீதை,

அதனால்தான் தெய்விகப் பரவசம் காதலர்களின் அணைப்பைப் போல என்கிறார்கள். ஒருமித்த சம்போகம் என்கிறார்கள். காமத்தின் உச்சத்தைப்போல என்கிறார்கள். இது ஓர் ஒப்புவமை.

இதுதான் அது என்பதில்லை. இல்லவே இல்லை. எதுவும் வேறு எதுவுமாக முடியாது. உன்னுடைய அனுபவத்தில் அதைத் தவிரப் பாலமாவது வேறு எதுவுமில்லை என்கிறார்கள்.

யேசு கிறிஸ்து அன்பே கடவுள் என்கிறார். இது ஓர் ஒப்புவமை. உன் வாழ்வில் உயர்ந்தது அன்பு. கடவுளின் ஜீவிதத்தில் கீழானது அன்பு. கடவுளுடைய அடியும் மனிதனுடைய முடிவும் அன்பில் சந்திக்கின்றன. அது ஓர் எல்லைக்கோடு.

மனிதனால் சாதிக்க முடிந்ததில் மிக உயர்ந்தது அன்பு. அதுவே தெய்விகத்தின் பாதம். பாதத்தைக் கண்டுகொண்டால் பரமனைக் கண்டுகொள்ளலாம். அதனால்தான் யேசு அன்பே கடவுள் என்கிறார்.

அன்பு கடவுளாகிவிடும் என்பதில்லை. ஆனால் உன்னுடைய அனுபவத்தில் இருக்கும் வேறு எதைக் கொண்டும் ஓர் ஒப்புவமை காட்ட முடிவதில்லை.

எனவே லாவோட் சு சொல்வதை வார்த்தைக்கு வார்த்தை எடுத்துக்கொள்ளாதே. அவர் சொல்வதெல்லாம் சில உவமைகளே.

''பள்ளத்தாக்கின் ஆன்மா'' என்பார். இது ஓர் உவமை. எதையோ சொல்கிறார். பள்ளத்தாக்கைப் பற்றி ஏதுமில்லை. உனக்குப் பள்ளத்தாக்கு பற்றித் தெரியும். அதில் ஆரம்பித்து வேறொன்றைப் புரிந்துகொள்ள வைக்கிறார். உனக்குத் தெரிந்திராத வேறொன்றை உணர வைக்கிறார். உனக்குத் தெரிந்ததில் இருந்து தொடங்கி உனக்குத் தெரியாத ஒன்றுக்கு இட்டுப் போகிறார்.

ஒப்புவமை என்பதே தெரிந்த ஒன்றைச் சொல்லித் தெரியாத ஒன்றை உணர்த்துவதுதான். ''பள்ளத்தாக்கின் ஆன்மா'' எனும்போது பலதையும் குறிக்கிறார்.

ஒப்புவமை எப்போதுமே பொருள் பொதிந்தது. தர்க்கம் குறுகியது. ஒப்புவமை விரிந்தது. முடிவில்லாதது. எவ்வளவுக்கு அதில் தேடித் திரிகிறாயோ அவ்வளவுக்கும் மேல் அதில் இருக்கக் காண்கிறாய்.

தர்க்கத்தைத் தீர்ந்து போக வைத்துவிடலாம். ஒப்புவமைக்கு முற்றுப்புள்ளி கிடையாது. அதனால்தான் தாவோ த ஜிங், பகவத் கீதை,

யேசுவின் மலைப் பிரசங்கம் ஆகியவற்றைப் படித்துக்கொண்டே இருக்கலாம் என்பது. அவற்றைப் படிப்பதை நிறைவு செய்துவிட முடியாது.

இன்னமும் இன்னமும் என்று அவற்றில் பொருள் கண்டுகொண்டே இருப்பதற்கு அவை ஒப்புவமைகள் என்பதே காரணமாகிறது.

நீ எந்த அளவுக்கு வளர்கிறாயோ அந்த அளவுக்கு அதில் பொருள் காணலாம். மறுபடி வளரும்போது மறுபடியும் அதில் பொதிந்துள்ள பொருளைத் தெரிந்துகொள்ள வருகிறாய்.

எனவே இந்தப் புத்தகங்கள் வெறும் புத்தகங்களல்ல. அவற்றுக்கென ஒரு ஜீவிதம் இருக்கிறது. அவை உயிர்த்துடிப்புள்ள தொடர் நிகழ்வுகள். ஒருதடவை படித்த பின் படித்து முடித்துவிட்டேன் என்று சொல்லமுடியாது. அதுவல்ல அவற்றைக் கையாளும் வழி.

தர்க்க ரீதியிலான புத்தகம் ஒன்றைப் புரிந்துகொண்டு தூக்கி எறிந்துவிடலாம். ஆனால் ஒப்புவமையான நூல் கவிதையாகும். உன்னுடைய மன இயல்புகளுக்கேற்ப மாறுவது. உள்ளார்ந்த நோக்கத்துக்கு ஏற்ப மாறுவது. உன் வளர்ச்சிக்கு ஏற்ப மாறிக்கொண்டிருப்பது. உன் வெவ்வேறு மன நிலைகளில் வெவ்வேறு தரிசனங்கள் தருவது.

ஒப்புவமை அப்படியேதான் இருக்கிறது. "அன்பே கடவுள்." அன்பு என்றாலே காமம்தான் என்று பொருள் கொள்பவனைப் பார்க்கலாமா?

மேற்கத்திய நாடுகளில் அதுதானே நடந்து கொண்டிருக்கிறது? காமத்தைத் துய்ப்பதை லவ் மேக்கிங் என்கிறார்கள். இந்த லவ் மேக்கிங் அல்லது மேக்கிங் ஆஃப் லவ் என்பது மிகவும் அபத்தமானது. காதல் ஒரு செயல் அல்ல - செய்வதற்கு. காமம் ஒரு செயல். காதல் ஒரு செயல் அல்ல. அது இருத்தலின் ஒரு நிலை. காதல் வயப்படலாம். காதல் செய்ய முடியாது. அதற்குள் ஆழ்ந்துவிடலாம். அதைச் செய்ய முடியாது.

காமச் செயல் சாத்தியம். காதற் செயல் சாத்தியமானதல்ல. ஒரு விலைமகள் காம சுகம் தரலாம். காதற்சுவை தரமுடியாது. பணத்தால் ஆணையிட்டுத் துடிக்க வைப்பதல்ல காதல்.

காதல் தானாகத் தோன்றுவது. அதற்கென ரகசியமான வழிகள் இருக்கின்றன. அதைக் கட்டுப்படுத்த முடியாது. அது உன்னைக் கட்டுப்படுத்தும். அதை உனக்குச் சொந்தமாக்கிக்கொள்ள முடியாது. அது உன்னைச் சொந்தமாக்கிக்கொள்ளும். காதலில் செயற்பாடு இல்லை. காதல் வயப்படலாம். அவ்வளவுதான்.

எனவே காதலுக்கும் காமத்துக்கும் வித்தியாசம் தெரியாதவன் ''அன்பே கடவுள்'' என்று யேசு சொன்னதை, ''காமமே கடவுள்'' என்று புரிந்துகொள்வான். அதைத் தவிர வேறு ஒப்புவமை அவனுக்குத் தோன்றாது.

ஸ்வீடனில் ஒரு சினிமாப் படம் தயாரிக்கிறார்களாம். ''யேசுவின் அன்பு'' என்று படத்துக்குப் பெயர் வைத்தால் ''காமமே கடவுள்'' என்று புரிந்து வைத்திருப்பவனுக்கு அந்தப் பெயர் யேசுவின் காம லீலைகள் என்றுதான் பொருள்படும். அது எப்படி யேசுவையும், காமத்தையும் பற்றிப் படம் பிடிக்கலாம்? அவனுக்கு அந்தப் படம் அயோக்கியத்தனமான படமாகத்தான் தெரியும்.

என்ன செய்வார்கள்? எல்லா நாட்டினரும் சேர்ந்துகொண்டு அந்தப் படத்தை எடுக்கவிடாமல் செய்து விடுவார்கள். எப்படியும் அந்தப் படத்தை எடுக்கத்தான் போகிறார்கள்.

அவர்களுக்கு ''யேசுவின் அன்பு'' என்பது ''யேசுவின் காமம்'' என்றுதான் பொருள்படும்.

ஒப்புவமையை ஒவ்வொருவரும் அவரவர் கோணத்தில் இருந்தே புரிந்துகொள்ளப் போகிறார்கள். அதற்குள் எந்தப் பொருளைத் திணிக்கிறாயோ அந்தப் பொருளைத்தான் தரும்.

காமம் உடல் வயப்பட்டது. அதில் தவறேதும் இல்லை. ஆனால் அது நிறைவானதல்ல. எனவே உடலளவிலன்றி நிறைவாகக் காதல் வயப்பட்டவனுக்கு ''அன்பே கடவுள்'' என்ற ஒப்புவமை தரும் பொருள் வேறுதான்.

ஒருவரை நிறைவாகக் காதலிக்கும்போது காமத்தோடு மட்டுமல்ல, அதன் கவர்ச்சி வெறும் உடற்கவர்ச்சியைத் தாண்டி, ஆத்மாவுக்கும் போகிறது. உடற்கவர்ச்சியை ஒதுக்கிவிடுவதல்ல காதல். உடற்கவர்ச்சியின் தாக்கம் அதிகமாகிப் போகிறது. என்றாலும் அது காதலின் ஒரு சிறு பகுதியாக மட்டுமே இருக்கிறது. அப்படிக் காதலிக்கும்போது ''அன்பே கடவுள்'' என்பதை வேறொரு வகையில் புரிந்துகொள்வாய்.

ஆனால் உடற்கவர்ச்சியைத் தாண்டிய காதலை அனுபவிக்கும்போது காமம் இல்லாமல் போய்விடுகிறது. காம சுகம் பரவசமாக மாறிப் போய்விடுகிறது. அப்போது ''அன்பே கடவுள்'' என்பதற்கு இன்னுமொரு பொருளைப் பெறுகிறாய்.

எனவே ஒப்புவமையில் பொருள் உன்னைச் சார்ந்தது. லாவோட் சூவின் நூல் ஓர் ஒப்புவமை நூல்தான். அதனைத் திரும்பத் திரும்பப் படிக்கவேண்டும். மலிவுப் பதிப்பில் அதை ஒருமுறை படித்துவிட்டு வீசிவிட்டுப் போய்விட முடியாது. என்றும் சுமந்து கொண்டு திரிய வேண்டிய பொக்கிஷம் அது. அது ஒரு வாழ்வின் பணி. ஒப்புவமை எனும் ஒழுக்கத்துக்குள் வாழ்நாள் முழுக்கப் பயணிக்க ஒரு துணை.

தர்க்கம் மேம்போக்கானது. அரிஸ்டாட்டிலை வெகு சுலபமாகப் புரிந்து கொள்ளலாம். அவரது சொற்களில் கனம் அதிகமில்லை. லாவோட் சூவுக்கு வரும்போதோ...

முதல்முறை படிக்கும்போது எதுவும் பிரமாதமாகத் தெரிவதில்லை. ஆனால் போகப்போக லாவோட் சூ உன்னைப் பிடித்து ஆட்டத் தொடங்கிவிடுகிறார். அவருடைய கவர்ச்சி பெண்மையின் கவர்ச்சி. போகப்போக உன்னைத் தம் வசப்படுத்திவிடுவார். அவரை அவர் போக்கில் விட்டுவிட்டால் அது போதும்.

தர்க்கவாதத்தில் மோதல்கள் இருக்கின்றன. ஒப்புவமையில் ஈடுபாட்டோடு இருக்கவேண்டியிருக்கிறது. அதை அதன் போக்கில் விட்டுவிட்டால் போதும். மலரை யாராவது விரிய வைக்கிறார்களா என்ன? அதன் போக்கில் விட்டுவிட்டால் மலர் தானாக விரிந்து விடும். எனவே ஆழ்ந்த ஈடுபாடும் மதிப்பும் நம்பிக்கையும் இருந்தால் போதும். லாவோட் சூவைப் புரிந்துகொள்ளலாம். அதைத்தவிர வேறு எந்த வழியும் இல்லை.

மனத்தின் எண்ணங்கள் வழியாக லாவோட் சூவிடம் சென்றுசேர முடியாது. சுற்றிச்சுற்றிப் போய்க்கொண்டே இருப்பாயே தவிர அவருடைய ஜீவிதத்தைத் தொடமுடியாது.

நெஞ்சின் வழியாகப்போய் அவரை அணுகிப் பார். ஒப்புவமை நெஞ்சுக்கானது. தர்க்கம் மனதுக்கானது.

லாவோட் சூ கவித்துவம் கொண்டவர். மறந்துவிடாதே. கவிஞனோடு நாம் வாதிடுவதில்லை. கவிதையைக் கேட்கிறோம். கவிதையில் ஆழ்ந்து விடுகிறோம். அதை மெல்ல மென்று சுவைத்து நமக்குள் புகவிட்டு ரத்தத்தோடு ரத்தமாக, எலும்புகளோடு எலும்பாகக் கிரகித்துக் கொள் கிறோம். ஆமாம், சீரணித்துக் கிரகித்துக் கொள்கிறோம்.

வார்த்தைகள் மறந்து போகின்றன. கவிதைகூடச் சுத்தமாக மறந்து போகிறது. ஆனால் அதன் மணம் நம்முடைய ஒரு பகுதியாகப் போய்விடுகிறது. என்ன பாடினார் என்பது மறந்து போகிறது. பாட்டை

மறப்பதில்லை. அதன் சுவை, மணம், முக்கியத்துவம் தங்கிப் போகிறது. சூல் கொண்டவனாகிப் போகிறாய்.

லாவோட் சு உனக்குள் சூல் கொண்டவராகிப் போகும்போதுதான் அவரைப் புரிந்துகொள்ள முடிகிறது. உள்ளே வரவிடு. கதவுகளை விரியத் திறந்து வை. கதவைத் தட்டுமளவுக்கு ஆளுமை உள்ளவர் அல்ல அவர். வாக்குவாதத்தில் அவருக்கு நம்பிக்கையில்லை என்பதால் தர்க்கவாதம் செய்வதில்லை.

அறிவு ஜீவியல்ல அவர். உணர்வு ஜீவி. மிக எளிமையானவர். ஒரு பட்டிக்காட்டானின் ஒப்புவமைகளைத்தான் கையாள்கிறார். ஆனால் அவற்றில் உயிர்த்துடிப்பும் பிரகாசமும் வேகமும் இருக்கின்றன. அவரை ஏற்றுக்கொள்ளும்போது திடுமென நீ மாறிப்போகிறாய். சாதாரணப் புரிதல், உணர்வுபூர்வமான புரிதல் போதும். நீ அவரால் மாற்றப்பட்டவன் ஆகிப்போகிறாய்.

சாதாரணமாக நாம் ஒருவரை ஆத்திகர் என்கிறோம். லாவோட் சு அப்படிச் சாதாரணமான ஆத்திகரல்ல. அவர் கடவுளைப் பற்றிப் பேசுவதில்லை. ஆத்திகன் என்ற வார்த்தையை நீ புரிந்து வைத்திருக்கும் வகையில் லாவோட் சு அப்படிப்பட்டவர் அல்ல.

அவர் கோயிலுக்குப் போனதில்லை. சாமி கும்பிட்டதில்லை. அவருக்குப் பிரபஞ்சமே கோயில். ஜீவிதமே கடவுள். அவர் துண்டு துண்டாக வாழ்கிறவர் அல்ல. வாழ்வை அவர் கூறு போடுவதில்லை. ஜீவிதம் அவருக்குத் தொடர்ந்து ஓடும் ஒரு நதி.

நீயோ வாழ்க்கையைக் கூறு போடுகிறவன். கோயிலுக்கு ஒரு மணிநேரம். வாரத்துக்கு ஒரு நாள் சர்ச்சுக்கு. ஞாயிற்றுக்கிழமை சாமிக்கு. சரிதான். ஞாயிற்றுக்கிழமை மட்டும்தானே? மற்ற நாட்களில் மதத்தைப் பற்றிய நினைப்பே இல்லாமல் இருக்கலாம் என்றாகிப் போகிறது.

சாமர்த்தியம்தான். ஞாயிற்றுக்கிழமை கடவுளுக்கு. அதே ஞாயிற்றுக்கிழமை விடுமுறைநாள். விடுமுறை என்றால் வேலை செய்யாமல் இருப்பது. வேலை செய்யாமல் இருக்கும்போது மட்டுமே நேர்மையாக இருக்கமுடியும் என்றாகிறது. கடைக்குப் போகாமல் இருக்கும்போதுதான் நேர்மையாக இருக்க முடிகிறது. வெய்யிலில் காய்ந்துகொண்டு சாய்ந்து கிடக்கும்போதுதான் நல்லவனாக இருக்க முடிகிறது. சர்ச்சில் பாதிரியாரின் பிரசங்கத்தைக் கேட்பதாலேயே சுலபமாக நேர்மையானவனாக இருக்கமுடியும் என்றாகிப் போகிறது.

ஞாயிற்றுக்கிழமையில் பிரச்சனையே இல்லை. மற்ற நாட்களில்தான் விவகாரமே. அப்போது ஆத்திகனாக இருக்க முடிவதில்லை. இதைத் தான் சாமர்த்தியம் என்கிறேன். ஞாயிற்றுக்கிழமை என்ற பெயரில் ஆன்மிகத்தைத் தவிர்க்கத் தந்திரம் செய்கிறாய். வாழ்வைத் தனித்தனிக் கூறுகளாகக் கட்டிவைத்து விடுகிறாய். ஒரு நாளைக்கு ஆத்ம சுத்தமாக இருந்துகொண்டு ஆறு நாட்களுக்குச் சௌகரியம்போலத் திரிகிறாய்.

இப்படி ஆன்மிகத்தைத் தவிர்க்க இந்துக்கள் ஒரு வழி கண்டுபிடித்து வைத்திருக்கிறார்கள். முகம்மதியர்களுக்கு ஒரு வழி. கிறித்துவர்களுக்கு ஒரு வழி. இவர்களைத்தான் நீ ஆத்திகர்கள் என்கிறாய். ஆத்திகர்கள் அல்ல. தவிர்த்து ஓடுகிறவர்கள்.

கோயிலுக்குப் போகிறார்கள் கும்பிடுகிறார்கள். அப்படிக் கும்பிட்டுக் கொண்டிருக்கும்போது அவர்களுடைய முகங்களைப் பார். வெகு அழகாகத் தெரிகிறார்கள். ஆனால் கோயிலை விட்டோ, சர்ச்சை விட்டோ வெளியே வரும்போது முழுக்க வேறு மாதிரியாகப் போகிறார்கள்.

டால்ஸ்டாய் கதை ஒன்று எழுதியிருக்கிறார். கதைகூட அல்ல. நடந்த நிகழ்ச்சி ஒன்றை விவரித்திருக்கிறார்.

டால்ஸ்டாய் ஒருநாள் சர்ச்சுக்குப் போனார். அதிகாலை நேரம். ஊரிலேயே பெரும் பணக்காரர் ஒருவர் அந்த அதிகாலை இருட்டில் மண்டி போட்டுத் தான் ஒரு பாவி என்று சொல்லிப் புலம்பித் தொழுது கொண்டிருந்தார். இவருக்குப் பெரிய ஆச்சரியமாக இருந்தது.

சுவாரசியமாகவும் பட்டது. அந்தப் பணக்காரர் தன் மனைவிக்குத் தான் செய்த துரோகத்தை எல்லாம் சொல்லிப் பாவ மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருந்தார். பிற பெண்களோடு, பிறர் மனைவியரோடு தான் இருந்ததையெல்லாம் விவரமாகச் சொல்லிக் கொண்டிருந்தார்.

டால்ஸ்டாயின் வியப்பு அதிகமாகிப் போய்விட்டது. நெருங்கிப் போனார். அந்தப் பணக்காரர் கம்பீரமாகக் கடவுளிடம் கெஞ்சிக் கொண்டிருந்தார்.

"நான் பாவி. நீங்கள் என்னை மன்னிக்கவில்லையென்றால் எனக்கு வேறு வழியே இல்லை. எப்படிச் சுரண்டிக் கொண்டிருந்துவிட்டேன். எப்படியெல்லாம் மக்களைக் கொள்ளையடித்துக் கொண்டிருந்துவிட்டேன். நான் ஒரு பாவி. எப்படி என்னைத் திருத்திக் கொள்வதென்றே எனக்குத் தெரியவில்லை. உங்கள் கருணை எனக்கு இல்லாமல் போய்விட்டால் எனக்கு ஈடேற்றமே இல்லை." கண்ணீர் வழிந்து கொண்டே இருந்தது.

திடீரென வேறு ஒருவர் இருப்பதைத் தெரிந்துகொண்டார். சுற்றுமுற்றும் பார்த்து டால்ஸ்டாய் இருப்பதைக் கண்டுகொண்டார். விடிந்து வெளிச்சம் அதற்குள் வந்துவிட்டது. டால்ஸ்டாயைக் கோபத்தோடு பார்த்தார்.

பிறகு, ''நான் சொன்னதெல்லாம் கடவுளிடம்தான். உன்னிடமல்ல. நான் சொன்னதை வேறு யாரிடமாவது சொன்னால் உன்னைக் கோர்ட்டுக்கு இழுத்துவிட்டுவிடுவேன். மான நஷ்ட வழக்குப் போடுவேன். கேட்டதை எல்லாம் அப்படியே மறந்துவிடு. எனக்கும் கடவுளுக்குமான நேரிடையான பேச்சு இது. நீ இங்கிருந்ததை நான் கவனிக்கவே இல்லை'' என்று சொல்லி மிரட்டினார்.

கடவுளுக்கு ஒரு முகம். உலகத்துக்கு ஒரு முகம். சரிதான். மதம் என்பது காற்றுக்கூடப் புக முடியாத தனித்த ஒரு பெட்டி. அதைத் தவிர்ப்பதற்கு இது ஒரு தந்திரம். ஆத்திகனாக இருக்காமல் ஆத்திகனாக இருப்பதாகக் காட்டிக்கொள்ளும் ஒரு பம்மாத்து வேலை.

லாவோட் சூ அப்படிப்பட்ட ஓர் ஆத்திகர் அல்ல. எளிமையானவர். ஓர் ஆத்திகர் என்பதுகூட அவருக்குத் தெரியாது. ஓர் ஆத்திகர் அப்படித்தான் இருப்பார்.

ஆத்திகம் அவருக்கு மூச்சுக் காற்றைப்போல. எங்கோ ஏதோ தப்பிப் போகும்போதுதான் மூச்சுவிட்டுக் கொண்டிருக்கிறோம் என்பதைத் தெரிந்து கொள்கிறோம். மூச்சு முட்டும்போது அல்லது ஆஸ்த்மா போன்ற வியாதியால் மூச்சுத் திணறும்போது. இல்லையென்றால் நாம் மூச்சுவிட்டுக் கொண்டிருக்கிறோம் என்பதே நமக்குத் தெரிவதில்லை. இயல்பாக மூச்சுவிட்டு வாங்கிக் கொண்டிருக்கிறோம்.

தான் ஓர் ஆத்திகர் என்ற உணர்வே இல்லாது இருக்கும் அளவுக்கு லாவோட் சூ இயல்பான ஓர் ஆத்திகர். உன்னுடைய மகான்களைப்போல அவர் ஆத்திகத்தில் பயிற்சி எடுத்துக்கொண்டவர் அல்ல. ஆத்திகம் அவருக்குக் கடைப்பிடிக்கும் ஒரு நெறி அல்ல.

ஆத்திகம் ஒட்டு மொத்தமாகத் தன்னை ஆட்கொள்ள விட்டுவிட்டவர்.

ஆத்திகத்தை வாழ்கிறார். வெறுமனே கடைப்பிடிக்கவில்லை.

ஆத்திகம் அவருக்கு ஓர் ஒழுக்கம் அல்ல. ஆழ்ந்த புரிதல்.

ஆத்திகம் புறத்தேயிருந்து அவர்மீது திணிக்கப்பட்டதல்ல. உள்ளிருந்து பொங்கிப் பாய்வது.

அவருக்கும் ஆத்திகத்துக்கும் இடையே எள்ளளவு தூரம்கூட இல்லை.

நீ புரிந்து வைத்திருக்கும் வகையிலான ஆத்திகர் அல்ல லாவோட் சு. மகாத்மியத்தைக் கடைபிடிப்பதற்கு அவர் ஒரு மகான் அல்ல. வலிந்து அவர் ஆத்திகர் ஆகவில்லை. அது அவருடைய இயல்பும் அல்ல.

உண்மையான ஓர் ஆத்திகரிடம் ஆத்திகத்தனம் ஏதுமில்லை. இருக்கவும் முடியாது. ஆதிக்கத்துவம் ஒரு வெளி வேஷம்.

இதைப் புரிந்துகொள்ள முயற்சி செய். உனக்கென ஒரு குணாதிசயத்தைக் கற்பித்துக் கொள்வது நீ நீயாக இருப்பதற்குப் பயந்து கொள்வதால்தான். ஒழுக்க சாத்திரத்தைக் கற்பித்துக் கொள்வதற்குக் காரணம் அக ஒழுக்கம் பற்றிப் பயம் இருப்பதால்தான்.

ஏதோ ஒரு வகையான வாழ்க்கை வாழவேண்டும் என்று கற்பித்துக் கொள்வது இயல்பாக வாழ்வதைப் பாவம் என்று கருதுவதால்தான். இயல்பாக வாழ்ந்தால் பாவியாகி விடுகிறாய். மகாத்மாவாக முடிவதில்லை.

உன்னுடைய ஜீவிதத்தைக் கண்டு பயந்து கொள்வதால்தான் உன்மேல் ஓர் அடையாளத்தைத் திணித்துக் கொள்கிறாய். அந்த அடையாளம் ஒரு கவசம். பிறரிடமிருந்தும், உன்னிடமிருந்தும்கூட உன்னைப் பாதுகாத்துக் கொள்ள நீ போட்டுக் கொள்ளும் ஒரு கவசம்.

அது ஒரு மாய மாளிகை. அதற்குள் நீ நுழைந்து கொள்கிறாய்.

உண்மை பேசுகிறாய். இல்லையெனவில்லை. அப்படி உண்மை பேசுவதில் இருக்கும் ஆனந்தத்தை உணர்ந்தா பேசுகிறாய்? இல்லை. உண்மை பேசாவிட்டால் நரகத்துக்குப் போய்விடுவாய் என்று உன்னை மிரட்டி வைத்திருப்பதால் உண்மை பேசுகிறாய். அவ்வளவுதான்.

இறைவனைப் பற்றிப் பேசும் அறிஞர்கள் எல்லோருமே அவரைப் பிறர் துன்பத்தில் தம் இன்பத்தைக் காண்பவராகவே கற்பித்து வைத் திருக்கிறார்கள். நரகத்துக்குள் மக்களை எறிகிறவர். தீயில் பொசுக்குகிறவர். எண்ணெயில் வறுக்கிறவர். இந்த இறைவன் பிறரைத் துன்புறுத்தி இன்புறுகிறவர்தான். அவருக்குச் சரியான மனோவைத்தியம் தேவை.

நரகத்தைக் கண்டு பயம். சொர்க்கம் உன் லட்சியம். குதிரை மூக்குக்கு முன்னால் தொங்கி மயங்கும் கேரட்தான் சொர்க்கம்.

உன்னுடைய அடையாளம் சொர்க்கத்துக்கும் நரகத்துக்குமிடையே உன்னை நிறுத்திவைத்திருக்கும் கருவி. நரகத்துக்கு எதிரான பாதுகாப்பு.

சொர்க்கம் போய்ச்சேர ஒரு முயற்சி. இப்படிப் பயந்து கொண்டும் ஆசைப்பட்டுக்கொண்டும் இருக்கும் நீ எப்படி ஓர் ஆத்திகனாக முடியும்?

ஓர் ஆத்திகனுக்கு எந்த லட்சியமும் இருக்கமுடியாது. லட்சியம் என்றாலே ஓர் எதிர்காலத்தை முன்னிறுத்துவதுதானே? உண்மையான ஆத்திகன் எந்த எதிர்காலத்தையும் முன்னிறுத்தி வாழ்கிறவன் அல்ல. அவன் எப்போதும் இங்கே இப்போது என்றிருப்பவன்.

நிகழ்காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் ஆத்திகனுக்குக் கவலைப் பட்டுக்கொள்ள எந்த எதிர்காலமும் இல்லை. எப்படிப்பட்ட பயமும் அவனுக்கு இல்லை. நிறைவாக வாழ்ந்து கொண்டிருக்கும் அவனுக்குப் பயம் என்பதேது? வாழ்வைக் கூறுகூறாக வாழ்கிறவனுக்குத்தான் எல்லாப் பயமும். நீயோ வாழ்வையே வாழாதவன். அதனால்தான் பயம்.

இதைப் புரிந்துகொள்ளக் கொஞ்சம் முயன்று பார். இறப்பைக் கண்டு பயம் ஏன்? இறப்பு மோசமானது என்று உனக்குத் தெரியுமா? இறந்து போனால்தானே அது மோசமானது என்று தெரிந்துகொள்ள முடியும்?

வாழ்வைவிடச் சாவு மோசமானது என்று தெரியுமா? எப்படித் தெரியும்? வாழ்வைவிடச் சிறந்ததாகக்கூட இருக்கலாமே!

தெரியாமல் இருக்கும்போது இறப்பைக் கண்டு பயப்படுவது ஏன்? தெரியாததைக் கண்டு பயந்துகொள்வது எப்படி? சாத்தியமானதாகத் தெரியவில்லையே! தெரிந்ததைக் கண்டு பயந்து கொள்ளலாம். உனக்குத் தெரியாத ஒன்று உனக்குப் பரிச்சயமில்லாத ஒன்றைக் கண்டு பயப்படுவதென்பது எப்படிச் சாத்தியம்?

இல்லை. உனக்கு இறப்பைக் கண்டு பயமில்லை. தவறாகத்தான் உன் பயத்தை இறப்பில் வைத்திருக்கிறாய்.

வாழ முடியவில்லை என்பதால் இறப்பைக் கண்டு பயப்படுகிறாய். வாழ்ந்த வாழ்வைப் பற்றியது அந்தப் பயம். வாழ முடியவில்லை. அன்போடு இருக்க முடியவில்லை. அதற்குள் இறப்பு நெருங்கிவிட்டதே! அதோடு எல்லாமும் முடிந்துவிடுமே! நீ இருக்கப்போவது இல்லையே! காதலிக்கவும் முடியாமல் கழிந்து போகுமோ வாழ்க்கை என்ற பயம்தான்.

பூக்குமுன் மரத்தை வெட்ட விறகு வெட்டி வந்துவிடுவதைப் போலத்தான். என்ன நடக்கப்போகிறது என்று தெரியாமல் மரம் பயந்துபோய்க் கிடக்கிறது. இறப்பைக் கண்டு பயப்படுவதல்ல. நடக்காது போய்விட்டதை நினைத்துப் பார்க்கும்போது கொள்ளும் பயம்.

பூக்கவில்லை. காய் கொள்ளவில்லை. கனிகள் தரவில்லை. மரத்துக்கு இதெல்லாம் நன்கு தெரிந்திருக்கிறது. வசந்தத்தைக் காணவில்லை. காற்றின் இசைவுக்கு நடனமாடவில்லை. அன்பு கனியவில்லை. வாழ்வு நிறைவேறவில்லை. வாழாத அந்த வாழ்வு பயத்தைத் தோற்றுவிக்கிறது. அதற்குள் விறகுவெட்டிவேறு வந்து கொண்டிருக்கிறான். அவன் வந்து சேர்ந்தபின் எதிர்காலம் இல்லாமல் போய்விடுகிறது.

இறப்பு என்றாலே எதிர்காலம் இல்லாமல் போய்விடுவதுதானே? கடந்தது கடந்தாகிவிட்டது. எதிர்காலம் இல்லாமல் போய்விட்டது. நிகழ்காலமோ மிகக் குறுகியதாய் இருக்கிறது. பிறகென்ன? பயம் மீதூற நீ நடுநடுங்குகிறாய்.

வாழாது விடுத்ததைக் கண்டுதான் பயம். நிறைவாக வாழ்ந்து விட்டவனுக்கு எதைக்கண்டும் பயமில்லை. இந்தக் கணம் இறப்பு என்னை நெருங்கினாலும் நான் இறக்கத் தயார். நான்தான் வாழ்ந்துவிட்டேனே. எல்லாவற்றிலும் நிறைவே. நிறைவு காணாதது ஏதுமில்லையே.

இறப்பு அழிக்க முடியாதது. ஏதாவது இன்னமும் நிறைவுறாமல் இருந்தால் இறப்பைக் கண்டு பயந்துவிடுவேன். எல்லாமும்தான் நிறைவாகிவிட்டனவே.

காலையில் குளித்தாயிற்று. உங்களோடு பேசியாயிற்று. நடக்க வேண்டியதெல்லாம் நடந்தாயிற்று. நான் தயாராகத்தான் இருக்கிறேன்.

வரட்டுமே இறப்பு. நான் தயாராகிவிட்டேன். எப்போது ஒன்று நடந்து முடிந்தாகிவிட்டதோ அதிலிருந்து அப்போதே நாம் விடுபட்டு விடுகிறோம். வாழ்வை நிறைவாக்கியாயிற்றா? அதிலிருந்து விடுபட்டாயிற்று. வாழாத வாழ்விலிருந்து விடுபட முடியாது.

குகைகளைத் தேடிப் போகலாம். இமயமலைக்குப் போகலாம். திபெத்துக்குப் போகலாம். என்றாலும் நீ விடுபடவே முடியாது. பயம் உன்னோடு இருந்து கொண்டேதான் இருக்கும்.

பயமும் சுதந்திரமும் ஒன்றாக இருக்கமுடியாது. வாழ்ந்தானபின், மலர்ந்து விகசித்த பின், அனைத்தையும் நிறைவு செய்து முடித்தான பின், இன்னும் வாழ வேண்டும் என்ற நினைப்பு எதற்கு? அதுவும் இறப்பு நெருங்கிக் கொண்டிருக்கும்போது...? இனியொரு கணமும் வாழ வேண்டிய தேவை ஏதுமில்லை. அப்படி உணரும்போது பயம் விலகிப் போகிறது.

உன்னுடைய சமயம் பயத்தின்மீது எழுப்பப்பட்டு இருக்கிறது. உண்மையில் அது சமயமே அல்ல. அது போலியானது. ஓர் ஏமாற்று. ஒரு பசப்பு.

நீ சமயச் சார்புடையவன். மற்றவர்களும் சமயச் சார்புடையவர்கள் என்பதைப்போல அல்ல, லாவோட் சு ஒரு சமயச் சார்புடையவராக இருப்பது. அவருடைய சமயம் முற்றிலும் வேறானது. அதன் இயல்பு வேறானது.

மிகச் சாதாரணமானவராக ஒவ்வொரு கணத்தையும் ஒரு வெகுளித்தனத்தோடு வாழ்கிறார். கடவுளைப்பற்றி அவர் பேசுவதே இல்லை. பேசுவதால் என்ன பயன் என்கிறாய்? கடவுள் வார்த்தையில் இல்லை. பிறகு அவரைப்பற்றி எப்படிப் பேசமுடியும்?

அவர் இறைமையை வாழ்கிறார். இறைவனைக் கொண்டாடுகிறார். அக்கொண்டாட்டமும், வாழ்வும் நினைவுகள் வழிப்பட்ட விஷயம் அல்ல. இறைமையை நடனமிட்டுக் கொண்டாடுகிறார். இறைமை அவருக்குப் பருகும் நீர். எனவே இறைவனைப் பற்றிப் பேசுவதால் என்ன பயன்?

நான் தெரிந்து கொண்டது இதுதான். புரிந்துகொள்ளாததைப் பற்றியே அனைவரும் பேசுகிறார்கள்.

ஒரு ஸுஃபி கதை சொல்லட்டுமா?

பேரரசர் ஒருவர் ஒரு ஞானியிடம் போவதுண்டு. ஞானியோ ஒரு பக்கிரி. ஆனால் அரசர் அவரைச் சந்திக்கும்போதெல்லாம் பணம், அரசாங்கம், அரசியல் பற்றியே பேசுவார். கடவுள், தியானம், மதம் பற்றியல்லவா அவர் பேசவேண்டும்?

எனவே ஒருநாள் அரசர் கேட்டேவிட்டார். ''மன்னிக்க வேண்டும். எனக்கு ஒன்று புரியவே இல்லை. உங்களிடம் நான் வருவது கடவுள், மதம், தியானம், சமாதி பற்றிப் பேச. ஆனால் வேடிக்கை என்னவென்றால் சம்சாரியாகிய நான் சமாதி, ஞானம் பற்றிப் பேசுகிறேன். நீங்களோ - சன்னியாசி - சந்தேகமாகத்தான் இருக்கிறது - நான் வரும்போதெல்லாம் அரசாங்கம், பணம் என்று இந்த உலகத்துச் சமாச்சாரங்களைப் பற்றியே பேசுகிறீர்கள். இதற்கு என்ன விளக்கம்?''

அவர் சிரித்தார். ''இதில் விளக்குவதற்கு என்ன இருக்கிறது என்கிறாய்? உனக்குத் தெரியாததைப் பற்றியே நீ பேசுகிறாய். எனக்குத்

தெரியாததைப் பற்றியே நான் பேசுகிறேன். இது சுலபம். கடவுளைப்பற்றி நான் ஏன் பேச வேண்டும்? எனக்குத் தெரியுமே! அரசாங்கத்தைப்பற்றி நீ ஏன் பேசவேண்டும்? உனக்குத்தான் அதைப்பற்றித் தெரியுமே! நீயே அரசனல்லவா?''

லாவோட் சூ கடவுளைப்பற்றி ஒருமுறைகூட எதுவும் சொன்னதில்லை. மறந்துவிட்டாரா என்ன? கடவுளுக்கு எதிரானவரா? இல்லை. முழுக்க வாழ்கிற அவர் கடவுளைப்பற்றி நினைப்பதுகூடப் பாவமாகிவிடும். கடவுளைப்பற்றிப் பேசுவதென்பது அவ்வளவு ஆழ்ந்த ஒரு நிகழ்வைப்பற்றிப் பேசுவதாகிப்போய் ஒரு துரோகமாகிவிடும்.

அது அவ்வளவு அந்தரங்கமான ஒரு நிகழ்வு என்பதாலேயே அதைப்பற்றிப் பேசுவது ஒரு துரோகமாகிப் போகும். அவருக்கும் முழுமைக்கும் இடையேயானது அது. காதலர்கள் தம் காதலைப்பற்றிப் பேசுகிறார்களா என்ன? காதலைப்பற்றிப் பேசுகிறவர்கள் காதலை வாழ்வதில்லை. அவ்வளவு அந்தரங்கமான விஷயமென்பதால் காதலைப்பற்றி யாரும் பேசுவதில்லைதான்.

கவிஞர்களுக்குக் காதலைப்பற்றி ஒன்றும் தெரியாது. அதனால்தான் அதைப்பற்றிப் பேசுகிறார்கள். கவிதைகளை எழுதித் தள்ளுகிறார்கள். அத்தனையும் கற்பனை. ஆனால் காதல் என்பதைத் தெரிந்து கொள்வதே இல்லை.

காதலர்கள் மௌனம் காக்கிறார்கள். காதலைப்பற்றிப் பேசுவதே இல்லை. காதல் என்னவென்று அவர்களுக்குத் தெரியும். எனவே அதைப்பற்றிப் பேச ஒன்றுமில்லை. தெரிந்து வைத்திருப்பதாலேயே அதைப்பற்றிப் பேச ஒன்றும் இல்லை என்பதையும் தெரிந்து வைத்திருக்கிறார்கள். அப்படிப் பேசினால் அது துரோகமாகிப் போகும்.

லாவோட் சூ - முற்றிலும் வித்தியாசமான ஆத்திகர்.

இந்தச் சூத்திரத்தைப் பார்க்கலாம் வாருங்கள்.

**தாவோ ஒரு காலிப் பாத்திரம்**
**அதன் பயன்பாடோ அனந்தம்**
**ஆழம் காணமுடியாது.**

லாவோட் சூவின் வார்த்தைகளில் வெறுமை என்பது ஒரு முக்கியமான வார்த்தை. அதைப்பற்றித் திரும்பத்திரும்பப் பேசுகிறார். வெறுமை என்றால் வெற்றிடம். வெறுமை என்றால் பரந்திருப்பது. வெறுமை என்றால் முடிவில்லாதது.

நீ ஒரு வீட்டில் குடியிருக்கிறாய். வீடு என்பதே சுவர்களுக்குள் அடங்கிப் போகிறதுதானே! லாவோட் சூவின் வீடு அகத்தில் இருக்கும் வெளி. சுவர்களுக்குள் அடங்கிப் போவதல்ல.

சுவர்கள் வீடாக முடியாது. எப்படிச் சுவர்களுக்குள் வாழ்வது? வெட்ட வெளியில்தான் வாழ முடியும். சுவர்களுக்குள் வாழ முடியாது. திறந்த வெளிதான் உண்மையான உறைவிடம்.

வீட்டைப்பற்றி நினைக்கும் போதோ திறந்த வெளியைச் சுற்றியிருக்கும் ஒரு கட்டிடத்தைப் பற்றியே நினைக்கிறாய். அதனால்தான் மாளிகையும் குடிசையும் உனக்கு வெவ்வேறாகத் தெரிகின்றன.

லாவோட் சூவுக்கு அப்படித் தெரிவதில்லை. அவர் சூழ இருக்கும் வெளியின் பரப்பைப் பார்க்கிறார். குடிசையும் மாளிகையும் அந்தப் பரப்போடு பொருத்திப் பார்க்கும்போது சிறியவையே. சிறியவற்றுள் எது பெரியதாக இருந்தென்ன?

ஆனால் சுவர்களை மட்டுமே பார்க்கும்போது குடிசை குடிசையாகிறது. மாளிகை மாளிகையாகிறது. ஆனால் மையத்தின் வெளியைப் பார்க்கும்போது - அதுதானே அசலான உறைவிடம் - அது மட்டுமே உனக்கு உறைவிடமாகும். சுவர்கள் அல்ல - குடிசைக்கும் மாளிகைக்கும் இடையே பேதமில்லை. வெளியில் செல்வச் செழிப்புள்ள வெளியில்லை. ஏழை வெளியில்லை. வெளி எல்லாமும் ஒன்றே. எல்லாமும் அங்கே சமமே. ஆனால் சுவர்களில் செல்வந்தச் சுவர்கள் உண்டு. ஏழைச் சுவர்கள் உண்டு.

இதைப் புரிந்து கொள்ளும்போது பலவும் சாத்தியமாகிப் போகின்றன. ஏனெனில் இந்த உவமையில் செழிப்பும் பொருளும் நிறைந்து இருக்கின்றன.

ஒருவரைப் பார்க்கும்போது அவருடைய உடலைப் பார்க்கிறாயா? அப்படியானால் நீ சுவர்களைப் பார்க்கிறவன். நீ பர்ப்பதும் அசலான மனிதனை அல்ல. அசல் மனிதன் உள்ளிருக்கும் வெளியில் இருக்கிறான்.

ஓர் உடல் அழகாக இருக்கலாம். அசிங்கமாக இருக்கலாம். ஆரோக்கியமானதாக இருக்கலாம். நோய் கொண்டதாக இருக்கலாம். இளமையாக இருக்கலாம். வயது முதிர்ந்ததாக இருக்கலாம். ஆனால் உள்ளே இருப்பது எப்போதும் ஒன்றேதான். அதை உணரும்போது உடலைப் பார்க்காமல் அகத்தைப் பார்க்கிறாய்.

உள்ளே இருப்பதைப் பார் என்கிறார் லாவோட் சு. வெளியே இருப்பதை அல்ல. அந்த அக வெளியே உன் ஜீவிதம். அகத்தின் வெளி, அகத்தின் வெறுமை - அதுதான் உன் ஜீவிதம்.

அப்படியானால் உன் ஜீவிதம் ஓர் அஜீவித நிலை. ஜீவிதம் என்ற வார்த்தைகூட உள்ளே ஏதோ ஒன்று இருக்கிறது என்ற நினைப்பைத் தந்துவிடும். இல்லை. உள்ளே யாரும் இல்லை. இவர் அவர் என்பதெல்லாம் புறத்தில்தான். உள்ளேயோ எவருமில்லை. ஒரு வெற்றிடம்.

தான் தனதென்பதெல்லாம் புறத்தில்தான். அகத்தில் தானுமில்லை. தனதென்பதுமில்லை. உள்ளே யார் இருக்கிறாரென்கிறாய்? இதைத் தெரிந்து கொள்ளும்போது உனக்குச் சிரிப்புத்தான் வரும். யார் அங்கே என்ற கேள்வியே பொருத்தமில்லாத கேள்வியாகிவிடும்.

அங்கே யாருமில்லை. சரியாகச் சொன்னால் எதுவுமில்லை. அதானால்தான் நீ பரந்து இருக்கிறவனாகிறாய். அதனால்தான் பிரம்மனின் இயல்பு உன்னுடையதென்றாகிப் போகிறது. அதனால்தான் கடவுளை உன்னால் கண்டுபிடிக்க முடியாமல் போகிறது. யாரும் எதுவும் இல்லாத இடத்தில் கடவுளை மட்டும் காண முடியுமா என்ன?

முழுமையின் வெறுமை கடவுள் என்கிறபோது அவருக்கு ஓர் உருவத்தைக் கற்பித்துத் தேடிக் கொண்டிருக்கிறாய். சிலர் கிருஷ்ணரைத் தேடுகிறார்கள். சிலர் யேசுவைத் தேடுகிறார்கள். சிலர் மகாவீரரைத் தேடுகிறார்கள். எல்லோருமே உருவங்களைத் தேடுகிறார்கள்.

யாருமே அருவத்தைத் தேடுவதில்லை. வெறுமையைத் தேடி எங்கேயாவது போக வேண்டுமா என்ன? வெளி உன்னை எப்புறமும் சூழ்ந்திருக்கிறது. வெளியில் பிறந்திருக்கிறாய். வெளியில் வாழ்கிறாய். வெளியோடு கரைந்துவிடப் போகிறாய்.

மீன் நீரில் பிறக்கிறது. நீரில் வாழ்கிறது. நீரில் இருந்து கடலில் கரைந்து போகிறது. மீன் கடல் நீரன்றி வேறு எதுவுமில்லை.

நீயும் அப்படித்தான். உன்னைச் சுற்றிலும் வெளி நிறைந்திருக்கிறது. உனக்குள்ளும் வெளி இருக்கிறது. எப்படி இரண்டு விதமான வெளிகள் இருக்க முடியும்? முடியாதுதான்.

வெறுமை எப்போதும் ஒன்றுதான். ஒரு பாவிக்குள்ளும் ஒரு மகானுக்குள்ளும் இருப்பது ஒரே வெளியே. புறத்தே அவருக்கு மகான் என்று பெயர்ச்சீட்டு. அவனுக்குப் பாவி என்றொரு பெயர்ச்சீட்டு. அவ்வளவுதான்.

வெகுவாகத்தான் சுவர்களைப்பற்றிய பிரக்ஞை உனக்கு. சுவர்களில் பொருளேதும் இல்லை என்பதை நீ தெரிந்து கொள்வதில்லை.

ஏன் ஒருவரை மகான் என்கிறாய்? நீ நல்லது என்று சொல்லும் ஏதோ ஒன்றை அவர் செய்கிறார் என்பதால்தானே! இன்னொருவனை ஏன் பாவியென்கிறாய்? நீ கெட்டது என்று சொல்லும் ஒன்றை அவன் செய்வதால். ஆனால் செயலெல்லாம் புறத்தில்தான். செயல்கள் எல்லாமும் புறத்தில்தான். அவையெல்லாம் சுவரில் வரைந்த சித்திரங்கள்.

அகத்தின் வெளியோ...

உன்னுடைய செயல்கள் அதை அசுத்தப்படுத்த முடியும் என்கிறாயா? வெற்றிடத்தில் எப்படிக் குப்பை போடுவது? வெறுமையைப் பரிசுத்தமாக்க முடியும் என்கிறாயா? அதுவும் முடியாது. வெறுமை வெறுமனே வெறுமைதான். அதை எப்படி அசுத்தப்படுத்துவது, சுத்தமாக்குவது? நமது தீண்டலுக்கு அப்பாற்பட்டது வெறுமை.

என்னைக் கத்தி கொண்டு வெட்டும்போது என் இரத்தம் சிந்த வைக்கிறாய். என்னைச் சிந்த வைக்க முடியாது. ஏனென்றல் நான் என்பது எனக்குள்ளிருக்கும் வெறுமை. ஏதாவது செய்கிறேன் என்றால் சுவர்களை வைத்துக் கொண்டு என்னவோ செய்கிறேன். உள்ளிருக்கும் வெறுமை செயல்படாது நிற்கிறது. இந்த உண்மையை நினைவில் நிறுத்து. அதுதான் லாவோட் சூவைப் புரிந்து கொள்ளும் திறவுகோல்.

**தாவோ ஒரு காலிப் பாத்திரம்**
**அதன் பயன்பாடோ அனந்தம்**
**ஆழம் காணமுடியாது.**

தாவோ அல்லது கடவுள் வெறுமையல்லாது போயிருந்தால் அவர்களின் பயன் தீராதது என்பது பொய்யாகிப் போகும். ஒரு கால கட்டத்தில் காலாவதியாகிப் போய்விடுவார்கள்.

காலாவதியாகிப் போகிற கடவுளை எப்படிக் கடவுள் என்பது? அந்தக் கடவுள் ஒரு நாள் செத்துப்போக கடவுள் இல்லாமல் போய்விடுவார்.

உன்னிடம் கடவுள் கொள்கை என்ற பெயரால் யாரோ ஒருவர் எங்கோ ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு அனைத்தையும் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கிறார் என்ற நம்பிக்கையைத் தந்துவிட்டார்கள். அவர் எதையும் கட்டுப்படுத்துவதில்லை. அவர் உருவமுள்ள ஒருவரே அல்ல. கடவுள் அவன் அல்ல எனும்போது அவளுமற்றுப் போகிறார்.

நமது வார்த்தைகள் அனைத்துமே பொருத்தமற்ற வார்த்தைகள்தான். ஏனெனில் கடவுள் மிகப்பரந்த வெளி. மிகப்பெரிய வெறுமை. வெற்றிடம். உடனே உன் தர்க்கவாதம் கேட்குமே! அப்படியானால் எப்படி எல்லாமும் வந்தன?

பௌதிகவியலாளர்களைக் கேட்டுப் பார். அவர்கள்கூட லாவோட்சு சொன்னதை ஏற்றுக்கொள்ள வந்துவிட்டார்கள். பொருளுக்குள் ஆழ்ந்து போகப்போகப் பொருளற்றதைச் சென்று சேர்கிறோம் என்கிறார்கள். கடைசியில் எதுவும் இல்லாத வெறுமைதான். அப்போது நமக்கு எதுவும் தெரிவதில்லை. உள்ளே காலிதான். என்னதான் முயன்று பார்த்தாலும் அங்கே ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. கண்ணுக்கு, புலனுக்குத் தட்டுப்படாமல் போய்விட்டது பொருள். எங்கே போய்விட்டது என்பதையும் தெரிந்துகொள்ள முடியவில்லை.

முதலில் அணுத்திரட்சியில் தேடினார்கள். பிறகு அணுவுக்குள் தேடினார்கள். பிறகு அணுவைத் துளைத்துத் துகளில் தேடினார்கள். பொருள் மறைந்தே போய்விட்டது. பொருள் காலியாகத்தான் இருக்கிறது.

இந்தக் கற்சுவர்கள்கூடக் காலியானவைதான். அதனால் இந்துக்கள் பொருட்களாலான இந்த உலகை மாயை என்கிறார்கள். புறத்தே பார்க்கத் திடமாகவும் திரட்சியோடும் தெரிவதற்குள் எல்லாமே காலியாகத்தான் இருக்கிறது.

அமைதியாக உட்கார்ந்து கண்களை மூடி உனக்குள்ளே அமிழ்ந்து போகும்போது ஒரு வெறுமையை உணர்வாய். பயந்துவிடாதே. பௌதிகவியலாளர்கள் பொருண்மையை விரட்டி விரட்டிக் கடைசியில் பொருளற்றதற்குப் போய்ச் சேர்ந்தார்கள். ஆன்மிகத் தேடுதலும் அப்படியே ஏதுமற்ற ஒன்றுக்கே இட்டுப் போனது.

அப்போது பயந்துவிட்டாய். பொருட்கள் ஒன்றுமில்லாதவை என்றால் சரிதான். ஆனால் உனக்குள்ளேயும் எந்த உள்ளீடும் இல்லை என்று தெரியும்போது பயம் வந்துவிடுகிறது. மூங்கிலுக்குள் உள்ளீடு இல்லாததைப்போல. ஆனால் பயந்துவிடாதே. பயந்துவிட்டால் சுவர்களைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கப் போகிறாய். கடைசியில் அந்தச் சுவரும் உள்ளீடு ஏதுமில்லாததுதான்.

ஜீவிதம் ஒரு மாபெரும் வெற்று வெளி. அதன் அழகே அப்படி இருப்பதில்தான் இருக்கிறது.

தூக்கத்தில் கனவுகள் தோன்றுகின்றன. வெறுமனே தோன்றும் கனவுகள். அழகான கனவுகள். அசிங்கமான கனவுகள். மரணபயத்தைத் தரும் பயங்கரக் கனவுகள். எதிலிருந்தும் தோன்றியிராத கனவுகள்

நிஜமாகவே தோன்றுகின்றன. அவ்வளவு நிஜமாகத் தோன்றிய கனவுகளும் காலையில் கண்களைத் திறக்கும்போது இல்லாமல் போய்விடுகின்றன. எங்கேயும் காணவில்லை.

எங்கிருந்து வந்தன? எதிலிருந்து தோன்றின? எங்கே போய் மறைந்தன? கனவுகளில் நடந்தவை பற்றி நினைத்துக் கொண்டே யிருப்பதில்லை. அத்தனையும் இரவில் நடக்க முடியுமானால் ஏன் பகலிலும் நிகழக் கூடாது?

சுவாங் சூ என்பவர் லாவோட் சூவின் சீடர்களில் ஒருவர். ஒரு கனவு கண்டார் - பட்டாம் பூச்சியாகிவிட்டதைப்போல. மலருக்கு மலர் தாவி இறக்கையடிக்கும் பட்டாம்பூச்சியாக. காலையில் விழித்தெழுந்தபோது, அவருக்கு ஒரே சோகம்.

அவருடைய சீடர்கள் அவரிடம், ''என்ன நடந்தது குருவே? இவ்வளவு சோகமாக உங்களை நாங்கள் பார்த்ததே இல்லையே! என்ன தான் நடந்தது?'' என்றார்கள்.

சுவாங் சூ, ''நேற்றிரவு கனவொன்று கண்டேன். ஒரு பட்டாம் பூச்சியாகிவிட்டதைப்போல். ஒரு பூவிலிருந்து இன்னொன்றுக்குத் தாவிப் பூங்கா முழுக்கப் பறக்கும் பட்டாம் பூச்சியாகிப் போனதாகக் கனவொன்று கண்டேன்'' என்றார்.

சீடர்களோ சிரித்துக் கொண்டே, ''அது வெறும் கனவுதான் குருவே!'' என்றார்கள்.

அவர், ''பொறு! பொறு! முழுக்கச் சொல்லிவிடுகிறேன். இப்போது முழிப்பு வந்துவிட்டது. குழப்பமாக இருக்கிறது. ஒரு கேள்வியும்தான். பட்டாம் பூச்சியாகி விட்டதைப்போல சுவாங் சூ கனவு காண முடிகிறது. திருப்பிப் போட்டால் என்னவாகிறது? தான் சுவாங் சூ ஆகிவிட்டதைப் போல ஒரு பட்டாம் பூச்சி கனவு காண முடியுமல்லவா? அப்படியானால் யார் எது? எது யார்? நானென்ன சுவாங் சூ ஆகிவிட்டதாகக் கனவு கண்டிருக்கும் ஒரு பட்டாம் பூச்சியா?'' என்றார்.

உன் கனவில் நீ ஒரு பட்டாம் பூச்சியாக முடியும் என்றால் சிக்கல் என்ன? அதோ அங்கே இந்தக் காலைநேரத்தில் தூங்கிக் கொண்டிருக்கும் அந்தப் பட்டாம் பூச்சி தான் நீயாகிப் போனதாகக் கனவு கண்டு கொண்டிருக்கலாமே!

அப்படியானால் நீ யார் என்பதை எப்படித் தெரிந்து கொள்வது? சுவாங் சூ பட்டாம்பூச்சியாக முடியுமானால் பட்டாம் பூச்சியும் சுவாங் சூ ஆக முடியும். இதில் என்ன அசாத்தியம் இருக்கிறது?

கனவுகள் எதிலிருந்தும் தோன்றவில்லை என்றாலும் இரவு முழுக்க நிஜமாகவே தோன்றுகின்றன. பகல் வாழ்வும் அப்படித்தான். ஒரே வித்தியாசம் - கனவுகள் அந்தரங்கமானவை. வாழ்க்கை பிறர் காணும் வகையிலான கனவுகளின் தொடர்ச்சி. கனவுகளை உன்னோடு காண நண்பர்களை அழைத்து வந்து இருத்தி வைக்க முடியாது. கனவுகள் நீ மட்டுமே காண்பதற்கானவை. வாழ்வென்னும் கனவை உன்னோடு சேர்ந்து காணப் பிறரையும் அழைக்கலாம்.

பகலில் நீ வாழும் வீடு பிறர் வந்து போகும் ஓரிடம். அந்தரங்கமான கனவு காண முடிகிறது என்றால் பிறரோடு சேர்ந்தும் கனவு காண முடியும். இங்கிருக்கும் நாம் அனைவரும் தூங்கப் போய்விட்டால் எத்தனை பேர் இருக்கிறோமோ அத்தனை கனவுகள். அவரவருக்கு அவரவர் அந்ததரங்கம். யாருடைய கனவும் யாருடைய கனவிலும் குறுக்கிடப் போவதில்லை. ஒவ்வொருவரும் மற்றவரை மறந்து போய்விட்ட வராகிறார். அவரவருக்கு அவரவர் கனவு. அந்தந்தக் கனவின் நிஜம்.

பிறகு விழிக்கிறோம். நீ என்னைப் பார்க்கிறாய். நான் உன்னோடு பேசுகிறேன். இது நம் கனவு. நீங்கள் எல்லோருமாகச் சேர்ந்து கனவு காண்கிறீர்கள். அவ்வளவுதான் வித்தியாசம்.

இந்த முழிப்பைவிடப் பிரமாதமானதொரு முழிப்புக்குச் சாத்தியம் இருக்கிறது. அது இந்தச் சமூதாயக் கனவிலிருந்தும் முழித்துக்கொள்வது. அதைத்தான் தெளிவு, ஞானம் என்கிறோம். திடீரென உலகம் முழுவதும் மாயையாகிப் போகிறது. இதைத்தான் இப்படி லாவோட் சு சொல்கிறார்.

தாவோ ஒரு காலிப் பாத்திரம்
அதன் பயன்பாடோ அனந்தம்
ஆழம் காணமுடியாது.

அது ஒரு முடிவில்லாத வெளி. எல்லாமும் அதிலிருந்து தோன்றி அதற்குள்ளேயே அடங்கிப் போகிறது. அதற்கு முடிவில்லை. ஏனென்றால் அதற்கு எல்லையில்லை.

உங்களுக்குத் தெரியாது என்று நினைக்கிறேன். பூஜ்யத்தைக் கண்டுபிடித்தவர்கள் இந்தியர்கள். எல்லாமும் ஏதுமற்றதில் இருந்து வந்தவை என்பது அவர்களுக்குத் தெரிந்திருந்தது. எல்லாமும் ஏதுமற்றதற்குப் போய்ச் சேர்கின்றன என்பதும் தெரிந்திருந்தது. முழுப்பிரயாணமும் பூஜ்யத்தில் இருந்து பூஜ்யத்துக்குப் போவதுதான் என்பது தெரிந்திருந்தது.

இப்படியாக இந்தியா பூஜ்யம் - சூன்யம் என்ற கொள்கையைக் கண்டது. அதுதானே கணக்கிடுதலுக்கு அடிப்படை! பூஜ்யத்தை

எடுத்துவிட்டால் கணக்கிடுததலின் அஸ்திவாரமே ஆட்டம் கண்டுபோய்க் கட்டிடம் நொறுங்கி விழுந்துவிடும். பூஜ்யத்திலிருந்து கணக்கின் லீலைகள் ஆரம்பிக்கின்றன. (ஒன்றோடு பூஜ்யத்தைச் சேர்த்தால் ஒன்று பத்தாகி விடுகிறது. அதாவது பூஜ்யத்தின் மதிப்பு ஒன்பது என்றாகிவிடுகிறது. ஒன்றோடு இரண்டு பூஜ்யத்தைச் சேர்த்தால் ஒன்று நூறாகிவிடுகிறது. அதாவ்து இரண்டு பூஜ்யங்களின் மதிப்பு தொண்ணூற்று ஒன்பதாகி விடுகிறது.)

பூஜ்யத்திலிருந்து கணக்கிடுமுறை தோன்றிப் பெருகுகிறது. பூஜ்யம் இல்லையென்றால் கணக்கே இல்லை. கணக்கில்லையென்றால் விஞ்ஞானம் இல்லை.

என்னைக் கேட்டால் பூஜ்யம்தான் கணக்குக்கு அடிப்படை என்பேன். பூஜ்யம் இல்லையென்றால் விஞ்ஞானம் இல்லை. பூஜ்யம் என்ற கொள்கை இல்லையென்றால் ஐன்ஸ்டீன் என்ற ஒரு மனிதர் இல்லை என்கிறேன்.

கம்ப்யூட்டர்கள் எல்லாம் செயலிழந்து போகும். பூஜ்யம் இல்லாமல் அவை இயங்க முடியாது. பூஜ்யம் மட்டும்தான் இவ்வுலகில் பொருள் நிலை அதிகம் உள்ளதாகத் தெரிகிறது.

பூஜ்யத்தில் அப்படி என்ன இருக்கிறது? பூஜ்யம் வெறும் பூஜ்யம்தான். ஒன்றுமில்லை. ஆனால் தீர்ந்து போகாதது. அதிலிருந்து எதை வேண்டு மானாலும் எடுத்துக்கொள்ளலாம். ஒன்பது தொண்ணூற்று ஒன்பது ஆகும். தொண்ணூற்று ஒன்பது தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்பது ஆகும். இப்படியாக ஆழங்காண முடியாமல் அது போய்க்கொண்டே இருக்கும்.

ஒன்று என்பதற்கு வரையறைகள் உண்டு. குறிப்பிட்ட ஒரு மதிப்பு அதற்கு உண்டு. இரண்டுக்கும் ஒரு மதிப்பும் வரையறையும் உண்டு. பூஜ்யத்தைத் தவிர மற்ற எண்கள் எல்லாவற்றுக்கும் வரையறைகள் உண்டு. பார்க்கப் போனால் பிற எண்கள் எல்லாமும் பூஜ்யம் இன்றி இயங்க முடியாது. அவை அதிலிருந்து வருகின்றன. ஜீவிதம் முழுக்க பூஜ்யத்தி லிருந்து வருகிறது. பூஜ்யம் என்ற வெறுமை.

ஏன் இந்த வெறுமைக்கு இவ்வளவு சிறப்பு? அது ஒரு தத்துவக் கொள்கையல்ல. வெறுமனே ஓர் ஒப்பீடு. லாவோட் சூ எதையோ காட்ட (...)ல்கிறார். பூஜ்யமாகிவிடாமல் போய்விட்டால் நீ துன்பப்படப் (...)பாகிறாய். பூஜ்யமாக இருப்பதே உன் சுதர்மம். சுதர்மத்தை விட்டு விலகியிருக்கும் வரை துன்பம்தான்.

அதுதான் தியானத்தின் பொருளும் கூட. வெறுமையாகிப் போவது. உள்ளே ஏதுமற்ற வெறுமை. ஓர் எண்ணம்கூட அங்கே துடிப்பதில்லை. எண்ணங்களை எல்லாம் கழித்துவிட்ட வெறுமை. ஏதுமற்ற வெற்றிடம்.

உடனே எல்லாத் துயரமும் மறைந்து விடுகின்றன. துயரங்கள் எண்ணங்களால் ஆனதுதானே! மரணம் மறைந்துவிடுகிறது. மரணிப்பதும் ஓர் எண்ணம்தானே! கடந்ததெல்லாம் மறைந்துவிடுகிறது. ஏனெனில் கடந்த காலத்தின் மொத்தப் பாரத்தையும் எண்ணங்கள்தானே சுமக்கின்றன! லட்சியம் மறைந்து போகிறது. ஏனெனில் எண்ணங்களற்றவனுக்கு ஏது லட்சியம்?

எண்ணங்கள் ஏதுமற்ற பைத்தியக்காரனைப் பார்த்திருக்கிறாயா? முடியாதுதான். பைத்தியத்துக்குக் காரணமே ஒழுங்குபடுத்தி அடுக்கி வைக்க முடியாத அளவுக்கு அவன் மனதில் எண்ணங்கள் பெருகிவிட்டதுதானே! ஒரே எண்ணக் கூட்டம்! பொறுக்க முடியாத அளவுக்கு நெருக்கம்.

பைத்தியக்காரன் பெரும் சிந்தனையாளன். அதுதான் அவனுடைய பிரச்சனையே. நிறையத்தான் சிந்திக்கிறான். ஒரே சமயத்தில் பல தளங்களிலும் நின்று சிந்திக்கிறான். அவனுடைய வண்டியில் எல்லாத் திசைகளையும் நோக்கிக் குதிரைகள் பூட்டி வைத்திருக்கிறான். எல்லாத் திசைகளிலும் பயணிக்கிறான். தானே இல்லாமல் போய்விட்ட அவன் எப்படித் தன்னை நிறுத்திக்கொள்ள முடியும்? உடைந்து சில்லு சில்லாகச் சிதறிக் கிடக்கும் அவன் தானென்ற ஒருவனாவது எப்படி?

வெறுமைதான் சிதிலமடையாது. ஒன்றுமில்லாததைப் பகுக்க முடியுமா? எதையும் பகுத்துவிடலாம் - அது ஏதாவது ஒன்றாக இருக்கும் வரை.

தான் என்பது தானாக இருக்கும் வரை அதைக் கூறு போட்டுவிடலாம். அதனால்தான் புத்தர் ஞானத்தின் விளிம்பில் நின்றபோது ஒரு வார்த்தையை வடித்தார். அநத்தா. அவர் சொல்லும் வரை அந்த வார்த்தை இருந்ததில்லை. அநத்தா என்றால் தானன்றிப் போதல். அநத்தா என்றால் அநாத்மா. அநத்தா என்றால் நீயில்லை என்று பொருள். அநத்தா என்றால் ஒன்றுமில்லை, வெறுமை என்று பொருள்.

சில உண்மைகளை உணர்த்தத்தான் இந்த உவமையைச் சொன்னேன். வெறுமையாகிப் போய்விடு. ஏதுமின்றி இருந்துவிடு. ஆனால் நமக்குச் சொல்லிக் கொடுத்தது எல்லாம் சமூகம் நம்மைப் பழக்கி வைத்திருப்பது. அத்தனையும் இதற்கு எதிராகத்தானே இருக்கிறது! மேற்கத்தியர்கள் என்ன சொல்கிறார்கள்? சும்மாயிருக்கும் மனது பேயின் செயற்களம் ஆகிப்போகுமாம்.

இது முட்டாள்தனம். சரியான முட்டாள்தனம். வெறுமையாகிப்போன மனதில் பேய் எதுவும் செய்ய முடியாது. அப்படி வெறுமையாகிப்போன

மனதில் திடீரெனக் கடவுளைத் தவிர வேறு எதையும் எவரையும் காண முடிவதில்லை. ஏனென்றால் கடவுளே வெறுமையானவர்தான்.

பேய்க்குத்தான் சிந்தனைகள் அதிகம். பேய் எப்போதும் வெறுமனேயிருப்பதில்லை. பேய்க்கு மனம் உண்டு. கடவுளுக்கு மனம் என்ற ஒன்றில்லை. எப்படிப் பேயின் செயல்களுக்குக் களனாவது என்கிறாயா? எவ்வளவுக்கு எவ்வளவு சிந்திக்கிறாயோ அவ்வளவுக்கு அவ்வளவு பேய் செயலாற்ற மனதில் களம் அமைத்துத் தருகிறாய்.

சிந்தனைகளைக் கழித்துவிட்டால் பேய்க்கு உன்னிடம் என்ன வேலை? வெறுமையானதற்குள் பேய் நுழைய முடியாதல்லவா? மரணத்தைப்பற்றிப் பேய்க்கும் பயம் அதிகம். வெறுமைக்குள் நுழைவதென்பது மரணித்துவிடுவது. உனக்குள் சிந்தனையின் துடிப்பு இருந்தால்தான் பேய் நுழையமுடியும். கூட்டத்தோடு கூட்டமாகச் சேர்ந்து மறைந்துகொண்டு உன் எண்ணங்களில் ஒன்றாகிப் போய்விட முடியும்.

வெறுமையாகிப்போன மனம் கடவுளுடையதாகிப் போகிறது. அது மனமற்ற நிலை. வெறுமையாகிப் போய்விடு. உள்ளே காலியாக இருக்கும் மூங்கிலைப்போல உட்கார்ந்துவிடு. நகரும்போது வெறுமையாக நகர். வாழும்போது வெறுமையானதாக வாழ். எதை வேண்டுமானாலும் செய்துகொள். உள்ளே மட்டும் காலியாக வைத்திரு.

பிறகு வினைப்பயன்கள் உன்னைப் பீடிக்காது. உன் செயல்கள் உனக்கு ஒரு சுமையாகிப் போகாது. எதிலும் சிக்கிக்கொள்ள மாட்டாய். ஒன்றுமில்லாதது, எப்படி எதிலாவது சிக்கிக் கொள்வது?

**பள்ளத்தாக்கின் ஆன்மா மரணிப்பதில்லை.**

பள்ளத்தாக்கின் ஆன்மா என்பது வெறுமையின் ஆன்மாதான். பள்ளத்தாக்கு என்பது என்ன? காலியான இடந்தானே! மலைப்பக்கம் போய்ப் பார். இரண்டு விஷயங்களைப் பார்ப்பாய். உயரும் மலைகள். அவற்றில் எங்கும் பாறைகள் நிறைந்து நிற்கின்றன. பள்ளத்தாக்குகள் வெறுமையாகச் சரிகின்றன. பள்ளத்தாக்கின் ஆன்மா வெறுமையின் ஆன்மாதான்.

மலையுச்சிகள் வந்து இருந்துபோய் மறுபடி வந்து இருந்துபோகப் போகிறவை. பள்ளத்தாக்குகள் நிரந்தரமானவை. ஒன்றுமில்லாதது இல்லாமல் போவதேது?

நீ இன்னார் என ஒருவன் என்றால்தான் பிறந்து இறந்து மறுபடி பிறந்து மறுபடி இறக்க வேண்டியிருக்கும். நீ ஒன்றுமில்லையென்றாகிப் போனால்

உன்னை அழிப்பதேது? நீக்குவதேது? உருவங்களால் ஆன உலகத்தி லிருந்து உருவமற்றதற்குள் நழுவிப் போகிறாய். பள்ளத்தாக்கு என்பது உருவங்களற்ற உலகம்தான்.

**பள்ளத்தாக்கின் ஆன்மா மரணிப்பதில்லை.**
**அதைப் புரிதலுக்கப்பாற்பட்ட பெண்மை என்பர்.**

இவை எல்லாமுமே உவமைகள்தான். பெண் பள்ளத்தாக்கு. ஆண் முகடு. ஆண் பெண்ணுக்குள் நுழைகிறான். பெண் ஏற்றுக் கொள்கிறாள். ஆண் ஆளுமை. பெண் ஏற்புடைமை. ஆண் செயல்பட முயல்கிறான். பெண் நிகழ்வுக்காகக் காத்திருக்கிறாள்.

**அதைப் புரிதலுக்கப்பாற்பட்ட பெண்மை என்பர்.**

இதைப் புரிந்துகொள்ள வேண்டும். புரிதலுக்கப்பாற்பட்ட மெய்யுணர்வு பெண்மை. லாவோட் சூவுக்கு அதுதான் முடிந்த முடிவு.

வாழ்வின் இயல்பில் ஆண்மையைவிடப் பெண்மையே அதிகம் என்று கருதுகிறார். ஆண் பெண்ணிடமிருந்துதானே வருகிறான்! பெண்ணும் பெண்ணிடமிருந்துதான் வருகிறாள்.

ஆணை ஒதுக்கிக் கழித்துவிடலாம். பெண்ணை விட்டுவிட முடியாது. பெண் அடிப்படைக் கூறாகத் தெரிகிறாள். ஆண் அதிலிருந்து வந்து வளர்ந்தவன்.

பெண் ஆதியாகத் தெரிகிறாள். மிக இயல்பாக இருக்கிறாள். ஆணிடம் ஏதோ இயல்புக்குப் புறம்பான ஒன்று இருப்பதாகத் தெரிகிறது. உயிரியலாளர்களைக் கேட்டால், ஆணின் அடி ஆழத்தில் உயிரியல் தளத்தில் சமநிலை தவறிப் போயிருக்கிறது என்பார்கள். பெண்ணிடம் ஒரு பொருத்தம் இருக்கிறது. ஒரு சமநிலை இருக்கிறது. அதனால்தான் பெண் அழகாகவும் பூரணமாகவும் இருக்கிறாள்.

ஆணின் வடிவமைப்பில் நேர்கோணத் திருப்பல்கள் உண்டு. பெண்ணிடமோ அத்தகைய எதிர்த் திருப்பல்கள் இல்லை. பெண்ணிடம் ஒரு சமநிலை இருப்பதால் புதிதாக எதையும் கண்டுபிடிப்பதில்லை. படைப்பதில்லை. எதையும் செய்வதில்லை. அவளிடம் இயக்கத்தின் பரபரப்பு இல்லை. அவள் நகர்வதே இல்லை.

ஆண் எப்போதும் இயங்கிக்கொண்டே இருக்கிறான். தான் இருந்து கொண்டிருப்பதைக் காண்பிக்க அவன் ஏதாவது செய்துகொண்டே இருக்க வேண்டியிருக்கிறது. தன்னை அப்படித் தானிருக்கும் விதத்தில் ஏற்றுக்கொள்ள முடிவதில்லை. சும்மாயிருந்து அனுபவிக்க முடிவதில்லை.

நிலவுக்குப் போகவேண்டும். எவரெஸ்டில் காலடிபதிக்க வேண்டும். ஏதாவது செய்தே ஆகவேண்டும்.

அவனுக்குள் அடி ஆழத்தில் சமநிலை தப்பிப் போய்விட்டது. வெறுமனே உட்கார்ந்து இருக்க முடிவதில்லை. சாகசக்காரனாகிறான். சயன்டிஸ்ட் ஆகிறான்.

பெண் தானாக இருப்பதை அனுபவிக்கிறாள். சின்னச் சின்ன விஷயங்களில் சந்தோஷப்படுகிறாள். நிலவுக்காக ஏங்குவதில்லை. ஒவ்வொரு பெண்ணும் ''இது என்ன முட்டாள்தனம், நிலவுக்குப் போக வேண்டுமாம்!'' என்று நினைக்கிறாள். விண்வெளி வீரர்களின் மனைவியரைக் கேட்டுப் பாருங்கள். அவர்களுக்கு அதெல்லாம் நம்பிக்கையே இல்லை. ''ஏன்? எதற்கு இந்த அநாவசிய ஆபத்தும் மரணமும்? இங்கே இருப்பதில் என்ன மோசமாகிப் போய்விட்டது?'' என்கிறார்கள்.

ஆண் ஊர் சுற்றுகிறவன். நாடோடி. இந்த உலகத்தில் ஆண்கள் மட்டும்தான் என்றால் வீடுகளே இருக்காது. கூடாரங்கள் வேண்டுமானால் இருக்கலாம். ஓரிடத்தைவிட்டு இன்னோர் இடத்துக்கு என்று திரிந்து கொண்டே இருப்பான். ஓரிடத்தில் தங்கியிருக்க அவனுக்கு முடியாது. அவனுக்குள்ளே ஏதோ ஒன்று நகர்ந்துகொண்டே இருக்கச் சொல்லி அவனைக் கட்டாயப்படுத்திக்கொண்டே இருக்கிறது.

சமநிலை தவறியவன், இது புத்தி பேதலித்துக் கிடப்பது.

பெண்ணைப் பார். அவளிடம் ஒரு சமநிலை இருக்கிறது. அவளுடைய தேவைகள் கொஞ்சம். காதலிக்கும் ஒருவர். காதலிக்க ஒருவர். உணவு, வீடு, கொஞ்சம் கதகதப்பு - இது போதும் அவளுக்கு. பிறகு எந்தக் கவலையும் இருப்பதில்லை.

எந்தப் பெண்ணும் எந்தச் சமயத்தையும் நிறுவவில்லை.

அது என்ன எல்லாச் சமயங்களையும் ஆண்களே தோற்றுவித்தது என்று கேட்டு என்னிடம் வருகிறார்கள். எப்போதும் இறுக்கத்தோடே இருக்கிறவன் ஏதாவது செய்ய வேண்டியிருக்கிறதே. இந்த உலகம் பற்றிய விரக்தி என்றால் அந்த உலகம் பற்றி ஏதாவது செய்ய வேண்டியிருக்கிறதே. இங்கே இப்போது என்று அவன் எப்போது இருந்திருக்கிறான்?

இருத்தலின் இயல்பில் ஒரு பெண்மை இருக்கிறது. ஒரு சமநிலை இருக்கிறது என்று லாவோட் ஸு ஒப்புவமை சொல்வார். மரங்களைப் பார். பாடும் பறவைகளைப் பார். ஓடும் நதிகளைப் பார். சுற்றிலும் கவனித்துப் பார். எங்கெங்கும் பெண்மையே.

இந்தக் கணத்தில் எல்லாமும் மிகச் சரியாகவே இருப்பதாகத் தெரிகிறது. மரங்களுக்கு எதிர்காலம் பற்றிய கவலை இல்லை. பறவைகளுக்கு எதிர்காலம் பற்றிய கவலை இல்லை. ஆறுகள் சாவகாசமாக ஓடிக்கொண்டிருக்கின்றன. அவ்வளவு அமைதி - ஓடுவதே தெரியவில்லை. எதுவுமே பரபரத்துக் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை.

அதுதான் தினமும் ஆண்மகன் காரில் உட்கார்ந்து கொண்டு ஹாரன் அடிக்கிறான். பெண் சன்னல் வழியாக ''இதோ வந்துவிட்டேன். ஒரு நிமிஷம்!'' என்று சொல்லிக் கொண்டே இருக்கிறாள்.

பெண்களுக்கு நேரம் பற்றிய பிரக்ஞை கிடையாது. கையில் கடிகாரம் கட்டிக் கொள்கிறார்கள்தான். ஆனால் அது ஓர் ஆபரணம் அவர்களுக்கு - கருவி அல்ல. பரபரப்பு இல்லையென்பதால் நேரத்தைப் பற்றிய அக்கறை இல்லை.

நேரத்தைப் பற்றிய கவலையே அவசரத்தாலும் பரபரப்பாலும் தோன்றுவதுதான். எல்லாமே துடித்துக் கொண்டிருக்கின்றன. எல்லாமும் பயணம் வைத்துவிட்டு பொறுமையில்லாமல் காத்திருப்பதுதான். ஒரு நிமிடம் தாமதமாகிப் போனால் எல்லாமும் தொலைந்துபோகும்.

அப்படியே அவசரப்படுகிறவனைப் பார்த்து ''எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டுப் பார். தோள்களைக் குலுக்கி உதட்டைப் பிதுக்கி ''சினிமாவுக்கு'' என்பான். என்றாலும் ஹாரனை ஒலிக்கும் பரபரப்பென்ன! என்னமோ மிக முக்கியமானது, வாழ்க்கையே அதனால்தான் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது என்பதுபோல ஓர் அவசரம் பெண்ணோ ''இதோ...''

ஒரு முறை ஒரு பெண் சொன்னாள் பாருங்கள். அவளுடைய கணவனோடு நான் காரில் உட்கார்ந்திருந்தேன். நேரமாகித்தான் விட்டது. அவனுக்கோ ரொம்ப அவசரம். பார்க்கப் போனால் அவன் அவசரப்பட்டே இருக்க வேண்டியதில்லை. எனக்காக ஒருவரைச் சந்திக்கப் போகிறோம். நான்தான் கவலைப்பட்டிருக்க வேண்டும். எனக்குத்தானே நேரமாகிவிட்டது!

ஆனால் அவனோ ஹாரன் அடித்துக் கொண்டே இருந்தான். வியர்வை சொட்டப் பெருமூச்சு வாங்க ஹாரனை விட்டு விட்டு அடித்துக்கொண்டே இருந்தான். அவளைத் திட்டித் தீர்த்தான்.

அவளோ இரண்டு மூன்று தடவை ''வந்துவிட்டேன்...'' என்று சொல்லிக் கொண்டிருந்தாள். என்ன செய்வாள் பாவம்? மேக்அப் முடியவில்லை. அது எப்போதும் முடிவதில்லைதான். எப்படியோ வந்து

சேர்ந்துவிடுவாள். என்றாலும் மேக்அப் முடிந்திருக்காது. இன்னும் கொஞ்சம், இன்னும் கொஞ்சம் என்று எப்போதும் பாக்கியிருக்கிறது. கண்ணாடிக்கு முன்னால் இருக்கும்போது வெகு இயல்பாக, அவ்வளவு இயல்பாக இருக்கிறாள். தன்னைக் கண்ணாடியில் பார்த்து இயல்பாக ரசிக்கிறாள்.

அதுதான் அவள் உலகம். இவன் ஹாரன் அடித்துக்கொண்டே இருக்க அவள் சன்னல் வழியாகக் கோபத்தோடு பார்த்து ''ஒரு நிமிஷத்தில் வர்ரேன்னு ஆயிரம் தடவை சொல்லிவிட்டேனே!'' என்று கத்தினாள். ஆயிரம் தடவையாம். ஒரு நிமிஷத்தில் ''இதோ வந்துவிட்டேன்'' என்று ஆயிரம் தடவை சொல்ல முடியுமா என்ன?

நேரத்தைப் பற்றிய உணர்வே இல்லை. அவர்கள் உலகம் காலப் பிரக்ஞை இன்றிச் சுழலும் உலகம். மரங்களோடும் மலைகளோடும் நதிகளோடும்கூடக் கடிகாரங்களும் அங்கே இருப்பதில்லை. அது ஒரு நேரம் கழிந்த உலகம்.

ஆண் காலத்தோடு வாழ்கிறான். கவலையோடும்தான். அடி ஆழத்தில் அது காம வயப்பட்டது. சம்போகத்தின் உச்சத்தை அடையும் அவசரம். பெண்ணைப் புணரும்போது அவன் மனதில் எப்போதும் கவலைதான். சம்போகம் செய்ய முடியுமா? அவளைத் திருப்தி செய்ய முடியுமா? தன் அண்மையை நிரூபிக்க முடியுமா? இந்தக் கவலை... உள்ளே ஒரு நடுக்கம். வீரியத்தை நிரூபிக்க வேண்டும் என்று ஓர் அவசரம். அதனாலேயே அவன் அடிக்கடி தோற்றுவிடுகிறான்.

விந்து வெளியேறுகிறது. ஆனால் உச்சம் இருக்கிறதா என்றால் இருப்பதில்லை. சம்போதிக்கத்தின் உச்ச ஐக்கிய உணர்வு வேறு. விந்து வெளியேறுவது வேறு. கவலைகள் இல்லாதபோதே அது சாத்தியம். சாதிக்க வேண்டும் என்ற முனைப்பு இல்லாதபோதே சாத்தியம். எதையோ அடையவேண்டும் என்ற முனைப்பு இல்லாதபோதே சாத்தியம். கட்டுப்பாடுகள் அனைத்தையும் விட்டுவிடும்போதே சாத்தியம். இயல்பு கட்டுப்பாட்டைத் தன் கைகளுக்குள் எடுத்துக்கொள்ளும்போதே சாத்தியம்.

அப்போது உடல் முழுக்க விநோதமானதொரு பரவசத்தில் துடிக்கிறது. உடலின் ஒவ்வொரு செல்லும் முழுப் பரவசத்தைக் கொண்டாடுகிறது. பிறகென்ன? அதுவே தெய்விகம்.

ஆண்மகனோ எப்போதுமே கவலைப்பட்டுக் கொண்டிருப்பவன். தன் வீரியத்தைப் பற்றிய கவலையே எல்லாக் கவலைக்கும் மூலகாரணம். பிறகென்ன? எல்லாக் களத்திலும் தன் வீரியத்தை நிரூபிக்க முயன்று கொண்டே இருக்கிறான்.

உன்னை நிரூபித்துக்கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. நீ இருப்பதே போதும். இருக்கின்ற வகையில் நீ பூரணமே. எந்தப் பெண்ணாவது தன்னை நிரூபித்துக்கொள்ளத் துடிக்கிறாளா? தான் பூரணம் என்பதை இயல்பாக ஏற்றுக் கொள்கிறாள். இறுக்கங்கள் இல்லாமல் இயல்பாக வாழ்கிறாள்.

கணவன்மார் பலர் என்னிடம் வந்து தம் மனைவியர் சோம்பேறிகளாக இருக்கிறார்கள் என்று புகார் சொல்கிறார்கள். அவர்கள் சோம்பித் திரியவில்லை. அனுபவிக்கிறார்கள். எது எப்படியானாலும் அவர்களிடம் பரபரப்பு இருப்பதில்லை. ஆனால் ஒப்பிடுகையில் சோம்பேறிகளாகத் தெரிகிறார்கள்.

இருத்தலின் இயல்பில் பெண்ணாக இருக்கிறது என்கிறார் லாவோட் சூ. இந்த ஒப்புவமை அழகானது. இருத்தல் பெண் என்று சொல்லவில்லை. மறந்துவிடாதே. இருத்தல் பெண் என்று நிரூபிக்க முடியவில்லை. பெண் விடுதலைக்காகச் சங்கு ஊதவில்லை. ஓர் உவமையைத் தருகிறார். அவ்வளவுதான்.

ஓர் ஆண்மகனிடம் பெண்மை இருக்கலாம். புத்தரிடம் பெண்மையின் நளினம் இருக்கிறது. லாவோட் சூவிடம் பெண்மை இருக்கிறது. யேசுவிடம் பெண்மை இருக்கிறது. அப்படிப்பட்ட ஆண்மகன் உண்மையில் வாழ்கிறான். இந்தக் கணத்தை வாழ்கிறான். பரபரப்பில்லாமல் அனுபவிக்கிறான்.

தன் சீடர்களிடம் யேசு, ''வயல்களின் லில்லி மலர்களைப் பார். எவ்வளவு அழகாக இருக்கின்றன! தன் ராஜ கம்பீரத்தில்கூட சாலமன் இவ்வளவு அழகாக இருந்திருக்க முடியாது.'' அப்படியென்ன சிறப்பு அந்த லில்லிகளிடம்? அவை இப்போது இங்கே மலர்ந்திருப்பதுதான். அடுத்த கணத்தைப் பற்றிய கவலை ஏதுமில்லை. அவற்றின் பிரக்ஞைக்குள் அடுத்த கணம் நுழைவதே இல்லை.

ஓர் ஆண்மகன் பெண்ணாக வாழமுடியும். அப்போது அவர் மெய்ஞ்ஞானி ஆகிவிடுகிறான். எனவே மெய்ஞ்ஞானிகள் எல்லோரிடமும் ஒரு பெண்மை இருக்கிறதுதான். அவர்கள்தான் உண்மையில் ஆத்திகர்கள். மதங்களை நிறுவுகிறவர்கள் அல்ல.

இந்த வித்தியாசத்தை மறந்துவிடாதே. புத்தர் பௌத்தத்தைத் தோற்றுவிக்கவில்லை. இல்லவே இல்லை. அவருடைய சீடர்கள்தான் நிறுவினார்கள்.

யேசு கிறித்துவ மதத்தை ஸ்தாபிக்கவில்லை. அப்போஸ்தலர்கள் ஸ்தாபித்தார்கள். மகாவீரர் சமணத்தைக் கொண்டுவரவில்லை. அவருடைய சீடரான கெளதம், பெரிய அறிஞர், அவர்தான் சமணத்தை மதமாக்கினார்.

யேசுவிடம் பெண்மை இருந்தது. இந்தியாவில் ஒரு வழக்கம். அவதாரங்கள், தீர்த்தங்கரர்கள், புத்தர்கள் போன்றோரின் படம் வரையும்போது மீசை தாடியெல்லாம் கிடையாது. அவர்களிடம் பெண்மை இருக்கிறது என்பதைக் காண்பிக்கத்தான்.

ராமனுக்கு மீசை போட்ட படம் பார்த்திருக்கிறாயா? தாடியோடு கிருஷ்ணனைப் பார்த்திருக்கிறாயா? இதற்காக ஹார்மோன்கள் இல்லாதவர்களா அவர்கள்? ஆண் பெண் தவிர்ந்த மூன்றாவது பாலைச் சேர்ந்தவர்கள் அல்ல அவர்கள்.

அவர்கள் ஆண்கள்தான். அவர்களுக்கும் தாடி மீசை முளைத்திருந்தது. ஆனால் படங்கள் நகல்கள்தான். தாடிகளைக் கழித்துவிட்டு அவர்களிடம் பெண்மை இருந்ததைக் குறிக்கிறோம். பெண்மையை இயல்பின் ஒரு பகுதியாகக் கொண்டு மெய்ஞ்ஞானியாக இருக்க வந்துவிட்டவர்கள்.

பரபரப்பின்றி இருக்க வந்தவர்கள். அவர்களிடம் ஆணுக்கே உரிய இறுக்கம் இல்லை. இயல்பான பெண்ணைப்போல இருந்தவர்கள். அவர்களைச் சுற்றிப் பெண்மையின் கதகதப்பை உணரலாம். புத்தராகிவிட்ட முழுமை அது.

**பள்ளத்தாக்கின் ஆன்மா மரணிப்பதில்லை.**
**அதைப் புரிதலுக்கப்பாற்பட்ட பெண்மை என்பர்.**
**புரிதலுக்கப்பாற்பட்ட பெண்மையின் தலைவாயில்**
**வானுக்கும் மண்ணுக்கும் வேர்.**

புரிதலுக்கப்பாற்பட்ட பெண்மையின் கதவைத் திறக்க உன்னிடம் சாவியிருக்கிறது என்றால் இருத்தலுக்கான கதவினைத் திறந்துவிட்டாய் என்றாகிறது. அந்தக் கதவுக்குள் நுழைய வேண்டுமா? இளகிப் போனவராக இருக்கவேண்டும். சமநிலை கொண்டவராக இருக்கவேண்டும். திருப்தியும் போதுமென்ற மனமும் கொண்டவராக இருக்கவேண்டும். அதுதான் பெண்மையின் ரகசியம்.

இப்படிச் சொல்லும்போது இதை இரண்டு விதங்களில் தவறாகப் புரிந்துகொள்ளலாம். பெண்கள் தாம்தான் பெண்களாயிற்றே, இனி எதுவும் செய்ய வேண்டியதில்லை என நினைக்கலாம். ஆண்களோ இவர் நம்ம

ஆளல்ல என்று ஒதுங்கிவிடலாம். அப்படியில்லை. லாவோட் சு இருவருக்குமானவர்.

நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும். பெண்மையோடிருப்பது வேறு. பெண்ணாயிருப்பது வேறு. பெண்மையின் மேன்மையை இழந்துவிட்ட பெண்கள் இருக்கிறார்கள். இழந்துவிட்டதை அவர்கள் மீட்டுக்கொண்டாக வேண்டும். ஆண்களைவிட அவர்களுக்கு அது சுலபம்தான். ஏனென்றால் ஆண்கள் வெகு தூரம் விலகிப் போய்விட்டவர்கள்.

நீ ஓர் ஆண்மகன் என்பதாலேயே லாவோட் சு உனக்கானவர் அல்ல என்று நினைத்துவிடாதே. பார்க்கப் போனால் உனக்குச் சிறப்பாகத் தேவைப்படுகிறவர். இல்லையென்றால் விலகிவிலகிப் போய் இருத்தலையும் பரவசத்தையும் கெட்டுப் போக்கிவிடுவாய்.

தாயின் கருப்பையில் இருந்து வந்தவன் இருத்தலின் கருப்பைக்குள் சென்று சேரவேண்டும். இருத்தலின் அந்தக் கருப்பையில் அதே கதகதப்பையும் ஜீவனையும் பாசத்தையும் அக்கறையையும் அனுபவிப்பாய்.

இருத்தல் உன் இருப்பிடமாகிப் போகிறது. உன் தாயாகிப் போகிறது.

தங்கள் கடவுளைத் தாய் என்று அழைக்கும் இந்துக்கள் கடவுளைத் தந்தை என்று அழைக்கும் கிறித்துவர் முகம்மதியர் யூதர்களைவிடப் பரவாயில்லை. அந்த மூன்று மதங்களும் ஆணைச் சார்ந்தவை. அதனாலேயே அவற்றில் அவ்வளவு வன்முறை. முகம்மதியர்களும் கிறித்துவர்களும் பலரையும் கொன்றவர்கள். உலகத்துக்குச் சாபமாகிப் போனவர்கள். கொலைகாரர்கள். மதத்தின் பெயரால் கொல்வதைத் தவிர வேறெதுவும் செய்யாதவர்கள். இவை ஆணாதிக்கச் சமயங்கள்.

பௌத்தம் கொல்லவில்லை. சமணம் கொன்றழிக்கவில்லை. இந்து மதமும்தான். இவையெல்லாம் மெய்ஞ்ஞானப் பெண்மையை நோக்கி வளைந்திருந்ததால்தான் அப்படி.

லாவோட் சு பற்றி இதைக்கூடச் சொல்ல முடியாது. அவர்தான் எந்த ஒரு மதநெறியையும் ஸ்தாபிக்கவில்லையே!

மதம் ஸ்தாபனம் ஆகும்போது வன்முறை அதற்குள் நுழைந்துவிடுகிறது. ஸ்தாபனம் சண்டையிடவேண்டி இருக்கிறதே! வன்முறை இருக்கத்தான் செய்யும். ஆண்மை இருக்கத்தான் செய்யும். ஸ்தாபனம் ஆண்பால், ஆன்மிகம் பெண்பால்.

ஒரு கதை கேட்டிருக்கிறேன்.

நரகத்துத் துணைத் தேவதைகளுக்கு ஒரே வருத்தம். அதி தேவதையிடம் போனார்கள். "என்ன பண்ணிட்டு இருக்கறீங்க? நம்ம தொழிலுக்கே மோசம் வந்துவிட்டதே. இன்னொருவன் புத்தனாயிட்டா னாம். நாம ஏதாவது செய்யலைன்னா அவன் எல்லோரையும் மாத்திடுவான். நம்ம இடத்துலே ஆளே இருக்காது. யார் நரகத்துக்கு வரப்போறாங்க? இப்பவே ஏதாச்சும் செஞ்சாகணும். வீணாக்கறதுக்கு நேரமில்லே. இன்னொரு புத்தனாம்..." என்றார்கள்.

அதிதேவதை சொன்னது: "ஒண்ணும் கவலைப்பட வேண்டியதில்லே. நம்ம ஆளுகளை அனுப்பி வெச்சிருக்கேன். அவன்கூடப் போய்ச் சேந்துக்குவாங்க. ஒரு மதத்தை உருவாக்குவாங்க. நாம ஒண்ணும் பண்ண வேண்டியதில்லே. எல்லாத்தையும் மதமே கவனிச்சுக்கும். நம்மளைவிட நல்லாவே காரியத்தைக் கவனிச்சுக்கும். சரித்திரத்தைப் பார்த்தா தெரியல் லியா? ஒரு சர்ச் வரவேண்டியது. அவ்வளவுதான். நான் மேலே ஒண்ணும் செய்ய வேண்டியதில்லே. அவங்களே எல்லாத்தையும் பண்ணிக்குவாங்க. நான் சும்மா தட்டிக்கொடுத்து உதவி பண்ணாப்போதும்..."

போப் வந்தால்போதும். கிருஸ்துவை மறந்துவிடுவார்கள். மதம் வந்தால் போதும். புத்தரைக் கொன்றுவிடுவார்கள். புத்தரின் பிணத்தின் மீதுதான் மதம் நிற்கிறது.

இவை எல்லாமே ஒப்புவமைகள்தான். பெண்கள் வெண்மையின் அனுபூதியை எளிமையாகப் பெறமுடியும். அதனால்தான் பெண்களுக்கு ஆன்மிகத்தில் அதிக ஈடுபாடு. அவர்கள் மதங்களை நிறுவுவதில்லை. ஆனால் ஆண்களைப்போல நான்கு மடங்கு பெண்கள் ஆன்மிகத்தில் நாட்டம் கொண்டிருக்கிறார்கள்.

மகாவீரரின் நெறியைக் கைக்கொண்டவர்களில் நாற்பதாயிரம் பெண்கள். பத்தாயிரம் ஆண்கள். புத்தரைப் பொருத்த அளவிலும் அப்படியே.

எந்தக் கோயிலுக்குப் போய்ப் பார்த்தாலும் நான்கு பெண்களுக்கு ஓர் ஆண்தான் இருக்கிறான். அந்த ஒருத்தனும் தன் மனைவிக்குத் துணையாக வந்திருப்பவன். அவன் மனது அங்கே இருக்காது.

பெண்கள் எளிதில் இசைந்து போய்விடுவார்கள். தாய்மை இருக்கிறதல்லவா அவர்களிடம்? இயல்புகளுக்கு அண்மையானவர்கள்.

ஆண் அவ்வளவு சுலபத்தில் ஆன்மிகத்தோடு இசைந்துவிட முடிவதில்லை. பொறுப்புகள், கடமைகள், முதலீடுகள் என்று அவனை

இறுக்கத்துக்குள் வைத்திருப்பவை அநேகம். அப்படியே ஆன்மிகத்துக்கு வந்தாலும் அங்கேயும் ஓர் இறுக்கத்தைத் தோற்றுவித்து விடுவான்.

இது என்னுடைய சொந்த அனுபவம். நிறையத்தான் பெண்கள் என்னிடம் வருகிறார்கள். தம்மை ஒப்புக் கொடுத்தால் முழுக்கச் சரணடைந்து விடுகிறார்கள். தியானிக்க ஆரம்பித்தால் முழுக்க ஆழ்ந்து போகிறார்கள். பிறகென்ன? இயல்பான ஆன்ம வளர்ச்சிதான்.

ஆண்களும்தான் என்னிடம் வருகிறார்கள். தம்மை ஒப்புக் கொடுக்கும்போது தமக்கெனக் கொஞ்சத்தைத் தம்மோடேயே வைத்துக் கொள்கிறார்கள். அரை குறையாகச் சரணடைவது சரணா கதியே அல்ல.

தியானிக்கவும் செய்கிறார்கள். ஆனால் அவர்களது தியானத்தில் ஒரு கவலையும் கலந்திருக்கிறது. பிறகென்ன? ''இதோ பாருங்கள்! தியானிப்ப தால் நான் தூங்க முடியாமல் போய்விட்டது. எப்போதுமே தியானம் எப்படியிருக்கப் போகிறது, தியானத்தில் என்ன நடக்கப்போகிறது? என்ற கவலையே என் நிம்மதியைக் கெடுத்துவிடுகிறது. அதை எப்படிக் கையாள்வது என்பதே பெருங்கவலை'' என்கிறார்கள்.

கையாள்வதற்கு அதில் ஒன்றுமே இல்லை. கையாள்வதும் முடியாத காரியம். எல்லாவற்றையும் வெளியே இயல்பாகப் போக விடுவதுதான் அது. பிரமாதமாக இயல்போடு இசைந்துவிடுவது.

ஆணுக்கு இது சிரமம். கவலைகளைக் கலையாகக் கற்று வைத் திருக்கிறான். இறுக்கமாக இருப்பதற்குப் பயிற்சி எடுத்து வைத்திருக்கிறான்.

சமுதாயம் இளம் வயதிலிருந்தே ஆண்மையை அவன்மேல் திணித்து விடுகிறது. ஆளுமை, ஹிம்சை, எப்போதும் எதையோ நாடிக் கொண்டிருப்பது, எதையோ சந்திக்கத் துடிப்பது, லட்சியத்தைத் துரத்துவது...

பையன்கள் பொம்மையை வைத்துக்கொண்டு விளையாடினால், ''ஏய்! என்னடா செய்கிறாய்? பொம்பளைச் சட்டியாயிட்டியா? பொம்மை கள் பொம்பளைப் பிள்ளைகளுக்கு. ஆம்பளைப் பசங்களுக்கல்ல. நீங்க வெளியே போகணும். வாழ்க்கையிலே போராடணும். போராட்டம்தான் அவங்க வாழ்க்கையே'' என்று பெற்றோர் கத்துகிறார்கள்.

வீட்டுக்குள்ளே இருப்பது பெண்களுக்கேயானது என்றால் அங்கே சகஜமாக இருப்பதும் பெண்களுக்கேயானதுதான். ஆண்கள் வீட்டிலே இருக்கக் கூடாது என்றால் சகஜமாகவும் இருக்க முடியாதுதான்.

தொடர்ந்து எப்போதும் தொடர்ந்து
இருப்பது அது.
அதிலிருந்து மொண்டு கொள்.
அது உனக்கு எளிதல் சேவகம் செய்யும்.

பெண்மையின் அற்புதம், பள்ளத்தாக்கின் ஆன்மா, ஏதுமில்லாத காலியிடம்.

தொடர்ந்து எப்போதும் தொடர்ந்து
இதுப்பது அது.
அது எப்போதைக்கும்தான் இருக்கிறது.
அதிலிருந்து மொண்டு கொள்.
அது உனக்கு எளிதல் சேவகம் செய்யும்.

அது உன்னைப் பூரணமாக்குகிறது. வெகு இயல்பாக உனக்குள் நிறைகிறது. வெகு சகஜமாக இருக்கச் செய்கிறது.

வாழ்வை ஓர் இனிய அனுபவமாகவன்றிப் போராட்டமாகக் கொள்ளாதே. வாழ்க்கை ஒரு யுத்தமல்ல. ஒரு மோதல் அல்ல. அது ஒரு கொண்டாட்டம். முடிவே இல்லாத கொண்டாட்டம். முடிவே இல்லாத பரவசம் - பரவசத்துக்குமேல் பரவசம்.

தொடர்ந்து எப்போதும் தொடர்ந்து
இருப்பது அது.
அதிலிருந்து மொண்டு கொள்.
அது உனக்கு எளிதில் சேவகம் செய்யும்.

❑

நான்கு

# இன்மை - சூன்யம்

முதல் கேள்வி:

உங்களுக்கு நான் யாரென்பது தெரியுமா?

தெரியாதய்யா, தெரியவே தெரியாது. ஏனென்றால் நீ ஓர் இன்மை - அநத்தம். மேம்போக்காகப் பார்த்தால் நீ இன்னாரென்று ஒருவன். ஆனால் அந்த மேம்போக்கானவனைப் பற்றி எனக்கு எந்த அக்கறையும் இல்லை. உன் அடி ஆழத்தில் நீ ஒரு எதுவுமாக இல்லாதவன். அதைவிட நீ ஓர் இன்மை என்று சொல்வது சரியாக இருக்கும். பிறகெப்படி உன்னை யாரென்று நான் தெரிந்துகொள்வது?

அதுதான் அதன் அழகே. உன்னைத் தெரிந்துகொள்ள முடியும் என்றால் நீ இப்படித்தான் என்று வரையறை செய்துவிடுவேனே - என்னுடைய வரையறைகளுக்குட்பட்ட அறிவைக் கொண்டுதான்.

உன்னைத் தெரிந்துகொள்ள முடியுமென்றால் நீ ஒரு பொருளாகிப் போகிறாய். ஒரு ஜீவனாக இருப்பதில்லை.

உன்னைத் தெரிந்துகொள்ள முடியுமென்றால் நீ முடிவில்லாதவனாக முடியாது. உண்மையில் நீ முடிவில்லாதவன். உன்னுடைய இன்மையில் நீ முடிவில்லாதவன்.

பிறகெப்படி உன்னைத் தெரிந்துகொள்வது? உனக்கே உன்னைத் தெரியாது.

தன்னறிவு என்று ஏதுமில்லை. அதை உணரும்போது அது தானற்றதன் உணர்வாகிப் போகிறது.

அதை ஏற்றுக்கொள்ளும்போது தெரிந்து கொள்பவனும் தெரிந்து கொள்கிறவனும் மறைந்து போகிறார்கள். பிறகு இன்மைதான் இருக்கிறது. மிகப் பரந்த ஒரு வெளி - முதலும் முடிவுமற்ற ஒரு பெரு வெளி.

அதுதான் நீ, அதை எப்படித் தெரிந்துகொள்வது?

அறிந்து கொள்வதற்கான சாத்தியமே இல்லை. உன்னைத் தெரிந்துகொள்ள முடியாது என்பதும் நல்லதுதான். இல்லையென்றால் அறிவியல் உன்னை அறிந்துகொள்ளும். அறிவால் உன்னை அறிந்துகொள்ள முடியும் என்றால் நீ ஒரு பொருளாகிப் போகிறாய். புதிர் விடுபட்டுப் போகிறது. அதிரகசியத்தை இழந்துவிடுகிறாய்.

அதனால்தான் திரும்பத் திரும்ப அறிவியல் உன் இருப்பின் மையத்தைத் தெரிந்துகொள்ளவே முடியாது என்று சொல்லிக் கொண்டே இருக்கிறேன். அந்த மையம் ஏதுமற்றதன் இருப்பிடம்.

நீ ஒரு வெங்காயத்தைப்போல - உரிக்க உரிக்கச் சருகுதான். ஒன்றை உரிக்க இன்னொன்று, அதை உரிக்க இன்னொன்று என்று திடீரென வெங்காயம் இல்லாமல் போகிறது. வெறுங்கையராகிப் போகிறோம். அதுதான் நீ.

ஆனால் இந்த இன்மை எதிர்மறையானதல்ல. நான் சொல்வதைத் தவறாகப் புரிந்துகொள்ளக் கூடாது. இன்மை என்றாலே எதுவும் இல்லாமல் இருப்பது என்றே புரிந்து கொள்கிறோம். அப்படியல்ல. அது எல்லையற்ற ஒன்று. இருப்பது.

அது ஏதும் இல்லாமல் போவதல்ல. எதிர்மறையானதல்ல. அது இருட்டல்ல. அது ஓர் உடன்பாட்டு நிகழ்வு.

இந்த உடன்பாடான இன்மையைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். இன்மை என்றால் ஏதும் இல்லாதது என்று எதிர்மறையாக எடுத்துக்கொள்ளக் கூடாது. ஏதோ ஒன்று இல்லாமல் போய்விட்ட இன்மையைப்பற்றி அல்ல நான் சொல்வது. நான் குறிப்பிடுவது இன்மை என்ற உண்மை. இப்படியாக இன்மை ஓர் உடன்பாட்டு உண்மையாகும் போது முழுக்க வித்தியாசமானமாகிப் போகிறது.

உன்னைப் பொருத்த அளவில் இன்மை என்றாலே எதிர்மறைப் பொருள் தரும் ஒரு வார்த்தையாகிப் போய்விட்டது. ஓர் அறைக்குள் போகிறாய் என்று வைத்துக்கொள். அங்கே எந்தப் பொருளும் இல்லையென்றால் அந்த அறை காலியானது என்கிறாய். வெளியே வரும்போது அறைக்குள் என்ன இருக்கிறது என்று கேட்டால் ஒன்றுமில்லை என்கிறாய். மேசை நாற்காலிகள் இல்லை. சுவர்களில் மாட்டிய படங்கள் இல்லை. ஒன்றுமே இல்லை. காலியாக இருக்கிறது என்கிறாய்.

அறைக்குள் போனாய்தான். ஆனால் உன் பார்வை எதிர்மறைப் பார்வையாக இருந்துவிட்டது. அறைக்குள் ஏகப்பட்ட இடம் இருந்தது

உனக்குத் தெரியவில்லை. அறை என்றாலே இடம் என்றுதானே பொருள்? அது ஓர் இடம் என்பதால் அதற்குள் எதையாவது கொண்டுவரலாம் அல்லவா? மேசை நாற்காலிகள் கொண்டு வந்து போடலாம். இடம்தான் இருக்கிறதே! அப்படி அந்த அறை ஓர் இடமாக இருப்பதை நீ பார்க்கவில்லை. பார்த்திருந்தால் அறை முழுமையாக இருக்கிறது என்று சொல்லியிருப்பாய். ஒன்றுமில்லாத அறை அறையாகவே இருக்கிறது என்று சொல்லியிருப்பாய். இடம்தான் இருக்கிறதே. எதை வேண்டுமானாலும் ஏற்றுக்கொள்ளச் சித்தமாக இருக்கிறது என்று சொல்லியிருப்பாய். அப்படிப் பார்த்திருந்தால் உடன்மறை இன்மை பற்றி உணர்ந்திருப்பாய்.

வானத்தைப் பார். மேகங்கள் இல்லாதபோது வானத்தில் ஏதுமற்ற நிறைவு இருக்கிறது. மேகங்களற்ற வானம் என்று பார்த்தால் எதிர்மறைக் கண்ணோடு பார்க்கிறாய். ஆனால் அதையே ஏதுமற்றதால் நிரம்பிய வெளி என்று பார். நீலவெளி என்று பார். அந்த நீலவெளியில் இருந்தே எல்லாமும் தோன்றி வந்திருக்கின்றன என்று பார். பிறகு அதில் எதிர்மறையாக ஏதும் தோன்றாது.

அதுதான் மிக உடன்பாடான விஷயமாகத் தோன்றும். ஜீவிதத்தின் தோன்றுகளமாகத் தோன்றும். ஏதும் இல்லாததே இருக்க வருவதெற் கெல்லாம் தோன்றுகளம். எல்லாமும் அதிலிருந்தே தோன்றி வந்திருக் கின்றன. படிப்படியாக எல்லாமும் அதனுள்ளே போய் அடங்கிப் போகின்றன. அதிலிருந்து பிறந்திருக்கிறாய். அதற்குள்ளே இறந்துபடப் போகிறாய்.

நானெப்படி உன்னைத் தெரிந்துகொள்வது? தெரிந்துகொள்வது என்றாலே வரையறுப்பது. நீயோ வரையறைகளுக்கு அப்பாற்பட்டவன். தெரியாதய்யா தெரியாது, நீ யாரென்று எனக்குத் தெரியாது.

ஒரு நிகழ்ச்சி பற்றி உனக்குச் சொல்ல வேண்டும். நடந்த நிகழ்ச்சிதான். எனக்கு மிகவும் பிடித்தமானது. ஆயிரக்கணக்கான தடவை சொல்லி யிருக்கிறேன். ஒவ்வொரு முறை சொல்லும்போதும் புதிய நிகழ்ச்சியாகவே எனக்குத் தோன்றுகிறது. அப்படி ஒரு புதுமை அதில் இருக்கிறது.

போதி தர்மா சீனாவுக்குப் போனார். புத்திரன் இன்மையைத் தன் கைகளில் ஏந்திப் போனார். மிகப் பெரிய நிகழ்வு ஒன்று நடந்தேற அவர் பௌத்தத்தின் அடிப்படையை அங்கே கொண்டு போனார். போதி தர்மரால்தான் லாவோட்சுவின் தத்துவமும் புத்தரின் ஞானோதயமும் சந்தித்துக் கொண்டன. மிக அழகான ஒன்று அப்போது மலர்ந்தது. அதைப்போன்ற ஒன்றை வேறு எங்கேயும் காண முடியாது. அதுதான் ஜென்.

ஜென் என்பது புத்தரும் லாவோட்சூவும் சந்தித்துக் கொண்ட நிகழ்வு. லாவோட்சூவின் கருப்பைக்கு விதையைச் சுமந்துகொண்டு போனவர் போதி தர்மர்.

சீனாவுக்கு அவர் போனபோது கீழ்த்திசை எங்கும் தெரிந்த ஞானியாக இருந்தார். அங்கே போய்ச் சேர்ந்தபோது சீனப் பேரரசரே அவரை வரவேற்க வந்தார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். வந்தவர் ஒன்றிரண்டு கேள்விகளைக் கேட்டார்.

''நிறைய பௌத்தக் கோயில்களைக் கட்டி இருக்கிறேன். ஆயிரக் கணக்குலே... என்ன புண்ணியத்தை அய்யா நான் சேர்த்துக் கொண்டிருக்கிறேன்?''

இதையே வேறு ஏதாவது பௌத்தத் துறவியைப் பார்த்து அவர் கேட்டிருந்தால், ''பேரரசே! கணக்கிலடங்காத புண்ணியம் சேர்த்துவிட்டாய். நீ சொர்க்கத்துக்குப் போறது சர்வ நிச்சயம்!'' என்று சொல்லியிருப்பார்.

ஆனால் தவறான ஆளிடம் கேட்டுவிட்டாரே! ''புண்ணியமா? ஒண்ணும் புண்ணியமில்லே. அதில்லாம பாவத்தைத்தான் சேத்துக் கிட்டிருக்கே!'' என்று பதில் வந்தது.

பேரரசருக்கு அதிர்ச்சி. நம்பவே முடியவில்லை. ''ஏன்? என்ன சொல்றீங்க? நிறைய கோயில் கட்டியிருக்கிறேன். லட்சக் கணக்கானவங்க கைக்குப் போய்ச் சேருகிற மாதிரி புத்தரின் வார்த்தைகளைப் புத்தகமா போட்டிருக்கேன். ஆயிரக்கணக்கான பௌத்தத் துறவிகளுக்குச் சாப்பாடு போடறேன். ஆனால் பாவத்தைச் சேத்துக்கிட்டு இருக்கேன்னு சொல்றீங்களே. என்ன அர்த்தம்?''

''புண்ணியத்தைச் சேர்த்துக்கிட்டிருக்கேன்னு நினைக்கறதே பாவமப்பா. அது அகங்காரம். உனக்கு நரகம் நிச்சயம்தான் அரசனே! அதுலேயும் ரொம்ப மோசமான பொந்துக்குள்ளே போய் விழப்போறே!''

அரசருக்குத் தன்னையே நம்ப முடியவில்லை. கோபமும் வந்தது. என்றாலும் அடக்கிக் கொண்டு ''ஒரு கேள்வி கேட்க வேணும். எனக்குள்ளே என்ன இருக்குது? நான்கறது எது?''

இப்ப நீ கேட்டாயே அதே கேள்விதான்.

''நான் யாரென்பது தெரியுமா? அப்படித்தானே கேட்டாய்?''

போதிதர்மாவின் பதில் - ''மிகப் பெரிய வெளி. ஏதுமற்ற பெருவெளி...''

அரசனுக்கு இனியும் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. கோபத்தோடு "அப்படின்னா நீங்க யாரு? எனக்கு முன்னாலே நிக்கறது யாரு?" என்று கேட்டான்.

போதிதர்மா, "எனக்குத் தெரியாது அய்யா!" என்று மிகப் பணிவோடு பதில் சொன்னார்.

எனக்குத் தெரியாது. இன்மையை இன்னது என்று எப்படித் தெரிந்து கொள்வது? நீ அதுவாக இருக்கலாம். ஆனால் அதைத் தெரிந்துகொள்ள முடியாது. தெரிந்துகொள்வது என்றால் நீ வேறு அது வேறு என்றாகிப் போகிறது. தெரிந்துகொள்ள வேண்டும் என்றால் உன்னிடமிருந்து விலகிய ஒன்றாக இருக்கவேண்டும். உன்னை எப்படி நீயே தெரிந்துகொள்வது? உன்னை உனக்குத் தெரியும் என்றால் நீ இரண்டுபட்டுப் போகிறாய். தெரிந்து கொள்கிறவன் - தெரிந்து கொண்டது என்று இரண்டாகிப் போகிறாய். தெரிந்து கொண்டவன் நீதானே? அப்படியானால் நீ தெரிந்து கொண்டது உன்னை அல்ல. அதாவது உனக்குத் தெரிந்தது எதுவும் நீயாக ஆக முடியாது.

தெரிந்து கொள்கிறவனை வகைப்படுத்தி இனம் காண முடியாது. அவனைத் தெரிந்து கொண்டதாக ஆக்க முடியாது. எப்படி உன்னையே உனக்கு எதிரில் நிறுத்திப் பார்ப்பது? முடியாதில்லையா? அப்படி முடியும் என்று நீ சொன்னால் உனக்கு எதிரில் நிற்பது நீ தவிர்ந்த வேறு எதுவாகவோதான் இருக்க வேண்டும். நீயாக இருக்கவே முடியாது.

தெரிந்து கொள்கிறவனாகிய நீ எப்போதும் பின்னால்தான் நிற்கிறாய். எப்போதுமே தெரிந்து கொள்கிறவனாக... தெரிந்து கொண்டவனாக மட்டுமே... தெரிந்து கொண்டதாக எப்போதும் இல்லை..."

என்னை எனக்குத் தெரியாது. இதுதான் சுய அறிவு. முரண்பட்டுத் தெரிகிறதா? சரிதான். அது அப்படித்தான். அதைப்பற்றி யாரும் எதுவும் செய்ய முடியாது. அது அப்படித்தான்.

அதனால்தான் தன்னை அறிந்து கொண்ட எவரும் தமக்குத் தம்மைத் தெரியும் என்று சொல்லவே மாட்டார். ஒன்றும் தெரியாதவனாகிப் போன பிறகு எனக்கு இது தெரியும் அது தெரியும் என்று எப்படித் தம்பட்டம் அடித்துக் கொள்வது? எனக்குத் தெரியாது என்பது மட்டும் எனக்குத் தெரியும் என்றுதான் சொல்வார்.

உனக்குள்ளே போய்ப்பார். ஒரு நாளைக்கு இல்லை என்றாலும் இன்னொரு நாளைக்கு இந்த இன்மையைத் தெரிந்துகொள்வாய்.

சக்கரத்தின் கும்பத்துக்கு நடுவே இருக்கும் அந்த ஏதுமற்ற இன்மையைத் தெரிந்து கொள்வாய். ஆனால் அதுதான் ஆரங்கள் மூலமாகச் சக்கரத்தைத் தாங்குகிறது. கும்பம் இல்லையென்றால் சக்கரம் இல்லை. ஆரமும் விட்டமும் எனத் துண்டாகிப் போகும்.

இதுவரைக்கும் உனக்குச் சக்கரம் மட்டுமே தெரிந்திருக்கிறது. உன்னுடைய பெயர், வடிவம், குணம்... உன்னுடைய சக்கரத்தைத் தெரிந்து வைத்திருக்கிறாய்தான். உனக்குள்ளே அமிழ்ந்து ஆழ்ந்துவிடும் போதுதான் ஒருநாள் கும்பத்தைக் காண்பாய். அதுதான் அநத்தம். யாருமில்லாத எதுவுமில்லாத இன்மை...

ஆனால் மறந்து விடாதே. எதிர்மறைப் பொருளில் இதை எடுத்துக்கொள்ளக் கூடாது. இன்னது இல்லாமல் போனதால்தான் காலியாகிப் போனது என்ற பொருளில் அல்ல நான் இன்மை என்று சொல்வது. அதுவே இன்மையாகிப் போனது. உலகத்திலேயே உடன்பாட்டுப் பொருளோடு இருப்பது அது ஒன்றுதான். ஜீவிதமே அதுதான் என்பேன்.

இந்துக்கள் அதைச் சச்சிதானந்தம் என்பார்கள். சத் - இருப்பது. சித் - தெரிந்து வைத்திருப்பது. ஆனந்தம் - பெரு மகிழ்வு.

மறந்து விடாதே... ஆனந்தத்தால் நிறைந்த ஒன்றல்ல. அப்படியானால் அது இன்மையாக இருக்க முடியாது. அதுவே ஆனந்தம். ஆனந்தம் நிறைத்து வைத்திருப்பதல்ல. உனக்குள் ஆனந்தம் நிறையப் போவதே இல்லை. திடீரென ஒருநாள் நீயே ஆனந்தம் என்பதைத் தெரிந்துகொள்ளப் போகிறாய்.

இன்மையில் ஆனந்தத்தின் இயல்பு இருக்கிறது. ஜீவிதத்தின் இயல்பு இருக்கிறது. உணர்வின் இயல்பு இருக்கிறது. உணர்வு அதை நிரப்புகிறது என்று சொல்லவில்லை. இருட்டான அறையில் விளக்கை ஏற்றி வைத்தால் அங்கே வெளிச்சம் நிறைகிறதே, அப்படியல்ல. விளக்கை அணைத்து விட்டால் நிறைந்திருந்த வெளிச்சமும் இல்லாமல் போகிறது. உணர்வுகளை அப்படி நீக்கிவிட முடியாது.

அடி ஆழத்தின் இன்மை அது. அடி ஆழத்தை நிரப்பி வைத்திருப்பதல்ல. அழிக்க முடியாதது. இல்லாததை எப்படி அழிப்பது? இந்த உலகத்தில் இருக்கும் எதை வேண்டுமானாலும் அழித்துப் போடலாம். இன்மையை அழிக்க முடியாது.

அதனால்தான் உன்னைக் கொல்ல முடியாது என்கிறேன். நீ ஏதுமற்றதாகிப் போகும்போது உன்னை எப்படிக் கொல்வது? சாத்தியமே

இல்லை. கோடாலியை வைத்துக் கொண்டு சக்கரத்தைப் பிளந்து பிரித்துப் போட்டுவிடலாம். ஆனால் கும்பத்தின் துளையில் இல்லாது இருக்கும் இன்மையை எதை வைத்துக் கொண்டு பிளப்பது? அது அப்படியேதான் இருக்கும். இல்லாததாக இருக்கும். கும்பமும் ஆரமும் விட்டமும் சேர்ந்து சக்கரமானபோதும் ஏதுமில்லாததா்க இருப்பதுதானே அந்தக் கும்பத்தின் துளை... அதை அழிக்கவே முடியாது.

இருத்தல் இருப்பது இன்மையின் இயல்பில். உணர்வு இருப்பது இன்மையின் இயல்பில். ஆனந்தம் இருப்பது இன்மையின் இயல்பில். அதனால்தான் தியானத்தைக் கண்டு பயந்து போகிறார்கள். தியானத்தின்போது உள்ளே போய்ச் சேர்கிறாய் அல்லவா?

தியானத்தில் ஆழ்ந்து போகும்போது பயந்து போகிறார்கள். அப்படியே நடுங்குகிறார்கள். அகத்தின் நடுக்கம் ஒன்று ஆரம்பித்து விடுகிறது. உள்ளே ஒர் ஆழ்ந்த கவலையும் துயரமும் தோன்றுகிறது. எதனால்?

எதனால்? ஆனந்தத்துக்கு அருகே வந்து விட்டதால்... தயார் நிலையில் விழிப்புற்று இருப்பதால்... ஜீவிதத்துக்குப் போய்ச் சேர்ந்து விட்டதால்... சாவைக் கண்டு ஏன் பயம்? அகத்தில் இன்மையோடு இருக்கத் தெரியாததால்தான் சாவைக் கண்டு பயப்படுகிறாய். எப்படியோ இதையும் அதையும் கொண்டு நிரப்பிக்கொள்ளத் தெரியும். ஆனால் இன்மையாக வைத்திருக்கத் தெரியாது.

எப்படி இறப்பது என்பது உனக்குத் தெரியவதில்லை. குணாதி சயங்களோடு கூடிய இந்த இருப்பை விட்டுவிட்டு உள்ளிருக்கும் இன்மையோடு இருப்பது என்பது தெரியவில்லை. உனக்குத் தெரியாது தான். உள்ளே போய்ப் பார்க்க ஆரம்பிக்கிறாய். எண்ணங்கள் உன்னை விட்டு நகர ஆரம்பிக்கின்றன. உடனே பயந்து விடுகிறாய்.

என்ன நடக்கிறது? நீ மறைந்து கொண்டு இருக்கிறாய். செத்துப் போவதைப்போல இருக்கிறது. உயிரோடு இணைந்திராத ஓர் உணர்வு தோன்றுகிறது. உச்சியில் நின்றுகொண்டு எட்டிப் பார்த்தால் ஒன்றுமே இல்லாத ஆழம் மட்டும் தெரிகிறது. பயத்தில் வியர்வை ஆறாகப் பெருக நீ இறந்தும் போகிறாய்.

தியானத்தில் இந்தக் கணத்தைக் கோட்டை விட்டுவிட்டால் மறுபடி அதைப் பிடிக்கவே முடியாது. அதனால்தான் குரு வேண்டும் என்பது. பயம் ஆரம்பிக்கும்போது பக்கத்தில் இருந்து கொண்டு பயப்படாதே என்று சொல்வதற்கு ஒரு குரு தேவை.

"என்னைப் பார். இதையெல்லாம் தாண்டித்தான் நான் வந்திருக்கிறேன். ஆனாலும் இருந்து கொண்டுதான் இருக்கிறேன். உன்னைவிட அதிகமானவனாக, ஜீவிதத்தை விடவும் அதிகமானவனாக இருந்து கொண்டுதான் இருக்கிறேன்."

உனக்குள்ளே எந்த இன்மையை இனி நீ காணப் போகிறாயோ அந்த இன்மையைத் தாங்கிய கண்களைப் பார்க்க உனக்கு ஒரு குரு தேவை. அட... இன்னும் இருக்கிறாரே என்று பார்த்துத் தெரிந்துகொள்ள ஒரு குரு தேவை. அதுவும் பிரமாதமாக, பரிபூரணமாக இருக்கிறார் என்று தெரிந்துகொள்ள குரு தேவை.

எனவே பயப்படாதே! அவர் இருப்பது உனக்கு ஒரு தைரியம். அவர் இருப்பது உனக்கு ஒரு தைரியம் தருகிறது.

பார்க்கப் போனால் குரு ஒன்றுமே செய்வதில்லை. அவர் ஒரு கிரியா ஊக்கி. அவர் இருப்பதே போதும். அந்த இன்மைக்குள் புகுந்துவிட்டாய் என்றால் சிரிக்க ஆரம்பித்து விடுவாய்.

"இறப்பே இல்லை. அநாவசியமாகப் பயந்திருந்தேனே!" என்று சிரிக்க ஆரம்பித்து விடுவாய்.

(இறப்பின் வழியாகப் போய் இறவாமைக்குப் போய்ச் சேர்ந்து விடுகிறாய்.)

நான் இந்த அளவுக்காவது சொல்ல முடியும். நீ யாருமாக இல்லாதவன். யாராகவும் இல்லாதவன் ஆகிவிடு. யாராகவும் இல்லாதவன் என்பது இழந்தவன் என்ற பொருளில் அல்ல. அதுதான் மிகச் சிறந்த உடன்பாட்டுத் தத்துவம்.

**இரண்டாவது கேள்வி:**

**உங்களுக்குள்ளே இருக்கும் முரண்பட்டவையும் சேர்ந்துதான் நீங்கள் என்கிறீர்கள். உமக்குள்ளே இருக்கும் பாவியை மறுப்பதில்லை. உமக்குள்ளே இருக்கும் வெறுப்பை இல்லை என்று சொல்வதில்லை. அன்று ஒருநாள் பேசும்போது உங்களுக்கு உள்ளேயும் ஓர் அசுரன் இருப்பதை மறுக்க மாட்டேன் என்று சொன்னீர்கள். ஏனென்றால் நீங்கள் பரிபூரணர் என்கிறீர்கள். இதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. உங்களிடம் நான் பார்ப்பதெல்லாம் அளவற்ற அன்பு. கரை தெரியாத கருணை. கறை இல்லாத நன்மை. பிறகு எங்கே இருக்கிறது உங்கள் அசுரத்தனமும் வெறுப்பும்?**

கடவுளும் நீயே அசுரனும் நீயே எனும்போது கடவுள் அசுரனைச் சீரணித்து விடுகிறார். ஏனென்றால் அசுரன் கடவுளின் ஒரு பகுதி. இதுதான் அக வாழ்வின் கணக்கு.

வாழ்வின் ஒரு பகுதியை மட்டும் வாழ்ந்தால் நீ அசுரனாகிப் போவாய். ஏனென்றால் அசுரத்தனம் ஒரு பகுதியாக இருந்துகொண்டு தான் முழுமையானது என்று சொல்லிக்கொண்டு திரிகிறது. அசுரத்தன்மையும் ஒரு பகுதிதான் என்பதை ஏற்றுக் கொள்ளும்போது முழுமை அதைச் சீரணித்து விடுகிறது. அதனோடு சண்டையிடும்போது உன்னோடேயே சண்டை போட்டுக் கொண்டிருப்பாய். பிறகென்ன? எப்போதும் பிளவுபட்டுப் போனவனாக இருப்பாய். பிளந்து போனதில் அசுரன் தங்கிப்போய் விடுவான். பிளவுகளுக்கு இடையே இருக்கும் இடைவெளிகளில் தங்கிக் கொள்வான். பிளவில் மட்டுமே அசுரன் இருக்க முடியும்.

நீ ஒரு முழுமையானவனாக இருக்கும்போது அசுரத்தனம் இருக்க முடியாது. வாழ்வை அப்படியே ஏற்றுக் கொள்ளும்போது, எதையும் அப்படியே ஏற்றுக் கொள்ளும்போது, எதையும் மறுக்காமல், எதையும் துறக்காமல், எதையும் நிந்திக்காமல் - இது கெட்டது இது நல்லது என்று பெயரிட்டு அழைப்பதை நிறுத்திவிடும்போது - வாழ்வு எப்படியிருந்தாலும் சரி, என்னவாக இருந்தாலும் சரி - அப்படியே ஏற்றுக் கொள்ளும்போது ஒட்டுமொத்தமாக ஏற்றுக் கொள்ளும்போது, அசுரத்தனம் மறைந்து போகிறது. இறைமை அதைச் சீரணித்து விடுகிறது. இறைவன் அசுரனைச் சீரணித்து விடுகிறான்.

அசுரனைக் குறிக்கும் devil என்ற ஆங்கில வார்த்தையும் இறைமையைக் குறிக்கும் devine என்ற வார்த்தையும் dev என்ற சமஸ்கிருத வார்த்தையில் இருந்து வந்தவை. தேவ் என்றால் கடவுள். டெவிலும் டிவைன்தான். கொஞ்சம் விலகிப்போய்க் கிடக்கின்றன. என்றாலும் இரண்டும் ஒன்றுதான். எட்டிப் போய்விட்டதைத் திரும்ப அழைத்துக் கொள்ள வேண்டும். அவனோடு சண்டை போட்டால் அவன் விலகி விலகிப் போய்க்கொண்டே இருப்பான். நீ எப்போதுமே பின்னப்பட்டுப் போனவனாகக் கிடப்பாய்.

விலகிப்போன அந்தப் பகுதியைத் திரும்ப அழைத்து வைத்துக் கொள். அதனுடைய வீட்டுக்கு அது போய்ச்சேர வேண்டும். முழுமையில் சீரணிக்கப்பட வேண்டும்.

எல்லாவற்றையும் அப்படியே ஏற்றுக்கொண்டால் அன்பு மலர்கிறது. வெறுப்பு மறைகிறது. எனவே வெறுப்பை ஏற்றுக்கொள் என்று

சொல்லும்போது வெறுப்பைக் கைக்கொள் என்று சொல்லவில்லை. உண்மையில் வெறுப்பின் ஆணிவேரையே கிள்ளி எறிகிறேன் என்று தெரிந்துகொள்ளுங்கள்.

ஏற்றுக்கொள் என்று சொல்லும்போது அப்படி ஏற்றுக்கொள்வதில் அதன் ஆணிவேரையே வெட்டி விடுகிறோம். வெறுப்பை ஏற்றுக் கொண்டால் பிறகு எப்போதும் வெறுப்புக் கொள்ளவே முடியாது போகும். அப்படி ஏற்றுக் கொள்ளாவிட்டால் உன் அன்பில் ஒரு குறை இருக்கும். இதைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். ஏனென்றால் இது தத்துவார்த்தமான விஷயமல்ல. ஜீவிதம்பாற்பட்ட விஷயம். ஒவ்வொருவனுக்குள்ளும் இருக்கும் போராட்டம்தான் இது.

நீ ஒருவனை வெறுக்கிறாய் என்று வைத்துக்கொள். வெறுக்கும்போது உனக்குள் என்ன நடக்கிறது? வெறுப்பு என்பது என்ன? அவனுக்கு என்ன செய்யவேண்டும் என்கிறாய்? கொல்ல வேண்டும். அழிக்க வேண்டும். எங்கேயாவது அவனைத் தூக்கிக் கடாசிவிட வேண்டும். உன் கண்களில் அவன் படக்கூடாது. அவன் காற்றுக்கூட உன்மேல் படக்கூடாது. அவன் மறைந்துபோய் விடவேண்டும். இருக்கவே கூடாது. அதனால்தான் அவனைக் கொல்ல வேண்டும் அழிக்க வேண்டும் என்று துடிக்கிறாய்.

ஒருவர்மீது உனக்குப் பிரியம் என்று வைத்துக்கொள். அவர் சாகவே கூடாது. எப்போதும் உன்னுடனேயே இருக்க வேண்டும். எப்போதும் கூப்பிட்ட குரலுக்குப் பதில் சொல்கிற அளவுக்குப் பக்கத்திலேயே இருக்க வேண்டும். அவருக்கு எல்லாப் பாதுகாப்பும் தரவேண்டும். அவர்மீது அக்கறை வைக்க வேண்டும். எதுவுமே உன் பிரியத்தை அழிக்க முடியாது என்று நம்புகிறாய். யார்மீது பிரியம் வைக்கிறாயோ அவர் சிரஞ்சீவியாக இருக்கவேண்டும் என்கிறாய்.

இரண்டு நிகழ்வுகளையும் பார். ஒன்றுக்கொன்று எதிரிடையாக இருக்கின்றன. ஆனால் அவை இரண்டும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள்தான் என்பதை உன்னால் உணர முடியவில்லையா?

பிரியம் படைக்கிறது. வெறுப்பு அழிக்கிறது. ஆனால் அழிப்பின்றிப் படைப்பில்லை என்பதைக் கவனித்திருக்கிறாயா? படைப்பதற்காகத்தான் அழிப்பு என்பது இல்லாவிட்டால் அந்த அழிவில் பொருள் ஏதும் இல்லை. எனவே படைப்பதற்காகத்தான் அழிக்கிறாய் என்றால் அதில் எந்தச் சிக்கலும் இல்லை. இருக்கும் வீட்டை இடித்துவிட்டு இன்னும் சிறந்த வீட்டைக் கட்டுகிறாய். யாராவது நீ அழிக்கிறாய் என்று சொல்வார்களா என்ன?

ஒரு சமூகத்தை அழிப்பதால் இன்னொரு சிறந்த சமூகத்தைக் கொண்டுவர முடியும் என்றால் அதை அழிக்கலாம். ஓர் ஒழுக்கத்தை ஒழிப்பதால் அதைவிடச் சிறந்த இன்னொரு ஒழுக்கத்தைக் கொண்டு வரலாம் என்றால் அதை ஒழித்துவிடு.

யாரும் உன்னை அழிக்கிறவன் என்று சொல்ல மாட்டார்கள். படைப்பதற்குத்தானே அழிக்கிறாய்! அழித்தல் இன்றிப் படைப்பு இல்லையே!

படைத்தது அழித்ததைச் சீரணித்து விடுகிறது. பிறகென்ன? அழிவிலும் அழகுதான். படைப்பின் ஒரு பகுதியாகிவிடுகிறது. ஆனால் நீயோ அழிக்கிறவனாக மட்டுமே இருக்கிறாய். ஒரு சமூகத்தைச் சிதைக்கும்போது அடுத்து என்ன செய்யப் போகிறாய் என்பது தெரியாமலேயே, இருப்பதை அழிக்கிறாய். உனக்குள் படைப்புச் சிந்தனை ஏதும் இல்லை. அழிப்பதில் இன்பம் காண்கிறாய்.

ஒரு வீட்டை இடிக்கிறாய். ஒரு பொருளை உடைத்தெறிகிறாய். எவராவது ''ஏனப்பா இப்படிச் செய்கிறாய்?'' என்று கேட்டால், ''அழிப்பதில் எனக்கு ஆனந்தம்'' என்கிறாய்.

அப்படியானால் நீ பைத்தியக்காரனாக இருக்க வேண்டும். எங்கோ ஏதோ ஒன்று நிலை பிறழ்ந்து போயிருக்க வேண்டும்.

அழிவு தன்னளவில் முழுமையான ஒன்றாகிப் போகிறது. தானே முழுமையானது என்று கொக்கரிக்கிறது. அழிவு தானே முழுமையானது என்று மார்தட்டிக் கொள்ளும்போது அசுரனாகிப் போகிறது. ஆனால் அழிவு அதைவிடப் பெரியதான படைப்பின் ஒரு பகுதியாகிப் போகும்போது அது தெய்விகத்தின் ஒரு பகுதியாகிப் போகிறது.

ஒருவர்மீது பிரியம் வைக்கும்போது அவரைப் பலமுறையும் வெறுக்கத்தான் வேண்டியிருக்கிறது. என்றாலும் அது பிரியத்தின் ஒரு பகுதிதான். ஒரு தந்தைக்குத் தன் குழந்தைமீது பிரியம் இல்லையா என்ன? என்றாலும் பலதடவை தன் குழந்தையைத் திட்டுகிறான். அடிக்கவும் செய்கிறான். ஆனால் எந்தக் குழந்தையும் தந்தையின் கோபத்தால் மனம் மாறிப் போவதில்லை. காரணம் இல்லாமல் கோபப்படும்போது எந்தக் குழந்தையாலும் அதைப் பொறுத்துக்கொள்ள முடியாது.

ஏன் உனக்குத் தன்மீது கோபம் என்பதைப் புரிந்துகொள்ள முடியாதபோது அந்தக் கோபத்தை மன்னிக்க முடிவதில்லை. ஒரு கடிகாரத்தை உடைத்து விட்டான் என்று வைத்துக்கொள். அப்போது தந்தை கோபப்பட்டால் குழந்தை புரிந்துகொள்ள முடிகிறது. பார்க்கப் போனால்

அப்படி ஒரு தவறு நடந்தபின் கோபித்துக்கொள்ளவில்லை என்றால் என்ன நடக்கும் தெரியுமா?

தன்னுடைய குற்றக் குறுகுறுப்பை மனதில் வைத்துக்கொண்டே இருக்கவேண்டி வந்து விடுகிறது. இது மிகவும் எதிர்மறை விளைவு களைத்தான் கொண்டுவரும். ஒருநாள் இல்லையென்றால் இன்னொரு நாள் தான் கடிகாரத்தை உடைத்துவிட்டது தெரியத்தான் போகிறது. அப்போது என்ன நடக்குமோ என்ற பயம் இருந்துகொண்டே இருக்கும். தான் செய்துவிட்ட குற்றத்தின் காயம் இருந்துகொண்டே இருக்கும். எப்படியோ அதைக் கழித்துப்போட வேண்டியிருக்கிறது. தந்தை கோபித்துக் கொண்டால் அதோடு அது முடிந்து விடுகிறது. ஒரு தவறு செய்தாயிற்று. அதற்காக அவர் கோபித்துக் கொண்டாயிற்று. சரியாகப் போய்விட்டது. கோபித்துத் தண்டனை தந்தாயிற்று. இனி குற்றத்தின் கனம் இல்லாமல் அவன் வாழ முடியும்.

மேற்கத்திய நாடுகளில் இந்த மனோதத்துவ மேதைகள், தாய் தந்தையர் - குழந்தை உறவை மிக மோசமாகப் பாதித்து விட்டார்கள். அவர்கள் சொல்லிய பல முட்டாள்தனமான விஷயங்களில் ஒன்று தாய் தந்தையர் குழந்தைகள்மீது கோபப்பட்டுக் கொள்ளவே கூடாது என்பது. பெற்றவர்களுக்குப் பயம் பிடித்துக் கொண்டது. இது கொஞ்சம் புதிதாக இருக்கிறது. இதுவரையிலும் குழந்தைகள் பெற்றோரைப் பார்த்துப் பயந்து கொண்டிருந்தார்கள். இப்போதோ பெற்றோருக்குக் குழந்தைகளைப் பார்த்துப் பயம் வந்துவிட்டது. கோபப்பட்டுக் கொண்டால் ஏதாவது நடந்துவிடும் என்று பயப்படுகிறார்கள். மனப் பாதிப்பு வந்துவிடுமோ? பைத்தியம் பிடித்துவிடுமோ? இரண்டுபட்டுப் போய்விடுவானோ? என்னவோ எப்போதாவது நடந்துவிடுமோ? தாமே அதற்குக் காரணம் ஆகிவிடுவோமோ? இதே பயம்தான் எப்போதும்.

என்னதான் நடந்து கொண்டிருக்கிறது என்கிறாய்? ஒரு தந்தைக்குத் தன் குழந்தைமேல் கோபம். அதைக் காட்டிக் கொள்ளாமல் அடக்கி வைத்துக்கொள்கிறார். இதை அந்தக் குழந்தை ஏற்றுக்கொள்ளவே முடிவதில்லை. அடக்கி வைத்த கோபம் உறைந்துபோன உணர்வாகிப் போகிறது.

இதை நன்றாகப் புரிந்துகொள். உறைந்துபோன உணர்வாகக் கோபம் ஆகிப் போய்விட்டால் அது அசுரத்தனம். வெடித்து வெளிக் கிளம்பும் கோபத்தில் தெய்விகம் இருக்கிறது. வெடித்து வெளிக் கிளம்பும் கோபத்தில் ஓர் அழகு இருக்கிறது. உறைந்துபோகும் கோபம் அழிக்கக் கூடியது. விஷமாகிப் போனது.

முகம் சிவக்க வியர்வை பெருக வெடித்துக் கிளம்பும் கோபத்தில் தந்தை தன்னை அடிக்கும்போது அவருக்குத் தன்மீது பிரியம் இருக்கிறது என்பதைக் குழந்தை புரிந்துகொள்கிறது. பிரியம் இல்லையென்றால் எதற்கு இத்தனை ஆரவாரமும் ஆர்ப்பாட்டமும்?

இப்படிக் கோபத்தை வெளிப்படையாகக் காண்பிக்காமல் வீட்டுக்குள் நுழையும்போது அல்லது குழந்தையைப் பார்க்கும் பார்வையில் அல்லது பார்க்காமல் இருக்கும் உதாசீனத்தில் தந்தை தன் கோபத்தைக் காட்டியும் காட்டாமலும் இருக்கும்போது அல்லது கேலியாகப் பேசித் தன் உறைந்துபோன கோபத்தைக் காட்டும்போது அவருக்குத் தன்மீது உண்மையான பிரியம் இல்லை என்று குழந்தை எடுத்துக் கொள்கிறது. தன்மீது வெளிப்படையாகக் கோபம்கொள்ளும் அளவுக்குத் தன்மீது பிரியம் இல்லாமல் போய்விட்டது என்று எடுத்துக்கொள்கிறது.

இதுதான் மேற்கத்திய நாடுகளில் தலைமுறை இடைவெளியைத் தோற்றுவித்து விட்டது. வேறு எதுவும் இல்லை. குழந்தைகள் தத்தமது வழியில் போய்க் கொண்டிருக்கிறார்கள். பெற்றோர்களோ உறைந்துவிட்ட உணர்வுகளின் சிறையில் கிடக்கிறார்கள். இருவருக்குமிடையே பெரிய இடைவெளி தோன்றிவிட்டது. அவர்களுக்குள் தொடர்பு துண்டித்துப் போய்விட்டது. எங்கே தான் குழந்தையிடம் பேசினால் தன் கோபம் வெளிப்பட்டு விடுமோ என்ற பயம் பெற்றவர்களுக்கு. பேசாமல் இருந்துவிடலாமே. இப்படி நினைத்து அவர்கள் அந்தச் சூழலைத் தவிர்த்து விடுகிறார்கள். பேசாமல் போய்விடுகிறார்கள்.

கணவன் மனைவிக்கும் இடையேகூட இதுதான் அங்கே நடக்கிறது. இப்போது இங்கேயும் அப்படியே நடக்க ஆரம்பித்துவிட்டது. பார்க்கப்போனால் கீழ்த்திசை மக்கள் தம் தன்மைகளை இழந்து கொண்டிருக்கிறார்கள். மேற்கத்திய உணர்வுகள், பழக்கங்களின் தாக்கம் அதிகமாகிப் போய்விட்டது. இன்னும் கொஞ்ச நாட்களில் கீழ்த்திசை நாடுகளின் உணர்வுகள், பண்புகள், கலாச்சாரம் இதுவெல்லாம் சரித்திரமாகிப் போய்விடும். புத்தகங்களில் படித்துத் தெரிந்துகொள்ளும் சமாச்சாரங்கள் ஆகிவிடும். எப்போதோ இருந்ததே என்ற ஆதங்கத்தோடு பார்க்கும் விஷயங்களாகிப் போகும். புவியியலில் வேண்டுமானால் கிழக்கத்திய நாடுகள் இருக்கும். ஆனால் கிழக்கத்திய மனப்பாங்கு இல்லாமல் போய்விடும்.

என்னதான் நடக்கிறது என்கிறீர்கள் இந்த மேலை நாடுகளில்? இதேதான். உன்னுடைய மனைவிமீது உனக்குப் பிரியம் என்றால் அவளை எப்படி வெறுப்பது? அவள்மீது உனக்குப் பிரியம் என்றால் அவளை எப்படி அடிப்பது?

அவளுக்கு உன்மீது பிரியம் என்றால் இருபத்து நாலு மணி நேரமும் பிரியத்தோடே இருக்கவேண்டும் என்கிறார்கள். இதைத்தான் சாத்தியம் இல்லாதது என்கிறேன்.

வாழ்வில் எல்லாமும் ஒரு லயத்தோடு இயங்குகின்றன. இறப்பில்தான் தீர்மானமானதும் துடிப்பில்லாததும் இருக்கமுடியும். பகலுக்குப் பின் இரவு. ஹெராக்ளிடஸ் என்ன சொல்கிறார் தெரியுமா? இறைவன் கோடையும் குளிரும். பகலும் இரவும். பசியும் திருப்தியும். வாழ்வும் இறப்பும்.

வாழ்வு என்பது இரு துருவங்களுக்கிடையே ஊசலாடிக் கொண்டிருக்கும் ஒரு துடிப்பு. ஒருவர்மீது இருபத்து நாலு மணி நேரமும் பிரியத்தோடு இருக்கமுடியாது. அப்படிப் பிரியத்தோடு இருந்துதான் ஆகவேண்டும் என்றால் அதில் உயிர்த் துடிப்பு இருக்காது. ஒருவர்மீது அளவுகடந்த பிரியத்தைக் கொஞ்சநேரம் வைத்திருக்கலாம். பிறகு அதிலிருந்து நகர்ந்துதான் ஆகவேண்டும். கொஞ்சம் சாவகாசம் தேவை. இல்லையென்றால் காதலும் பிரியமும் காய்ச்சலாகிப் போகும். அது எப்படிக் காய்ச்சலோடேயே எப்போதும் இருப்பது?

பகலுக்குப்பின் இரவு வந்துதான் ஆகவேண்டும். அது சாவ காசத்துக்கான நேரம். காதலும் பிரியமும் உணர்வின் அலைகள். எப்போதுமே உணர்வலைகளில் இழுத்துத் தள்ளிக் கொண்டிருக்க முடியாது. ஒருவர்மீது பிரியம் வைக்கிறாய். அவரையே வெறுக்கவும் வேண்டியிருக்கிறது. இதில் ஏதும் தவறில்லை.

இதைத்தான் நினைவில் வை என்கிறேன். பிரியம் இருக்கிறது என்றால் எதுவும் தவறாவதில்லை. காதலும் பிரியமும் எதையும் புனிதப்படுத்திவிடும். வெறுப்பைக் கூடத்தான். உன் மனைவிமீது பிரியம் வைக்கிறாய். வெறுக்கவும் செய்கிறாய். அப்படியே அவளும் உன்மீது பிரியம் வைக்கிறாள். வெறுக்கவும் செய்கிறாள்.

பிரியமும் வெறுப்புமாக வாழ்வில் ஒரு துடிப்பு வந்து சேர்கிறது. அதில் ஜீவனற்ற சலிப்பில்லை. உணர்வுகள் மாறுகின்றன, பருவங்கள் மாறுவதைப்போல. மாற்றம் ஜீவனுள்ளது என்பதால் மாற்றம் நல்லதே. அப்படி இல்லாமல் ஒருவருக்கு உன்மீது பிரியம், பிரியம், பிரியமேதான் என்றால் பிரியத்தில்கூட ஒரு சலிப்பு வந்துவிடும். இருபத்து நாலு மணிநேரமும் பிரியத்தைக் கொட்டிக்கொண்டே இருக்க யாராலும் முடியாது. அப்படி யாராவது இருந்தால் அந்தப் பிரியம் ஒரு நடிப்பாகத் தான் இருக்கமுடியும்.

புரிந்துகொள். பிரியம் இருப்பதுபோலப் பாசாங்கு செய்தால் இருபத்து நாலு மணி நேரமும் பாசாங்கு செய்யலாம். ஆனால் அதில் அசலாவது எதுவும் இருக்காது. ஒரு பிளாஸ்டிக் பூவுக்குத்தான் வாட்டமில்லை. ஒரு பிளாஸ்டிக் பூவுக்குத்தான் மரணமில்லை. நீயும் உண்மையில் ஜீவிதத்தோடு இருக்கிறவன் என்றால் மரணிக்கத்தான் போகிறாய். ஒருவர்மீது உனக்கு உண்மையிலேயே பிரியம் என்றால் அவர்மீது உனக்குக் கோபமும் வரும். கோபம் பிரியத்தின் ஒரு பகுதி. அதில் எந்தத் தவறும் இல்லை.

ஆனால் வெறுப்பே முழுவதுமாகிப் போகும்போது பாவமாகிப் போகிறது. அதுவே பிரியத்தால் சூழப்பட்டு இருக்குமானால் - வெறுப்பு என்கிற தீவு அன்பு என்ற கடலால் சூழப்பட்டு இருக்குமானால் அதுவும் ஓர் அழகுதான். ஏனென்றால் பிரியத்துக்கு ஒரு இறுக்கத்தைத் தருகிறது. பிரியத்துக்கு ஒரு சாவகாசத்தைத் தருகிறது. வாழ்வுக்கு ஒரு துடிப்பைத் தருகிறது. வாழ்வை சுருதி சுத்தமான ஒரு முழுமையாக்குகிறது.

சூரியன் மறையவே மறையாத ஓர் உலகத்தைக் கற்பனை செய்து பாரேன். இருபத்து நாலு மணி நேரமும் விழித்துக்கொண்டே இருப்பதை நினைத்துப்பார். மூன்றே வாரத்தில் எல்லோருக்கும் பைத்தியம் பிடித்துப் போகும். அதுதான் காதலிலும் பிரியத்திலும் நடக்கிறது. பாசாங்குகள் - பாசாங்குகள் - பசப்புகள் - முகமூடிகள் - நடிப்பு - இல்லாத ஒன்றை எப்போதுமே இருப்பதாகக் காட்டிக் கொண்டிருக்கிற பைத்தியங்கள்.

இதில் நிசமான அபாயம் என்னவென்றால் கோபப்படும்போது அதைக் காட்டாமல் அடக்கி வைத்துக்கொண்டே இருக்கும்போது இது வெகுவாகப் பழகிப்போய் ஒரு சுபாவமாகிப் போகிறது. பிறகென்ன? எல்லாமும் போலி, வேஷம். பிரியம் இருக்காது. ஆனால் பிரியத்தைக் காட்டுவாய். இரக்கம் இருக்காது. ஆனால் இரக்கத்தைக் காட்டுவாய். உன் வாழ்வில் போலித்தனம்தான் இருக்கும். வாழ்வே போலியானதாகிப் போகும்.

அசலான வாழ்க்கை ஒரு நதியைப் போல. மாறிமாறி நகர்ந்து கொண்டிருக்கும் ஒரு நதியைப் போல. கோடையில் வற்றிப் போய்க் காய்ந்து கிடக்கும். மழை பெய்தால் வெள்ளமாகப் பெருக்கெடுக்கும். கரைகளை உடைத்து எல்லாவற்றையும் விழுங்கிக் கடலாகப் பொங்கி நிற்கும்.

இதைப் புரிந்துகொள். இரண்டு துருவங்களுக்கிடையேயான துடிப்புத்தான் வாழ்வு. ஆனால் ஒரே துருவத்தில் இருந்துகொள்வேன் என்று அடம்பிடிப்பதால்தான் மானுடம் முழுக்கப் பொறியில் மாட்டிக்கொண்டு

நிற்கிறது. அங்கே எப்போதும் நிற்க முடியாது. மேலே இருந்து கீழே அமிழ வேண்டியிருக்கிறது. மேம்போக்காக வேண்டுமானால் எல்லாப் பாசாங்குகளும் செய்து கொண்டிருக்கலாம்.

பிறகென்ன? வாழ்வு முழுக்க விஷம் தோய்ந்ததாகிப் போகிறது. எல்லாமும் எல்லாவற்றுக்குள்ளும் புகுந்து கலக்கி விடுகிறது. பிரியத்தில் வெறுப்பு மறைந்து கொள்கிறது. ஏனென்றால் வெறுப்பு கிளம்பி வெடித்து வரும் நேரத்திலும் புன்னகை செய்து நடிக்கிறாய். இது உன் ரத்தத்தோடு கலந்து விடுகிறது. நிசமாகவே பிரியம் கொள்ளும்போதும் அதிலும் ஊறிப்போய் விஷமாக்கிவிடுகிறது.

மனிதன் ஒரு கலப்படமாகிப் போனான். தூய்மையை இழந்து விட்டான். இதற்கெல்லாம் காரணம் மதங்களும் ஒழுக்கவாதிகளும் தவறான கருத்துக்களையே உனக்குச் சொல்லிக் கொடுத்துக்கொண்டே இருப்பதுதான். எல்லோருமாகச் சேர்ந்துகொண்டு உன்னை ஒரே துருவத்தில் ஒட்டிக் கிடக்க வைத்துவிட்டார்கள். அந்தத் துருவத்துக்குக் கடவுள், அன்பு, கருணை என்றெல்லாம் பெயர் வைத்துவிட்டார்கள். அது மட்டுமே நல்லது என்கிறார்கள். மறு துருவத்தை அசுரன் என்கிறார்கள். எல்லாமுமே வக்கரித்துப் போய்விட்ட அசுரன் என்கிறார்கள்.

லாவோட் சுவோ நானோ இந்த இரட்டைப் படுத்துவதை ஏற்றுக் கொள்வதில்லை. இந்தப் பிளவுபட்ட மனநிலையை ஒப்புக் கொள்வ தில்லை. எங்களுக்கு இரண்டும் வேண்டும். அப்போது பிரமாதமான நிலை மாற்றம் ஒன்று நடக்கிறது. அழிவு ஆக்கத்தின் ஒரு பகுதியாகிப் போகிறது. நிசமும் அதுதான். வெறுப்பு பிரியத்தின் ஒரு பகுதியாகிப் போகிறது. பிரியம் வெறுப்பைவிடப் பிரம்மாண்டமானது. ஆக்கல் அழித்தலைவிடப் பிரம்மாண்டமானது. வாழ்வு சாவைவிடப் பிரம்மாண்டமானது. எனவே வாழ்வின் ஒரு பகுதியாகிப் போவது. மரணம் வாழ்வின் ஒரு பகுதிதான் என்றால் அதுவும் அழகானதே.

இதை நினைவில் வைத்துக்கொண்டால் வெறுப்பும்கூடப் பிரியத்தின் நிறத்தோடுதான் இருக்கிறது என்பதைப் போகப்போகப் புரிந்து கொள்வாய். அழித்தல் ஆக்கலின் வடிவத்தைப் பெறுவதைக் காண்பாய். கோபத்தில் கருணை இருப்பதை உணர்வாய்.

யேசு கூடக் கோபித்திருக்கிறார். கிறித்துவர்களுக்கு இது விடுவிக்க முடியாத புதிர். எப்படி யேசுவுக்குக் கோபம் வந்திருக்க முடியும்? ஓர் அரசியல்வாதியைப்போலப் புன்னகை மாறாதவராக இருக்கவேண்டும் என்கிறார்கள். அவரெப்படிக் கோபப்படலாம்?

அவருக்கும் கூடத்தான் கோபம் வந்தது. பிரமாதமான கோபம். ஜெருசலத்தின் கோயிலுக்குள் நுழைந்தபோது அவருக்கு வந்த கோபம் கடுங்கோபம். அங்கே லேவாதேவி செய்து கொண்டிருந்தவர்களைக் கை நீட்டி அடிக்க வைத்த கோபம். தன்னந்தனியாக அத்தனை பேரையும் எதிர்கொள்ள வேண்டி இருந்தது. கடுமையான கோபமாகத்தான் இருந்திருக்க வேண்டும். துரத்தி அடித்தார். அவர்களுடைய மேசைகளைத் தூக்கி எறிந்தார். ஆமாம். தன்னந்தனி ஆளாகத்தான். மனிதனுக்குக் கோபம் வரும்போது நூறு பேருடைய பலம் வந்து விடுகிறது.

நீயும் அதை உணர்ந்திருப்பாய். கோபத்தோடு இருக்கும்போது பெரிய கல்லைவிட்டு வீசி எறிய முடிகிறது. கோபமில்லாதபோது அதை அசைக்கக்கூட முடிவதில்லை. கோபம் ஒரு சக்தி. திரண்டு நிற்கும் சக்தி. கோபம் ஜீவிதத்தின் ஒரு முகம். எல்லாவற்றையும் மறந்துவிட்டு, கோபம் ஒன்றிலேயே ஜீவிதம் ஒன்றிவிடும் ஒரு முக முனைப்பு. எல்லாச் சக்தியும் முனை சேரும் இடம் கோபம்.

அந்தக் கணம் யேசு மிக அழகானவராக இருந்திருக்க வேண்டும். கிறித்துவர்கள் இந்த உண்மையை மறந்துவிடுகிறார்கள். இந்தக் கதையைத் தவிர்க்கிறார்கள். யேசுவாவது கோபப்படுவதாவது! ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தைக் காட்டு என்று சொன்ன யேசுவா கோபப்படுவது? முரணாகத் தெரிகிறது. உன் மேலாடையை ஒருவன் திருடிக் கொண்டால் உன் வேட்டியையும் அவனுக்குக் கொடுத்துவிடு என்று சொன்னவரா கோபப்படுவது? ஒத்துக்கொள்ள முடிவதில்லை.

ஆனாலும் இந்த மனிதரின் கருணையின் ஒரு பகுதிதான் அவருடைய கோபம் என்கிறேன். கருணை இன்னதெனத் தெரிந்த இந்த மனிதர்தான் நிசமாகவே கோபப்படவும் முடியும் என்கிறேன். ஒரு துருவத்தைத் தெரிந்து கொண்டவருக்கு மறு துருவமும் தெரிந்திருக்கிறது. இரண்டுக்கும் இடையே மிகச் சுலபமாகப் போய்வரவும் முடிகிறது. இவர்தான் உண்மையில் ஜீவனோடு இருக்கிறவர். சடமாகிப் போனவர் அல்ல. ஓரிடத்தில் தங்கிப்போன ஒன்றல்ல. அவர் ஒரு மனிதர். ஜீவிதத்தின் ஓர் இயக்கம். உயிரோட்டமான துடிப்போடு - அடுத்த துருவத்துக்கு அவரால் போக முடிகிறது.

லேவாதேவிக்காரர்களைக் கோயிலை விட்டு விரட்டியதே அவருடைய கருணையின் வெளிப்பாடுதான். அவர் கோபப்பட்டதே கருணையினால்தான். சமயத்தில் எனக்கு அவருடைய கருணை மகாவீரருடைய அல்லது புத்தருடைய கருணையை விடப்பெரிய கருணை என்று தோன்றுகிறது. ஏனென்றால் அதில் ஓர் உயிர்த்துடிப்பு இருந்தது.

மகாவீரரும் புத்தரும் மெழுகுப் பதுமைகளாகத் தெரிகிறார்கள். உறைந்துபோன மெழுகுப் பதுமைகள்தான். அதுவும்கூட அவர்களுடைய சீடர்கள் அவர்களைப்பற்றிச் சொல்லியதை வைத்துக்கொண்டு சொல்வது தான். கோபமும் ஞானோதயமும் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாதவை என்ற கொள்கை இந்தியாவில் பல்லாண்டு காலமாகவே இருந்து வருகிறதல்லவா?

ஆனால் ஜெருசலத்தில் அப்படி இல்லை. யூதர்களின் கடவுள்கூடக் கோபம் கொள்வார். அதனால் ஞானி கோபப்படுவதில் எந்த வியப்பும் இல்லை. பயப்படத் தேவை இல்லை. கடவுளுக்கே கோபம் வருமாம். யூதர்களின் கடவுள் மனிதர்களைப்போலவே நடந்து கொள்கிறார்.

ஆனால் பௌத்த சமண மனிதர்கள்கூட உறைந்துபோய் நிலைத்துப் போன கடவுளைப்போல நடந்துகொள்ள வேண்டும் என்கிறார்கள். அதனால்தான் புத்தர் மகாவீரர் வாழ்க்கை பற்றிய விஷயங்களை வெகு கவனமாகச் சொல்லிப் போயிருக்கிறார்கள். வேண்டாததை விட்டுவிட்டு சில பகுதிகளை வைத்துக்கொண்டு வேறு சில பகுதிகளை விட்டு விட்டார்கள். அப்படிச் சொல்லக் காரண காரியங்களும் இருக்கின்றன.

சமணர்களில் இரண்டு வகையினர் இருக்கிறார்கள். ஸ்வேதம்பரர்கள், திகம்பரர்கள் என்று மகாவீரரைப் பின்பற்றுகிறவர்களில் இரண்டு வகையினர். திகம்பரர்களுக்கு மகாவீரர் கட்டைப் பிரம்மச்சாரி. சிறுவயதில் இருந்தே கன்னி கழியாத பிரம்மச்சாரி. ஸ்வேதம்பரர்களோ அவருக்குக் கல்யாணமாகி இருந்தது என்பதோடு நிறுத்திக் கொள்ளாமல் அவருக்கு ஒரு மகள்கூட இருந்ததாகச் சொல்வார்கள்.

ஏன் இந்த வித்தியாசம்? மகாவீரருக்குக் கல்யாணமே ஆகவில்லை என்று ஏன் திகம்பரர்கள் சொல்கிறார்கள்? அவர்களுக்குக் கல்யாணம் என்பது சாதாரண மனிதர்கள்பாற்பட்ட விஷயம். மகாவீரராவது ஒரு பெண்ணைக் காதலிப்பதாவது! இருக்காது. தீர்த்தங்கரர் என்ற அவர்களுடைய கொள்கைக்கு ஒத்து வராது. காதலிப்பது - கல்யாணம் செய்து கொள்வது - அதற்கும் ஒருபடி மேலே போய் ஒரு மகளையும் பெற்றுக்கொள்வதா? மகாவீரர் ஒரு பெண்ணைப் புணர்வதை அவர்களால் கற்பனைகூடச் செய்துபார்க்க முடிவதில்லை. இதுவெல்லாம் சொன்னால் தீம்பு என்று சொல்லாமல் விட்டுவிட்டார்கள். மகாவீரருக்குக் கல்யாணமே ஆகவில்லை.

ஸ்வேதம்பரர்களின் கதை ஓரளவுக்கு உண்மையாகத் தெரிகிறது. ஏனென்கிறாயா? ஏனென்றால் அப்படி ஒரு நிகழ்ச்சி நடக்காமலேயே இருந்திருந்தால் ஸ்வேதம்பரர்கள் தாமாக அதைச் சொல்லிப் போயிருக்க

மாட்டார்கள். அவருக்குக் கல்யாணமாகி ஒரு மகளும் பிறக்காமலேயே இருந்திருந்தால் இந்தக் கதையை அவர்கள் இட்டுக் கட்டிச் சொல்லி இருக்கமாட்டார்கள்.

இந்திய எண்ண ஓட்டத்தின் நெறிகளுக்கு முரணாக இருப்பதால் அவர்கள் தாமாக இதைச் சொல்லி இருக்கமுடியாது. எனவே திகம்பரர்கள் இதைத் தவிர்த்து விட்டார்கள் என்று சொன்னால்தான் சரியாக இருக்கும். யாருடையதாக இருந்தாலும் வாழ்க்கை வாழ்க்கைதானே? அதில் இருவேறு துருவங்கள் சந்தித்துக் கொள்வதும் இயல்புதானே? எனவே மகாவீரருடைய உண்மையான வாழ்க்கைச் சரித்திரம் தொலைந்து போய்விட்டது என்று திகம்பரர்கள் சொல்கிறார்கள். மூலச் சாத்திரங்கள் தொலைந்து போய்விட்டன. அவற்றோடு மகாவீரரின் வாழ்க்கை பற்றிய விவரங்களும் காணாமல் போய்விட்டன என்கிறார்கள். எனவே சுலபமாக அவரை வைத்துக்கொண்டு ஓர் இலட்சிய புருஷனைப் படைத்துவிடலாம் பாருங்கள். திகம்பரர்களுடைய மகாவீரர் உறைந்துபோன ஒரு மெழுகுப் பதுமை. நிசமான மனிதரே அல்ல. தனக்கென ஒரு சரித்திரமும் தனக்கென ஒரு மானுட உடம்பும் இல்லாதவர்.

அவருக்கு வியர்வையே வராது என்பார்கள் இந்தத் திகம்பரர்கள். மகாவீரருக்கு எப்படி வியர்வை வரலாம்? சாதாரண மனிதர்களுக்குத்தான் வியர்வை வரும். மகாவீரருக்கு எப்படி வியர்வை வரலாம்? அவருக்கு வியர்த்ததே இல்லை.

முட்டாள்தனமாகத் தெரியவில்லையா என்ன? கண்மூடித்தனமாகவும் தான். ஆனால் அப்படித்தானே நாம் எல்லாவற்றையும் வழக்கமாக எடுத்துக்கொள்வது. பிறகு அதிலிருந்து ஓர் இலட்சிய புருஷனை வார்த்து வைப்பது. அந்த இலட்சிய புருஷனைப்பற்றிய பொய்களைப் பரப்புவது.

கிறித்துவர்கள் இப்படிச் செய்ய மாட்டார்கள். அவர்களுக்கு இந்தத் தந்திரமெல்லாம் தெரியாது. இப்படி ஏதாவது சொல்லப்போக அது சிக்கலாகிப்போகும் என்பது தெரியாது. யேசுவின் கதை எதார்த்தமானது. சரித்திரபூர்வமானது. என்றாலும் அதிலும் சிக்கல்கள் இருக்கின்றன. அப்படிப்பட்டவர் எப்படிக் கோபப்பட்டு இருக்க முடியும்?

என்னைப் பொருத்த அளவில் இதில் சிக்கல் ஏதும் இல்லை. யேசுவைப்போன்ற ஒருவர்தான் நிசமாகவே கோபப்பட்டு இருக்க முடியும். ஏனென்றால் அந்தக் கோபம் கருணையில் இருந்து வந்தது. கருணை யுள்ளவர் எப்படிக் கோபிக்கலாம் என்று கேட்கிறாய். கருணையானவர் என்பதால்தான் கோபமே வந்தது என்பேன். அப்படியாகும்போது கோபத்தை உள்ளடக்கியதாகிப் போகிறது கருணை. அவருடைய

கருணையின் முக்கியமான பகுதியாகிப் போவதால் கருணை கோபத்தை உள்ளடக்கியதாகிப் போகிறது. இரண்டையும் ஜீரணித்துக் கொண்டால் உன் ஜீவிதம் வேறொரு தளத்துக்குப் போய்விடுகிறது. வெறுப்பு பிரியத்தின் ஒரு பகுதியாகிப் போகிறது. கோபம் கருணையின் ஒரு பகுதியாகிப் போகிறது.

எனவே இதையோ அதையோ தேர்ந்தெடுக்கத் துணியாதே. தேர்ந்து எடுப்பது ஏதுமில்லாத லயத்தைக்கொண்டு வா. நீயே ஒரு சுருதி கூடிய இசையாகிவிடு. உனக்குள் எந்த மோதலுக்கும் இடம் கொடுக்காதே. நீ எப்படி இருக்கிறாயோ அப்படி இருப்பதிலேயே ஓர் அழகு இருக்கிறது. சுருதி கலையாத இசையாக வாழ்வை ஆக்கிக் கொள்வதற்குத் தேவையான எல்லாமும் உனக்குள்ளேயே இருக்கின்றன. ஏதாவது ஒன்றை வேண்டாம் என்று ஒழித்துவிட்டால் ஒரு நாளைக்கு அது தேவை என்ற நிலை வரும். இருந்திருக்க வேண்டிய ஒன்றை ஒழித்து விட்டாய். எனவே எதையும் விட்டுவிடாதே. கடவுள் உனக்குத் தந்திருக்கும் அனைத்தையும் பயன்படுத்திக்கொள். அவைகளுக்கு இடையே ஓர் இசைவைக் கொண்டு வந்துவிடு. அந்த இசைவும், லயமுமே உன் லட்சியமாக இருக்கவேண்டும்.

**மூன்றாவது கேள்வி:**

**ஞானோதயம் பெற்றுவிட்ட குரு இருக்கும் இடத்தில் இருந்தாலே போதும், உன்னிடம் ஒரு நிலைமாற்றம் ஏற்படும் என்று சொன்னீர்கள். உங்களிடம் வருவதற்கு முன்னால் எதையும் சார்ந்திருக்காமல் வாழ்ந்திருந்தேன். ஆனால் உங்களிடம் வந்து சேர்ந்ததில் இருந்து உங்களை நம்பியே நான் இருப்பதாகப் படுகிறது. நீங்கள்தான் என் வாழ்வின் விளக்கு. உங்களை விட்டுப்போக வேண்டும் என்று நினைத்தாலே பயம் வந்துவிடுகிறது. இது தானாகக் கழிந்து போகக்கூடிய இயல்பான கட்டம்தானா? அல்லது ஏதாவது சரியில்லாமல் போய்விட்டதா?**

அதை அப்படியே இருந்து கழியவிட்டு விட்டால் அது இயல்பான கட்டம் ஆகிவிடும். ஆனால் அதைப் பிடித்துத் தொங்கிக்கொண்டே இருந்தால் ஏதாவது பாதிப்பு வரத்தான் செய்யும்.

ஆன்மிக வாழ்வில் மூன்று நிலைகள் உள்ளன. ஒருவருக்கு ஒருவர் மாறுபடலாம். என்றாலும் அவை மூன்று நிலைகள்தான். ஒன்று யாரையும் சாராமல் இருப்பது. அது ஒரு தன்முனைப்பான நிலை. எதையும் சாராமல் இருக்கவேண்டும் என்கிறாய். ஆனால் அது சாத்தியப்படுவது இல்லை. இந்தப் பிரபஞ்சத்தின் இந்த முழுமையின் ஒரு பகுதிதான் நீ. எனவே நீ நீயாக உன்னோடு மட்டுமே இருப்பது என்பது காரிய சாத்தியமே இல்லை.

இதற்கும் அதற்கும் என்று பலரையும் பலதையும் நம்பித்தான் இருக்கவேண்டி இருக்கிறது. வெளிச்சத்துக்குச் சூரியன். உயிர் வாழச் சூரியன். உயிரோடு இருக்கக் காற்று, பிராணவாயு. உணர்வுக்கு மரங்கள். இப்படி நம்பித்தானே உன்னுடைய பிழைப்பு நடக்கிறது? பிறகெப்படி நீ எதையும் சாராமல் இருப்பதென்பது? முடியாது. அப்படி இருக்க நினைப்பது ஆணவத்தின் முயற்சி. தோல்வி அடையத்தான் செய்யும்.

சாராது இருத்தல் சாத்தியம் இல்லை எனும்போது சார்ந்த வாழ்வு தொடங்குகிறது. இந்தத் துருவத்தில் இருந்து அந்தத் துருவத்துக்கு நகர்ந்து விடுகிறாய். இரண்டுக்கும் நடுவே இருப்பதுதான் உனக்குத் தெரியாதே! நடுமத்தில் இருந்து இசைவிப்பைக் கொண்டுவர உனக்குத் தெரியாதே! எனவே இந்தக் கடைசியில் இருந்து அந்தக் கடைசிக்குப் போகிறாய். எதையும் சாராது இருந்த நிலைமை போய்ச் சார்ந்திருக்கும் நிலைமை வந்துவிட்டது. அப்போது எதை அல்லது யாரைச் சார்ந்திருக்கிறாயோ அது அல்லது அவர் இல்லாமல் போய்விட்டால் என்ன செய்வது என்ற பயம் வந்துவிடுகிறது. என்றாலும் இது இரண்டாவது நிலைதான். சார்ந்து வாழ்தல் - சாராது வாழ்தல். அது போலி எனில் இதுவும் போலிதான்.

மூன்றாவது கட்டம் ஒன்று இருக்கிறது. அதைச் சந்திக்க வேண்டும். அதைத்தான் இசைவு அல்லது லயம் என்கிறேன். அப்போது ஒருவரை ஒருவர் சார்ந்திருக்கும் உண்மை தெரிகிறது.

(நீ முழுமையைச் சார்ந்திருப்பது போலவே முழுமையும் உன்னைச் சார்ந்திருக்கிறது.) யூஸ்யா என்று ஒரு யூத ஞானி. அவர் தன்னுடைய பிரார்த்தனையில், ''கடவுளே! உன்னை நான் நம்பியிருக்கிறேன் என்பது எனக்குத் தெரியும். ஆனால் நீயும் என்னைச் சார்ந்திருக்கிறாய் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். நீயில்லாமல் நானில்லை. நானில்லாமல் நீயுமில்லைதான்'' என்று சொல்வாராம்.

நீ இல்லாமல் கடவுள் எப்படி இருக்க முடியும்? முடியவே முடியாது.

இந்த உலகத்துத் தாவரங்கள் எல்லாமும் சூரியனைச் சார்ந்திருக்கின்றன என்று அறிவியல் சொல்கிறது. சூரியன் இல்லையென்றால் அவையும் இல்லை. ஆனால் அறிவியலாளர்கள் இதை இன்னமும் சரிதான் என்று ஒப்புக்கொள்ளத் தயங்குகிறார்கள். இது ஒருவழிப் பாதை என்கிறார்கள்.

ஜீவிதத்தில் எங்கும் ஒருவழிப் பாதை இல்லை. இரண்டு வழிப் பாதைகளே எங்கும். தாவரங்கள் சூரியனைச் சார்ந்திருக்கின்றன என்றால் சூரியனும் ஏதோ ஒரு வகையில் தாவரங்களைச் சார்ந்திருக்க வேண்டும்.

எப்படி? கேள்விக்கு இப்போதைக்குப் பதில் இல்லை. என்றாலும் வெகு சீக்கிரத்தில் பதில் கிடைக்கத்தான் போகிறது.

எல்லாமும் ஒன்றைஒன்று சார்ந்தவை. ஒரு பூ - ஒரு ரோசாப் பூவைப் பார்த்தால் உனக்கு ஆனந்தம். உன் ஆனந்தம் அந்தப் பூவைச் சார்ந்தது. இப்போது அறிவியல் இதை நிரூபித்து விட்டது தெரியுமா? நீ அதைப் பார்த்து மகிழும் அதே நேரத்தில் அதுவும் உன்னைப் பார்த்து மகிழ்கிறது.

. ரோசாப்பூ உன்னைச் சார்ந்திருக்கிறதாம். நீ வந்து பார்த்து மகிழ வேண்டும் என்று காத்திருக்கிறதாம். காதலன் காதலிபோல. இது கவிதை அல்ல. அறிவியல் உண்மை. நிருபித்து விட்டார்கள். ரோசாப்பூவை விரும்பி அதைக் கண்டு மகிழ்கிறவர். அருகே வரும்போது ரோசாச் செடி சிலிர்த்துப் போகிறதாம். அந்தக் கணத்தைக் கொண்டாடுகிறதாம்.

தன்னைக் கவனித்துப் பார்த்துக்கொள்ள, தன்னை விருப்பத்தோடு அணுக ஒருவர் இருக்கிறார் எனும்போது ரோசாச் செடி நன்றாக வளர்கிறதாம். பெரிய பெரிய பூக்களைத் தருகிறதாம். தன்னை எதிர்பார்த்து ஒருவர் இருக்க எப்படி அந்த எதிர்பார்ப்புக்குத் துரோகம் செய்வது? பெரிய பூக்களைத் தந்தாக வேண்டி இருக்கிறது. யாருக்கும் அதன்மேல் பிரியம் இல்லையென்றால், தோட்டக்காரன் வந்து கடனே என்று தண்ணீர்விட்டுப் பராமரிக்கிறான் என்றால், யாருக்காகப் பெரிய பெரிய பூக்களைத் தரவேண்டும்? சின்னச் சின்னப் பூக்களே போதுமே! பூக்களே இல்லை என்றாலும் மோசமில்லை. யாருக்காகப் பூப்பது? யாருக்காக மலர்வது? ரோசாச் செடி உன்னைச் சார்ந்துதான் இருக்கிறது.

ஒரு மரத்தைக் கடந்து போகும்போது உனக்குள்ளேயே ஹலோ சொல்லிக்கொள்ளத் தவறாதே. அதைக் கரிசனத்தோடு பார்க்காமல் போகாதே. இதில் செலவு ஏதுமில்லை. ஆனால் இதை மறந்து விடாதே. நீ மரத்தைச் சந்தோஷப்படுத்தினால் மரம் உன்னைச் சந்தோஷப்படுத்தும்.

இந்தச் சோதனையை முயன்று பார். பெரிய காரியம் ஏதுமில்லை. உபகரணங்கள் தேவையில்லை. உன் வீட்டில் அல்லது பூங்காவில் ஒரு மரத்தைத் தேர்ந்தெடு. ஒவ்வொரு நாளும் அதனிடம் போய்க் கொஞ்ச நேரம் பேசு. தோழமை பாராட்டு.

மரத்தை வசப்படுத்துவது அவ்வளவு சுலபமல்ல. மனிதர்கள் மிக மோசமாகத்தான் மரங்களை நடத்தி வந்திருக்கிறார்கள். அவற்றுக்கு மனிதனைக் கண்டாலே பயமாகிப் போய்விட்டது. நீ அதற்குப் பக்கத்தில் போனாலே போதும். இதோ மனிதன் வருகிறான். உலகத்திலேயே மிக அபாயமான ஜந்து இவன்தான். எந்தக் காரணமும் இல்லாமல்

காயப்படுத்துகிறவன். வேறு எந்த மிருகமும் இவனைப்போல இல்லை. பசித்தால் பசு புல்லைத் தின்னும். இவனோ எந்தக் காரணமும் இல்லாமல் புல்லை உருவிப் போடுகிறவன். இவனுக்குப் பசியில்லை. இவன் புல்லைத் தின்னப் போவதும் இல்லை. பிறகேன் அதைப் பிடித்து உருவிப் போடுவது? அழிப்பது?

அழிக்க வேண்டும் என்ற இந்த அரிப்பு அவனுக்குள்ளே ஊறிப் போய்விட்டது. இந்த அரிப்பே தானாகிப் போய்விட்ட மனது. அதனால்தான் அழித்துக்கொண்டே இருக்கிறது. ஒரு மரத்தைத் தாண்டிப் போகும்போது வெறுமனே ஒரு கிளையை வெட்டி வீசிப் போவது. இது என்ன பிரக்ஞைகெட்ட செயல் என்கிறேன்.

எல்லா ஆதிச் சமூகங்களும் என்ன சொல்கின்றன? மெக்ஸிகோ, தாய்லாந்து, இந்தியா இன்னும் பல நாடுகளில் இருந்த சமூகங்கள் என்ன சொல்கின்றன? சாப்பிட ஏதாவது வேண்டுமா? போய் மரத்தைக் கேள். இலைகள் வேண்டுமா? கடவுளுக்கு அர்ப்பணித்துச் சடங்குகள் செய்ய ஐந்து இலைகள் வேண்டுமா? மரத்திடம் அனுமதி கேள். எவ்வளவு பத்திரமாக முடியுமோ அவ்வளவு பத்திரமாக ஐந்தே ஐந்து இலைகளைப் பறித்துக்கொள். மரத்தைக் காயப்படுத்தாதே. தருவதற்கு எப்போதும் தயாராக இருப்பதால்தான் மரத்தைத் 'தரு' என்கிறோம். கொடுத்து விட்டோமே என்ற வருத்தம் மரத்துக்குத் துளியும் இருக்கப்போவதில்லை. மரத்துக்கு நன்றி சொல். எனக்குத் தேவைப்பட்டபோது ஐந்து இலைகளைத் தந்தாயே. உனக்கு நன்றி. உனக்கு ஏதாவது தேவையானால் தயங்காமல் போய்க் கேள். இதில் வெட்கப்பட ஏதுமில்லை. தாராளமாகக் கேள்.

ஒரு மரத்துப் பக்கம் போ. மரத்தோடு பேசு. மரத்தைத் தொட்டுப் பார். மரத்தை அணைத்துக்கொள். மரத்தை உணர்ந்து பார். மரத்துக்குப் பக்கத்தில் சும்மா உட்கார்ந்துகொள். அந்த மரம் உன்னை உணர்ந்து கொள்ளட்டும். நீ நல்லவன் என்பதையும் உன்னால் தனக்குக் கேடு ஏதும் இல்லை என்பதையும் அந்த மரம் உணரட்டும் விடு. இப்படி மெதுமெதுவாகத் தோழமை வளரும். நீ அருகே வரும்போது மரம் தன் இயல்பில் நல்ல தொரு மாற்றத்தை உணர்வதைத் தெரிந்துகொள்வாய்.

நீ அருகே வரும்போது அந்த மரத்தின் பட்டையில் பிரமாத மானதொரு ஜீவசக்தி ஓடுவதைத் தெரிந்துகொள்வாய். நீ அதைத் தொடும்போது ஒரு குழந்தையின் ஒரு காதலியின் மகிழ்ச்சியை அந்த மரம் உணர்வதைத் தெரிந்து கொள்வாய். அருகே உட்காரும்போது என்னென்னவோ தெரிந்து கொள்வாய். வெகு சீக்கிரத்திலேயே நீ வருத்தப் படும் போதெல்லாம் அந்த மரத்தை நோக்கிப் போக ஆரம்பித்துவிடுவாய்.

"அப்படிப் போய்ச் சேரும்போது உன் வருத்தம் தொலைந்து போவதை உணர்வாய். அப்போதுதான் நீயும் மரமும் ஒன்றை ஒன்று சார்ந்தவர் என்பதை உணர்வாய். நீ மரத்தை மகிழ்விக்க மரம் உன்னை மகிழ்விக்கிறது. வாழ்க்கை முழுக்க இந்தச் சார்புடைமை நிறைந்திருப்பதை உணர்வாய். இந்தச் சார்புடைமையை நான் கடவுள் என்கிறேன். லாவோட் சூ இதையே தாவோ என்கிறார். இந்த ஒட்டுமொத்தமான சார்புடைமையைத்தான்.

கடவுள் என்கிறவர் எங்கோ இருக்கும் யாரோ ஒருவர் அல்ல. இந்தச் சார்புடைமைதான் கடவுள். வேதங்கள் இதையே ரித் என்கின்றன. நெறி என்று பொருள்கொள். அதற்கு எப்படி வேண்டுமானாலும் பெயர் வைத்துக்கொள். இந்த ஒருமித்த சார்புடைமைதான் எல்லாமும் என்று தெரிந்துகொண்டால் சரி. என் அணுக்கத்தில் சார்புடைமையின் சத்தியத்தைத் தெரிந்துகொண்டால் நீ அனைத்தையும் தெரிந்து கொண்டவனாகிப் போகிறாய்.

முதலில் உன்னுடைய சார்பின்மை மறையும். இது ஒன்றும் மிகச் சிரமமான காரியம் இல்லைதான். ஏனென்றால் எதையும் யாரையும் சார்ந்து இருப்பது ஒரு சுமைதான். அந்தச் சுமையைக் கழிக்கத்தான் எவருக்கும் பிடிக்கிறது. எவரும் அதைக் கழித்துவிடத் தயாராக இருக்கிறார்தான். இது சிரமம் இல்லைதான்.

பிறகு நீ சார்புடையவனாகிப் போகிறாய். இது கொஞ்சம் சிரமமான காரியம். உன்னுடைய சுமையை இன்னொருவர்மீது ஏற்றி வைத்தபின் இலேசாகிப் போனதைப்போல இருக்கிறது. ஆனால் அதைத் தொடர்ந்து பயமும் வந்துவிடுகிறது. இந்த ஆள் போய்விட்டால், இந்த உடம்பைவிட்டு நீங்கிவிட்டால், என்ன ஆகும்? இந்தப் பயம்தான். சாதாரண பயத்தைத் தாண்டி இது ஒரு கிலியாக உன்னை வருத்துகிறது.

அதைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்காதே. இது ஒரு கட்டம். அவ்வளவுதான். முதல் கட்டமான சார்பின்மையைக் கழித்துவிடுவதன் மறு வடிவம்தான் இது. இன்னமும் இன்னமும் என்று ஒருவரை ஒருவர் சார்ந்திருக்கும் வாழ்வுக்கு உன்னைப் பழக்கப்படுத்திக்கொள்.

இப்போது உங்களிடம் பேசிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் இங்கே இப்போது இல்லாமல் இருந்திருந்தால் இப்போது நான் பேசும் இதைப் பேசிக் கொண்டிருக்கமாட்டேன். இங்கே இருக்கிறவர்களில் யாராவது ஒருவர் மாறிப் போயிருந்தாலும் என்னுடைய பேச்சும் மாறிப் போயிருக்கும். இப்போது பேசிக் கொண்டிருப்பதையே நான் பேசிக் கொண்டிருக்கமாட்டேன். ஏன் என்கிறாயா? எனக்கென்று இதைப்

பேசவேண்டும் அதைப்பேசவேண்டும் என்று சொல்லும் ஒரு மனது இல்லை. உங்களைப் பொருத்து என் பேச்சு அமைகிறது. நீங்கள் இங்கே இருக்கிறீர்கள். இந்தச் சூழலை அமைத்திருக்கிறீர்கள். நான் பேசுகிறேன். அவ்வளவுதான்.

இங்கே இருக்கிறவர்களில் யாராவது ஒருவர் இங்கே இப்போது இல்லாமல் இருந்திருந்தால் நான் பேசுவதும் வித்தியாசமாகத்தான் இருக்கும். ஏனென்றால் அவர் இங்கே இருப்பது இந்தச் சூழலை ஏதோ ஒருவகையில் பாதித்து என் பேச்சை இதுவாக அன்றி வேறொன்றாக மாற்றியிருக்கும்.

நான் ஒரு சூன்யத்தில் பேசவில்லை. உங்களிடம் பேசிக் கொண்டிருக்கிறேன். என்னுடைய மனதைப் பேச நான் அனுமதிக்க வில்லை. அப்படி மனதைப் பேசவிட்டால் யாரிடம் பேசுகிறோம் என்ற பிரக்ஞை இல்லாமல் போய்விடும். சில விஷயங்களைச் சொல்ல வேண்டும். அவற்றைச் சொல்லிப் போவதோடு என் காரியம் முடிந்துவிடும்.

என் ஆசிரியர் ஒருவர். மெய்யாலுமே தத்துவ அறிஞர். தத்துவ அறிஞர்கள்தான் கொஞ்சம் இப்படி அப்படி இருப்பார்களே. இவரும் அப்படித்தான். கிறுக்குத்தனமானவர். எனவே அவரிடம் பாடம் பயில யாருமே சேருவதில்லை. அசாதாரணமானவர். போட்டால் நூற்றுக்கு நூறு... இல்லையேல் பூஜ்யம். யார் அவரிடம் போய்ப் படிப்பார்கள்? அரிஸ்டாட்டில் தோற்றார் போங்கள். ''ஒண்ணு நீ சொல்றது சரியா இருக்கணும். இல்லே தப்பா இருக்கணும்'' என்கிற வகை. சரிக்கும் தப்புக்கும் நடுவே ஏதுமில்லை. கொஞ்சம் சரி கொஞ்சம் தப்பு என்பதே இல்லை என்பார். எனவே மாணவர்களுக்கு அவரைக் கண்டாலே வெகு பயம்.

ஆனால் எனக்கு அவரைப் பிடிக்கும். கவனித்துப் பார்ப்பதற்குச் சரியான ஆள். அருகே இருந்து கவனிக்க வேண்டுமானால் அவருடைய மாணவராக வேண்டுமே. எனவே அவருக்கு நான் ஒருவன் மட்டுமே மாணவனாக இருந்தேன்.

எப்படிச் சொல்லிக் கொடுத்தார் என்கிறாயா? முதல் நாளே சொல்லிவிட்டார், ''இதோ பாருப்பா. மணி அடிச்சா வகுப்பு ஆரம்பிக்கும். ஆனா எப்போ முடிப்பேன்னு எனக்கே தெரியாது. சொல்ல வந்ததைச் சொல்லி முடிக்கறதுக்கு முன்னாடி நிறுத்தத் தெரியாது. மணி அடிக்கறப்போ வகுப்பு ஆரம்பிக்கும். ஆனா திருப்பி மணி அடிக்கிறப்போ வகுப்பு முடியும்னு சொல்ல முடியாது. சமயத்துக்கு இருபது நிமிஷம் மட்டுமே பேசிக்கிட்டு இருப்பேன். சமயத்துக்கு மணிக்கணக்காகவும் பேசிக்கிட்டு

இருப்பேன். உனக்கு அலுப்புத் தட்டினா இல்லே பாத் ரூமுக்குப் போகணும்னா இல்லே எங்கேயாவது போகணும்னா நீ பாட்டுக்குப் போயிட்டிரு. நான் பேசறதை நிறுத்த மாட்டேன்'' என்றார். நான் ஒருத்தன் மட்டும்தான் வகுப்பிலே. ''நீ பாட்டுக்குப் போ. வா. என்னைத் தொந்திரவு செய்யாதே. நான் பாட்டுக்குப் பேசிக்கிட்டே இருப்பேன்.'' இது எப்படி?

முதல் நாள் பார்த்தேன். சொன்னபடி செய்யப் போகிறாரா என்ன? அட, ஆமாம் என்கிறேன். நான் எழுந்து போனேன். அவர் பேசிக்கொண்டே இருந்தார். நான் திரும்பி வந்தபோதும் அவர் பேசிக்கொண்டேதான் இருந்தார்.

அவரோடு இரண்டு வருடங்கள் இருந்தேன். சில சமயம் சில மணிநேரம் வெளியே போய்விடுவேன். எனக்கு அப்போதைக்கு அப்போது கொஞ்சம் தூங்க வேண்டும். பதினொன்றரை மணி ஆனால் போதும் எனக்குத் தூக்கம் வந்துவிடும். ஹாஸ்டலுக்குப்போய் ஒரு மணிநேரம் தூங்கிவிட்டுத் திரும்புவேன். அவரோ பேசிக்கொண்டே இருப்பார். சரியான கிறுக்குத்தான். தத்துவ அறிஞர் அல்லவா!

நீ...நான்...இரண்டு துருவங்கள். நமக்கிடையே ஏதோ ஒன்று படைக்கப்படுகிறது. அதுதான் நடக்கிறது. உங்களோடு பேசும்போது உங்களிடம் மட்டும் பேசுகிறேன் என்பது மட்டுமில்லை. நீங்கள் கவனித்துக்கொண்டு இருக்கிறீர்கள் என்பது மட்டுமில்லை. நாம் நமக்குள்ளேயே பேசிக்கொண்டு இருக்கிறோம். நாம் நமக்குள்ளே பேசிக்கொண்டு இருப்பதுதான் ஒருவரை ஒருவர் சார்ந்திருப்பது.

என் மூலமாக நீங்கள் பேசுகிறீர்கள். உங்கள் மூலமாக நான் கவனித்துக் கொண்டிருக்கிறேன். இதைத்தான் சார்புடைமை என்கிறேன்.

சார்பின்மையை விட்டுவிட்டாய். நீ மட்டுமே சார்ந்திருப்பதையும் கழித்துக் கட்டிவிடு. ஒருவரை ஒருவர் சார்ந்திருப்போம் வா. இது ஒருவகைப் பயிற்சிதான். நம்முடைய சார்பின்மை ஜீவிதம் முழுக்கப் பரவட்டும். எங்கேயும் எப்போதும் ஒருவரை ஒருவர் சார்ந்திருப்பதை அனுபவி. அதுதான் எதார்த்தம்.

நீ மட்டுமே சார்ந்திருப்பதாக நினைப்பது ஒரு மாயை. சாரா திருத்தலும் ஒரு மாயை. ஒருவரை ஒருவர் சார்ந்திருத்தலே எதார்த்தம். கடவுள் சத்தியமானவர். கடவுள் தன்மை ஒருவரை ஒருவர் சார்ந்திருப்பதே.

**நான்காவது கேள்வி:**

***நீங்கள் சொல்லி இருப்பதைப் பார்த்தால் பெண்கள் ஆண்களை விட முழுமைக்கு வெகு அருகாமையில் இருப்பதாகத்***

*தெரிகிறது. பிறகேன் நிறைய பெண்கள் ஞானிகளாக ஆவதில்லை?*

அப்படி இல்லை. ஆண்களிலும் பெண்களிலும் சம எண்ணிக்கையில் ஞானியர் இருக்கிறார்கள். ஆனால் பெண்கள் அதிகமாக அலட்டிக் கொள்வதில்லை. அவ்வளவுதான். ஆண்களைப்போல அவர்கள் தம்பட்டம் அடித்துக் கொள்வதில்லை. ஞானத்தை அவர்கள் ஆரவாரமின்றி அனுபவிக்கிறார்கள். பெண்மை என்பதே அதுதான்.

பெண்கள் அலட்டிக் கொள்வதில்லை. ஞானம் சித்தித்து விட்டால் அதை அனுபவிக்கிறார்கள். தங்களுடைய ஆழ்ந்த உணர்வுகளில் போஷிக்கிறார்கள். அது ஒரு கர்ப்பம் போல. அதனோடேயே வாழ்கிறார்கள். அதைப்பற்றிப் பேசுவது இல்லை. அதனால்தான் பல பெண் ஞானியர் பெயர்கள் உனக்குத் தெரிந்திருக்கவில்லை. சில பெயர்கள் வெளியே தெரியும். ஆனால் அப்படித் தெரியப்பட்டவர்கள்கூடச் சற்றே ஆண்மை கலந்த பெண்களாகத்தான் இருக்கிறார்கள். அதனால்தான் அவர்களைப் பிறருக்குத் தெரிகிறது. இல்லையேல் இல்லைதான்.

காஷ்மீரில் லல்லா என்று ஒரு பெண் இருந்தார். காஷ்மீரில் ஒரு பழமொழி. எங்களுக்கு இரண்டு பெயர்கள்தான் தெரியும். அல்லா, லல்லா. மிக அருமையான பெண்மணி. ஒரு புத்தர்தான். ஆனால் அவரிடம் வெகுவாகப் பெண்மை இருந்திருக்காது. பெண்ணின் மனதைவிட ஆணின் மனதுதான் இருந்திருக்க வேண்டும்.

வாழ்நாள் முழுக்க நிர்வாணமாக இருந்திருக்கிறார். உலகத்திலேயே அப்படி இருந்திருக்கக் கூடிய ஒரே பெண் அவராகத்தான் இருக்கவேண்டும். மகாவீரர், டயோஜீன்ஸ், சமணத் தீர்த்தங்கரர்கள் என்று இப்படி ஆயிரக்கணக்கான ஆண்கள் நிர்வாணமாக இருந்திருக்கிறார்கள். ஆனால் நிர்வாணமாகவே இருந்த ஒரே பெண் லல்லாதான். இது பெண்மைக்கு உகந்த காரியமாகத் தெரியவில்லை. பெண்மையின் இயல்பே மறைத்து வைப்பதுதான். உட்குகையில் மறைத்து வைப்பது. லல்லா ஒரு பெண் ஞானி. வெகு சில பெண்களையே ஞானியர் என்று சொல்கிறார்கள்.

உபநிடதக் காலத்தில் மைத்ரேயி என்ற ஞானி இருந்ததாகச் சொல்வார்கள். அவரிடம் கூட ஆண்மை இயல்புதான் இருந்திருக்க வேண்டும்.

''எதார்த்தம் என்பது என்ன?'' இந்தக் கேள்விக்கு முடிந்த விடை காண சனக ராசனுக்கு ஆவல். தன் நாட்டில் இருந்த அறிஞர்களை எல்லாம்

அழைத்து இதைப்பற்றி வாதங்கள் நடத்தினான். பிரமாதமான நிகழ்ச்சி. எல்லா அறிஞர்களும் பண்டிதர்களும் ஒன்று திரண்டார்கள்.

ஜெயிப்பவருக்குப் பெரிய பரிசு காத்திருந்தது. ஆயிரம் பசுக்கள். நாட்டிலேயே பிரமாதமான பசுக்கள். தங்கக் காப்பிட்ட கொம்புகள். நகைகள் பூட்டிய கழுத்து. அரண்மனைக்கு வெளியே அலங்கரித்து அணிவகுத்து நின்றிருந்தன ஆயிரம் பசுக்கள். யார் ஜெயிக்கிறாரோ அவருக்குத்தான்.

யாக்ஞவல்கியர் வந்தார். அந்நாளில் மிகப்பெரிய அறிஞர். அப்போது அவர் ஞானியாகவில்லை. பின்னரே ஞானம் பெற்றார். தன் சீடர்களோடு வந்திருந்தார். மிகவும் மதிக்கப்பட்ட குரு. எனவே அவருக்கு ஆணவம் இருந்தது. மெத்தப் படித்தவர்களுக்கே ஆணவம் உண்டுதானே! தன் சீடர்களைப் பார்த்து, ''நீங்க போய் அந்த மாடுகளைப் பிடிச்சுக்குங்க. நான் போய் வாதிலே ஜெயிச்சுட்டு வந்துடறேன். வெய்யில் அதிகமா இருக்குது. பாவம் மாடுகள். நீங்க போய் நிழலுக்கு ஓட்டிக்கிட்டுப் போங்க'' என்றார். வெகு ஆணவமான வார்த்தைகள். தாம் ஜெயிப்பது நிச்சயம் என்ற திமிர்.

அறியாமைதான் எதைப்பற்றியும் நிச்சயமாக இருக்கும். ஞானம் எப்போதுமே தயங்கித் தயங்கித்தான் படரும். எதையும் தீர்மானிப்ப தில்லை. அதிலும் எதார்த்தம் எது என்ற கேள்வி சற்றே சிக்கலானது. யாருக்குத் தெரியும் விடை?

யாக்ஞவல்கியரது வார்த்தைகளைக் கேட்ட பிற அறிஞர்கள் மனம் நொந்து கொண்டார்கள். ஆனால் பாவம் அவர்கள் என்ன செய்ய முடியும்? இவரை வாதத்தில் வெல்ல முடியாதே! வாதத்தில் பிரமாதமானவர். அவரை வென்றவர் எவருமில்லை.

ஆனால் அங்கே ஒரு பெண் அமர்ந்திருந்தார். ஒன்றும் பேசாமல் உட்கார்ந்திருந்தார். அவர்தான் மைத்ரேயி. வாதம் ஏறக்குறைய முடிந்துவிட்டது. அவர்தான் வென்றவர் என்று அறிவிப்பதுதான் பாக்கி. அப்போது மைத்ரேயி எழுந்தார். ''பொறுங்கள். நான் சில கேள்விகள் கேட்க வேண்டும்.''

வெகு சாதாரணமான கேள்விகள்தான். உண்மையில் சாதாரண கேள்விகள்தானே பதிலளிக்க வெகு சிரமமானவை!

''இந்த உலகைத் தாங்கி நிற்பது எது? அல்லது யார்?''

இந்திய மரபில் உலகைத் தாங்கி நிற்பவை ஏழு பெரிய வெள்ளை யானைகள். எனவே யாக்ஞவல்கியரும் அதே பதிலைச் சொன்னார். சொல்லிவிட்டு, ''இதுகூடத் தெரியாத அறிவிலியா நீ?'' என்று கேட்டார்.

''சரிதான். அந்த யானைகளைத் தாங்கி நிற்பது யார் அல்லது எது?''

இப்போது அவருக்கு ஏதோ விஷமம் இருக்கிறது என்பது தெரிந்துவிட்டது. சுதாரித்துக் கொண்டார். ''பிரம்மா! கடவுள்!'' என்றார். இதோடு நிறுத்திக் கொள்வார் என்றுதான் நினைத்தார்.

மைத்ரேயி தொடர்ந்து, ''அப்படியானால் கடவுள் யார்மீது நிற்கிறார்? அல்லது எதன்மீது?'' என்றார்.

யாக்ஞவல்கியருக்குக் கோபம் வந்துவிட்டது. ''பெண்ணே! இதோடு நிறுத்திக்கொள். இனியும் பேசினால் உன் தலை தரையில் உருண்டு விடும். கொலை விழும்'' என்றார்.

இந்தப் பெண்தான் பிறகு ஞானியானவர். ஆனால் அவரிடம் ஆண்மைதான் இருந்திருக்க வேண்டும். வாதம் செய்தார். யாக்ஞ வல்கியரைக் கூட வம்பில் மாட்டிவிட்டார். அதற்குப்பின் அமைதியாகப் போய்விட்டார் என்றாலும்கூட அவரிடம் தோற்றுப் போகவில்லை. யாக்ஞவல்கியர்தான் தோற்றுப் போனவர். நான் மத்தியஸ்தனாக இருந்திருந்தால் மைத்ரேயிக்குத்தான் ஆயிரம் பசுக்களும் என்று சொல்லி இருப்பேன்.

யாக்ஞவல்கியர் புரிந்தது வாதம் அல்ல. கோபம் வாதமாகாது. பலாத்காரம் வாதமாகாது. ஒருவரை மௌனிக்க வைக்கலாம். ஆனால் அது வெற்றி கொண்டதாக ஆகாது.

இந்தப் பெண்மணிதான் பின்னர் ஞானியானவர். அவரிடம் ஆண்மை இருந்திருக்க வேண்டும். இல்லையேல் எந்தப் பெண்ணும் இதைப் போன்றவற்றைப் பற்றி வாதிக்க வந்திருக்க மாட்டாள்.

ஒருமுறை முல்லா நஸ்ருதீனைக் கேட்டேன். ''எப்படி உங்களுக்கும் உங்கள் மனைவிக்கும் எந்தச் சச்சரவும் இல்லாமல் இருக்கிறீர்கள்? என்னதான் நடக்கிறது உங்களுக்கு இடையே?''

''கல்யாணம் ஆன முதல் நாளே ஒரு தீர்மானத்துக்கு வந்துட்டோம். அதை இன்னைக்கு வரைக்கும் செய்துக்கிட்டு வர்ரோம். எல்லாம் ரொம்ப ரொம்பச் சரியாவே போயிட்டிருக்குது.''

''அப்படியா? நிறையப்பேர் எங்கிட்டே அவங்கவங்க பிரச்சனையைக் கொண்டு வர்ராங்க. உங்ககிட்டே தெரிஞ்சுக்கிட்டா அவங்களுக்குச் சரியான யோசனை சொல்லலாமே!''

''ரொம்பச் சாதாரணமான சமாச்சாரமப்பா! பெரிய பெரிய விஷயம் எல்லாம்... தீர்மானமான கேள்விகள்... இதிலெல்லாம் நான் சொல்

றதைத்தான் கேட்டுக்கனும். சாதாரண சமாச்சாரங்கள்ளே அவ சொல்றதுதான்...''

''நல்ல முடிவுதான். ஆனா எது சாதாரண சமாச்சாரம்? எது பெரிய பெரிய விஷயம்?''

''அட என்னப்பா நீ? எந்த சினிமாவுக்குப் போறது? இன்னைக்கு என்ன சாப்பிடறது? எந்தக் கடையிலே போய்ச் சாப்பிடறது? குழந்தைகளை எங்கே அனுப்பறது? என்ன மாதிரிப் படிப்பிலே சேர்த்து விடறது? எந்த மாதிரித் துணி வாங்கறது? எந்த மாதிரி வீடு... எந்த மாதிரி கார்... இதெல்லாம் சாதாரண சமாச்சாரம். அவ முடிவுதான் இதுலே எல்லாம்.''

''சரி அப்படின்னா பெரிய விஷயங்கள்?''

''கடவுள் இருக்கறாரா இல்லையா? இதுலே எல்லாம் நான் சொல்றதுதான் சட்டம்.''

பெண்களுக்குப் பெரிய பெரிய விஷயங்களில் எல்லாம் அவ்வளவு அக்கறை இல்லை. அந்த விஷயங்கள் எல்லாம் அடி ஆழத்தில் மிகவும் முட்டாள்தனமானவை என்பது அவர்களுக்குத் தெரியும். கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பதைப்பற்றி நீ எந்த முடிவுக்கு வந்தாலும் சரிதான். ஊசி முனையில் எத்தனை தேவதைகள் நடனமாட முடியும் என்பதை நீயே கவனித்துக்கொள் என்று விட்டுவிடுகிறார்கள்.

நஸ்ருதீன் தொடர்ந்தார். ''இப்படி முடிவு செஞ்சுட்டதாலே எங்களுக்குள்ளே இதுநாள் வரைக்கும் எந்தப் பிரச்சனையும் இல்லே. பெரிய பெரிய கேள்விக்குப் பதில் என்னோடது. சில்லறைச் சமாச்சாரத்துக்குப் பதில் அவளோடது. பிரமாதமாத்தான் இருக்கறோம்.''

கல்யாணமாகிக் காலம் போகப்போக எல்லாக் கணவன்மாரும் இதைத் தெரிந்து கொள்கிறார்கள். தத்துவார்த்தமான பிரச்சனைகள் பற்றி அவர்கள் எந்த முடிவையும் எடுத்துக் கொள்ளலாம்.

எந்தப் பெண்ணுக்கும் சாத்திரங்கள் எழுதி வைக்க வேண்டும் என்ற அரிப்பு இருந்ததில்லை. எழுதி வைக்கவும் இல்லை. ஆனால் அதனாலேயே பெண்களில் ஞானியர் இல்லை என்று சொல்லிவிட முடியாது. சமமான எண்ணிக்கையில் அவர்களும் இருக்கிறார்கள். வாழ்வில் எதுவும் சமன்பாட்டுக்கு உட்பட்டது. இல்லையேல் தறிகெட்டுப் போய்விடும். வாழ்க்கையில் எதுவும் ஒன்றை ஒன்று சமன்படுத்தியே நிற்கிறது.

இன்னொன்றைச் சொல்கிறேன். உனக்கும் அதில் இருக்கும் சூட்சுமம் புரியும். நூறு பெண்குழந்தைகளுக்கு நூற்றுப் பதினைந்து ஆண்

குழந்தைகள் பிறக்கின்றன. இது ஏன் என்று உயிரியல் விஞ்ஞானிகள் ஆச்சரியப்பட்டுக் கொண்டே இருக்கிறார்கள். இது ஏன் இப்படி? எப்போதுமே இப்படித்தான். நூற்றுக்கு நூற்றுப் பதினைந்து. திருமண வயதுக்கு வரும்போது எப்படியும் பதினைந்து பையன்கள் இறந்து போகிறார்கள். சரியாகப் போய்விடுகிறதா? பையன்களை வளர்த்து ஆளாக்குவது சிரமம். பெண்கள் எப்படியோ பிழைத்துக் கொள்கிறார்கள். எனவே இயற்கையே சமனப்படுத்தி விடுகிறது. ஆரம்பத்தில் இருந்தே பதினைந்து பேர் கூடுதல். செத்தவர்கள் போக மிச்சம் இருப்பவர்கள் சரியாகப் போகிறார்கள். இப்படி இல்லையென்று வைத்துக்கொள். நூற்றுக்கு நூறாக இருந்தால் திருமணப் பருவத்துக்கு வரும்போது நூறு பெண்களுக்கு எண்பத்தைந்து அல்லது எண்பது ஆண்கள் என்று இருப்பார்கள். இருபது பெண்களுக்குக் கணவன்மார்கள் கிடைக்க மாட்டார்கள். இது அவ்வளவு சரியான ஏற்பாடு இல்லைதான்.

நூற்றுப் பதினைந்து பையன்கள் பிறந்தால் திருமணப் பருவத்தில் நூற்றுக்கு நூறு என்று சரியாகப் போய்விடுகிறது. ஏன் இயற்கை இதை இப்படி வகுத்து வைத்திருக்கிறது என்பதற்கு அறிவார்த்தமான பதிலைச் சொல்ல முடியாதுதான்.

கடந்த இரண்டு உலகப் போர்கள் இதை இன்னமும் சிக்க லாக்கி வைத்துவிட்டன. சமன்பாடு சீர்குலைந்து போய்விட்டது. ஒவ் வொரு போருக்குப் பின்னும் குழந்தைப் பிறப்பு அதிகமாகிறது. அதுவும் ஒரு நியதிதான். போரில் பலர் இறக்கிறார்கள். எனவே அதைச் சரிசெய்ய வேண்டி இருக்கிறது. ஏதோ ஒரு சூட்சும சக்தி இதை நிர்வகிக்கிறது.

போருக்குப் பின் நிறையக் குழந்தைகள் பிறக்கிறார்கள் என்பதற்கு வேறொரு காரணத்தையும் சொல்லலாம். போர்க்களத்தில் இருந்து திரும்பிய வீரர்கள் கொஞ்சம் அதிகமாகவே காம சுகத்தில் ஈடுபடுகிறார்கள் என்று சொல்லலாம். ஆனால் போருக்குப்பின் பிறக்கும் குழந்தைகளில் ஆண்குழந்தைகள் அதிகமாகவும் பெண்குழந்தைகள் குறைவாகவும் பிறப்பது ஏன்? இதற்கு என்ன விளக்கத்தைத் தருவது?

பெண்களைவிடப் போரில் இறப்பவர்கள் ஆண்களே அதிகம். எனவே நூற்றுக்கு நூற்றுப் பதினைந்து என்ற கணக்கு சரிப்பட்டு வருவதில்லை. நூறு பெண்களுக்கு மூந்நூறு ஆண்குழந்தைகள் பிறக்கின்றன.

எங்கோ எப்படியோ ஒரு சூட்சும சக்தி செயல்பட்டு வருகிறது. ஒவ்வொரு பெண்ணுக்கும் ஓர் ஆண் இருக்கிறான். ஒவ்வோர் ஆணுக்கும் ஒரு பெண் இருக்கிறாள். ஒரு முழுமையின் இரண்டு பகுதிகள்தான் அவர்கள். ஆண்களில் ஒருவர் ஞானியாகும்போது பெண்களிலும் ஒருவர் ஞானியாக வேண்டும்.

அறியாமையில் இருந்து ஓர் ஆண் வெளியேறுகிறான் என்றால் அவன் திரும்ப வரப் போவதில்லை. இனியும் இன்னொரு கருப்பைக்குள் புகுந்து பிறப்பெடுக்கப் போவதில்லை. அப்படியானால் எங்கோ ஒரு பெண்ணும் அப்படி விட்டு விடுதலையாக வேண்டும். எனவே நான் பார்ப்பது இதைத்தான். எத்தனை ஆண்கள் ஞானியர் ஆகிறார்களோ அத்தனை பெண்கள் ஞானியர் ஆகிறார்கள். ஆனால் பெண்கள் அதைப்பற்றி அலட்டிக் கொள்வதில்லை. அதனால் அவர்கள் வெளியே தெரிவதில்லை.

**கடைசிக் கேள்வி:**

**பொறுத்திருந்து பார் என்று எப்போதும் சொல்கிறீர்கள். பொறுத்திருத்தலை இன்னதென என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. பார்ப்பது எப்படி?**

அதைப்பற்றிய கவலையே உனக்கு வேண்டாம். பொறு. போதும். பார்த்தல் தன்னால் உன்னை வந்து சேரும். பொறுத்திருப்பவன் ஆழ்ந்த திருஷ்டி பெறுகிறான். பொறுத்திருந்து பார் என்று சொல்லும்போது ஏக காலத்தில் பொறுத்தலும் பார்த்தலும் செய் என்ற பொருளில் நான் பேசவில்லை. பொறுத்திருந்தால் பார்ப்பாய் என்றுதான் சொல்கிறேன். எனவே பொறு. பார்த்தல் தானாக வந்து உன்னைச் சேரும்.

பொறுத்தல் பார்த்தலைப் படைக்கிறது. பொறுமை சாத்தியத்தைத் தருகிறது. முழுமையான பொறுமை முழுமையான திருஷ்டியைத் தருகிறது. அலைப்புற்ற மனதின் கண்கள் மேகம் மூடிய வானம். புகை மண்டிய களம். அவர்களால் பார்க்க முடியாது. பொறுமையாகக் காத்திருக்கும்போது மேகங்கள் ஒவ்வொன்றாக விலகுகின்றன. அவசரம் கொண்டு வந்து சேர்த்தவைதானே அவை!

பொறுமையாகக் காத்திருக்கும்போது அவை விலகிப் போய் விடுகின்றன. பார்வையிலும் சிந்தனையிலும் தெளிவு பிறக்கிறது. உன்னால் பார்க்க முடிகிறது. பொறுத்திருந்து பார் எனும்போது ஒரே சமயத்தில்

பொறுத்துக் கொண்டும், பார்த்துக் கொண்டும் இரு என்று நான் சொல்லவில்லை. பொறுத்திருந்தால் பார்வை கிடைக்கும் என்கிறேன். தானாக நடப்பது பார்ப்பது. நீ பார்க்கத்தான் போகிறாய். பொறுத்திருந்தால் போதும். புரிகிறதா?

பொறுத்திருக்க முடிகிறது என்றால் இதை அல்லது அதைத் தொட்டுவிட வேண்டும், சாதித்துவிட வேண்டும் என்ற நிலையில் இருந்து விடுபட்டுப் போகிறாய். ஆசைப்படும் மனதை ஓரம் கட்டி வைத்து விடுகிறாய். பொறுத்திருத்தல் என்றால் இங்கே இப்போது இருத்தல். இருந்து கொண்டிருக்கும். இந்தக் கணம்போதும். இந்தக் கணமே அத்தனையும். இப்படி உணரும்போது பார்வை தெளிவடைகிறது. மேகமில்லை. புகையில்லை. புகையின்றிச் சுடர் எரிகிறது. நீயும் பார்க்க ஆரம்பித்து விடுகிறாய்.



ஐந்து

## அதீத வெற்றியின் அபாயம்

வில்லை வெகுவாக வளைத்தாய் என்றால்
அடாடா... நிறுத்தியிருக்கலாமே என்று வருந்துவாய்.

வாளை வெகுவாகக் கூர் தீட்டக் காய்ச்சித் தட்டினால்
அதன் முனை பலநாள் நீடிக்காது.

உன் முற்றத்தில் தங்கம் மற்றும் நவரத்தினங்கள் நிறைந்திருந்தால்
அவற்றைப் பத்திரமாக வைத்திருக்க முடியாது.

கௌரவத்திலும் சொத்திலும் பெருமை கொள்ளும்போது
உன் வீழ்ச்சிக்கான விதைகளை விதைக்கிறாய்.

வேலை முடிந்துவிட்டதா? ஓய்வெடுத்துக்கொள்.
அதுதான் சொர்க்கத்தின் நெறி.

தர்க்கம் கடைசி வரை நீள்கிறது. வாழ்வோ எப்போதும் அப்படியில்லை. அதனால்தான் தர்க்கவாதம் வாழ்வைத் தொலைத்து விடுகிறது. தர்க்கம் ஒரு முடிவை நோக்கிப் போய்ச் சேரும் இயல்புடையது. வாழ்விலோ முடிந்த முடிவுகள் ஏதும் இல்லை.

வாழ்வுக்கு முடிவுகளே இல்லை. எந்த முடிவுமின்றி அது போய்க்கொண்டே இருக்கிறது. அதற்கு ஆதியும் இல்லை. அந்தமும் இல்லை. அது எப்போதுமே நடுமத்தில் இருக்கிறது. நிகழ்காலத்தில் நிற்கிறது. அது நடந்து கொண்டிருக்கும் ஒரு நிகழ்வு.

அதனால்தான் தர்க்கவாதம்பாற்பட்ட சிந்தனை போகப்போக ஜீவனற்றுப் போகிறது. அப்படித்தான் தர்க்கவாதம் தன் வீழ்ச்சியைத் தானே வகுத்துவிடுகிறது.

எந்த முடிவுக்கும் போய்ச் சேர்ந்து விடாதே. முடிவற்று வாழ். அப்படி வாழ்வதுதான் வாழ்வு. ஏனென்றால் அப்படி வாழும்போதுதான் நீ நடுமத்தில் நிலைக்கிறாய். நடுமத்தில்தான் சமன்பட்ட நிலைமை இருக்கிறது.

நேர் எதிரிடையானவை சமனப்படும் களம்தான் ஜீவிதம். எனவே அது எந்த முடிவுக்கும் வருவதில்லை. சமன்பட்ட நிலைமை காலங்காலத்துக்கும் நித்தியமாகி விடுகிறது. புரிந்து கொண்டவன் எவனும் எந்த முடிவுக்கும் போய்ச்சேர மாட்டான். அது அவனுக்குச் சாத்தியமே இல்லை. ஜீவிதத்திலேயே எந்த முடிவும் இல்லை எனும்போது ஞானி எப்படி இப்படித்தான் அல்லது அப்படித்தான் என்ற தீர்மானத்துக்கு வருவது?

நறுக்குத் தெறித்தாற்போல ஒரு பதிலைத் தாருங்கள் என்று லாவோட்ஸுவை யாரும் கேட்டால் அவர் சிரித்துக் கொள்வார். உன்னை முட்டாளெனத்தான் எடுத்துக் கொள்வார். ஜீவிதத்தின் இயல்பின் வழி வாழ்கிறவர் அவர். ஜீவிதத்தின் இயல்பு வழி வாழ்வதன் சுநாதமே சமன்பட்ட வாழ்வுதான். ஒரு கோடியை நோக்கி நகர்ந்து விடாதே. எந்த எதிர்முனைக்கும் போய்ச் சேர்ந்து விடாதே. எந்தத் துருவத்தையும் பிடித்துத் தொங்காதே. அப்படிச் செய்தால் நிலை தடுமாறிப் போய்விடுவாய்.

ஒரு கதை கேட்டிருக்கிறேன்.

ஒருமுறை ஓர் அரசன் தன் மனதுக்குப் பிடிக்காத ஒரு முடிவு எடுக்க வேண்டி இருந்தது. அவனுடைய மந்திரிகள் இருவர் ஏதோ தவறு செய்துவிட்டார்கள். அவர்கள்மீது அரசனுக்கு வெகு பிரியம். அப்படியே அவர்கள் தவறு செய்திருந்தாலும் அவர்களை மன்னித்து விடவேண்டும் என்று நினைக்கும் அளவுக்கு அவ்வளவு பிரியம். ஆனால் அப்படிச் செய்தால் அது சட்ட திட்டங்களை மீறிய செயலாகிப் போகும். தவறான முன்னுதாரணம் ஆகிப்போகும். எனவே அவர்களைத் தண்டித்தே ஆகவேண்டி இருந்தது. சட்டப்படி அவர்கள் செய்த குற்றத்துக்கு ஒரே தண்டனை மரண தண்டனைதான். என்ன செய்வது?

சிரமம்தான். என்றாலும் அவன் ஒரு வழி கண்டுபிடித்து விட்டான். ''அவர்களுக்கு மரண தண்டனை தரவேண்டியதுதான். என்றாலும் அவர்களுக்கும் ஒரு சந்தர்ப்பம் தருகிறேன். இரண்டு குன்றுகளுக்கு இடையே ஒரு கயிற்றைக் கட்டி விடுங்கள். அவர்கள் கீழே விழாமல் ஒரு குன்றில் இருந்து இன்னொன்றுக்கு அந்தக் கயிறு வழியாக நடந்து போய்ச் சேர்ந்தால் பிழைத்துப் போகட்டும். அவர்களை மன்னித்துவிடுகிறேன்'' என்றான்.

சாத்தியமே இல்லாத காரியம். அவர்கள் கயிற்றின் மேல் நடந்ததே இல்லை. அப்படியிருக்க அதல பாதாளத்துக்கு மேல் இரண்டு மலைகளுக்கு இடையே கட்டிய கயிற்றில் நடப்பதாவது? விழுந்து சாக வேண்டியதுதான்.

கயிற்றின்மேல் நடப்பதென்பது ஒரு வித்தை. அதைக் கவனத்துடன் கற்க வேண்டும். தாங்கள் கயிற்றின்மேல் நடக்கவேண்டி இருக்கும் என்று அவர்கள் கனவில்கூட நினைத்துப் பார்த்ததில்லை. அவர்களாவது கயிற்றின்மேல் நடப்பதாவது?

அவர்களில் ஒருவனுக்குத் தூங்கவே முடியவில்லை. இரவு முழுக்கத் தன்னைக் காப்பாற்றுமாறு கடவுளை வேண்டிக்கொண்டே இருந்தான். காலையில் டீ குடிக்கக்கூட முடியவில்லை. கயிற்றின்மேல் நடைபோட ஆரம்பிக்க வேண்டிய இடத்துக்கு வந்து சேர்ந்தான். தலைநகரில் இருந்த எல்லோரும் அங்கே கூடிவிட்டார்கள்.

இன்னொருவனா? அவனுக்குத்தான் தனக்குக் கயிற்றின்மேல் நடக்கத் தெரியாது என்பது நன்றாகத் தெரியுமே. கீழே விழுந்து சாக வேண்டியதுதான் என்பதும் சர்வ நிச்சயம். எனவே ஏன் கடைசி ராத்திரியைத் தூக்கமின்றிக் கழிக்கவேண்டும்? நன்றாகத் தூங்கினான். காலையில் வழக்கமாகக் குடிக்கும் டீ குடித்தான். சுவாதீனமாக நடந்து வந்து சேர்ந்தான்.

மற்றவன் நடுங்கிக் கொண்டிருந்தான். காய்ச்சலே வந்துவிட்டது. இவனோ எப்படி இருந்தாலும் சாகத்தானே போகிறோம் என்று நினைத்துக்கொண்டு வெகு சாவகாசமாக நின்று கொண்டிருந்தான். இறப்பு சர்வ நிச்சயம் எனும்போது கவலைப்பட்டு என்ன சாதிக்கப் போகிறாய்? மௌனமாகச் சாக வேண்டியதுதான்.

அவன் கயிற்றின்மேல் நடக்க ஆரம்பித்தான். என்ன ஆச்சரியம்! அவனால் நடக்க முடிந்தது.

யாராலும் நம்ப முடியவில்லை. கயிற்றின்மேல் நடக்கும் கழைக் கூத்தாடிகள்கூட வேடிக்கை பார்க்க வந்திருந்தார்கள். அவர்களுக்கும் பெருத்த ஆச்சரியம்தான். அவர்களுக்கேகூட அது சிரமமான காரியம். மலைகளுக்கு இடையே அவ்வளவு தூரம்! ஒரு தப்படி வைத்தாலும் போயிற்று. இடது பக்கமோ வலது பக்கமோ தப்பித் தவறிச் சாய்ந்து விட்டால் போயிற்று. அதல பாதாளத்தில் விழ வேண்டியதுதான். கொஞ்சம் தடுமாறினாலும் போயிற்று. ஒவ்வோர் அடியிலும் இறப்பு காத்துக் கொண்டிருந்தது.

ஆனால் அவனோ நடந்தான். நடந்து கொண்டிருந்தான். சுவாதீனமாக நடந்தான். காலை நேரத்தில் உலாவப் போவதைப்போல வெகு சுவாதீனமாக நடந்துகொண்டு இருந்தான். அட - போய்ச் சேர்ந்து விட்டானே!

மற்றவனோ நடுங்கிக் கொண்டிருந்தான். வியர்த்து விறுவிறுத்துப் போயிருந்தான். இந்தக் கடைசியில் இருந்து அங்கே போய்ச் சேர்ந்து விட்டவனைப் பார்த்துக் கத்தினான். ''எப்படிப்பா போய்ச் சேர்ந்தே? சொல்லு. நானும் அப்படியே நடந்து வந்து சேர்ரேன்.''

அவனோ, ''சொல்றது கஷ்டம்பா. ஏன்னா எனக்கே தெரியாது. எனக்குத் தெரிஞ்சது எல்லாம் நான் எப்பவுமே நடக்கற மாதிரி நடந்தேன்கறதுதான். நான் கயித்து மேலே நடக்கறவன் இல்லே. ஆனா எனக்கே இப்போ தெரியுது நான் நடக்க முடியும்னு. ஏன்னா வாழ்க்கை முழுக்க இப்படித்தான் நான் நடந்துக்கிட்டு இருந்திருக்கேன். எந்தப் பக்கமும் சாயாமெ, எப்பவும் எந்தக் கடைசிக்கும் போகாமெத்தான். அப்படி இல்லேன்னாலும் கொஞ்சம் ஒரு பக்கம் அதிகமாச் சாஞ்சிட்டேன்னா உடனே மறுபக்கம் அதே அளவு சாய்ஞ்சு சரி செய்துக்கறேன். வேறே ஒண்ணும் செய்யல்லே. செஞ்சதும் இல்லே. ஆனா இதைக் கேட்டுக் கறதாலே உனக்கு எந்தப் பிரயோசனமும் இல்லே. ஏன்னா இதைத் திடீர்னு கத்துக்க முடியாது. இப்படியே வாழ்ந்துக்கிட்டு இருந்தாத்தான் அந்தச் சாதுரியம் சாத்தியமாகும்.''

அவனுடைய வார்த்தையைக் கவனி. சாதுரியம். அதைத்தான் சொல்கிறேன். ஆன்மிகம் என்பது ஒரு சாதுரியம். அறிவியல் அல்ல. அப்படி இல்லையென்றால் அதை வெகு சுலபமாகக் கற்றுக் கொடுத்துவிடலாம். வெகு சுலபமாக விளக்கிவிடலாம். எந்தச் சிரமமும் எங்கேயும் இருக்காது.

அறிவியலில் மிகப்பெரிய கேள்வி என்று சொல்வதற்குக்கூட இன்றில்லையென்றால் நாளை ஒரு பதிலைக் கண்டுபிடித்துவிட முடியும். ஆனால் அப்படிக் காணப்படும் தீர்வு அறிவார்த்தமான தீர்வாகத்தான் இருக்கும். அறிவைக் கசக்கிக் காணும் தீர்வாகத்தான் இருக்கும். இன்றில்லை என்றால் ஏதோ ஒருநாள் ஒரு புதிருக்கு விடை கிடைக்கிறது என்றால் அந்த விடை எல்லோருக்கும் பொதுவானதாகத்தான் இருக்கும். விடை கண்டவனுக்கு ஒன்று - பிறருக்கு இன்னொன்று என்பதெல்லாம் இல்லை.

ஐன்ஸ்டீன் சார்பியல் பற்றிய புதிருக்கு விடை கண்டார். இனி இன்னொருவர் வந்து அதற்கு இன்னொரு தீர்வைக் காணவேண்டிய அவசியம் இல்லை. அனைவருக்கும் பொதுவான தீர்வுதான் கண்டாயிற்றே. அதை இன்னதென்று புரிந்துகொண்டால் போதும். அவ்வளவுதான்.

அறிவியல் என்பது வெகு ஜன சமாச்சாரம். யாரோ ஒருவர் ஒரு புதிருக்கு விடை காண்கிறார். எல்லோருக்கும் பொதுவான விடையாக அது ஆகிப் போய்விடுகிறது. யாரோ ஒருவர் ஒன்றைக் கண்டுபிடிக்கிறார். அது எல்லோருக்கும் பொதுவாகப் பயன் தருவதாக ஆகிப் போய்விடுகிறது. ஆமாம் அறிவியல் மாந்தர் அனைவருக்கும் பொதுவானது.

ஆன்மிகத்திலோ ஆயிரக்கணக்கான லாவோட் சூக்கள் தோன்றி யிருக்கலாம். என்றாலும் எந்தப் புதிரும் அவிழ்ந்து விடுவதில்லை. அவரவர் அதை அவிழ்க்க வேண்டியிருக்கிறது.

ஆன்மிகம் அறிவியல் அல்ல. அறிவியல், சாத்திரங்களை உருவாக்கலாம். கொள்கைகள் வகுக்கலாம். ஆனால் ஆன்மிகம் சாத்திரங்களைப் படைக்க முடியாது. கொள்கைகளை வகுக்க முடியாது. ஆன்மிகம் வாழ்ந்து அனுபவிக்க வேண்டிய ஒன்று. அதை ஒரு கொள்கைக்குள் அடக்கிவிட முடியாது. அப்படி அடக்கிவிட முடியாத அளவுக்கு அது சூட்சுமமானது. மென்மையானது. கொள்கைகள் கரடுமுரடானவை. பொருட் சார்புடைவை. அனுபவம் சூட்சுமமானது.

கயிற்றின்மேல் நடப்பவனையே எடுத்துக் கொள்ளலாமே. எப்படி நடப்பது என்ற கொள்கை கோட்பாடுகளை வைத்துக்கொண்டு கழைக் கூத்தாடி கயிற்றின்மேல் நடக்கும் அனுபவத்தை ஒரு கொள்கைக்குள்

அடக்க முடியுமா என்ன? கொள்கையைப் பூரணமாகப் புரிந்து கொள்ளலாம். அதில் பரீட்சை வைத்தால் நூற்றுக்கு நூறு மார்க் வாங்கலாம். ஆனால் கொள்கைப் பின்புலத்தைப் புரிந்துகொண்டு அதில் ஒரு பரீட்சையிலும் தேறியிருப்பதை வைத்துக்கொண்டு கயிற்றின்மேல் நடந்து விடுவாயா? முடியாதப்பா, முடியாது.

ஆன்மிகம் அறிவியல் அல்ல. அது ஒரு கலைகூட அல்ல. கலையைக் கூடப் பிறரைப் பார்த்துச் செய்துவிடலாம். சாதுரியம் அப்படிப்பட்டதல்ல. கலைப்படைப்பு ஒருவனுக்குப் புறத்தே செய்யப்படுவது. ஒரு கவிதை... ஒரு நடனம்... ஓர் ஓவியம்... இதுவெல்லாம் காட்சிப் பொருட்கள். பிறர் செய்வதைப் பார்த்துச் செய்துவிடலாம். பிக்காஸோவின் ஓவியங் களுக்குப் போலிகள் இல்லையா என்ன?

ஆனால் ஆன்மிகத்தில் அப்படிப் பாசாங்குள் செய்ய முடியாது. புறத்தே இருக்கும் எதுவுமல்ல ஆன்மிகம். அகத்தே இருப்பது. ஒரு பிக்காஸோ அல்லது ஒரு மைக்கேல் ஏஞ்சலோ வரைந்ததைப் பார்த்து அப்படியே ஓர் ஓவியத்தை வரைந்து விடலாம். ஆனால் லாவோட் சூவைப் பார்த்து இன்னொரு லாவோட் சூவாக ஆவது எப்படி? என்னவோ இருக்கிறது என்று தெரிகிறது. ஆனால் தெற்றெனப் புலப்படுவதில்லை. அவருக்கு ஏதோ தெரிந்திருக்கிறது என்று தெரிகிறது. ஆனால் அது இன்னதுதான் என்று சுட்டிக்காட்ட முடிவதில்லை. இன்னதுதான் என்று வரையறுத்துச் சொல்ல முடியவில்லை. அதைத்தான் சாதுரியம் என்கிறேன்.

சாதுரியம் என்றால் என்ன? பல காலமும் பல முயற்சிகளும் செய்து பெறுவதே சாதுரியம். தவறுகள் செய்து திருத்திக்கொண்டு, விழுந்து எழுந்து, பாதை தவறி மீண்டும் திரும்பி வந்து, ஆயிரக்கணக்கில் வாழ்வில் சோதனைகள் செய்து பெறுவதே சாதுரியம். பல தவறுகள், குற்றங்கள் இவற்றின் திரட்சிதான் சாதுரியம். ஏதோ ஒன்று உனக்குள் தோன்றி வளர்ந்துகொண்டு இருக்கிறது. அதைத் தெரிந்துகொண்டாய் என்றால் மறந்து போகலாம். அதுதான் உன்னோடு எப்போதும் இருக்கிறதே. அதை நினைத்துப் பார்த்துக்கொள்ள வேண்டியதில்லை. நினைத்துப் பார்த்துத்தான் அதன் இருப்பைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்றால் அது இன்னமும் சாதுரியமாகக் கனியவில்லை என்றுதான் பொருள். அப்படியானால் அது மனத்தளவே நின்றுபோன ஒன்றாகிப் போகிறது. எலும்போடு எலும்பாகி விடுகிறது. மஜ்ஜைக்குள் ஊடுருவிப் போகிறது. ஜீவிதத்துக்குள் புகுந்து கொள்கிறது. பிறகென்ன? அதை மறந்தே போய்விடலாம்தான்.

எப்படி நடப்பது எப்படி இருப்பது என்று ஒரு லாவோட் சூ நினைத்துப் பார்த்துச் செய்ய வேண்டியதில்லை. அது பழகிக்கொண்ட

பழக்கம் அல்ல. உனக்குத் தெரியும் என்றால் தெரியும். அவ்வளவுதான். அதை மறந்து போய்விடலாம்தான். மனதிலிருந்து கழற்றிப் போட்டு விடலாம்.

ஆனால் அதைத் தொடரும்போது அதைப்பற்றிச் சிந்திக்காமல் தொடர்வாய். சாதுரியம் என்பது விஞ்ஞானமோ கலையோ அல்ல. அது வாழ்ந்து அனுபவிப்பது. இதுதான் கலைகளில் மிகப்பெரிய கலை. விஞ்ஞானத்தில் மிகப்பெரிய விஞ்ஞானம். வாழ்வின் அறிவியல். வாழும் கலை.

வாழ்வினூடே நடந்துபோய்ப் பார்க்கவேண்டும். எப்படியெல்லாம் கீழே விழுகிறாய் என்பதைப் பார்க்கவேண்டும். உன்னையே நன்றாகக் கவனித்துப் பார்த்து எப்படியெல்லாம் வழிதவறிப் போகிறாய் என்பதைப் பார்க்கவேண்டும். மனமோ ஒரு கோடிக்கு இழுத்துக்கொண்டு நிற்கத்தான் பாயும். எப்போதெல்லாம் சமநிலையில் பாதிப்புத் தெரிகிறதோ அப்போதெல்லாம் மறுகோடிக்குப் பாய்ந்துவிடு.

மனம் வலதுசாரியாக இருக்கிறது. இல்லையேல் இடதுசாரியாக இருக்கிறது. வலதுசாரியாக இருக்கும்வரை இடது பக்கம் நகர்வதே இல்லை. இடதுசாரியாக இருக்கும்வரை வலது பக்கம் நகர்வதே இல்லை.

என்றாலும் மிக அரிதான நிகழ்வையும் நான் கண்டிருக்கிறேன். மனம் நடுமத்தில் நிற்பது. என்றாலும் தன் மிதவாதம் பற்றி இடதுசாரி போலவும் வலதுசாரி போலவும் வெறித்தனமாகத்தான் இருக்கிறது. அப்படிப்பட்ட மனமும் நடுமத்தில் நிலைப்பதில்லை. ஏனென்றால் நடுவில் நிலைப்பவன் வசம் வெறித்தனம் இருக்காது. தீவிரவாதிகள்தான் வெறிபிடித்துத் திரிவார்கள். ஏதோ ஒன்றைப் பிடித்துக்கொண்டு தொங்குவார்கள். நடுமம் என்பது எதுவொன்றும் அல்ல. அது எப்போதுமே சமநிலை பெற அசைந்து கொண்டிருப்பது.

புரிந்துகொள்ள முயற்சி செய். தாவோ உனக்குத் தரவிருப்பதில் மிகவும் அர்த்தபூர்வமானது இதுதான். நடுமம் என்பது நிலைத்துவிட்ட ஸ்தானம் அல்ல. நடுவே நிற்க இப்படியும் அப்படியும் அசைந்துகொண்டே இருக்கவேண்டி இருக்கிறது. எனவே வலது கோடியிலோ இடது கோடியிலோ இருப்பவனைப்போல அசையாது நிலைத்து விடுவது நடுமத்தில் சாத்தியமே இல்லை. நடுமத்தைக் குரங்குப் பிடியாகப் பிடித்துக்கொள்ள முடியாது. இடது பக்கமும் வலது பக்கமும் மாறிமாறிச் சாய்ந்து நிமிர்ந்து கொண்டிருந்தால்தான் நடுமத்தில் நிற்க முடியும். கொஞ்ச நேரத்துக்கு அவன் வலதுசாரியாகத் தெரிவான். கொஞ்ச நேரத்துக்கு இடதுசாரியாகத் தெரிவான். கயிற்றின்மேல் நடப்பவனைப் போலத்தான்.

இரண்டு துருவங்களுக்கு இடையே தொடர்ந்து சமநிலைப்படுத்திக் கொண்டே இருப்பதுதான் நடுமத்தில் இருப்பது.

நடுமம் என்பது ஜீவனுள்ள ஸ்தானம். ஜீவனுள்ள ஒரு சூழல். ஒருமுறை போய்ச் சேர்ந்தவுடன் நிலைத்துப்போய் ஜீவனற்றுப் போய் விடுவதல்ல. ஒவ்வொரு கணமும் அதைச் சாதிக்க வேண்டி இருக்கிறது. திரும்பத் திரும்பத் திரும்பத்தான். கயிற்றின்மேல் நடப்பவனைக் கவனித்துப்பார். புரியும்.

நான் சிறுவனாக இருந்தபோது கழைக்கூத்தாடி வந்திருக்கிறான் என்று தெரிந்தால் ஓடி ஓடிப்போய்ப் பார்ப்பேன். வாழ்வில் மிக முக்கியமான ஒன்று அவனுக்குத் தெரிந்து இருக்கிறது என்று அப்போதிருந்தே எனக்குத் தெரிந்திருந்தது.

என்ன செய்கிறான் அவன்? அவன் நடுவில் அசையாமல் நின்றுவிடுவதில்லை. நின்றால் கீழே விழுந்து விடுவான். எந்த ஒரு கணமும் அவன் அசைவின்றி நிற்பதே இல்லை. எப்போதும் உயிர்த்துடிப்போடு இருக்கிறான். எப்போதும் நிலைமாறிக்கொண்டே இருக்கிறான். நகர்விலேயே இருக்கிறான். ஆனால் நகர்வின் நடுவில் சமனப்படுத்தும் மையம் ஒன்று இருந்துகொண்டே இருக்கிறது.

கொஞ்சநேரம் வலதுபக்கம். கொஞ்சநேரம் இடது பக்கம் என்று நகர்ந்துகொண்டே இருக்கும் அவன் நிலைத்துப் போனவனாக இருப்பதே இல்லை. நிலைமாறாமல் அவன் இருக்கவேண்டும் என்று நீ கேட்டால் அவன் கீழே விழுந்து சாக வேண்டியதுதான். "ஒரு ஸ்தானத்தில் நின்றுவிடு. வலதுசாரி என்றால் அப்படியே இருந்துவிடு. இடதுசாரி என்றால் அப்படியே இருந்துவிடு. அல்லது நடுவில் நேராக நிற்கிறாயா? அப்படியே இருந்துவிடு. ஆனால் நீ என்ன செய்கிறாய்? எப்போதும் நகர்ந்துகொண்டே இருக்கிறாயே!" இப்படி அவனிடம் பேசினால் அவனைக் கொன்று விடுவாய். எந்தவொரு அசையாத நிலையும் கொன்றுதான் விடும். அசையாதிருப்பது என்பது செத்துப் போவதுதான். அதுவும் பயனில்லாது செத்துப்போவது. அசையாது நிலைத்து விடுவது என்பது வாழ்வைத் தவறவிட்டு விடுவது.

அவனால் நடுவே நிலைத்து நின்றுவிட முடியாது. நடுவே இருக்கவேண்டும் என்றால் அவன் இடது புறமும், வலது புறமும் அசைந்தாட வேண்டி இருக்கிறது. எப்போதும் நகர்ந்து நகர்ந்து சமநிலைப்படுத்திக் கொள்ள வேண்டி இருக்கிறது. ஒவ்வொரு கணமும் வாழ்க்கை மாறிக்கொண்டே இருக்கிறது. பிறகு எப்படி நீ மட்டும் மாறாமல்

நிலைத்திருப்பது? ஒவ்வொரு கணமும் ஒவ்வொன்றும் மாறிக்கொண்டே இருக்கிறது. எதுவும் நிலைத்து நிற்பதில்லை.

ஹெராக்ளிடஸ் சொல்வதைத்தான் பாரேன். ஒரே நதியில் இரண்டுமுறை கால் நனைக்க முடியாது. இரண்டாவது தடவை கால் வைக்கும்போது நதி மாறிப் போய்விட்டது. நதி மட்டுமல்ல. நீயும்தான் மாறிப் போய்விட்டாய். எப்படி ஒரே நதியில் இரண்டுமுறை காலை நனைப்பது? நதியும் ஓடிக்கொண்டே இருக்கிறது. நீயும் மாறிக்கொண்டே இருக்கிறாய். நதியும் நீயும் எப்போதும் ஒன்றுதான் என்பது ஒரு மயக்கம். எதுவும் எப்போதும் ஒன்றாகவே இருப்பதில்லை. மாறுதல்தான் எதார்த்தம். அப்படி மாறிக்கொண்டே இருக்கும் உலகில், ஜீவனுள்ள உலகில், நீ மட்டும் ஒரே ஸ்திதியில் நின்றால் நீ செத்துப் போனவன்தான். அப்படிச் செய்ய நினைப்பதே தற்கொலை நினைப்புத்தான்.

அதனால்தான் யாரெல்லாம் இது இப்படித்தான் என்று தீர்மானித்து விட்டார்களோ அவர்களெல்லாம் செத்துப் போனவர்கள் என்கிறேன். நான் ஓர் இந்து என்ற முடிவுக்கு வந்துவிட்டால் நீ செத்துப் போனவன். நான் ஒரு முகம்மதியன் என்ற தீர்மானத்துக்கு வந்துவிட்டால் நீ செத்துப் போனவன். ஏனென்றால் சிலநேரம் ஓர் இந்து முகம்மதியனை நோக்கிச் சாயவேண்டி இருக்கிறது. ஒரு முகம்மதியன் ஓர் இந்துவை நோக்கிச் சாயவேண்டி இருக்கிறது.

சமநிலைதான் வாழ்க்கை. நான் ஒரு கம்யூனிஸ்ட் என்ற தீர்மானத்துக்கு வந்துவிட்டால் நீ செத்துப் போனவனாகிப் போகிறாய். உயிரோடு இருக்க வேண்டுமானால் ஒரு கம்யூனிஸ்ட் முதலாளித்துவத்தை நோக்கிச் சாயவேண்டி இருக்கிறது. ஒரு முதலாளி கம்யூனிஸ்டை நோக்கிச் சாயவேண்டி இருக்கிறது. சிந்தனையைப்போல வாழ்க்கை சட்ட திட்டங்களுக்கு உட்பட்டதல்ல. சிந்தனை நேர்கோட்டில் நகர்கிறது. வாழ்வோ பைத்தியக்காரத்தனமாக நகர்கிறது.

ஒரு நிகழ்ச்சி பற்றிக் கேட்டிருக்கிறேன். தாவோயிஸ்ட் சொன்னதல்ல. என்றாலும் தாவோயிஸ்ட் இயல்புடையது. தெரிந்தோ தெரியாமலோ - இதைச் சொன்னவர் தாவோயிஸத்தை இதற்குள் கொண்டு வந்துவிட்டார். ஒரு ஜெர்மானியர் சொன்னது.

ஒரு கோழிக்குஞ்சு தன் கூண்டின்மேல் தேமே என்று உட்கார்ந்திருந்தது. எந்தக் கவலையும் இல்லாமல் ஒரு புத்தனைப்போல உட்கார்ந்திருந்தது. அப்போது திடீரென அங்கே ஒரு மனிதன் வந்தான். கோழிக்குஞ்சு பயந்து போய் ஓடி ஒளிந்தது. திரும்ப வந்து பார்த்தபோது அவனைக் காணோம். ஆனால் கொஞ்சம் சோளம் சிந்திக் கிடந்தது.

கோழிக்குஞ்சு சிந்தனை வசப்பட்டது. விஞ்ஞானபூர்வமான ஆவல் ஒன்று தோன்றியது. எங்கிருந்து வந்திருக்கும் இந்தச் சோளம்?

அடுத்த நாளும் அவன் வந்தான். கோழிக்குஞ்சும் ஓடி ஒளிந்தது. திரும்பி வந்தது. அவன் போய்விட்டிருந்தான். ஆனால் சோளம் கொஞ்சம் கொட்டிக்கிடந்தது. நிச்சயமாக அவனுக்கும் சோளத்துக்கும் ஏதோ தொடர்பு இருக்கவேண்டும். என்றாலும் விஞ்ஞானபூர்வமாகச் சிந்திக்கிற யாரும் திடீரென ஒரு முடிவுக்கு வந்துவிடக் கூடாது அல்லவா? அவசரப்பட்டு எந்தக் கொள்கையும் வகுக்கக் கோழிக்குஞ்சு தயாராக இருக்கவில்லை.

எனவே காத்திருந்து பார்க்க முடிவெடுத்தது. சரியான விஞ்ஞான மூளைதான். பொறுத்துப் பொறுத்துப் பொறுத்துப் பார்ப்பது. தினமும் ஒரே கதை திரும்பத் திரும்ப நடந்தது.

இப்படியாகக் கொஞ்சம் கொஞ்சமாக காரண காரியம் பற்றிய ஒரு கொள்கைக்கு அந்தக் கோழிக்குஞ்சு வந்தது. அவன் வந்தபோதெல்லாம் சோளமும் வந்தது. தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்பது தடவை கவனித்தது. இனி எந்தச் சந்தேகமும் இல்லை. காரணம் அவன் வந்தது. காரியம் சோளம் கிடந்தது.

தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்பது தடவை போதுமல்லவா? காரண காரியம் சரியாகத்தான் பொருந்தி வருகிறது என்ற முடிவுக்கு வந்தது. போதும் கவனித்துக் கவனித்துப் பார்த்திருந்தது. ஒருமுறைகூடத் தவறாமல் நடந்திருக்கிறதே! எனவே இதை ஒரு விதியாகக் கொள்ளலாம். மகிழ்ச்சியாக அவன் வரக் காத்திருந்தது. ஆயிரமாவது தடவையாக அவன் வந்தான்.

அவனுக்கு நன்றி சொல்ல அவன் பக்கம் போனது. கழுத்து திருகிக் கொல்லப்பட்டது.

வாழ்க்கையும் இப்படித்தான். அதில் காரண காரிய உறவு முறை ஏதும் இல்லை. தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்பது தடவை ஒன்று நடந்தாலும் எந்த முடிவுக்கும் வந்து விடாதே. ஆயிரமாவது தடவை நடப்பது வேறாக இருக்கலாம்.

இது வெறும் கதை மட்டுமல்ல. விஞ்ஞானிகள் மத்தியிலும் இப்போதெல்லாம் நிச்சயமற்றதன் தத்துவம் என்ற பெயரில் ஓர் எண்ண ஓட்டம் வளர்ந்து வருகிறது. ஹெய்சன்பெர்க்குக்குப் பின் வந்த காலத்தில் இருந்து விஞ்ஞானமும் வெகு நிச்சயமாக எதையும் கொள்வதில்லை.

எதுவும் நிச்சயம் இல்லை என்றுதான் விஞ்ஞானமும் சொல்கிறது. அப்படி ஏதாவது நிச்சயம்தான் என்றாலும் அது சற்றேறக்குறையத்தான்

நிச்சயம் என்கிறது. தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்பது தடவை சரிதான். ஆனால் ஆயிரமாவது தடவை மாறிப் போகிறது. விஞ்ஞானம்கூட ஆடிப்போய்விடுகிறது. ஆடிப்போகத்தான் வேண்டும். விஞ்ஞானத்துக்கும் வாழ்வோடுதானே சங்காப்தம்? வாழ்க்கையை விஞ்ஞானபூர்வமான காரண காரியக் கோட்பாட்டுக்குள் அடக்கிவிட முடியாது. வாழ்க்கை என்றும் ஒரு புதிராகத்தான் இருக்கிறது.

நடுமத்தில் இருக்கவேண்டும் என்றால் நடுமத்தைப் பிடித்துக் கொண்டிருக்க முடியாது. இதுதான் வாழ்வின் ரகசியம். நடுமத்தில் இருப்பதற்கு இடதும் வலதுமாக மாறிமாறி நகரவேண்டி இருக்கிறது. அப்போதுதான் நடுமத்தில் இருக்கமுடியும். ஏனென்றால் நடுமம் ஒரு நிலைத்த புள்ளியல்ல. நடுமம் உன்னிலிருந்து புறத்தே எங்கேயும் இருப்பதல்ல. நடுமம் உனக்குள்ளே இருக்கிறது. அது ஒரு சமனப்பட்ட நிலை. ஓர் இசை. ஒரு சுருதி கலையாத ராகம்.

இந்தக் கோட்டையும் அந்தக் கோட்டையும்பற்றி எச்சரிக்கையோடு இரு என்கிறார் லாவோட் சூ. இந்தக் கடைசிக்கோ அந்தக் கடைசிக்கோ போய்விடாதே. விழுந்து விடுவாய். ஒரு கடைசியில் இருக்கும் எதுவும் மறு கடைசியாக மாறிப் போகிறது.

இருபத்து நாலு மணி நேரமும் காதலித்துக்கொண்டே இருப்பது என்றால், காதலன் அல்லது காதலியை இருபத்து நாலு மணி நேரமும் தொடர்ந்து கொண்டிருப்பது என்றால், ஒரு கடைசிக்குப் போய்விடுகிறாய். எல்லாக் காதலர்களும் செய்வது இதுதான். கடைசியில் எல்லாமும் சிதைந்து போகிறது. நீயே உன் காதலை அழித்து விடுகிறாய். ஏனென்றால் அது மிகையாகிப் போகிறது. பொறுக்க முடியாததாகிப் போகிறது.

இருபத்து நாலு மணி நேரமும் காதலித்துக்கொண்டே இருக்க முடியாது. அப்படிக் காதலித்துக்கொண்டே இருப்பதென்பது இருபத்து நாலு மணிநேரமும் சாப்பிட்டுக்கொண்டே இருப்பதைப்போல. காதல் ஓர் உணவு. ஒரு கடைசிக்குப் போய்விடாதே. உணவே விஷமாகிப் போகும். அப்படித்தான் எதுவும் நேர் எதிரிடையாக மாறிப்போகும்.

உணவு போஷாக்குத் தருகிறது. ஆனால் மிகையாக உண்டால் அதுவே விஷமாகிப் போகிறது. கொன்றுவிடுகிறது. எது போஷாக்குத் தருவதாக இருந்ததோ அதுவே விஷமாகிப் போகிறது. கொன்றுவிடுகிறது. காதலும் ஒரு போஷாக்கு. மிகையாகிப் போனால் அதுவும் கொன்றுவிடுகிறது. மிச்சமாவது வெறுப்பு மட்டுமே. எதையும் மிகையாகச் செய்தால் அது அதற்கு நேர் எதிரிடையாகிப் போகிறது.

பணத்தை அதீதமாகத் துரத்திப் பார். பிச்சைக்காரனாகி விடுவாய். வாழ்வை முழுக்க இழந்து விடுவாய். வாழ்வின் பயனை இழந்துவிடுவாய். செல்வத்தைத் தேடி ஓடிக்கொண்டே இருப்பதில் வாழ்வு தரும் செல்வம் அனைத்தையும் இழந்தவனாகிப் போகிறாய்.

மகிழ்ச்சியை வெறித்தனமாகத் தேடிப் போனால் சோக வயப்பட்டு விடுவாய். மகிழ்ச்சியாக இருக்க வேண்டுமானால் மகிழ்ச்சியைத் துரத்திக்கொண்டு போகக்கூடாது. சில நேரம் அதை மறந்துவிடக்கூட வேண்டி இருக்கும். சிலநேரம் சோகத்தை அனுபவிக்கவும் வேண்டி இருக்கும்.

மகிழ்வாக இருக்க வேண்டுமானால் சிலநேரம் சோகத்தையும் அனுபவிக்கத் தெரியவேண்டும் என்கிறேன். அதுவும் வாழ்வின் ஒரு பகுதி. வாழ்வின் ஓர் அழகிய பகுதி. இப்படித்தான் வாழ்வில் சமநிலை காண்பது. சமநிலையைப் பராமரிப்பது.

இருபத்து நாலு மணி நேரமும் சிரித்துக்கொண்டே இருந்தால் உன் சிரிப்பு பைத்தியக்காரச் சிரிப்பாகிப் போகும்: ஒரு நோயாகிப் போகும். அது சிரிப்பாகவே இருக்காது. உனக்குப் பைத்தியம் பிடித்துப் போகும். சிரிப்பு ஜீவனுள்ளதாக இருக்க, புத்தி சுவாதீனமுள்ளதாக இருக்க, கண்ணீர்த் துளிகள் தேவை. இருபத்து நாலு மணி நேரமும் சிரித்துக்கொண்டே இருக்கமுடியாது.

குழந்தைகளைக் கவனித்துப் பார். அவர்கள் பரிசுத்தமானவர்கள். எதையும் தெளிவாகப் பிரதிபலிக்கிறவர்கள். ஒரு கண்ணாடியைப்போல.

எந்தக் குழந்தையாவது அளவுக்கு மீறிச் சிரித்தால் கிராமத்தில் என்ன சொல்வார்கள் தெரியுமா? ரொம்பச் சிரிக்காதே. அழப் போகிறாய். அப்படிச் சொல்வதில் ஒரு ஞானம் இருக்கிறது. ஒரு குழந்தை அளவுக்கு மீறிச் சிரித்தால் அழவேண்டி வரும். நன்றாகப் பார். சிரிக்கிறான். சிரிக்கிறான். சிரித்துக்கொண்டே இருக்க இருக்க அழ ஆரம்பித்து விடுகிறான். சிரிப்பு ஒரு கடைசிக்குப்போய் அழுகையாகிப் போகிறது.

இருபத்து நாலு மணி நேரமும் மகிழ்ச்சியாக இருக்கமுடியாது. சோகம் எனும் தளர்வு தேவைப்படுகிறது. இருபத்து நாலு மணி நேரமும் சோகமாக இருக்க முடியாது. மகிழ்ச்சி எனும் நெகிழ்ச்சி தேவைப்படுகிறது. அதுவும் கயிற்றின்மேல் நடப்பது போலத்தான். முட்டாள் மனிதன் எதிலும் தர்க்கரீதியாக இருக்க நினைக்கிறான்.

ஒரு சம்சாரியாக வாழ்கிறான். இருபத்து நாலு மணிநேரமும் சம்சாரச் சிந்தனைதான். ஒரு மணி நேரம் சற்றே ஓய்வெடுத்துக் கொள்கிறானா?

இல்லையே. தியானம், வழிபாடு, தனிமை அவனை அவனே அனுபவிக்க ஒரு மணி நேரமாவது ஒதுக்குகிறானா? இந்த உலகம், இதைச் சார்ந்த பொருட்கள் - இதைப்பற்றிக் கவலைப்படாமல் இருக்க முடிகிறதா? இல்லை. பிறகு ஒருநாள் சலித்துக் கொள்கிறான். அந்தச் சலிப்பு வந்துதான் ஆகவேண்டி இருக்கிறது.

இருபத்து நாலு மணி நேரமும் சம்சாரச் சுமையைச் சுமந்துகொண்டே இருந்தால் ஒரு நாளைக்குச் சலிப்பு வரத்தான் செய்யும். ஒரு கடைசிக்குப் போய்ச் சேர்ந்து விடுகிறாய். பிறகென்ன? சட்டி சுட்டதடா, கை விட்டதடா கதைதான். சன்னியாசியாகிப் போய் இமயமலை நோக்கி ஓடிப் போகிறாய்.

சன்னியாசி ஆனவர்கள் எல்லோருமே சம்சாரியாக இருந்தவர்கள் தான். முழுக்கச் சம்சாரிகள்தான் என்கிறேன். எதையோ செய்து கொண்டிருந்தார்கள். செய்ததை மிகையாகச் செய்து விட்டார்கள். மிகையாக எதையும் செய்யும்போது அதற்கு நேர் எதிரிடையான விளைவு நடக்கத்தான் செய்யும். பழிவாங்கல்தான்.

சொத்து, பணம், பேங்க் பேலன்ஸ் என்று அலைகிறான். திடீரென ஒருநாள் விரக்தியடைகிறான். ரொம்பச் சிரித்தான். இப்போது அழுகிறான். தப்பிக்கிறான். துறக்கிறான். சன்னியாசியாகிறான், இமயமலைக்கு ஓடுகிறான். குகைகளைத் தேடுகிறான்.

என்னதான் நடக்கிறது என்கிறாய்? சன்னியாசியாவது பெரும் புரட்சியா என்ன? அதெல்லாம் ஒன்றுமில்லை. இயல்பாக நடப்பதுதான். இயற்கையான நிகழ்வுதான். ரொம்பத்தான் லோகாயதத்தில் இருந்து விட்டான். இப்போது அதற்கு எதரிடையானது நடக்கிறது. இப்போது இருபத்து நாலு மணி நேரமும் சன்னியாசியாக இருக்கப் போகிறான்.

மறுபடி அதே முட்டாள்தனம். ஒரு நாளைக்கு அவன் திரும்பக் கடைவீதிக்கு வரப்போகிறான். இருபத்து நாலு மணி நேரமும் சம்சாரியாக இருந்தான். முடியவில்லை. இப்போது அதே முட்டாள்தனத்தைச் செய்யப் போகிறான். இருபத்து நாலு மணி நேரமும் சன்னியாசியாக இருக்கிறேன் என்கிறான். முடியாமல் போகப் போகிறது.

வாழ்வே ஒரு லயம். மூச்சை உள்ளே இழுத்தால் வெளியே விடவேண்டும். உள்ளேயே இழுத்துக் கொண்டிருந்தால் செத்துப் போக வேண்டியதுதான். வெளியே விட்டுக்கொண்டே இருக்கவும் முடியாது. வெளியே விட்டுக்கொண்டே இருந்தாலும் சாக வேண்டியதுதான். உள்ளே இழுத்து வெளியே விடவேண்டும். ஒரு சமநிலையில் இருக்கவேண்டும். உள்ளே போகுமளவு காற்று வெளியே வரும்போது ஆரோக்கியமாக

இருக்கிறாய். சம்சாரம் உள்ளிழுப்பு. சன்னியாசம் வெளியே விடுதல். இரண்டுமே தேவையாகி விடுகிறது.

என்னிடம் வருகிறவர்கள், ''எந்த மாதிரியான சன்னியாசிகளை நீங்கள் உருவாக்குகிறீர்கள்? இதைப்போன்றதை நாங்கள் கேள்விப்பட்டதே இல்லை. என்ன சன்னியாசிகள் இவர்கள்? அவரவர் வீட்டில் இருக்கிறார்கள். அவரவர் தொழிலைச் செய்கிறார்கள். ஆபீஸுக்குப் போகிறார்கள். பேக்டரிக்குப் போகிறார்கள். பெண்டாட்டி பிள்ளைகள் இருக்கிறார்கள். என்ன சன்னியாசம் இது? இதைப்பற்றி நாங்கள் கேள்விப்பட்டதே இல்லை'' என்கிறார்கள்.

சரிதான். இப்படிப்பட்ட சன்னியாசம்பற்றிக் கேள்விப்பட்டிருக்க முடியாது. ஆனால் இதுதான் சரியான சன்னியாசம். இதுதான் சமனப்பட்ட சன்னியாசம். இந்தச் சன்னியாசத்தில் மட்டும்தான் உள்மூச்சு வெளிமூச்சு லயம் கலையாது இருக்கிறது.

வெளிமூச்சும் உள்மூச்சும் சமனப்பட்ட நிலையில்தான் பேரானந்தத்துக்கான சாத்தியங்கள் அதிகம். எந்தப் பக்கமும் அதிகம் சாயாமல் இருக்கிறாய். திடீரென ஒருநாள் இரண்டையும் தாண்டிப் போய்விடுகிறாய்.

லாவோட் சு சொல்கிறார்:

**வில்லை வெகுவாக வளைத்தாய் என்றால்**
**அடாடா... நிறுத்தியிருக்கலாமே என்று வருந்துவாய்.**

இல்லையேல் உடைந்துவிடும். ஒரு வில்லைக் கடைசி வரைக்கும் வளைத்துப்பார், அடாடா... இன்னும் கொஞ்ச நாளைக்கு இருந்திருக்குமே என்று வருந்துவாய். வில்லைக் கடைசி வரைக்கும் வளைத்துப் பார்த்து விடாதே. முழுக்க வளைத்துப் பார்ப்பதென்பது இறப்புக்குத்தான் கொண்டுபோய்ச் சேர்க்கும். வாழ்வில் எதுவும் பூரணமாகி இருக்கக்கூடாது. அப்படிப் பூரணமாகிப் போய்விட்டது என்றால் பரிணாமம் நின்று போய்விடும்.

பூரணம் சாவு. பூரணம் இல்லாதது வாழ்வு. வாழ்வுக்குப் பூரணமடையாததன்மேல் வெகு பிரியம். பூரணமானவன் நீ என்று வைத்துக்கொள். வாழ்வு உன்னைத் தன்னிடமிருந்து எடுத்து எறிந்து விடும். குப்பையோடு குப்பையாக்கிக் கடாசி விடும். நீ உபயோகம் அற்றவனாகிப் போகிறாய்.

பூரணமடையாமல் இருந்து பார். வாழ்வு உனக்கு எல்லா வகையிலும் துணை நிற்கும். அதனால்தான் லாவோட் சுவின் இலக்கு பூரணம் என்பதில்

இல்லை. நானும் எதையும் பூர்த்தி செய்து விடுவதே வாழ்வின் லட்சியம் என்று கொள்வதில்லை.

பூரணமானவ்னாக இராத போதும் நீ முழுமையானவனாக இருக்க முடியும். அதேபோல் பூரணமானவனாக இருந்து முழுமையானவனாக இருப்பதும் சாத்தியமே. பார்க்கப்போனால் பூரணத்தை அடையாதபோதே நீ முழுமையானவனாக இருக்க முடியும். ஏனென்கிறாயா? பூரண மானவனாக இருப்பது என்றால் இடதுசாரியாகவோ வலதுசாரியாகவோ இருப்பது என்று பொருள். பிறகு நீ பூரணமான இடதுசாரி அல்லது பூரணமான வலதுசாரி ஆகிப் போகிறாய். அல்லது பூரணமாக நடுவே இருக்கிறவன் ஆகிப் போகிறாய். பூரணம் என்றாலே நிலைத்துப் போய்விடுவது என்றாகிப் போகிறது. உனக்குள் எதுவும் மாறப் போவதில்லை என்றாகிப் போகிறது. உறைந்து போனவனாகிப் போகிறாய். ஜீவனோடு ஓடுகிற நீராக இருப்பதில்லை என்றாகிப் போகிறது. பூரணத்தில் என்றும் நடுநிலைமை இருக்காது.

மனிதர்களிலேயே மிகச் சிறந்தவர் எவரும் பூரணராக இருந்ததில்லை. என்றாலும் அவர்கள் முழுமையானவர்களாகவே இருந்திருக்கிறார்கள். முழுமையானவர்கள் என்றால் அவர்களிடம் எல்லாமும் இருந்தன என்று பொருள். ஆனால் அப்படி அவர்களிடம் இருந்த எல்லாவற்றின் கூட்டுத் தொகையும் அல்ல அவர்கள் என்பதும் உண்மை. அவர்கள் அதைவிட அதிகமானவர்கள். அவர்களுக்குள் எல்லாமும் இருப்பதால் அவற் றிடையே ஓர் ஒத்திசைவு இருக்கிறது. அந்த ஒத்திசைவு அவர்களிடம் இருக்கும் அனைத்தையும் கடந்ததாக இருக்கிறது.

கூட்டல் வாய்பாட்டுக்கு அவர்கள் உட்பட்டவர்கள் அல்ல. அவர்களிடம் இருக்கும் திரட்சி கலைத் திரட்சி. ஒரு கவிதையில் வார்த்தைகள் பலவும்தான் இருக்கின்றன. ஆனால் வார்த்தைகளின் பொருளை எல்லாம் ஒன்றாகக் கூட்டினால் கவிதையின் பொருள் கிடைக்குமா என்ன? அப்படித்தான் என்றால் அது கவிதையே அல்ல. அது ஒரு வார்த்தைகளின் குவியல். அவ்வளவுதான். ஓர் ஓவியம் அதில் இருக்கும் நிறங்களைத் தாண்டிய ஒன்று. அப்படித்தான் இருக்க வேண்டும். இல்லையேல் என்ன மாதிரியான ஓவியம் அது என்கிறாய்?

ஒரு தடவை இது நடந்தது.

ஓர் அமெரிக்கன் பிக்காஸோ தன்னைப் படமாக வரைய வேண்டும் என்று ஆசைப்பட்டான். பிக்காஸோ எக்கச்சக்கமாகப் பணம் கேட்பார் என்று தெரியும். என்றாலும் அந்த அளவுக்கு அவருக்குத் தரத் தன்னிடம் வேண்டிய அளவுக்குப் பணம் இருக்கிறது என்று நினைத்துக் கொண்டான்.

அவரிடம் போய்ப் படம் வரைந்து தரவேண்டும் என்று கேட்டான். அவரும் ஒப்புக் கொண்டார். எவ்வளவு பணம் தருவது என்பதைப்பற்றி முதலில் பேசவில்லை. படம் வரைந்தாயிற்று. பிக்காஸோ எக்கச்சக்கமாகத்தான் கேட்டார். அவ்வளவு சிறிய ஓவியத்துக்கு இவ்வளவு பணம் கேட்பார் என்று அந்த அமெரிக்கன் நினைக்கவில்லை. ஒரு சிறிய கேன்வாஸ் துண்டு. சில வண்ணங்கள். இதற்குப்போய்ப் பத்தாயிரம் டாலர்களா?

''நீங்க கேட்கறது ரொம்ப ஜாஸ்தியாத் தெரியுதுங்க. இதிலே பத்தாயிரம் டாலருக்கு என்னங்க இருக்குது?''

''சரிதான். அதுலே உனக்கு என்ன தெரியுது?''

''ஒரு கேன்வாஸ் துண்டு. கொஞ்சம் வர்ணம். அவ்வளவுதானே?''

''சரி. பத்தாயிரம் டாலர் குடு. இல்லே உனக்கு எவ்வளவு தரலாம்னு தோணுதோ அவ்வளவு குடு.''

''அஞ்சாயிரம் டாலர் குடுத்துடறேன்.''

அவன் ஐந்தாயிரம் டாலரைக் கொடுத்தவுடன் ஒரு துண்டு கேன்வாஸையும் சில ட்யூப்களில் வர்ணத்தையும் போட்டுக் கொடுத்தார். ''எடுத்துக்கோ! இதைத்தானே கேட்டே!''

ஒரு படம் என்பது கேன்வாஸை மீறிய சமாச்சாரம். வர்ணங்களை மீறிய விஷயம். அது ஒரு சுருதி சேர்ந்த ராகம். பிக்காஸோ வரையும்போது அது மிகப் பிரமாதமான சுருதியோடு கூடிய ராகம். பிரமாதமான ஒத்திசைவு. கேன்வாஸுக்கும் வர்ணத்துக்கும் அல்ல பணம் தருவது. அந்த ஒத்திசைவுக்குத்தான் அந்தப் பணம். கேன்வாஸுக்கும் வர்ணத்துக்கும் இடையே ஓர் ஒத்திசைவைக் கொண்டுவந்து ஓவியமாக்கியதற்குத்தான் அந்தப் பணம். இரண்டிலும் இருந்தாலும் இரண்டையும் கடந்து நிற்பது.

ஒருவன் முழுமையானவன் எனும்போது அவனிடம் எல்லாமும் இருக்கின்றன. இடது, வலது, நடு என்று எல்லா நிலைகளும்தான் இருக்கின்றன. அவற்றுக்கு இடையே இருக்கும் எல்லா ஸ்திதிகளும்தான் இருக்கின்றன. அவனிடம் அனைத்துக் கோணங்களும் இருக்கின்றன.

அவன் ஒரு வானவில். எல்லா நிறங்களின் அடிப்படை நிறங்கள் அவனிடம் இருக்கின்றன. ஆனால் அவனோ அந்த நிறங்கள் அனைத்தையும் கடந்த ஒன்றாக இருக்கிறான். அவனிடம் ஓர் ஒத்திசைவு இருக்கிறது. இந்த ஒத்திசைவு கணத்துக்குக் கணம் மாறிக்கொண்டே இருக்கிறது. மறுபடி மறுபடி அதைச் சாதிக்கவேண்டி இருக்கிறது. அதுதான் அதனுடைய அழகே. அதனால்தான் அது பழையதாகிப்போய் அலுப்புத்

தட்டுவதாக ஆவதில்லை. எதிலிருந்தும் இல்லாமல் இந்தச் சுநாதம் எழுந்துகொண்டே இருக்கிறது. விடியலின் பனித்துளியைப்போல ஒவ்வொரு கணமும் புதியதாக இருக்கிறது. அது என்றும் புதியது.

ஒரு லாவோட் சூ இந்தப் புத்துணர்வோடு வாழ்கிறவர். பசுமை மாறாக் காட்டைப்போல இருக்கிறவர். அவர் எதையாவது சாதித்திருந்து அது என்றைக்குமாகச் சாதிக்கப்பட்டது என்றாகிப் போனால் அது புளித்துப் போனதாகிப் போகிறது. பிறகென்ன? அதன்மேல் கடந்தகாலம் என்ற தூசி படர ஆரம்பிக்கும். வெகு சீக்கிரத்தில் அலுப்புத் தந்துவிடும். அதை எடுத்து எரிந்துவிடலாம் என்று தோன்றும்.

அவ்வளவேன்? ஞானம்கூட மறுபடி மறுபடி பெறாமல் ஒருமுறை பெற்றதை என்றைக்கும் வைத்துக் கொண்டிருப்பது என்றாகிப் போனால் சலிப்புத்தான் தருவதாகிப் போகும். வெகு சீக்கிரத்திலேயே உனக்கு அலுத்துப் போகும்.

**வில்லை வெகுவாக வளைத்தாய் என்றால்**
**அடாடா... நிறுத்தியிருக்கலாமே என்று வருந்துவாய்.**

வில்லை வெகுவாக வளைத்து விடாதே. சிரிக்க வேண்டுமா? உரத்துச் சிரிக்காதே. புன்னகை போதுமே. உரத்துச் சிரித்தால் கண்ணில் நீர்வரத்தான் செய்யும். புன்னகையோ கண்ணீரை வரவழைப்பதில்லை. அல்லது சிரித்துத்தான் ஆகவேண்டும் என்றால் அதைச் சமன்படுத்தி விடு. அதை வெகுவாக இழந்துவிடாதே. சமவெளியில் இருப்பதைப்போல இரு. மலை உச்சியில் இருப்பதைப்போல அல்ல. இல்லையேல் வெகு சீக்கிரம் நீ கீழே இறங்கித்தான் ஆகவேண்டி இருக்கும்.

மகிழ்ச்சியாக இருக்கும்போது கட்டுப்பாட்டோடு இரு. வெகுவாக மகிழாதே. அதற்கு அவசியமும் இல்லை. மகிழ்ச்சியாக இருந்தால் புன்னகை செய்துகொள். வாய்விட்டுச் சிரித்து விடாதே. மகிழ்ச்சியைப்பற்றி எந்த அலட்டலும் இல்லாதபோது அது நீண்ட நேரம் நிலைக்கிறது. அதை எப்போதும் தக்கவைத்துக் கொள்வதற்கான சாதுரியம் தெரிந்து கொண்டாய் என்றால் அது என்றும் உன்னை விட்டுப் போவதில்லை.

புன்னகை நிலையானது. சிரிப்பு அப்படியல்ல. எனவேதான் புத்தன் புன்சிரிப்போடு நின்று விடுகிறான். வாய்விட்டுச் சிரிப்பதில்லை. எப்படிச் சமனப்பட்டவனாக இருப்பது என்பது புத்தனுக்குத் தெரியும்.

அன்போடிரு. அன்பு உனக்குப் போஷாக்காக இருக்கட்டும். பிறருக்கு உன் அன்பு போஷாக்காகட்டும். பரவசப்படு. ஆனால் பைத்தியமாகி விடாதே. இல்லையேல் எப்போதாவது எல்லாவற்றையும் தொலைத்துக் கட்டிவிடுவாய். அன்பும் காதலும் வெறுப்பாக மாறிப் போய்விடும்.

ஒருவருக்கொருவர் அன்புடையவர்கள்தான் வெகு சுலபத்தில் எதிரிகள் ஆகிவிடுகிறார்கள். பார்க்கப்போனால் ஒருவன் உனக்கு இப்போது விரோதி என்றால் அவன் உனக்கு முன்பு நண்பனாக இருந்திருக்கவே வேண்டும். எவ்வளவுக்கெவ்வளவு நட்பு ஆழமாக இருக்கிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு வெறுப்பு வந்தால் கொடூர மானதாக இருக்கும். முதலில் நட்பு இல்லாமல் பிறகு விரோதம் வருவதற்குச் சாத்தியமே இல்லை. நட்பு விரோதத்துக்கு அடிப்படையான முன்னோட்ட மாகத்தான் இருக்கும்.

வெகுவாக அண்மையானவர்களாகிப் போனால் வெறுப்பு வரச் சாத்தியங்கள் வந்து விடுகின்றன. எனவே வெகு அணுக்கத்துக்குப் போய்விடாதே.

தீர்க்கதரிசி என்றொரு நூல். கலீல் கிப்ரான் எழுதியது. அதில் சொல்கிறார். காதலர்கள் ஒரு கோயிலின் தூண்களைப்போல இருக்க வேண்டுமாம். ஒரே கட்டிடத்தைத் தாங்கி நின்றாலும் தம்மளவில் அவை தூரத்தூரவே நிற்கின்றன பார் என்கிறார். அவை ஒன்றை ஒன்று அணுகினால் கோயில் விழுந்துவிடும். அப்படியே அவை வெகுதூரம் விலகிப் போனாலும் கோயில் விழுந்துவிடும். காதலர்கள் ஒருவருக்கு ஒருவர் வெகு அருகில் வந்துவிட முடியாது. அதே சமயம் வெகுதூரத்துக்கு விலகி நிற்கவும் முடியாது. ஒரு கோயிலின் தூண்களைப்போல ஒரே கூரையைத் தாங்கி நின்றும் தம்மளவில் தள்ளித்தள்ளியே நிற்கவேண்டும்.

இதைத்தான் சாதுரியம் என்கிறேன். ஒரு கலை என்கிறேன். உங்களுடைய காதல் சிரஞ்சீவிக் காதலாக இருக்க வேண்டுமா? வெகு அண்மையில் வந்து விடாதீர்கள். ஏனென்றால் எவ்வளவுக்கு எவ்வளவு அணுக்கம் இருக்கிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு விலகிப்போக வந்துவிடும். வெகு அணுக்கத்துக்கு வந்துவிட்டால் ஒருவருக்கொருவர் அவரவர் எல்லைக்குள் நுழைந்து விடுகிறீர்கள். அப்போது அவரவர் தனிச் சுதந்திரம் பாதித்துப் போகிறது. அவரவருக்கென்று சில சுதந்திரங்கள் வேண்டியிருக்கின்றன அல்லவா?

அவரவருக்கென்று ஓரளவுக்கு இடம் தேவைப்படுகிறது. அவரவர் எல்லையைப் பராமரித்து அதேசமயம் இருவருமாகச் சேர்ந்து காதலெனும் கூரையைத் தாங்கிப் பிடிக்கும்போது காதல் அருமையானதாகிப் போகிறது. இல்லையேல் அதுவே விஷமாகிப் போகிறது.

இந்தக் காதலர்களோ எப்போதும் முட்டாள்தனமாகத்தான் நடந்து கொள்கிறார்கள். காதல் வயப்பட்டு இருக்கும்போது எதையும் கேட்கும்

காதுகள் அவர்களுக்கு இருப்பதில்லை. வெகு அணுக்கத்துக்கு வந்து அழகான அருமையான காதலைக் கெட்டுப்போக்கி விடுகிறார்கள். அவர்கள் மட்டும் கொஞ்சம் புத்திசாலித்தனமாக இருந்தால் வெகு அணுக்கத்துக்கு வருவதைத் தவிர்த்திருப்பார்கள். பிறகென்ன? அவர்கள் காதல் சிரஞ்சீவிக் காதலாக இருந்திருக்கும்.

காதலில் புத்திசாலித்தனமாக எப்போது எவனொருவன் இருக்க வருகிறானோ அப்போது அவன் தன் வாழ்வைத் தொலைத்து விடுகிறான் என்று பெர்னார்ட் ஷா சொல்லியிருக்கிறார். வயதாகும்போதுதான் காதலோடு புத்திசாலித்தனம் கைகோர்த்துக் கொள்கிறது. ஆனால் அதற்குள் காதலின் சாத்தியங்கள் இல்லாமல் போய்விடுகின்றன.

இந்தக் கடவுள் ஏன் இளமையை இளைஞர்களுக்குத் தந்திருக்கிறார் என்பது எனக்குப் புரிவதே இல்லை. வயதானவர்களுக்கு இளமை இருக்கவேண்டும். வாழ்ந்து விவரம் தெரிந்து கொண்டவர்களுக்கு, புத்திசாலித்தனம் என்றால் என்ன என்று தெரிந்துகொண்ட வயதான வர்களுக்கு இளமை இருக்கவேண்டும். விஷய ஞானத்தோடு வாழ்வில் சமனப்பட்டுப் போனவர்களுக்கு இளமை இருக்கவேண்டும். ஆனால் இந்தக் கடவுளைப் பார். இளமையை இளைஞர்களுக்குத் தந்து வீணாக்குகிறார். இதுவும் பெர்னார்ட் ஷா சொன்னதுதான்.

எங்கும் எதிலும் இதுவே சட்டமாக இருக்கவேண்டும். சமநிலையைப் பராமரித்து வை. சமநிலை கெட்டுப்போன ஜீவன் உயிரோடு இருக்க முடியாது. வாழ்வு அவனை ஏற்றுக் கொள்வதில்லை. எந்த அளவுக்கு சமனப்பட்ட நிலையில் இருக்கிறாயோ அந்த அளவுக்கு வாழ்வு உனக்குத் தன் வரங்களை அள்ளித் தருகிறது. அலைபாயும் மனம் என்றால் ஒரு பிச்சைக்காரனாகிப் போகிறாய். அதுவும் நீயாகவே உன்னைப் பிச்சைக்காரனாக்கிக் கொள்கிறாய். வாழ்க்கை உனக்கு எதையும் தரப்போவதில்லை.

**வில்லை வெகுவாக வளைத்தாய் என்றால்**
**அடாடா... நிறுத்தியிருக்கலாமே என்று வருந்துவாய்.**

சில நாட்களுக்கு முன் ஒரு ஜெர்மானியக் கவிஞரின் நூல் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தேன். முன்னுரையில் ''லாவோட் சு சொன்ன இந்த வார்த்தைகளை ஹிட்லர் படித்திருந்தால்...'' என்று எழுதியிருந்தார்.

**வில்லை வெகுவாக வளைத்தாய் என்றால்**
**அடாடா... நிறுத்தியிருக்கலாமே என்று வருந்துவாய்.**

ஹிட்லர் நிறையச் சாதித்தவன்தான். ஆனால் அவனுக்கு லாவோட்ஸுவைப் பற்றித் தெரிந்திருக்கவில்லை. ஹிட்லர் போன்றவர்கள் அவரைத் தெரிந்துகொள்ள முடியாதுதான்.

வில்லை வெகுவாக...

இப்போது இந்திராகாந்தி தன் வில்லை வெகுவாக வளைத்துப் பார்த்துவிட்டார். வாழ்வில் அதீத வெற்றிகள் ஆகாது. அவை வந்து சேர்ந்தால் வீழ்ச்சி காத்திருக்கிறது என்று பொருள். தோல்வியைப்போலத் தோற்பது வேறு எதுவும் இல்லை என்று சொல்லக் கேட்டிருப்பாய். அது சரியல்ல. சரியான பழமொழியை உனக்குச் சொல்லட்டுமா? வெற்றியைப் போலத் தோற்றுப் போவது வேறு எதுவும் இல்லை.

வெற்றிக்கு மேல் வெற்றி என்றால் தோற்கத்தான் போகிறான் என்று பொருள். எதற்கும் ஓர் எல்லை இருக்கிறது. வெற்றிக்கு மேல் வெற்றி என்றால் திடீரெனத் தோன்றும் ஒரு கணத்துக்குப் பிறகு எதுவும் உன் கட்டுப்பாட்டுக்குள் இருப்பதில்லை. எதையும் அளவோடு எடுத்துக்கொள். வெற்றி பெறுகிறாய் என்றால் உடனே எல்லா வெற்றியும் உன்னுடையதாக இருக்கவேண்டும் என்ற அவசரம் வேண்டாம். கடைசி வெற்றி என்ற ஒன்று இருக்கப் போகிறது. அதை நோக்கி வேகமாகப் போய்விடாதே. நிதானமாகப் போய்ப் பார். ஏனென்றால் வெற்றிக்கு அந்தப் பக்கம் இன்னொன்று இருக்கிறது என்றால் அது தோல்விதான்.

ஹோமியோபதி மருத்துவத்தில் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் மருந்து தருவார்கள். அலோபதி நல்லதுதான். ஆனால் அதில் தரும் மருந்தின் அளவு கொஞ்சம் அதிகம்.

எச்சரிக்கை தேவை. கடைசி வரைக்கும் போய்விட வேண்டும் என்று துடிக்கிறாயா? திரும்ப அடுத்த முனைக்குப் போய்ச்சேர வேண்டியிருக்கும் என்பதை மறந்துவிடாதே. முன்னால் போவதாக நினைப்புத்தான். பின்னால்தான் வரப்போகிறாய்.

**வில்லை வெகுவாக வளைத்தாய் என்றால்**
**அடாடா... நிறுத்தியிருக்கலாமே என்று வருந்துவாய்.**

ஏனென்றால் அதை உடைத்து விடுவாய்.

**வாளை வெகுவாகக் கூர் தீட்டக் காய்ச்சித் தட்டினால்**
**அதன் முனை பலநாள் நீடிக்காது.**

சமநிலைதான் நீடிக்கக் கூடியது. வேறு எதுவும் நீடிப்பதில்லை. ஆனால் இந்தச் சமநிலைதான் சாதிக்க மிகவும் சிரமமானது. ஜீவிதத்தில்,

வாழ்வில் சாதிக்க மிகவும் சிரமமானது இந்தச் சமநிலை. ஏனென்றால் இதைச் சாதிக்க மிகுந்த ஞானம் தேவை.

லாவோட் சூவின் சீடர் ஒருவர் சுவாங் சூ. அவர் ஒரு நகரத்தில் பல வருடங்களாக வசித்து வந்தார். ஒருநாள் திடீரெனத் தன் சீடர்களை நோக்கி, ''நாம வேறே இடத்துக்குப் போகலாம்'' என்றார்.

அவர்களோ, ''இப்போ என்ன நடந்து போச்சுன்னு வேறே இடத்துக்குப் போகலாம்கறீங்க. ஏதும் நடந்ததா எங்களுக்குத் தெரியல்லியே. ஏன் இந்த ஊரை விட்டுட்டு வேறே ஊருக்குப் போகணும்? எல்லாம் சௌகரியமா இருக்குது. நாமும் நிம்மதியா இருக்கறோம். இப்பத்தான் எல்லாச் சிரமத்தையும் தீர்த்துட்டுச் சௌகரியமா இருக்கறோம். இப்பப் போய் இந்த இடத்தைவிட்டுப் போகணும்கறீங்களே! அப்படி என்ன நடந்து போச்சு?'' என்று கேட்டார்கள்.

அவர், ''இப்ப இங்கே இருக்கறவங்களுக்கு எல்லாம் என்னைத் தெரிஞ்சு போச்சு. என்னுடைய புகழ் பரவ ஆரம்பிச்சுடுச்சு. எப்போ ஒருத்தனுக்குப் புகழ் வருதோ அப்போ அவன் ஜாக்கிரதையா இருக்கணும். ஏன்னா இவங்களோ ரொம்ப சீக்கிரத்துலே என்னைப் பத்தி மோசமாப் பேச ஆரம்பிச்சுடுவாங்க. அவங்க என்னைப் பத்தித் தவறா ஏதும் சொல்றதுக்கு முன்னாடி நாம இங்கே இருந்து போயிடறது நல்லது'' என்றார்.

ஆமாம். கீர்த்தி அபகீர்த்தி ஆவதற்கு என்று, வெற்றி தோல்வி ஆவதற்கு என்று ஒரு க்ஷணம் இருக்கிறது. எனவே எப்போதும் நடுமத்தில் இருக்கவேண்டும் என்பதை நினைவில் நிறுத்தி வை. எப்போதுமே ஜாக்கிரதையாக இருக்கவேண்டி இருக்கிறது. இல்லையேல் ஒரு வெற்றி கிடைத்தபின் இன்னொரு வெற்றியை ஏன் சாதிக்கக் கூடாது என்ற ஆசை வந்துவிடும். இவ்வளவு வெற்றியைச் சாதித்துவிட்டோமே. இன்னும் கொஞ்சம் சாதித்தால் என்ன என்ற எண்ணம் வந்துவிடும்.

உன்னுடைய மனமும், ''இவ்வளவு சாதித்துவிட்டாய் இல்லையா? இன்னும் கொஞ்சம் சாதிக்கலாமே. பார். பாதை தெளிவாக இருக்கிறது. யாரும் குறுக்கே இல்லை. இன்னமும் கொஞ்சம் முயற்சி செய்யலாமே.'' இப்படிச் சொல்லும் மனது எப்போதும் உன்னிடம் இருக்கிறது. இதைச் சொல்லிக்கொண்டே இருக்கும். எதையும் குரங்குப் பிடியாகப் பிடித்துக் கொள்வதுதான் மனம். எது கிடைத்தாலும் அதைக் குரங்குப் பிடியாகப் பிடித்துக் கொள்ளும். சக்ஸஸ் - மேனியா என்று வைத்துக்கொள். தோல்வி அடையும்வரை வெற்றியைத் தேடி ஓடிக்கொண்டே இருக்கும் இந்தப் பைத்தியக்கார மனம். இன்னமும் இன்னமும் என்று போய்க்கொண்டே இருக்கும்.

மனதின் இயல்பைத் தெரிந்துகொள்ள முயற்சி செய். நீ ஏதாவது செய்யப்போனால் உன் மனது அதை இருபத்து நான்கு மணி நேரமும் செய்துகொண்டே இருக்கும். ஓய்வெடுக்கவே விடாது உன்னை. குட்டிச் சாத்தானைப் போல. உன்னை விரட்டிக் கொண்டே இருக்கும். ஓய்வு தேவையல்லவா?

எனவே எதை வேண்டுமானாலும் செய். ஆனால் எதையும் மிகைப்படச் செய்து விடாதே. இல்லையேல் உன் சக்தியே உனக்கு எமனாகிப் போகும்.

**வாளை வெகுவாகக் கூர் தீட்டக் காய்ச்சித் தட்டினால்**
**அதன் முனை பலநாள் நீடிக்காது.**

**உன் முற்றத்தில் நவமணிகள் நிறைந்திருந்தால்**
**அவற்றைப் பத்திரமாக வைத்திருக்க முடியாது.**

எதுவும் அளவுக்கு அதிகம் என்றாகிப் போகும்போது உன்னிடமிருந்து அதை எடுத்துக்கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது.

ஒருமுறை லாவோட் சுவின் சீடர்களில் ஒருவர் நீதிபதியாக நியமிக்கப்பட்டார். அவர் முதலில் விசாரிக்க வேண்டிய வழக்கு ஒரு திருட்டு வழக்கு. திருடியவன் தன் குற்றத்தை ஒப்புக்கொண்டான். திருடிய பொருட்களை மீட்டாயிற்று. திருடனும் தன் குற்றத்தை ஒப்புக்கொண்டான் என்கிறபோது வழக்கில் இனியும் என்ன இருக்கிறது? ஆனால் அந்த நீதிபதி இந்த வழக்கில் அசாதாரணமான நடவடிக்கை எடுத்தார். திருடியவனுக்கு ஆறுமாதம் சிறை. சரிதான். ஆனால் திருட்டுக் கொடுத்தவனுக்கும் சிறை.

திருட்டுக் கொடுத்த அந்தப் பணக்காரனுக்கு ஒன்றும் புரியவில்லை. இது என்ன முட்டாள்தனம்? திருட்டுக் கொடுத்தவனுக்கும் சிறைத் தண்டனையா? எதற்கு?

"ஏன்னு கேக்கிறியா? நீ அளவுக்கு அதிகமாச் சேர்த்து வெச்சிருக்கே. இந்த வழக்கின் ஆணிவேரைப் பார்க்கணும்னா நீதான் இவனைத் திருடறதுக்குத் தூண்டினவன். ஊர்லே இருக்கறவங்க எல்லோருமே ஏழைப்பட்டவங்க. சாப்பாட்டுக்கே சிரமம். ஆனா நீயோ சொத்துச் சேர்த்துக்கிட்டே இருந்திருக்கே. எதுக்கும் ஒரு எல்லை இருக்குதுப்பா. யார் நிஜமாலுமே குற்றவாளின்னு நான் பார்த்தேன்னா... உன்னாலே வந்ததுதான் எல்லாமும். இவன் பாவம். தன்னைக் கட்டுப்படுத்திக்க முடியல்லே. அது அவன் குத்தம்தான். ஆனா நீயோ எக்கச்சக்கமாகச் சேத்து வெச்சிக்கிட்டே இருந்தே. எந்தச் சமுதாயத்துலே ஒருத்தன் மட்டும் நிறையச் சேர்த்துக்கிட்டு

இருக்கறானோ அந்தச் சமுதாயத்துலே ஒழுக்கத்தை எதிர்பார்க்க முடியாது. திருடன்கள் அதிகமாகத்தான் செய்வாங்க. கொள்ளை அடிப்பாங்க. கொலை செய்வாங்க. எல்லாவிதமான ஒழுக்கமும் கெட்டுப்போகும். இதெல்லாம் நடக்கத்தான் செய்யும்.''

அவருடைய நியாயத்தைக் கேட்பதற்கு யாரும் இல்லை. அவரைப் பதவி நீக்கம் செய்தார்கள். பேரரசர், ''இது ரொம்பத்தான் அநியாயம். இந்த ஆளு அபாயமானவன். ஒரு நாளைக்கு என்னையே தப்பு சொல்லிடுவான். இன்னும் கொஞ்சம் ஆழமாப் போய்ப் பார்த்தான்னா நான் எப்படிப்பட்டவன்னு தெரிஞ்சுக்குவான். இவனை வெச்சிக்கிட்டு இருக்கக்கூடாது.''

ஆனால் லாவோட் சூ சொல்வதைக் கேட்டாக வேண்டியிருக்கிறது. எந்த வியாதி மனிதனை வருத்துகிறதோ அதனுடைய மூலநாடியைப் பிடித்துப் பார்த்து விட்டாரே. ஏராளமாகச் சேர்த்து வைத்தால் திருடத்தான் செய்வார்கள். பத்திரமாக வைத்திருக்க முடியாது.

வரைமுறைக்குள் இருந்து பார். சமன்பட்ட நிலையில் இருந்து பார். வெகுவாக ஏழ்மையில் இருப்பது மோசமானது. வெகுவாகச் செல்வந்தனாக இருப்பதும் மோசம்தான். எதுவுமே வெகுவாக இருப்பது மோசம்தான். பார்க்கப்போனால் லாவோட் சூவுக்கு எதுவொன்றும் மிகையாக இருப்பதுதான் ஒரே பாவம். மிகையாக ஏதும் செய்யாதே. அளவுக்கதிகமாக ஏதும் செய்யாதே. அப்போதுதான் வாழ்க்கை நீரோட்டமாக இருக்கமுடியும். வாழ்க்கையில் அப்போதுதான் ஒழுக்கம் இருக்கும்.

**கௌரவத்திலும் சொத்திலும் பெருமை கொள்ளும்போது**
**உன் வீழ்ச்சிக்கான விதைகளை விதைக்கிறாய்.**

இதுதான் ஒவ்வொரு நாளும் நடக்கிறது. உனக்கோ கண்கள் குருடு. அதனால்தான் இது உனக்குத் தெரியவில்லை. ஒவ்வொரு நாளும் எல்லா இடத்திலும் நடப்பது இதுதான். இந்த நாட்டு அரசியல்வாதிகளை மட்டுமல்ல. எல்லா நாட்டு அரசியல்வாதிகளையும் பார். அவர்களுக்கு ஆணவம் அதிகம். பிறகு அதற்கு எதிரிடையானது நடக்கிறது. எவரோ ஒருவர் ஒரு கல்லையோ, செருப்பையோ வீச, எல்லோருமே அவர்களை அவமரியாதை செய்கிறார்கள்.

ஒரு சமநிலையை உருவாக்கி வைக்கவேண்டும். தானென்ற உன் உணர்வு உனக்கு அதிமுக்கியமாகத் தெரிந்தால் உன்னைச் சரியான அளவுக்கு வெட்டி ஒட்டி வைக்க ஒருவர் வந்து சேர்கிறார். நீயாக உன்னைக்

கட்டுப்பாட்டோடு வைத்திருக்க முடிவதில்லை என்பதால் இதற்கு இன்னொருவர் தேவைப்படுகிறார்.

எங்கெல்லாம் ஏதாவது சரியில்லாமல் போனால் வாழ்க்கை அதைச் சமன்படுத்திக் கொண்டே இருக்கிறது. ஒரு நாட்டில் அரசியல்வாதிகள் அதிக ஆணவம் பிடித்தவர்களாகத் தமக்கு அதீத மரியாதை வேண்டும் என்று நடந்து கொண்டால் வெகு சீக்கிரத்திலேயே அவர்களுக்கு அவமரியாதை வந்து சேர்கிறது. ஒரு புரட்சி வெடிக்கிறது. எல்லாமும் சிதைந்து போகிறது. ஒழுக்கம், மரியாதை, பழக்கவழக்கம் போன்ற எல்லா விதிகளும் சிதைந்து போகின்றன.

அரசியல்வாதிகள் தமக்கென அதிகம் மரியாதையைக் கேட்கலாகாது. கொஞ்சம் கீழே இறங்கி வர வேண்டும். ஒரு வரையறைக்குள் நிற்க வேண்டும். பிறகு யாரும் அவர்கள்மீது கல்லெறியத் தயாராக மாட்டார்கள். ஏன்? இந்தக் கேள்விக்கு அவசியமே இருக்காது.

முன்பெல்லாம் பணக்காரர்கள் தமது செல்வத்தை யாருக்கும் காட்ட மாட்டார்கள். வெகு சாதாரணமாக, எல்லோரையும் போலவே அவர்களும் வாழ்ந்தார்கள். அரசர்களும், பேரரசர்களும்கூட புத்தர், மகாவீரர் போன்றவர்களைத் தேடி வந்து வணங்கினார்கள். அவர்கள் எப்போதுமே மரியாதைக்கு உரியவர்களாக வாழ்ந்தார்கள். அப்போது ஒருவிதமான சமன்பாடு இருந்தது. இப்போது அந்தச் சமநிலை மாறிப் போய்விட்டது. எந்த அரசியல்வாதியும் யாரையும் மதிப்பதில்லை. அவரவர் அதிகாரத்தில் இருக்கும் வரைக்கும் தம்மைக் கடவுள்களாக நினைத்துக் கொள்கிறார்கள். எல்லை மீறிப் போகும்போது அவர்களை இழுத்துப் பிடிக்கவேண்டி இருக்கிறது. பிறகு இன்னொருவர் இன்னோர் இடத்திலிருந்து முன்வருகிறார். இப்படித்தான் சமநிலை மீள்கிறது.

மறந்துவிடாதே. வாழ்க்கையில் எந்த அநியாயத்துக்கும் இடமில்லை. அப்படி ஏதும் அநியாயமாக நடப்பதாக உனக்குத் தோன்றினால் நீ ஏதோ அநியாயம் செய்திருக்கவேண்டும். எங்கோ எப்போதோ சில வரைமுறைகளை மீறி நடந்து கொண்டிருந்திருக்க வேண்டும். பிறகுதான் வாழ்க்கை உனக்கு அநியாயமாக இருப்பதாகப் படும். இல்லையேல் வாழ்க்கை எப்போதும் நியாயமானதாகத்தான் இருக்கும். ஏதாவது அநியாயமாகப் படுகிறது என்றால் உன்னையே மறுபடி பார்த்துக்கொள். என்னவோ தவறு செய்திருக்கிறாய். எனவே நீ தண்டிக்கப்படுகிறாய்.

பல்லூழிக் காலமாகவே பாவங்கள் தண்டிக்கப்பட வேண்டியவை என்றுதான் மக்கள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் நான் சொல்வதைக் கேள். பாவங்கள் அல்ல தண்டிக்கப்படுபவை. பாவங்கள்தான்

தண்டனையே. பாவங்களுக்குத் தண்டனை என்றால் உனக்கு நேரம் கிடைக்கிறது. அடுத்த வாழ்வில் தண்டனை வருமோ? இப்போதிருந்தே அதைப்பற்றிய கவலை ஏன்? எனவே பாவம் செய்வதற்குத் துணிந்து விடலாம். ஆனால் பாவங்களே தண்டனைகள் எனும்போது காலம் தாழ்த்த இன்னொரு பிறவிவரை காத்திருக்க முடியாது.

பாவங்கள் தம்மோடே தண்டனைகளையும் சுமந்து திரிகின்றன. பாவமும் தண்டனையும் இரண்டறக் கலந்தவை. ஏதோ ஒரு காலத்தில் நடக்கப்போகும் விளைவல்ல தண்டனை. இன்று விதைத்துவிட்டு நாளை அறுவடை செய்வதைப்போல அல்ல. ஏக காலத்தியவை பாவமும் தண்டனையும். பாவம் செய்தவுடனே தண்டனை ஆரம்பமாகிவிடுகிறது. இங்கே இப்போது பாவம் செய்தால் இங்கே இப்போதே தண்டனையும் ஆரம்பமாகி விடுகிறது. பாவம் செய்தவுடன் உனக்கு நீயே அசிங்கமானவனாகத் தெரிகிறாய். குற்றக் குறுகுறுப்பு வந்து விடுகிறது. உனக்குள்ளே பெரும் போராட்டம் தொடங்கிவிடுகிறது. துக்கித்துப் போகிறாய். நரகத்தில் விழுந்தவனாகிப் போகிறாய். நரகம் எங்கோ எப்போதோ இருக்க வருவதல்ல. சொர்க்கமும் அப்படித்தான். ஒவ்வொரு செயலும் தத்தமது நரகத்தையும் சொர்க்கத்தையும் தாங்கித் திரிகின்றன.

சமன்பட்ட நிலையில் இருந்து பார். சொர்க்கத்தில் இருக்கிறாய். சமநிலை தவறிப் போகும்போது நரகத்தில் விழுந்துவிடுகிறாய். வேறு யாரும் அவற்றை உனக்காக ஆக்கிவைக்க வேண்டியதில்லை.

யாரையும் தண்டிக்கவென்று கடவுள் ஒருவர் லாவோட் சூவின் உலகத்தில் இல்லை. அவருடைய உலகில் இருப்பதெல்லாம் தாவோதான். தாவோ என்பது நெறி. எல்லா உலகுக்கும் பொதுவான நெறி. அதன்படி நடந்துகொண்டால் மகிழ்ச்சியாக இருக்கிறாய். அதற்கு எதிரிடையாக நடந்துகொண்டால் துக்கித்துப் போகிறாய். பார்க்கப்போனால் மகிழ்ச்சியும் துக்கமும் அடையாளங்கள்தான். நீ எப்படி நடந்து கொண்டிருக்கிறாய் என்பதைக் காட்டும் குறியீடுகள்தான். தாவோவின் வழியில் அல்லது தாவோவுக்கு எதிரிடையில்.

தாவோவின் வழி நடந்துகொள்ளும்போது மகிழ்வாக இருக்கிறாய். ஆனந்தமாக இருக்கிறாய். வாழ்வைக் கொண்டாடுகிறாய். ஒவ்வொரு கணமும் மகிழ்வின் கணமாக இருக்கிறது. ஓர் ஆனந்தத்தின் கணமாக இருக்கிறது. ஒவ்வொரு கணமும் ஏதோ ஒன்று மலரக் காண்கிறாய். வளரக் காண்கிறாய். ஒவ்வொரு கணமும் நன்றியுடன் இருக்க ஆயிரம் காரணங்கள் காண்கிறாய். நீ ஆசீர்வதிக்கப்பட்டவனாகிறாய்.

தாவோவின் வழியில் நடந்தால் வாழ்வு ஒரு வரமாகிப் போகிறது. தாவோவின் நெறியே சமன்படுத்திக் கொள்வதில்தான் இருக்கிறது. அதற்கு எதிரிடையாக நடந்துகொண்டால் நிலை தடுமாறிப் போகிறாய். மகிழ்ச்சி மறைந்துபோகிறது. துக்கிக்கிறாய். ஒரு நரகத்தைப் படைத்து விடுகிறாய்.

நரகம் ஒரு அடையாளம்தான். அதை எதிர்த்துப் போராடாதே. எங்கே நெறிக்கு எதிராய் நடந்து கொண்டாய் என்பதைப் பார். அவ்வளவுதான். பிறகு திரும்பச் சமநிலைக்குப் போய்ச் சேர்.

சோகமாக இருக்கும்போது சோகத்தை மாற்ற முயற்சிக்காதே. அதைப்பற்றி ஏதும் செய்ய நினைக்காதே. துக்கம் ஓர் அடையாளம்தான். எங்கோ ஓரிடத்தில் நீ உன் பாதையின் திசையை மாற்றவேண்டும் என்பதற்கான ஓர் அறிகுறிதான் சோகம். சற்றே வலது பக்கமாகவோ இடது பக்கமாகவோ திரும்பி நடக்க வேண்டியிருக்கிறது. அல்லது மறுபக்கம் திரும்பி நடக்க வேண்டியிருக்கிறது. சமநிலை திரும்பிவிடுகிறது. இதை எப்போதுமே செய்து கொண்டிருக்க வேண்டி இருக்கிறது.

என்னிடம் வருகிறவர்களில் ஒரு சிலர், ''தியானம் செய்கிறோம். அதில் நாங்கள் சிறந்த பயிற்சி பெற்றுவிட்டால் அமைதியும் நிம்மதியும் என்றென்றைக்கும் எங்களோடு இருக்குமா?'' என்று கேட்கிறார்கள். முட்டாள்தனமான கேள்வி. அப்படித்தான் என்றால் தியானம் என்பது ஜீவனில்லாத விஷயமாகிப் போகும். ஒரு பாறையைப் போல. ஒரு மலரைப் போல அல்ல. தியானம் ஒரு பாறையல்ல. ஒரு பிளாஸ்டிக் மலரைப் போல அல்ல. அது அசலான தாமரை. அது மலர்கிறது. தினமும் மாறிக்கொண்டே இருக்கிறது. சூரியன் உதிக்கும்போது மலர்கிறது. சூரியன் மறையும்போது கூம்பிவிடுகிறது. மலர்வதற்கும் கூம்புவதற்கும் இடையே எப்போதுமே மாறிக்கொண்டே இருக்கிறது. ஒவ்வொரு கணமும் திறந்து கொண்டோ அல்லது கூம்பிக் கொண்டோ இருக்கிறது.

தியானம் என்பது ஏதோ ஒரு தடவை செய்துவிட்டு செய்துவிட்டேன் என்று திருப்திப்பட்டுக் கொள்வதல்ல. அது மூச்சுவிடுவதைப் போல. இரத்த ஓட்டம் போல. ஒரு தடவை சுற்றி வந்துவிட்டால் ரத்த ஓட்டம் அதோடு முடிந்து விடுவதில்லை. ஒருமுறை மூச்சு வாங்கிக் கொண்டால் இனி மூச்சுக் காற்றே தேவையில்லை என்பதைப்போல அல்ல. மூச்சுவிட்டு வாங்கிக் கொண்டே இருக்கவேண்டி இருக்கிறது. தியானித்துக்கொண்டே இருக்க வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு கணத்துக்குமான தேவை அது.

பழகப்பழக அது இயல்பாகிப் போகும். சரிதான். பழகப்பழக தாவோவுக்கு எதிராகப் போவது குறைந்துவிடும். சாதுரியம் இன்னதெனக் கண்டுகொண்டால் நெறிக்கு எதிராகத் திரும்பும் அந்தக் கணமே உனக்கு

எதிரில் நரகத்தைக் காண்பாய். திடுக்கிட்டுத் திரும்பி விடுவாய். திரும்பிச் சரியான பாதைக்கு வந்துவிடுவாய். வழிதவறிப் போய்விட மாட்டாய்.

**கௌரவத்திலும் சொத்திலும் பெருமை கொள்ளும்போது**
**உன் வீழ்ச்சிக்கான விதைகளை விதைக்கிறாய்.**

**வேலை முடிந்துவிட்டதா? ஓய்வெடுத்துக் கொள்.**
**அதுதான் சொர்க்கத்தின் நெறி.**

ஒரு வேலை செய்யும்போது அது உனக்கு இந்தச் சமநிலையை அளிக்கிறது என்றால், அதில் உனக்கு மகிழ்ச்சி இருக்கிறது என்றால், அதற்கு மேலும் எதுவும் கேட்காதே. நன்றாக இருப்பதைப்போன்ற உணர்வு தோன்றினால் அதற்கு மேலும் இது வேண்டும் அது வேண்டும் என்று எதுவும் கேட்காதே. உன்னைச் சுற்றியும் ஆரோக்கியமான ஓர் உணர்வு இருக்கிறது என்றால் வேறு எதுவும் கேட்காதே. ஓய்வெடுத்துக் கொள். அதை அனுபவி. அதோடு கொண்டாடு. அதோடு நடனமிடு. வேறு எதையும் கேட்காதே.

மனம் இன்னமும் வேண்டும் என்று கேட்கும்தான். "இது சரிதான். நன்றாக இருக்கிறது. ஆனால் இன்னமும் அதிக சாத்தியம் இருக்கிறது. எனவே இன்னமும் கிடைப்பதற்கான வழியைப் பார்" என்கிறது மனம். பிறகு அப்படிச் சாத்தியம் என்று தோன்றுவது எதுவோ அதை இழந்து விடுகிறாய். ஏற்கெனவே சாத்தியமாகிப் போனதையும் இழந்து விடுகிறாய். இப்படி இன்னமும் இன்னமும் என்று போய்க்கொண்டே இருக்கும் இந்த மனதுக்குப் பின் போனால் கடைசியில் அது உன்னை ஒரு கோட்டுக்குக் கொண்டுபோய் விட்டுவிடும். திடீரென நரகத்தில் விழுந்தவனாகிப் போவாய். துக்கிக்கிறாய்.

உனக்கு என்ன கிடைத்தாலும் அதற்கென்று ஓர் அளவுகோலாக ஒன்றை வைத்துக்கொள். அது கிடைக்கும்போது நன்றாக இருப்பதாக உணர்கிறாயா? ஆரோக்கியமான ஓர் உணர்வு தெரிகிறதா? ஆனந்தம், மௌனம், நிம்மதி, பரவசம் என்று இவை உன்னைச் சூழ்வதாக உணர்கிறாயா? அப்போது வாழ்க்கை அந்தக் கணத்துக்கு ஒரு பாடலாகிப் போகிறது. அதைப் பாடி அனுபவி. இன்னமும் வேண்டும் என்று எதையும் கேட்காதே. அதை மென்று சுவைத்து அனுபவி. இன்னமும் வேண்டும் என்று எதையும் கேட்காதே. ஒதுங்கிப் போய்விடு. அதுதான் வேலை முடிந்தபின் ஓய்வெடுத்துக் கொள்வது என்பது. போதும் என்று விட்டுவிட்டு எந்த முயற்சியிலும் ஈடுபடாமல் இருப்பது. உனக்குக் கிடைக்கவேண்டியது கிடைத்துவிட்டது. அதை அப்படியே இருக்க விட்டுவிடு. அனுபவி. அதை வாழ்ந்து பார். பிறகு நீயே பார்ப்பாய் - உன் ஜீவிதத்துக்குள்ளே ஒரு

புதிய பருமானம் தோன்றி வளர்ந்திருப்பதை நீயே பார்த்துத் தெரிந்து கொள்வாய்.

இரண்டு வகைப் பருமானங்கள் இருக்கின்றன. ஒன்று நீளப் பாதையில் இருப்பது. இன்னமும் வேண்டும். இது வேண்டும் - அது வேண்டும் என்று போய்க்கொண்டே இருப்பது. அதில் இருக்கும்போது ஒரு கிடைக் கோட்டின்கீழ் நகர்கிறாய். புள்ளி ஒன்றில் இருக்கும்போது புள்ளி இரண்டுக்குப் போகவேண்டும் என்கிறாய். புள்ளி இரண்டுக்குப் போய்ச் சேரும்போது புள்ளி மூன்றுக்குப் போகவேண்டும் என்கிறாய். இப்படியே கடைசிப் புள்ளிக்கும் போய்ச் சேர்ந்துவிடுகிறாய். அந்தப் புள்ளியில் இருந்து நரகம்தான். அந்தக் கடைசிப் புள்ளிதான் நரகத்துக் கான வாசற்படி. உன் மனதோ இவ்வளவு நேரமும் குறக்களி கொட்டிக்கொண்டே இருந்திருக்கிறது. இதோ மூன்றாவது புள்ளியில் இருக்கிறாய். நான்காவது புள்ளிக்குப் போ. இதோ ஐந்தாவது புள்ளியில் இருக்கிறாய். ஆறாவது புள்ளிக்குப் போ. எந்த ஒரு கணத்தையும் ஆற அமர அனுபவிக்க இந்த மனது விடுவதே இல்லை. எந்தக் கொண்டாட்டத்துக்கும் விடுவதில்லை. விலகிப்போய் நீ நீயாக இருக்க விடுவதில்லை. எந்நேரமும் ஏதாவது செய்துகொண்டே இருக்கவேண்டும். இருத்தல் என்றால் அது எந்தப் புள்ளியானாலும் போதும். அங்கேயே இருந்துவிடலாம். இன்றைக்கு வேண்டிய உணவைச் சம்பாதித்து விட்டாயா? விலகிப்போய் நீ நீயாக இருக்க வேண்டியதுதானே! ஆனால் உன் மனது எங்கே விடுகிறது? பாங்கில் இருக்கும் லாக்கரைப் பற்றிய கவலை. ''இன்னமும் பாதி காலியாக இருக்கிறதே! எப்போது நிறைத்து வைப்பது?''

இந்தியாவில் இதை, தொண்ணூற்று ஒன்பதின் விஷச்சூழல் என்பார்கள். அதற்கு ஒரு கதையே இருக்கிறது.

ஒரு ஏழை நாவிதன் மிக மகிழ்ச்சியாக இருந்தான். ஏழைகள் மட்டுமே அனுபவிக்க முடியுமே அந்த வகையான மிகப் பிரமாதமான மகிழ்ச்சி. அவனுக்கு எந்தக் கவலையும் இல்லை. அரசனுக்கே அவன்தான் முடி திருத்துவது. அரசனுக்கு மசாஜ் செய்து விடுவான். ஒவ்வொரு நாளும் அவனுக்குச் சேவகம் செய்வான்.

அரசனுக்குக்கூட அவனைக் கண்டால் பொறாமை. ''உன்னுடைய மகிழ்ச்சியின் ரகசியம் என்னப்பா? எப்பப் பார்த்தாலும் அப்படியே சந்தோஷத்துலே நிறைஞ்சு வழியறே. மண்ணுமேலே நடக்கறாப்படியே தெரியறதில்லை. எப்பவும் வானத்திலே பறக்கற மாதிரி... அப்படி என்ன சந்தோஷம் உனக்கு? அது என்ன ரகசியம்?''

அவன் சொன்னான்: ''எனக்கே தெரியாதுங்க. ரகசியம்கற வார்த்தையை நான் கேட்டதே இல்லீங்க. அப்படின்னா என்னங்க? நான்

சந்தோஷமா இருக்கறேன். அவ்வளவுதான். எனக்கு வேண்டியதைச் சம்பாதிச்சுக்கறேன். அவ்வளவுதான். அப்புறம் ஓய்வெடுத்துக்கறேன்.''

இவன் சரியான லாவோட் சூவினன் ஆக இருக்கவேண்டும்.

பிறகு அரசன் தன் முதல் மந்திரியைக் கூப்பிட்டான். அவருக்கு எல்லாம் தெரியும். வெகு புத்திமான். ''இந்த நாவிதனின் ரகசியம் உனக்குத் தெரிந்திருக்க வேண்டும். நான் ஒரு பெரிய அரசன். நானே சந்தோஷமாக இருக்க முடியவில்லை. இந்த ஏழை, அவனுக்கு ஒண்ணுமே இல்லை. அவன் எப்படி இப்படிச் சந்தோஷமா இருக்கறான்?''

''அவனுக்குத் தொண்ணூற்று ஒன்பதின் விஷச்சூழல் பற்றி எதுவுமே தெரியாது. அவ்வளவுதான்'' என்றார் மந்திரி.

''அது என்ன?''

மந்திரி சிரித்துக்கொண்டார். நீங்க அதுலேயே இருக்கறீங்க. ஆனா தெரியல்லே பாருங்க. ஒரு காரியம் செய்யலாம். இன்னைக்கு ராத்திரி தொண்ணூற்று ஒன்பது ரூபாயை ஒரு பையிலே போட்டு அவன் வீட்டுக்குள்ளே போட்டுடலாம். என்ன ஆகுதுன்னு பார்க்கலாம்.''

அப்படியே அவனுடைய வீட்டுக்குள் தொண்ணூற்று ஒன்பது ரூபாயை ஒரு பைக்குள் வைத்துப் போட்டுவிட்டார்கள்.

அடுத்தநாள் அந்த நாவிதன் நரகத்தில் இருந்தான். மிகவும் சோகமாக வந்தான். இரவு முழுக்கத் தூங்கவில்லை பாவம். பையில் இருந்த பணத்தை திரும்பத் திரும்ப எண்ணிப் பார்த்தான். தொண்ணூற்று ஒன்பது. அவனுக்கு ஒரே பரபரப்பு தொற்றிக் கொண்டது. எப்படித் தூங்க முடியும்?

இதயம் படபடத்தது. இரத்தம் வேகமாக ஓடியது. ரத்த அழுத்தம்கூட இருந்திருக்க வேண்டும். புரண்டு புரண்டு படுத்துப் பார்த்தான். தூங்கவே முடியவில்லை. எழுந்து எழுந்து போய்ப் பார்த்தான். பணத்தைத் தொட்டுப் பார்த்தான். எண்ணிப் பார்த்தான். தங்க நாணயங்கள் அல்லவா? பணத்தை எண்ணிப் பார்த்த அனுபவமே இல்லாதவன். இந்தத் தொண்ணூற்று ஒன்பது என்ற எண் அவனுக்கு ஏகப் பிரச்சனை செய்தது. தொண்ணூற்று ஒன்பது இருந்தால் ஒன்றுமட்டும் கூட இருந்தால் நூறு ஆகிவிடுமே என்ற நப்பாசை யாருக்குத்தான் இருக்காது? எனவே அடுத்தநாள் என்ன செய்து அந்த ஒரு பொற்காசைச் சம்பாதித்து அதை நூறு ஆக்குவது என்ற சிந்தனை தவிர அவனுக்கு வேறு சிந்தனையே இல்லாமல் போய்விட்டது.

அவனுடைய சம்பாத்தியம் சில பைசாக்கள் மட்டுமே. பிறகு எப்படி ஒரு தங்கக் காசைச் சம்பாதிப்பது? கிடைத்தது இதுவரைக்கும் அவனுக்குத் தாராளமாகவே இருந்திருக்கிறது. ஆனால் ஒரு தங்கக் காசுக்கு என்ன

செய்வது? அவன் ஒரு மாதம் முழுக்கச் சம்பாதித்தால்தான் ஒரு ரூபாய் கிடைக்கும். என்ன செய்வது? என்னென்னவோ திட்டமெல்லாம் போட்டுப் பார்த்தான். பாவம் ஏழை. அவனுக்குப் பணத்தைப்பற்றி ஒன்றும் தெரியாது என்பதால் வம்பில் மாட்டிக்கொண்டான். அவனுக்குத் தெரிந்ததெல்லாம் ஒருநாள் விட்டு ஒருநாள் பட்டினி கிடந்து இரண்டு மாதத்தில் ஒரு தங்கக் காசை மிச்சம் பிடிக்கலாம் என்பதுதான். எப்படியோ ஒரே ஒரு ரூபாயைச் சேர்த்துவிட்டால் போதும். நூறு ரூபாய் இருக்குமே அவனிடம்!

இந்த மனம் இருக்கிறதே அதற்கென்று ஒரு பைத்தியக்காரத்தனம் உண்டு. எதையும் முடித்துவிட வேண்டும். மனம் எதையும் பூரணமாக்கவே நினைக்கிறது. தொண்ணூற்று ஒன்பதா? ஊஹூம்... எப்படியாவது அதை நூறாக்கி விட வேண்டும்.

அவனுடைய மகிழ்ச்சி தொலைந்து போய்விட்டது. வானத்தில் பறக்கும் அளவுக்கு லேசானவனாக இருக்க முடியவில்லை. வெகு கெட்டியாக மண்ணில் புதைந்து போய்விட்டான். அப்படிப் புதைந்து போனதும் அல்லாமல் கழுத்தைச் சுற்றி ஒரு பாறையைக் கட்டி விட்டதைப்போல ஒரு சுமையும் அவனை அழுத்திக் கொண்டிருந்தது.

அரசன் அவனிடம், ''என்னப்பா ஆச்சு உனக்கு? ஒரே கவலையா இருக்கியே!'' என்றான்.

அவன் ஒன்றும் சொல்லவில்லை. தன்னிடம் இருந்த பையைப்பற்றிப் பேச அவன் விரும்பவில்லை. ஆனால் ஒவ்வொரு நாளும் நிலைமை மோசமாகிக்கொண்டே இருந்தது. சரியாக மசாஜ் செய்து விடுவதற்கான சக்தி அவனிடம் இல்லை. அவன்தான் ஒருநாள் விட்டு ஒருநாள் சாப்பிட்டுக் கொண்டிருந்தானே!

எனவே அரசன் அவனிடம், ''என்னப்பா வேலை செய்யறே நீ? ரொம்பப் பலவீனமா இருக்கியே. அதுவும் இல்லாம எப்பப் பார்த்தாலும் சோகமா இருக்கியே. என்ன ஆச்சு?'' என்றான்.

எனவே அவன் ஒருநாள் உண்மையை அரசனிடம் சொல்லவேண்டி வந்தது. அரசன் தன்னிடம் சொல்லச்சொல்லி வற்புறுத்தினான். ஏதாவது உதவி தேவைப்பட்டால் தான் செய்வதாகச் சொன்னான். என்ன விஷயம் என்று சொன்னால்போதும் என்றான். ''நான் இப்போ தொண்ணூற்று ஒன்பதின் விஷச்சூழல்லே மாட்டிக்கிட்டு முழிக்கிறேன்'' என்றான்.

உன்னிடம் தொண்ணூற்று ஒன்பது இருக்கிறது என்றால் ஒரு விஷச் சூழலில் மாட்டிக் கொள்வாய். அதை நூறாக்க வேண்டும். இதைத்தான் நேர்கோட்டில் நகர்வது என்கிறேன். அப்படியே நூறாகப் பண்ணிவிட்டால்

அதோடு விஷயம் முடிந்து விடுவதில்லை. ஆரம்பித்தது நிற்பதே இல்லை. இந்த மனதுக்கு எங்கே நிற்பது என்பது தெரியவே தெரியாது. அதனால்தான் அது வீழ்ச்சியடைகிறது. புள்ளி ஒன்றில் இருந்து இரண்டுக்கு - இரண்டில் இருந்து மூன்றுக்கு என்று போய்க்கொண்டே இருக்கத் தெரிந்த மனதுக்கு எங்கே நிற்பது என்பது தெரியவே தெரியாது. போய்க்கொண்டே இருக்கும். கடைசிப் புள்ளிக்குப் போய்ச் சேர்ந்தபின் நரகத்துக்குள் போய் விழுந்துவிடும்.

இதைத் தவிர்த்த வேறொரு வழியும் உண்டு. அது நேர் மேலாகப் போகும் கோடு. புள்ளி ஒன்றில் இருந்து இரண்டுக்கு - மூன்றில் இருந்து நான்குக்கு என்று போவதல்ல அது. ஒரே தளத்தில் படுகிடையாகப் போகும் கோடு அல்ல அது. புள்ளி ஒன்றில் இருந்து புள்ளி ஒன்றின் ஆழ்நிலைக்கு நகர்கிறாய். இரண்டில் இருந்தால் இரண்டின் ஆழ்நிலைக்கு நகர்கிறாய். அந்தக் கணத்தில் எந்தப் புள்ளியில் இருக்கிறாயோ அதனுடைய ஆழத்துக்குப் போகிறாய். இந்தக் கணத்தில் இருந்து அந்தக் கணத்துக்கு என்று போவதல்ல அது. அந்த ஒரு கணத்தின் ஆழத்துக்குப் போகிறாய். எவ்வளவு ஆழ்ந்து போக முடியுமோ அவ்வளவு ஆழ்ந்து போகிறாய்.

அப்போது ஒரு கணம் என்பது முடிவற்ற காலமாகிப் போகிறது. உன் மகிழ்ச்சி பெருகுகிறது. எல்லையே இல்லாமல் பெருகுகிறது. உன்னுடைய பரவசம் பெருகுகிறது. உன் பரவசத்துக்கு எல்லையே இல்லாமல் போகிறது. எந்தத் தடுமாற்றமும் இருப்பதில்லை. சமநிலை என்றென்றும் அப்படியே இருக்கிறது. எந்த மனது மேலும் கீழுமாக ஓடும் கோட்டில் நகர்கிறதோ அந்த மனது சமனப்பட்ட மனதாகிறது. ஏனென்றால் அப்போது அந்த மனம் மனமற்றதாகிப் போகிறது.

தியானத்தின் முயற்சி எல்லாம் இந்த நேர் மேலாகப் போகும் மனதை உனக்குத் தருவதுதான். அப்படி மேல் நோக்கி நகரும் மனது, மனதின்மை ஆகித்தான் போகிறது. புள்ளி ஒன்றின் ஆழத்துக்கு அல்லது அந்தப் புள்ளியின் சிகரத்தை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறாய். அப்படியே அடுத்த புள்ளிக்குப் போய்ச் சேர்ந்தாலும் அதனுடைய ஆழத்துக்கும் சிகரத்துக்குமாக நகர ஆரம்பிக்கிறாய். நீ எங்கேயாவது கீழே விழுந்து விடுவாயோ என்ற பயமே தேவையில்லை. நீதான் ஆழ ஆழப் போய்க் கொண்டிருக்கிறாயே. இதைத்தான் ஓய்வெடுத்துக் கொள்வது என்கிறேன். இன்றைய உணவுக்குச் சம்பாதித்து விட்டாயா? போய் ஓய்வெடுத்துக் கொள்.

ஆனால் உனக்கு ஓய்வெடுக்கவே தெரியாது. கனவில்கூடச் சம்பாதித்துக் கொண்டு இருக்கவேண்டும் என்கிறாய். படுத்த உடனே நாளைக்கு என்ன என்பதைப்பற்றிச் சிந்திக்கிறாய். உனக்கு நாளை என்ற

ஒருநாள் இருக்கிறதா என்று யாருக்குத் தெரியும் என்கிறாய்? நாளை என்றொரு நாள் இல்லவே இல்லை என்றுதான் சொல்வேன். இருப்ப தெல்லாம் இன்று என்ற ஒரே நாள்தான். இறப்பு, நாளை என்ற ஒரு நாளை இல்லாமலே செய்துவிடும் என்பதைத் தெரிந்து கொள்ளா மலேயே நாளைக்கு நாளைக்கு என்று அடித்துக் கொள்கிறாய்.

இந்தக் கணத்தில் தங்கி இரு. அந்த ஞானத்தோடு இரு. எந்த அளவுக்கு முடியுமோ அந்த அளவுக்கு முழுமையாக வாழ். பிறகு உனக்கு இறப்பு என்பது இல்லாமலே போய்விட்ட ஒன்றாகிப் போகும். ஏனென்றால் நாளை என்ற நாளைப் பற்றிக் கவலைப்படாத மனிதனுக்கு இறப்பே இல்லை. ஏனென்றால் இறப்பு என்பது நாளை. வாழ்க்கை என்பது இன்று.

இறப்பு எதிர்காலத்தியது. வாழ்க்கை எப்போதுமே நிகழ்காலத்திய நிகழ்வு. இதுதான் ஓய்வெடுப்பதன் பொருள். இந்த வார்த்தைக்குச் சரியான மொழிபெயர்ப்பு வேண்டுமானால் அதைச் சன்னியாசம் என்று கொள்ளலாம். வாழ்வின் முடிவில் அல்ல ஓய்வெடுத்துக் கொள்வது. ஒவ்வொரு நாளும் ஓய்வெடுத்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு கணமும் ஓய்வெடுத்துக்கொள்ள வேண்டும். ஒரு கணத்தை அனுபவித்து முடித்துவிட்டால் அது ஓய்வுதான். அதுதான் சன்னியாசம்.

ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்து சேர்ந்து விட்டாயா? அதை இங்கே தூக்கிக் கொண்டுவந்து வைக்காதே. ஆபீஸ் ஆபீஸிலேயே இருக்கட்டும். அதை உன் மண்டைக்குள் போட்டுத் தூக்கிக்கொண்டு திரியாதே. தலைவலிதான் மிஞ்சும். அவ்வளவு பெரிய இடத்தை உன் தலைக்குள் அடைத்து வைத்துக்கொண்டு திரிந்தால் தலைவலிதானே வரும்?

கடைவீதி அத்தனையையும் தலைக்குள் வைத்துக்கொண்டு திரியாதே. அது பெரிய சுமையப்பா, சுமை! ஃபாலிபாய் பங்கு மார்க்கெட்டுக்குப் போகிறவர். அவருக்கு எல்லாம் தெரியும். நீயோ பங்கு மார்க்கெட்டைத் தலையில் வைத்துக்கொண்டு திரிகிறாய். அப்படித் தூக்கிக்கொண்டு திரிவது பைத்தியக்காரத்தனம். அவர் அதைத் தூக்கித் தலையில் வைத்துக்கொண்டு திரிவதில்லை. அதற்குள் எப்படிப் புகுந்து ஓய்வெடுத்துக் கொள்வது என்ற கலை அவருக்குத் தெரியும்.

ஒவ்வொரு நாளும் ஓய்வெடுத்துக்கொள்ளுதல். ஒவ்வொரு கணமும் ஓய்வெடுத்துக்கொள்ளுதல். ஓய்வெடுத்துக்கொள்ளுதல் என்ற சொல்லே எதிர்மறைச் சொல்லாக நமக்குத் தோன்றுகிறது. வயதாகிப் போய்விட்டதைக் குறிப்பதைப்போல. கையாலாகாமல் போய்விட்டதைப் போல. அறுபத்தைந்து வயதுக்குப் பின்னர் இதோ

அதோ என்று சாவு பக்கத்தில் வந்துவிட்டது என்று தோன்றும்போது ஓய்வெடுத்துக் கொள்ளலாம்தான் என்கிறோம்.

அப்படி இல்லை. ஓய்வு என்பதே அழகான ஒரு வார்த்தை. அதன் பொருள் சன்னியாசம். ஓய்வெடுத்துக் கொள்ளுதல் என்றாலே இளைப்பாறிக் கொள்ளுதல். வேலை முடிந்த பின் ஓய்வெடுத்துக்கொள்ள வேண்டியதுதானே! அதை அனுபவித்துப் பார். அந்த அனுபவத்தைத் தள்ளிப் போட்டுக்கொண்டே போகாதே. ஓய்வெடுப்பது என்றாலே அனுபவிப்பது என்றுதான் பொருள். அதை இங்கே இப்போதே அனுபவி.

**வேலை முடிந்துவிட்டதா? ஓய்வெடுத்துக்கொள்.**
**அதுதான் சொர்க்கத்தின் நெறி.**

அதுதான் தாவோ. எப்போதும் ஒரு கோட்டுக்குப் போய்விடாதே. வரைமுறைக்கு உட்பட்டுத்தான் உழைக்கவேண்டும். வரைமுறைகளுக்குள் இரு. வரைமுறைகளால் சூழப்பட்டவனாக இரு. இதுதான் சன்னியாசியின் ஒழுக்கம். எப்போதும் நடுமத்தில் இருப்பது. எப்போதும் வரையறைகளுக்குள் இருப்பது. எப்போதும் திருப்தியாக இருப்பது. இன்னமும் வேண்டும் இன்னமும் வேண்டும் என்று அலைபாயாமல் இருப்பது.

கிடைக்கோட்டை விட்டுவிட்டு மேல் கீழ்க் கோட்டுக்குப் போய்ச் சேர். ஓய்வெடுத்துக்கொள். உனக்கு நிறைவேற்றம் காத்திருக்கிறது. வாழ்க்கை உனக்குத் தரக்கூடிய மிகப்பெரிய நிறைவேற்றம் உனக்குக் கிடைக்கும். அந்த நிறைவேற்றம் என்ன என்கிறாயா? அதுதான் முழுக்கச் சமன்பட்ட நிலை. சாந்தி. இதை விழிப்பு என்கிறோம். ஞானோதயம் என்கிறோம். விடுதலை என்கிறோம். மோட்சம் என்கிறோம். நிர்வாணம் என்கிறோம். என்ன பெயர் வேண்டுமானாலும் வைத்துக்கொள்.

❑

ஆறு

# அர்த்தமே இல்லை

முதல் கேள்வி:

குருவின் ஒவ்வோர் அசைவும் முக்கியமானது என்கிறீர்கள். பெரும்பாலும் சொல்லப்பட்டதை விடவும் சொல்லப்படாததே சரியான பதில் என்கிறீர்கள். நீங்கள் என்னைப் பார்க்கும் போதெல்லாம் உங்களுடைய கண்கள் என்னை வருடிப் போகும்போதெல்லாம் ஏதோ ஒரு சேதி இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. ஆனால் என் புத்தியைப் பயன்படுத்தாமல் அதை எப்படி இனம் காண்பது என்பது எனக்குத் தெரியவில்லை. அப்படியே புத்தியைப் பயன்படுத்துகிறபோதும் சரியாகத்தான் புரிந்து கொள்கிறேனா என்பது நிச்சயமாகத் தெரியவில்லை.

புத்தியைப் பயன்படுத்தவே முடியாது. புத்தியைப் பயன்படுத்தி னாலேயே முக்கியமானதைத் தவறவிட்டுவிட்டாய் என்றுதான் பொருள். மௌனத்தை மௌனித்திருந்துதான் புரிந்துகொள்ள முடியும். வார்த்தை களைத் தவிர்க்கும் சேதிகளை வார்த்தைகள் இன்றித்தான் புரிந்துகொள்ள முடியும். புத்தியின் மூலமாகவோ வார்த்தைகளிலோ புரிந்துகொள்ள முயன்றால் தவறவிட்டு விடுவாய். தவறாகப் புரிந்துகொள்வாய். அப்போது உன் மனம் குறுக்கிட்டு விடுகிறதே! வியாக்கியானம் செய்வாய். அப்போது அது அதுவாக இருக்காது. கலப்படமற்றதாக இருக்காது.

''பிறகென்ன செய்வது?'' என்று கேட்டால் தவறான கேள்வியைக் கேட்கிறாய். எப்படி என்ற கேள்வியே புத்தியில் இருந்து பிறப்பது. எப்படி என்ற கேள்வி தேவையே இல்லை.

மௌனித்து விடு. ஒன்றும் செய்யாதே. வியாக்கியானம் செய்யாதே. எந்தவிதமான குறுக்கீடுகளும் வேண்டாம். உன் ஜீவிதத்துக்குள் அப்படியே மெல்லப் பரவட்டும். விடு.

அதை இன்னதென அடையாளம் காண முடியாதுதான். அது புத்தியைவிடப் பிரம்மாண்டமானது. எந்த அடையாளத்தையும் கற்பிப்பது புத்திதான். அது என்ன என்பதைத் துல்லியமாக உன்னால் புரிந்துகொள்ள முடிவதில்லை. அதற்குத் தேவையும் இல்லை. அதன் அர்த்தத்தைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. அதற்குத் தேவையும் இல்லை.

வார்த்தைகள் தவிர்த்த செய்தி வார்த்தைகளற்ற உன் நடுமத்துக்குப் போய்ச் சேரட்டும். அது ஓர் ஆழ்ந்த தொடர்பு. அந்தத் தொடர்பே அதன் அர்த்தம். ஆழமானதொரு தைப்பு அது. அந்தத் தைப்பே அதன் அர்த்தம்.

ஒரு ரோசாச் செடியைத் தாண்டிப் போகும்போது ஒரு மலரைப் பார்க்கிறாய். என்ன அர்த்தம் இருக்கிறது அந்த மலரில்? அதைப்பற்றிச் சிந்தனை செய்ய ஆரம்பித்தால் புத்தி உள்ளே வந்துவிடுகிறது. மலர் மறைந்துவிடுகிறது. வார்த்தைகளின் சுவர்கள், சிந்தனையின் சுவர்கள், கொள்கைகளின் சுவர்கள் - இவை எங்கும் தோன்றி உயர மலர் காணாமலேயே போய்விடுகிறது.

அர்த்தத்தைக் கண்டுபிடிக்க எந்த முயற்சியும் செய்யாதே. என்ன அர்த்தம் என்ற சிந்தனையே ஒரு நோய். ரோசா மலருக்கு என்ன அர்த்தம் இருக்கிறது? ஒன்றுமில்லையே. எந்த அர்த்தமும் இல்லாமல்தான் மலர் மலர்கிறது. தன்னை நியாயப்படுத்திக்கொள்ள மலருக்கு எந்த அர்த்தமும் தேவையில்லை. அதன் இருத்தலிலேயே அதன் நியாயம் இருக்கிறது. அதை அப்படியே இருக்கவிட்டு நீயும் அதனோடு இருந்துவிடு. அந்த மலர் உனக்குள் புகுந்துவிடட்டும். உன்னைச் சுற்றி அதன் மணம் பரவட்டும். உனக்குள்ளும் பரவட்டும். ஏதோ ஒன்று முகிழ்ந்துவரக் காண்கிறாய். அந்த மலர் உனக்குள் என்னவோ செய்து விடுகிறது.

அப்படியும் அப்படி என்னதான் அந்த மலர் செய்துவிட்டது என்பதை உன்னால் புரிந்துகொள்ள முடிவதில்லை. ஆனால் என்னவோ ஒரு மகிழ்ச்சியை அனுபவிக்கிறாய். ஒரு பரவசத்தை அனுபவிக்கிறாய். இனந்தெரியாத ஒன்றோடு உனக்குத் தொடர்பு ஏற்பட்டு விட்டது. இன்னதெனத் தெரியாத ஒன்றுக்குள் புகுந்து பார்க்க உனக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்துவிட்டது என்பதை உணர்கிறாய். அந்த மலர் ஒரு சன்னலாகிப் போக பரந்த வானம் திறந்து கொள்கிறது. உன் மனமெனும் சுவரில் ஒரு விரிசல் ஏற்பட்டு விடுகிறது. ஓர் ஒளிக்கதிர் உனக்குள் புகுந்து விடுகிறது. அர்த்தத்தைப்பற்றிக் கவலைப்படாதே.

நான் உன்னைப் பார்க்கும்போது நீயும் என்னை அப்படியே பார்க்கிறாய். உனக்கு என் ஜீவிதத்தை நான் தரும்போது நீ உன் ஜீவிதத்தை எனக்குத் தருகிறாய். பெற்றுக்கொள்ளத் தயாராக இரு. ஒரு தொர்டர்பு

சித்திக்கட்டும். அது ஒரு தொடர்புகூட அல்ல. அது ஒரு சங்கமம். இன்னதெனப் புரிந்துகொள்ளக் கூடிய ஒரு சேதியை நான் உனக்குத் தருவதில்லை. என்னையே நான் உனக்குத் தந்துவிடுகிறேன்.

அதனுடைய எந்த அர்த்தத்தையும்விடப் பிரம்மாண்டமானது அது. நீயும் பிரம்மாண்டமானவன்தான். தொடர்பு ஏற்பட்டுவிட்டால் எல்லைக் கோடுகள் கரைந்து போகின்றன. ஒரு கணத்துக்கு நீ அங்கே இல்லாமல் போய்விடுகிறாய். உன்னை எனக்குத் தத்தம் செய்து விடுகிறாய். ஒரு கணத்துக்கு நான் உன்னை ஆகர்ஷித்து விடுகிறேன். என்னால் மட்டுமல்லாமல் என் மூலமாகவும் முழுமையாலும் ஆகர்ஷிக்கப்படு கிறாய். எனவே நான் உன்னைப் பார்க்கும்போதெல்லாம் உன் கண்களை ஊடுருவும்போதெல்லாம் உன் கதவுகளைத் தட்டும்போதெல்லாம் உன் இதயக் கதவுகளைத் தட்டும்போதெல்லாம் கதவுகளைத் திறந்து விட்டுவிடு.

அர்த்தத்தைக் காண முயலாதே. அர்த்தத்தைக் கண்டுகொள்வதில் அர்த்தத்தை இழந்து விடுகிறாய். ஏனென்றால் தொடர்பே அர்த்தம். அக ஆழத்தில் ஓர் அணைப்பே அர்த்தம்.

இரண்டாவது கேள்வி:

**என் மனதில் ஒரே குழப்பம். நடுவாந்திரத்தில் இருப்பது சாத்தியமே இல்லாமல் போய்விட்டது. இந்தக் கடைசிக்கும் அந்தக் கடைசிக்கும் அலைபாயும் மனதின் போக்கிலேயே போய் அதன் சேட்டைகள் அத்தனையையும் தெரிந்து கொள்ளலாமா?**

கேள்வியின் முதல் பாகத்தை முதலில் பார்ப்போம். "என் மனதில் ஒரே குழப்பம். நடுவாந்திரத்தில் இருப்பது சாத்தியமே இல்லாமல் போய்விட்டது."

நீ நடுவாந்திரத்தில் இருக்கவேண்டும் என்று நான் சொல்லவே இல்லையே. நடுவே இருக்கவேண்டும் என்று முயன்றால் உன்னால் நடுவே இருக்கவே முடியாது. நடுவே இருப்பதென்பது ஒரு சமனப்பட்ட நிலை. அங்கேயே இருக்கமுடியாது. இடது புறமும், வலது புறமும் மாறிமாறிச் சாய்ந்து சாய்ந்தே நடுவே இருக்கமுடியும். எந்த ஒரு ஸ்தானத்தையும் குரங்குப்பிடியாகப் பிடித்துக் கொள்ளாதே. சுதந்திரமாக இரு. இடது புறமும் வலது புறமும் சாய்ந்து சாய்ந்து ஆடும்போது இரண்டுக்கும் நடுவே ஒரு சூட்சுமமான புள்ளி தோன்றுகிறது. அது உனக்குப் புறத்தே இருப்பதன்று. புறத்தே போய்ப் பார்க்கும்போது இடதும் வலதும்தான் இருக்கின்றன. நடுமம் இருப்பதில்லை.

இது காலத்தைப் போன்றது. (வெளியும் காலமும் ஒன்றாகவே இருக்கின்றன) புரிந்துகொள்ள முயற்சி செய். கடிகாரத்தைக் கவனித்துப்

பார்த்தால் கடந்த காலமும் எதிர்காலமும் இருப்பதைக் காண்பாய். நிகழ்காலம் என்ற ஒன்று இல்லவே இல்லை.

எந்தக் கடிகாரமும் நிகழ்கணத்தைக் காட்டவே முடியாது. இதுதான் நிகழ்கணம் என்று காட்டும் அந்தக் கணத்தில் அது கடந்துபோன கணமாகிப் போகிறது. எனவே கடிகாரத்தின் முட்கள் கடந்துபோனதில் இருந்து எதிர்காலத்துக்கு நகர்ந்துகொண்டே இருக்கின்றன. நிகழ்கணம் என்ற ஒன்று அதில் இல்லவே இல்லை. இருக்கவும் முடியாது. நிகழ்கணம் காலத்தின் ஒரு பகுதியே அல்ல.

பள்ளியிலும் பல்கலைக்கழகங்களிலும் நிகழ்காலம் காலத்தின் ஒரு பகுதி என்று சொல்லக் கேட்டிருப்பாய். அது முட்டாள்தனமான கருத்து. நிகழ்காலம் காலத்தின் ஒரு பகுதியே அல்ல. கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்று காலம் மூவகைப்படும் என்று திரும்பத்திரும்பச் சொல்லக் கேட்டுக்கேட்டு உன் மனது அதற்குப் பழகிப் போய்விட்டது. அப்படி ஒன்றுமில்லை. காலத்துக்கு இரண்டு பருமானங்கள்தான் உண்டு. கடந்துபோன காலம். இனி வர இருக்கும் காலம்.

அப்படியானால் நிகழ்காலம் எங்கே இருக்கிறது? நிகழ்காலம் உனக்குள் இருக்கிறது. உனக்குப் புறத்தே பார்த்தால் கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் மட்டுமே பார்ப்பாய். உனக்குள்ளே பார்க்கும்போது நிகழ்காலத்தைப் பார்க்கிறாய். எப்போதும் நிகழ்காலத்தை மட்டுமே பார்க்கிறாய். கடந்தகாலமும் எதிர்காலமும் இருப்பதே இல்லை. இருக்கவும் முடியாது.

உனக்குள்ளேயே நகர்ந்து போய்ப் பார். நிகழ்காலம் என்ற நித்தியத்துக்குள் புகுந்து பார்க்கிறாய். வெளியே நகர்ந்து போய்ப் பார். கடந்த காலத்துக்கோ அல்லது எதிர்காலத்துக்கோ போய்ச் சேர்கிறாய்.

வெளியைப் பற்றிப் பார்த்தாலும் இதுவே நிஜம். இடதுபக்கம் அல்லது வலதுபக்கம்தான் இருக்கின்றன. இடதுபக்கம் சாய்ந்தாலும் வெளியே இருக்கிறாய். வலதுபக்கம் சாய்ந்தாலும் வெளியேதான் இருக்கிறாய். ஆனால் இரண்டுக்கும் இடையே ஒரு நடுமத்தைக் கண்டுகொள்ளும்போது உனக்குள்ளே போகிறாய். நடுமம் உனக்குள்ளே இருக்கிறது அது புறத்தே இருக்கும் வெளியில் இருப்பதல்ல. உண்மையில் நிகழ்காலமும் நடுமமும் ஒன்றாகவே இருக்கின்றன. நிகழ்காலத்தில் இருக்கும்போது நடுமத்தில் இருக்கிறாய். நடுமத்தில் இருக்கும் போதெல்லாம் நிகழ்காலத்தில் இருக்கிறாய். நடுமம் என்பது உனக்குப் புறத்தே இருக்கும் ஒரு புள்ளி அல்ல. அது ஓர் அகநிகழ்வு, நிகழ்காலத்தைப் போல.

எனவே ''சமனப்பட்டு இரு'' என்று லாவோட் சூ சொல்வதாக நான் சொல்லும்போது வாழ்வில் நகர்தல் இல்லாத ஒரு நடு இடத்தில் இருந்துகொள் என்று சொல்வதாக அர்த்தம் கொள்ளாதே. நடுமம் நகர்தல் அற்ற ஒன்றன்று. அப்படி இருக்கமுடியாது. இடது பக்கமும், வலது பக்கமும் எப்போதும் மாறிமாறி நகர்ந்து கொண்டிருந்தால்தான் நடுமத்தில் இருக்கமுடியும். அப்படி இடது பக்கமும் வலது பக்கமும் மாறிமாறிச் சாய்ந்து நிமிர்ந்து கொண்டிருக்கும்போது ஏதோ ஒரு கணத்தில் திடீரென நடுமத்தில் இருப்பதை உணர்வாய்.

அப்போது உனக்குள் ஒரு குவிதல் நடக்கிறது. வெடித்துச் சிதறுவதல்ல அந்த அனுபவம். ஒன்றாகக் குவிவதுதான் அந்த அனுபவம். திடீரென நீ யாராக இருந்தாயோ அதிலிருந்து மாறியவனாகிப் போகிறாய். நடுமத்தைத் தாண்டும்போதெல்லாம் நீ யாராக இருந்தாயோ அவனாகவே இருப்பதில்லை என்பதைத் தெரிந்து கொள்கிறாய். திடீரென ஜீவனுள்ள வனாக மாறிப் போகிறாய். திடீரெனக் குற்றம் குறையற்றவனாகிப் போகிறாய். வெகு பரிசுத்தமானவனாகிப் போகிறாய். வெகு புனிதனாகிப் போகிறாய். அந்தக் கணத்தில் உனக்கு இருட்டே இருப்பதில்லை. எங்கெங்கும் ஒளிப் பிரவாகம்தான். எந்தப் பாவமும் இருப்பதில்லை. எந்தக் குற்றக் குறுகுறுப்பும் இருப்பதில்லை. அந்தச் சமனப்பட்ட நிலையை அனுபவிக்கும்போது கடவுளே ஆகிப் போகிறாய். தெய்விகம் உன்னுடையதாகிப் போகிறது.

ஆனால் அதை ஒருமுறை கண்டுவிட்டால் எப்போதும் கண்டு விட்டதாக ஆகிப் போவதில்லை. வாழ்க்கை என்பது அந்தச் சமனப்பட்ட நிலையைத் தொடர்ந்து சாதித்துக்கொண்டே இருக்கும் ஒரு நிகழ்வாகும். ஒரு தொடர்ச்சி. ஒரு தொடர் நிகழ்வு. கடைவீதிக்குப் போய்க் காசு கொடுத்து வாங்கிக்கொண்டு வந்த பண்டம் எப்போதும் உன்னுடையதாகிப் போவதைப்போல அல்ல அது. உன் வீட்டின் ஒரு பகுதியாகிப் போகும் பொருள் அல்ல அது. விழிப்போடு இருக்கத் தவறினால் அதை இழந்து விடுவாய். மறுபடி மறுபடி கெட்டுப் போக்கிவிடுவாய்.

இது உன் கேள்வியின் முதல் பகுதி. நடுமம் என்பது உனக்குப் புறத்தே இருக்கும் ஒரு புள்ளி அல்ல. இடது பக்கம் இருந்தோ வலது பக்கம் இருந்தோ அங்கே போய்ச் சேரலாம். இரண்டு முனைகளுக்கும் இடையே கணத்துக்குக் கணம் சமனப்பட்ட நிலையைச் சாதிப்பதுதான் அது. அன்பில் வெறுப்பு அது. கருணையில் கோபம் அது.

எதிர்முனைகளுக்கு இடையே சமன்பட்டு நில். போகப்போக அந்தச் சாதுரியம் காரிய சாத்தியமாகிப் போகும். அன்புக்கும் வெறுப்புக்கும்

இடையே எங்கோ அது நடந்தேறிவிடும். எங்கோ என்று சொல்வதைக் கவனி. இங்கேதான் அல்லது அங்கேதான் என்று சுட்டிக்காட்ட முடியாத ஒரு புள்ளியில் அது நடக்கும். வெகு ஜீவிதத்தோடு இருப்பதால் வெகுவாக இயக்கவயப்பட்டு இருப்பதால் இங்கே அல்லது அங்கே என்று அதன் இருப்பைச் சுட்டிக்காட்டிவிட முடியாது. தோட்டத்தில் பறக்கும் பட்டாம்பூச்சியைப் போலத்தான். அதைப் பிடித்து ஒரு நுனியில் அழுத்தினால் அது செத்துப் போகும். அதைப் பிடித்துக் குண்டூசிகளால் குத்தி வைத்துவிடலாம். ஆனால் அது பட்டாம்பூச்சியாக இருக்காது. அதனுடைய பிணமாகத்தான் இருக்கும்.

பட்டாம்பூச்சியைப் போலத்தான் அகத்தின் சமநிலையும். அதைக் குண்டூசியில் குத்தி வைக்க முடியாது. அதனால்தான் அது விவரணத்துக்கு அப்பாற்பட்டதாகிப் போகிறது. தாவோ என்பது தாவோவை விஞ்சியதாக இருக்கமுடியாது என்றுதான் லாவோட் சு சொல்கிறார். சொல்லப்பட்ட உண்மை உண்மையல்லாததாகத்தான் ஆகிப் போகும்.

''நயம் ஆத்மா ப்ரவசனன் லப்யா'' என்பது சமஸ்கிருத வாக்கியம். ''அதை'' எந்த வார்த்தைகளைக் கொண்டும் இன்னதெனப் புரிந்துகொள்ள முடியாது. ''அது'' வெகு ஜீவனுள்ளதாக இருப்பதால் அது என்றும் உனக்குத் தட்டுப்படாமலேயே இருக்கிறது. அதைச் சென்று சேரும்போது பட்டாம்பூச்சி பறந்து போய்விடுகிறது. போய்ப்பார். தோட்டத்துக்குள் போய்ப் பார். அருகே அருகே போகப்போகப் பட்டாம்பூச்சி பறந்துபோகத் தயாராகி விடுகிறது. ஏறக்குறைய அதைப் பிடித்துவிட்டாய் எனும்போது பட்டாம்பூச்சி பறந்து போய்விடுகிறது. ஏற்கெனவே இது இன்னொரு மலரில் உட்கார்ந்து விட்டது. அதை ஊசி முனையில் குத்தி வைக்க முடியாது. அப்படிக் குத்தி வைத்துவிட்டால் அது செத்துப் போனதாகிப் போகிறது.

மேற்றிசைக் கவிஞர்களில் ஆழ்ந்த திருஷ்டியுள்ள சிலரில் ஒருவரான வாலேஸ் ஸ்டீவன்ஸ் எழுதியவற்றை நேற்றுத்தான் படித்துக் கொண் டிருந்தேன். அவருடைய பொன்மொழிகளில் ஒன்று அரிஸ்டாட்டிலை ஓர் எலும்புக்கூடு என்று சொல்லியிருப்பது. எனக்கு அது மிகப் பிடித்தமானது.

தர்க்கம் ஓர் எலும்புக் கூடுதான். தர்க்கம் எப்போதும் செத்துப் போனது. இறப்போடு தொடர்புள்ளது. வாழ்க்கைக்கும் அதற்கும் எந்தச் சங்காத்தமும் இல்லை. இப்படித்தான் அப்படித்தான் என்று உறைந்து போய்விட்ட எதுவும் செத்துப் போனதுதான். அதனால்தான் திருமணம் என்பது குண்டூசியால் குத்தப்பட்டுச் செத்துப்போன பட்டாம்பூச்சி என்று சொல்வேன். வாழ்க்கை ஜீவனுள்ள ஒரு நிகழ்வு.

திருமணத்தை இன்னது என விவரித்து விடலாம். காதலை விவரிக்க முடியாது. எது திருமணம் அல்லது திருமணம் அல்ல என்பதை நீதிமன்றம்

தீர்மானித்து விடும். ஆனால் காதல் என்பது என்ன என்பதை யாராலும் தீர்மானித்துவிட முடியாது. திருமணம் சட்டபூர்வமானது. காதல் எல்லாச் சட்ட திட்டங்களையும் கடந்து நிற்பது. இன்னதெனச் சொல்லமுடியாத ஏதோ ஒன்று காதலுக்குள் ஊடுருவி நிற்கிறது. காதல் எனும் நிகழ்வுக்குள் இன்னதெனக் குறிப்பிட்டுச் சொல்லமுடியாத ஒன்று ஊடுருவி நிற்கிறது.

அகத்தினுள் இருக்கும் சமநிலையைக் குண்டூசியால் குத்தி வைத்துவிட முடியாது. அதனுடைய சாதுரியத்தைத் தேடிப் பெற்றுக் கொள்ளவேண்டும். நீயும் அதைக் கண்டுபிடித்துவிட முடியும்தான். நான் கண்டுகொள்ள முடியும் என்றால் உன்னால் ஏன் முடியாது? லாவோட் சூ கண்டுகொள்ள முடியும் என்றால் உன்னால் ஏன் முடியாது? அகத்தின் சமநிலையை, அகத்தின் சாந்தியை, அகத்தில் ஒலிக்கும் அந்தச் சன்னமான குரலை, புரிதலுக்கு அப்பாற்பட்ட அந்தச் சாதுரியத்தை ஒருவன் கண்டுகொள்ள முடியும் என்றால் ஒவ்வொரு மனிதனும் அதைக் கண்டுகொள்ள முடியும்தான். லாவோட் சூ சொல்வதில்தான் உன்னுடைய எதிர்காலம் இருக்கிறது. உன்னுடைய சாத்தியங்கள் இருக்கின்றன. நீயும் அதைச் சாதித்துவிட முடியும்தான்.

என் மனதில் ஒரே குழப்பம். நடுவாந்திரத்தில் இருப்பது சாத்தியமே இல்லாமல் போய்விட்டது என்கிறாய்.

நடுவாந்திரத்தில் இருக்க முயற்சியே செய்யாதே. நடுவாந்திரத்தை மறந்து போய்விடு. எப்போதும் இடது வலது என்று நகர்ந்துகொண்டே இரு. அவற்றுக்கு இடையேயான சமநிலையை ஒருநாள் கண்டுபிடித்துவிட முடியும் என்பதால் அதற்கான ஆயத்தத்தோடு இருந்துவிடு.

இதைத்தான் எப்போதும் செய்து கொண்டிருக்கிறாய். ஒரு கணம் மகிழ்ச்சியாக இருக்கிறாய். மறுகணம் துக்கிக்கிறாய். ஒரு கோடியில் இருந்து இன்னொரு கோடிக்குப் போய்விட்டாய். அப்படிப் போகும்போது நடுவாந்திரத்தைத் தாண்டித்தான் போயிருக்க வேண்டும். அடுத்த கோடிக்குப் போகவேண்டும் என்றால் நடுவாந்திரத்தைத் தாண்டிப் போகாமல் எப்படிப் போக முடியும்? ஒரு விநாடிக்கும் குறைவான நேரத்தில் அதைக் கடந்து போயிருக்கலாம். என்றாலும் அதைக் கடந்துதானே போயிருக்கிறாய். இன்னும் கொஞ்சம் எச்சரிக்கையாக இருந்திருந்தால் அதைக் கண்டிருப்பாய். இந்தக் கணம் அமைதியாக இருக்கிறாய். அடுத்த கணம் வருவதற்கு முன் உன் மனம் உளறிக் கொட்ட ஆரம்பித்து விடுகிறது. அப்படியானால் அந்த இரண்டு கணங்களுக்கும் இடையே இருந்த நடுமத்தைத் தாண்டித்தானே நீ போயிருக்க வேண்டும்?

சாவையே எடுத்துக் கொள்ளுங்களேன். ஒரு கணம் இருந்தவன் திடீரென அடுத்த கணம் இல்லாதவனாகிப் போகிறான். ஜாக்கிரதையாக இருந்தால் இறப்பையும் வாழ்வையும் தாண்டிய அந்த நடுமத்தை அவன் கண்டிருப்பான். அதுதான் சிரஞ்சீவிதம். ஆனால் அவனோ கொஞ்சம் ஏமாந்து போனான். நிறைய தடவை செத்திருக்கிறாய். பல்லாயிரக்கணக்கான தடவை செத்துப் பிழைத்திருக்கிறாய். ஒவ்வொரு தடவையும் அந்த நடுமத்தைத் தாண்டித்தான் போயிருந்திருக்கிறாய். என்றாலும் கவனத்தோடு இருந்திருக்கவில்லை. ஒவ்வொரு நாளும் நடுமத்தை ஆயிரக்கணக்கான தடவை தாண்டித் தாண்டிப் போய்க் கொண்டிருக்கிறாய். இரக்கம், கோபம், நன்றாக இருக்கும் உணர்வு திடீரென மோசமான உணர்வாக மாறிப் போவது... காலையில் வெகு புண்ணியவானாக இருந்து விடுவது... கங்கை நதிக்கரையில் அல்லது கோயிலில் பிரார்த்தனையில் ஈடுபட்டிருக்கிறவரைப் பாருங்கள். எவ்வளவு அழகாக இருக்கிறது அவர்கள் முகம்! அசிங்கமான முகங்களும்கூட அழகான முகங்களாக மாறிப் போயிருக்கின்றன. அவர்களையே கடைவீதியில் இருக்கும்போது பாருங்கள். அழகான முகமும்கூட அசிங்கமானதாகிப் போகிறது. கங்கைக் கரையில் இருந்து அல்லது கோயிலில் இருந்து கடைவீதிக்குப் போகும்போது வழியில் எங்கோ ஓரிடத்தில் அந்த நடுமத்தை அவர்கள் தாண்டி வந்திருக்க வேண்டும். ஆனால் அவர்கள் விழிப்போடு இருந்து அதைக் காணத் தவறிவிட்டார்கள்.

எனவே என்ன செய்வது? நடுவாந்திரத்தில் இருக்க முயற்சி செய்யாதே என்கிறேன். கோபத்தையும் இரக்கத்தையும் ஒன்றாக வெளிப்படுத்து என்று சொல்லவில்லை. நடுவாந்திரத்தில் இரு என்று சொல்லவில்லை. அப்படி இருக்க முயன்றால் பைத்தியம்தான் பிடித்துப்போகும்.

ஒரு கோட்டில் இருந்து இன்னொரு கோட்டுக்குப் போ என்கிறேன். ஆனால் அப்படிப் போகும்போது எச்சரிக்கையாகப் போ. உனக்குள் இருக்கும் அந்த நடுமத்தைக் கண்டுகொள்ள முடியும் அளவுக்கு எச்சரிக்கையாகப் போ என்கிறேன். நடுமத்தை இன்னதெனத் தெரிந்துகொண்ட அந்தக் கணம் நீ உன் வாழ்வின் எசமானாகிப் போகிறாய். இதுவரைக்கும் நீ வாழ்வின் அடிமையாக இருந்திருக்கிறாய். இதுவரைக்கும் நீ தூக்கத்தில் இருந்திருக்கிறாய். முதல் முதலாக விழித்திருப்பாய்.

உன் கேள்வியின் இரண்டாவது பகுதி.

இந்தக் கடைசிக்கும் அந்தக் கடைசிக்கும் அலைபாயும் மனதின் போக்கிலேயே போய் அதன் சேட்டைகள் அத்தனையையும் தெரிந்து கொள்ளலாமா?

மனதின் சேட்டைகள் அத்தனையையும் தெரிந்துகொண்டவன் இதுவரைக்கும் யாருமே இல்லை. அது முடிவில்லாதது. எல்லையில்லாதது. அதன் முழுமையை யாரும் புரிந்துகொள்ள முடியாது. வெகு சாதுரியமாக அது மேலும் மேலும் விரிந்துகொண்டே போய்க் கொண்டிருக்கும்.

அதனை முழுமையாக உன்னால் அனுபித்துத் தீர்த்துவிட முடியாது. மனம் வெகு சாமர்த்தியமானது. மேலும் மேலும் என முட்டாள்தனங்களை அது ஆக்கிக்கொண்டே இருக்கிறது. இந்த ஜீவிதத்தில் பல காலம் இருந்தும் அதனுடைய சேட்டைகளை அனுபவித்துத் தெரிந்து கொள்ளாமலேயே இருக்கிறாய். முதல்முறையாக அல்ல இந்த உலகில் நீ இருக்க வந்திருப்பது. முன்பும் இருந்திருக்கிறாய். உன்னுடைய பழைய மிகப்பழைய முகங்களை எல்லாம் நான் பார்க்க முடிகிறது. உன்னுடைய புதிய தோலுக்கடியே பதுங்கியிருக்கும் பழைய முகத்தைப் பார்க்க முடிகிறது. உன்னுடைய வெகு காலத்திய முகங்களைத்தான் என்கிறேன்.

ப்ரகுத்த காத்யாயனா என்று ஒரு மகான் புத்தர் காலத்தில் இருந்தார். மிக அரிய மகான் அவர். தன் சீடர்களை அவர் மூத்தப்பரே என்றுதான் அழைப்பார். ஏனென்றால் ஒவ்வொருவரும் மிகப் பழையவர். இந்த உலகத்தை விடவும் மூத்தவர்.

இந்த உலகம் மிகப் புதியது. வெகு இளையது. ஆனால் நீயோ உலகத்தைவிட மூத்தவன். இந்த உலகம் இருக்க வருவதற்கு முன் நீ வேறு கிரகங்களில் இருந்திருக்கிறாய். சூரியனுக்கும் மூத்தவன். நீ ஜீவிதம் வந்து இருக்கும் காலத்தில் இருந்தே நீ இருந்திருக்கிறாய். திடீரெனத் தோன்றி வந்திருக்க முடியாது. எப்படி நீ திடீரெனத் தோன்றி வந்திருக்க முடியும்? நீ எப்போதும் இங்கே இருந்துகொண்டே இருந்திருக்கிறாய்.

மிக முக்கியமான அமெரிக்க உளவியல் அறிஞர்களில் ஒருவர் வில்லியம் ஜேம்ஸ். மனோதத்துவம், ஆன்மிகம் ஆகிய துறைகளில் ஒரு மைல்கல் ஆகிப்போன ஒரு புத்தகத்தை எழுதியிருக்கிறார். ஆன்மிக அனுப வத்தின் வகைகள் என்பது அந்தப் புத்தகத்தின் பெயர். இந்தப் புத்தகத்தை எழுதுவதற்கு அவர் உலகம் முழுக்கப் போனார். அந்தப் புத்தகம் எழுதியதில் இருந்து ஆன்மிக அனுபவங்கள் பற்றிப் பல புத்தகங்கள் வந்திருக்கின்றன. ஆனால் எந்தப் புத்தகமும் அந்த அளவுக்குச் சிறப்பாக அமையவில்லை. மிகவும் கடுமையாக உழைத்து அந்தப் புத்தகத்தை எழுதினார். இந்தியாவுக்குக்கூட வந்திருக்கிறார். ஆன்மிகத்தைப்பற்றி எழுதவரும் எவரும் இந்தியாவுக்கு வராமல் இருக்க முடியாதல்லவா?

இந்தியாவுக்கு வந்தவர் இமயமலைக்குப் போனார். அங்கே ஒரு மகானைச் சந்தித்தார். அவருடைய பெயரைக் குறிப்பிட்டுச் சொல்ல வில்லை. மகான்களுக்குப் பெயர் அவசியமே இல்லை அல்லவா?

அவரைச் சந்தித்தவர் ஒரு கேள்வி கேட்டார். இந்த உலகத்தை எட்டு வெள்ளை யானைகள் தாங்கிப் பிடித்துக்கொண்டு இருப்பதாக இந்திய சாத்திரத்தில் சொல்லியிருப்பதைப் படித்திருக்கிறார்.

அவர் தர்க்கரீதியாகச் சிந்திக்கிறவர். எனவே இந்த உலகை எட்டு வெள்ளை யானைகள் தாங்கிப் பிடித்து நிற்கமுடியும் என்பதை அவரால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ''முட்டாள்தனமாக இருக்கிறதே! அப்படியே அந்த யானைகள் இந்த உலகைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருக்கின்றன என்றால் அவை எதன்மேல் நிற்கின்றன?''

அவரோ, ''இன்னும் வேறு எட்டு மிகப்பெரிய யானைகள் மேல்!'' என்றார்.

வில்லியம் ஜேம்ஸ் விடுவதாக இல்லை. ''அதோடு பிரச்சனை தீர்ந்து விடவில்லையே. அந்தப் பெரிய யானைகள் எதன்மீது நிற்கின்றன?''

அவர் சிரித்துக்கொண்டார். ''யானைகளுக்கு மேல் யானைகள். அந்த யானைகளுக்கு மேல் யானைகள் என்று பாதாளத்தில் இருந்து மேலே வரைக்கும்'' என்றார்.

மேலும் ''நீ கேட்டுக் கொண்டே இருந்தால் அடுத்த எட்டு யானைகள். அடி ஆழம் வரைக்கும் என்று நான் சொல்லிக்கொண்டே இருப்பேன்'' என்றார்.

வில்லியம் ஜேம்ஸுக்கு இன்னுமொரு கேள்வி இருப்பதாகப்பட்டது. ''அந்தப் பாதாளம் எதன்மேல் நிற்கிறது?''

மகானும் விடாமல், ''இன்னுமோர் எட்டு யானைகள் மேல்'' என்றார்.

இப்படியே போய்க்கொண்டே இருக்க வேண்டியதுதான். அப்படித் தான் இருக்கவேண்டும். பின்னோக்கிப் போனால் போய்க்கொண்டே இருக்க வேண்டியதுதான். அப்படிப் போய்க்கொண்டே இருந்தால் உன்னையே நீ மறுபடி மறுபடி கண்டுகொண்டே இருப்பாய்.

உன் முந்தைய வாழ்வின்மீது இன்றைய வாழ்வு நிற்கிறது. அதனால்தான் நீ இங்கே இருக்கிறாய். அந்த முந்தைய வாழ்வு அதற்கு முந்தைய வாழ்வின்மீது இருந்தது. அதனால் அந்த முந்தைய வாழ்வில் நீ இருந்திருக்கிறாய். இப்படியாகப் போய்க்கொண்டேதான் நீ இருக்கிறாய். சரி சரி. முதல்முதலாக நான் இருக்க வந்தது எப்படி என்று நீ கேட்க முடியாது. ஏனென்றால் முதல்முதலாக நீ வந்திருக்கவே இல்லை. நீ என்றென்றைக்கும் இருந்துகொண்டே இருந்திருக்கிறாய். உன் முதல் வாழ்வுக்கும் முன்னால் இன்னொரு முந்தைய வாழ்வு இருந்திருக்கிறதே!

யானைகளுக்குமேல் யானைகள். அந்த யானைகளுக்குமேல் யானைகள்.

(இந்துக்கள் அருமையானவர்கள். முட்டாள்தனமான கதைகளைக் கற்பிதம் செய்து வைத்திருக்கிறார்கள். ஆனால் அந்தக் கதைகளுக்கு ஆழ்ந்த பொருளும் முக்கியத்துவமும் இருக்கின்றன.)

[நீ இங்கே இப்போது இருப்பது கடந்த காலத்தினால். கடந்த காலம் என்பது உன்னுடைய கடந்த காலம் அல்ல. ஒட்டுமொத்த ஜீவிதத்தின் கடந்த காலம். அந்த ஒட்டுமொத்தமான காலம்தான் உன்னைத் தாங்கி நிற்கிறது. ஒட்டுமொத்தமான கடந்த காலத்தின் திரட்சி நீ. என்றாலும் இன்னமும் இனியும் முட்டாள்தனத்தின் எல்லையைக் கண்டவனில்லை.)

மனதின் சேட்டைகளின் எல்லையைக் காணமுடியும் என்கிறாயா? முடியாது. யாருக்கும் எப்போதைக்கும் முடிந்ததில்லை. ஆனால் விழிப்படைந்து விட்டாய் என்றால் ஒருநாள் போதும். விழிப்படையாமல் கிடந்தால் கோடி பல கோடி பிறவிகள் எடுத்தாலும் முடியாது. விழிப்படைந்து விட்டால் ஒரே கணத்தில் மனதின் சேட்டைகளைத் தெரிந்து கொள்வாய். அதை விட்டுவிட்டுக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண் டிருந்தால் தூங்கிக்கொண்டே இருக்க வேண்டியதுதான். அப்படித்தான் இத்தனை காலமும் இருந்திருக்கிறாய். இனியும் இருக்கப் போகிறாய்.

முடியாது. தூங்கிக்கொண்டே இருப்பதன்மூலம் மனதின் சேட்டை களைத் தீர்த்துக் கட்டிவிட முடியாது. அதைப்பற்றிய எந்த நம்பிக்கையும் கொள்ளவேண்டாம். அப்படிச் செய்யவே முடியாது. முடியவே முடியாது. எச்சரிக்கையாக இரு. ஏற்கெனவே காலம் கடந்துவிட்டது. இனியாவது கவனத்தோடு இரு. திடீரென மனதின் சேட்டைகளைப் புரிந்துகொள்வாய். ஏனெனில் அந்தச் சேட்டைகளை அனுபவித்துத் தீர்த்துவிட முடியாது. அனுபவத்தின் மூலம் மட்டுமே மனதின் சேட்டைகளைத் தீர்த்து ஒழித்துவிட முடியாது.

ஒரு பெண்ணைக் காதலிக்கிறாய். காதல் புளித்துப் போய்விடுகிறது. எல்லாமும் கெட்டுப் போய்விடுகிறது. பிறகு இன்னொரு பெண்ணைப் பற்றி நினைத்துப் பார்க்க ஆரம்பித்து விடுகிறாய். உன் மனம் உன்னிடம், ''இவள் உனக்குச் சரிப்பட்டு வரமாட்டாள். உனக்கு என்று இன்னொரு சரியான ஜோடி இருக்கிறாள். தப்பானவளோடு உனக்குச் சம்பந்தம் ஆகிப் போய்விட்டது. அதனால்தான் இத்தனை பிரச்சனையும்'' என்று சொல்கிறது.

இவளால் பிரச்சனை வரவில்லை. தெரிந்துகொள். விழிப்புடைய வனாக இருந்தால் இவளால் அல்ல. உன் ஆசையால்தான் பிரச்சனை வந்தது

என்பதைப் புரிந்துகொள்வாய். உன் மனமோ, ''இவளை விட்டுவிடு. விவாகரத்து வாங்கிக்கொள். இன்னொருத்தியிடம் போய்விடு'' என்கிறது.

மற்றவளோடும் இதே பிரச்சனைதான். ''இன்னொருத்தியிடம் போ.'' இப்படியே போய்க் கொண்டிருந்தால் போய்க்கொண்டே இருக்க வேண்டியதுதான். ஏதோ ஒருநாள் எவளோ ஒருத்தி சரியானவளாக வந்து சேர்வாள் என்று இந்த மனம் நம்பிக்கொண்டே இருக்கிறது. பிறகென்ன, சொர்க்க போகம்தான் என்கிறது.

அப்படி எதுவும் இதுவரை நடக்கவில்லை. இனி நடக்கப் போவதும் இல்லை. அப்படி இல்லையென்றால் ஆன்மிகத்துக்கு எந்தத் தேவையும் இல்லை. யோகா தேவையில்லை. தாவோ தேவையில்லை. கொஞ்சம் கொஞ்சமாக ஒவ்வொருவரும் சரியான வாழ்வுக்கு வந்து சேர்ந்திருப் பார்கள். ஆனால் அது எப்போதும் நடப்பதில்லை.

ஆனால் நம்பிக்கை அனுபவங்களைப் புறந்தள்ளிப் போய்க் கொண்டே இருக்கிறது. கடைசிவரைக்கும் எப்படியோ ஏதோ ஒருநாள் எல்லாமும் சரியாகிவிடப் போகிறது என்று நம்பிக்கொண்டே இருக்கிறாய்.

நம்பிக்கைதான் மனதின் எல்லாச் சேட்டைகளுக்கும் அடிப்படை. அறியாமையோடும் தூங்கிக் கிடக்கும் மனதோடும் கூடிய ஜீவிதத்தில் எந்த நம்பிக்கைக்கும் இடமில்லை. எனவே விழிப்போடு இரு.

அலெக்ஸாண்டர் இந்தியாவுக்கு வந்து கொண்டிருந்தான். வழியில் டயோஜீன்ஸைச் சந்தித்தான். டயோஜீன்ஸ் மிக அரிய மனிதர். அவரும் லாவோட் சூவும் சந்தித்துக் கொண்டிருந்தால் சிரித்துக்கொண்டே இருந்திருப்பார்கள். இருவரும் ஒரே வகையினர்.

அலெக்ஸாண்டர் போய்க் கொண்டிருந்தான். டயோஜீன்ஸ் பக்கத்தில் இருக்கிறார் என்று கேள்விப்பட்டு அவரைப் பார்க்கப் போனான். அலெக்ஸாண்டர்கூட அவரைப் பார்த்து வியப்படைந்தான். தான் எவ்வளவு அற்பமானவன் என்பதைத் தெரிந்துகொண்டான்.

டயோஜீன்ஸ் ஒரு பக்கிரி. அவரிடம் ஒன்றுமே இல்லை. ஆனால் அவருடைய இருப்பில் ஒரு காந்தம், ஒரு சக்தி இருந்தது, அலெக்ஸாண்டரே வியக்குமளவுக்கு. அவரைப் பார்த்தபின் வேறு எவரும் அலெக்ஸாண்டரை அந்த அளவுக்கு வியந்து மதிக்க வைத்தது இல்லை.

அவருடைய சக்தியின் ரகசியம் என்ன என்று கேட்டான். ''ஒன்றுமே இல்லாத நீங்கள் எப்படி இவ்வளவு சக்திமான் ஆனீர்கள்? என்னைப் பாருங்கள். உலகத்தை வெல்கிறவன். ஏறக்குறைய உலகம் முழுக்க

வென்றுவிட்டேன். இனி இருப்பது கொஞ்சம்தான். சீக்கிரத்தில் அதையும் வென்றுவிடுவேன். ஆனால் நீங்களோ நிர்வாணப் பக்கிரி. இவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறீர்களே!''

''நான் நம்பிக்கையைத் துறந்தவன். அதுதான் என் ரகசியம். சொல்வதைக் கேட்டுக்கொள். நீயும் நம்பிக்கையைத் துறந்துவிடு. இல்லையேல் துன்பம்தான் படப்போகிறாய்.''

''உங்களுடைய ரகசியத்தைக் கற்றுக்கொள்ள வேண்டும்தான். ஆனால் இப்போது இல்லை. இன்னமும் போகவேண்டி இருக்கிறது. பாதி உலகை வென்றுவிட்டேன். இன்னமும் கொஞ்சம் மிச்சம் இருக்கிறது. நான் ஏகச் சக்கிராதிபதி ஆகவேண்டும். அதற்கப்புறம் உங்களிடம் திரும்ப வருகிறேன்.''

''யாருமே உலகம் முழுக்க வென்றவரில்லை. இன்னமும் கொஞ்சம் என்று ஏதோ மிச்சம் இருந்துகொண்டே இருக்கும். கனவு முழுமைப்படுவதே இல்லை. ஆசை நிறைவேறுவதே இல்லை. இந்த உலகம் முழுக்க வெல்லவேண்டும் என்ற ஆசையே இல்லாமல் நான் மகிழ்ச்சியாக இருப்பதைப் பார்க்க முடிந்தால் என்னைப் புரிந்துகொள்ள முடிந்தால் நீயும் என்னைப்போலவே இந்த உலகம் உன்னுடையதாக இல்லாமலேயே மகிழ்ச்சியாக இருக்கமுடியும்.''

தர்க்கரீதியில், அறிவார்த்தமாக அலெக்ஸாண்டர் அவர் சொன்னதைப் புரிந்துகொண்டான். ஆனாலும், ''நான் பிறகு வருகிறேன்... இன்னமும் வேளை வரவில்லை'' என்றான்.

அவன் கிளம்பியபோது டயோஜீன்ஸ் சொன்னார். ''உலகத்தை வெல்வதற்கு முன் நீ செத்துப் போவாய். எல்லோரும்தான் செத்துப் போனார்கள். நீ மட்டும் விதி விலக்கல்ல.''

அதுதான் நடந்தது. அலெக்ஸாண்டர் திரும்பத் தன் ஊர் போய்ச் சேரவில்லை. தன் வாழ்வின் கடைசிக் கணங்களில் நிர்வாணப் பக்கிரியான டயோஜீன்ஸை அவன் நினைத்துப் பார்த்திருக்க வேண்டும்.

இன்னொரு கதையும் இருக்கிறது. எவ்வளவு நம்பத் தகுந்தது என்று என்னால் சொல்லமுடியாது. அலெக்ஸாண்டர் இறந்த அதேநாள் டயோஜீன்ஸும் இறந்து போனாராம். அடுத்த உலகத்துக்குப் போகும் வழியில் இருவரும் சந்தித்துக் கொண்டார்கள். சத்தமாகச் சிரித்துக்கொண்ட டயோஜீன்ஸ், ''அட முட்டாளே! நினைவிருக்கிறதா? நீ செத்துப் போனாய். பாதியில் செத்துப் போனாய். உன் வெற்றி அரையும் குறையுமாகிப் போச்சே!'' என்றார்.

சரிதான். சிரித்து வைத்தால் போயிற்று என்று அலெக்ஸாண்டர் சிரிக்க முயன்றான். முடியவில்லை. சமாளித்துக் கொண்டான். ''ஆமாம். என்ன விநோதம்! பேரரசனும் பக்கிரியும் ஒரே ஆற்றில் சந்தித்துக் கொண்டது என்ன விநோதம்! இதற்கு முன் இப்படி நடந்திருக்காது. இனியும் நடக்காது.''

அவர் இன்னமும் பலமாகச் சிரித்துக் கொண்டார். ''நீ சொல்வதும் சரிதான். ஆனால் யார் அரசன்? யார் பக்கிரி? என்பதுதான் தெரியவில்லை. அது உனக்குச் சரியாகத் தெரியாதுதான். அதுதான் தப்பு. அதைத்தவிர நீ சொன்னது சரிதான். இப்போது நான் பேரரசன். நீயோ பிச்சைக்காரன். உலகம் முழுக்க உனக்கு வேண்டும் என்று பிச்சை கேட்டுக் கொண்டிருந்தாய். நீ மிகப்பெரிய பிச்சைக்காரன்தான். நானோ அரசனைப்போல வாழ்ந்தேன். உன்னுடைய ராஜாங்கத்துக்கு என்ன ஆகிவிட்டது என்பதை நீயே பார்த்துக்கொள்.''

அப்போது அலெக்ஸாண்டரும் நிர்வாணமாகத்தான் இருந்தான். எல்லாவற்றையும்தான் அக்கரையில் விட்டுவிட்டு வந்தாயிற்றே. தன் நிர்வாணத்தில் அவனுக்குத் தர்மசங்கடமாக இருந்தது. வெட்கமாக இருந்தது. ஆனால் டயோஜீன்ஸோ வெகு இயல்பாக இருந்தார். ''ஒரு நாளைக்கு நிர்வாணமாகத்தான் போகிறோம் என்பதை அப்போதே தெரிந்துகொண்டு நானாக உடைகளைக் கழற்றி எறிந்துவிட்டேன். இப்போது பார். கடவுளுக்கு எதிரில் நிற்கும்போதுகூட நீ நெளிந்து வளைகிறாய். நானோ சிரித்துக்கொண்டே நிற்கிறேன். உன்னிடம் குற்றக் குறுகுறுப்பு, தர்ம சங்கடம் எல்லாமும்தான். உன்னைச் சுற்றி எதுவுமே சரியில்லாமல் போய்விட்டது.''

மனதின் சேட்டைகளை முழுக்கக் கண்டு தீர்த்துவிடுவது என்பது சாத்தியமே இல்லை. அலெக்ஸாண்டர்கள்கூட அப்படிச் செய்ய முடியவில்லை. அவற்றைத் தீர்த்துக் கட்டுவதற்கு ஒரே வழி விழிப்போடு இருப்பதுதான். எந்த அளவுக்கு விழிப்பாக இருக்கிறாயோ அந்த அளவுக்கு மனதின் சேட்டைகள் சேட்டைகளாகத் தெரியும். அவற்றை முட்டாள்தனமானவை என்று தெரிந்து கொள்ளும்போது நிறுத்தி விடுவாய். அவற்றில் மேலும் மேலும் ஈடுபடுவதில்லை. இந்த உலகில் எதையும் துறக்க வேண்டிய அவசியம் ஏதும் இல்லை. விழிப்போடு இருந்தாலே போதும். பயனற்றவை, பொருளற்றவை தாமாகக் கழிந்துபோகும்.

**மூன்றாவது கேள்வி:**

**ஒவ்வொரு மதமும் அறநெறி பேசும் அமைப்பாகச் சிதைந்து தானே போகிறது! லாவோட் சூவை நீங்கள் பாராட்டுவதற்குக் காரணமே அவருடைய நெறியின் அடிப்படையில் எந்த**

அமைப்பும் வரமுடியாது என்பதால்தானே! உங்களுடைய போதனைகளை இப்படி ஓர் அமைப்புச் சீரழிவுக்கு ஆட்படாமல் உங்கள்மேல் பிரியம் கொண்டிருப்பவர்கள் எப்படித் தவிர்ப்பது?

தவிர்ப்பது என்று ஆரம்பித்து விட்டாலேயே அதைக் கொண்டுவருவதற்கான செயல்களை ஆரம்பித்து விட்டாய் என்று பொருள். அதைப்பற்றிக் கவலையே படாதே. அது நடக்கவேண்டும் என்றால் நடந்துதான் தீரும். அது நடக்கப் போவதில்லை என்றால் நடக்காதுதான். அதைப்பற்றி எந்தக் கவலையும் வேண்டியதே இல்லை. ஏனென்றால் அதைத் தவிர்ப்பது எப்படி என்று நினைக்க ஆரம்பித்து விட்டாலேயே அது எப்படியும் வரப்போகிறது என்று நிச்சயப்படுத்திவிட்டாய் என்றுதான் பொருள். அதைப்பற்றிய சம்சயங்களுக்கு வந்துவிட்டாய் என்பதால் அதை உருவாக்க உனக்குத் துணை வந்துவிட்டது என்றுதான் பொருள்.

தன்னுடைய நெறி ஜீவனுள்ளதாக இருக்கவேண்டும் என்பதற்காக புத்தர் வெகுவாகத்தான் பிரயத்தனப்பட்டார். அது ஜடமாகிப் போன ஓர் அமைப்பாகிப் போகக் கூடாது என்று விரும்பினார். என்னதான் கடுமையாக முயன்றாலும் அதை அவரால் தடுக்க முடியவில்லை. எந்த அளவுக்கு ஓர் அமைப்பாவதை அவர் கடுமையாக எதிர்த்தாரோ அந்த அளவுக்குச் சிரத்தையுடன் அதை ஓர் அமைப்பாக ஆக்கிவிட அவரைச் சுற்றியிருந்தோர் எத்தனித்தனர்.

கிருஷ்ணமூர்த்தி வெகுவாகச் சிரமப்படுகிறார். என்றாலும் அவர் தோற்றுவிடத்தான் போகிறார். ஏனெனில் இது ஒரு விதி. ஏன் பிரம்மப் பிரயத்தனப்படுகிறாய்? அப்படி நடந்துவிடுமோ என்று உன் அடி ஆழத்தில் வெகுவாகப் பயப்படுகிறாய். ஆனானப்பட்ட கிருஷ்ணமூர்த்தியே நடக்கப் போகிறது என்று நினைத்தால் அது நடக்கத்தான் போகிறது. அடிக்கடி பின்னோக்கிய விளைவுபற்றிய விதிபற்றி உன்னிடம் பேசியிருக்கிறேன் அல்லவா? அது வெகு ஆழ்ந்த மனோதத்துவ விதியாகும். ஏதாவது ஒன்றைச் செய். அதன் மறுதலை நடக்கவே செய்கிறது. அதுதான் லாவோட்சுவின் மொத்தமான போதனை ஆகும்.

ஒழுங்கைப்பற்றிப் பேசு. ஒழுங்கீனம்தான் இருக்க வரும். மக்களை ஒழுக்கமுள்ளவர்களாக மாற்ற முயன்றுபார். ஒழுக்கம் கெட்டுத்தான் திரிவார்கள். மக்களை நல்லவர்களாக இருக்கச் செய்ய முயன்று பார். அவர்கள் கெட்டவர்களாகித்தான் போவார்கள்.

இது இப்படித்தான் என்பது உங்கள் எல்லோருக்கும் தெரியும். உன் மகனை ஒரு மகானாக்க முயன்று பார். உனக்கு எதிராகத்தான் முதலில் திரும்புவான். அவன் என்ன செய்யக்கூடாது என்று சொன்னாயோ அதைத்தான் முதலில் செய்வான்.

இப்படி எதுவும் லாவோட் சூவின் வாழ்வில் நடக்கவே இல்லை. ஏனெனில் அவர் அதைப்பற்றியெல்லாம் கவலைப்பட்டதே இல்லை. அப்படியே அது நடந்துவிட்டால் அதுவும் சரிதான். நீயென்ன செய்ய முடியும் என்கிறாய்?

நான் போய்விட்டேன் என்றால் போய்விட்டேன்தான். அதற்குப்பின் என்ன நடக்கிறது என்பது என்னுடைய காரியம் இல்லை. எனவே அதைப்பற்றிக் கவலைப்படாதே. அது நடக்கவேண்டும் என்றால் நடந்துதான் தீரும். அது நடக்கவில்லையெனில் நல்லதுதான். அது நடக்கத்தான் செய்கிறது என்றால் அதுவும் நல்லதற்குத்தான். எதிர் காலத்துக்கான பொறுப்பை ஏற்றுக்கொள்ள நாம் யார்? எதிர்காலத்தைப் பற்றித் தீர்மானிக்க நாம் யார்? முடியாது. அப்படிச் செய்யமுடியாது. அந்த எண்ணத்தையே விட்டுவிடு. கவலைப்படவே வேண்டாம். அந்த எண்ணத்தை முழுக்கக் கழித்துவிட்டு அதைப்பற்றிக் கவலையே படாமல் இருந்துவிடு. அதை ஆக்க முயல வேண்டாம். அதன்பின் அதைத் தவிர்க்க முயலவேண்டாம்.

நான் இங்கே இருக்கும்போது என்னோடு இரு. என்னோடு சேர்ந்து கொண்டாடு. என்னோடு சேர்ந்து பரவசத்தை அனுபவி. உனக்கு உதவ என்னை அனுமதி. அவ்வளவுதான்.

நான் போனபின், நீயும் போனபின் என்னதான் நடக்கட்டுமே... நாம் எப்படி அதைத் தீர்மானிப்பது? நாம் ஏன் அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டும்? இங்கே இருக்கும்வரை அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம். கதவு திறந்து இருக்கிறது. கதவுக்கு அப்பால் பாதை தெரிகிறது. அதன்மீது நடந்துபோ. அதன்மீது கால்வைத்து நடந்து போ. அதை வைத்துக்கொண்டு பிறர் ஓர் அமைப்பைத் தோற்றுவிக்கிறார்களா இல்லையா என்பதுபற்றி உனக்கு எந்தக் கவலையும் வேண்டியதில்லை. அதை அவர்கள்தான் முடிவு செய்துகொள்ள வேண்டும். அதைப்பற்றி இப்போது எதுவும் செய்யமுடியாது.

எதிர்காலத்தைப்பற்றி எந்தக் கவலையும் உனக்கு வேண்டாம். ஏனென்றால் அந்தக் கவலையே அதற்கு நேர் எதிரிடையான விளைவைத் தோற்றுவித்து விடும். நீதான் பார்த்திருக்கிறாயே - ரயில் போகும்போது உன்னைச் சுற்றி இருப்பவர்களைக் கவனித்துப்பார். டிக்கட் இல்லாமல் பயணம் செய்வது யார் என்பது உடனடியாகத் தெரிந்துவிடும். ஏனென்றால் அவன் எப்போதும் டிக்கட் பரிசோதகர் வந்து விடுவாரோ என்ற கவலையிலேயே இருப்பான். இதைத்தான் எதிரிடையான விளைவு என்கிறேன்.

பயந்து போயிருக்கிறான். கவலைப்பட்டவனாக இருக்கிறான். யாரொருவர் பெட்டிக்குள் நுழைந்தாலும் திடுக்கிட்டுப் போகிறான். யாரிடம் டிக்கட் இல்லையென்பது சுலபமாகத் தெரிந்து விடுகிறது. அவன்தான் தன்னுடைய சிரமத்தைத் தூக்கிக்கொண்டு திரிகிறானே!

சிலசமயம் நீ டிக்கெட் வாங்கியிருப்பாய். அது எங்கோ நழுவி விழுந்திருக்கும். உனக்கு அது தெரியாமலேயே இருக்கும். உன்னிடம் டிக்கட் இல்லை என்பது உனக்குத் தெரியவே தெரியாது. நீ என்ன செய்வாய்? உன்னிடம் டிக்கட் இருக்கும்போது எப்படி இயல்பாக இருப்பாயோ அப்படியே இயல்பாக இருப்பாய். யாரும் உன்னிடம் டிக்கட் இல்லை என்பதைக் கண்டுபிடிக்க முடியாது. யாரும் உன்னைப் பிடிக்கப் போவதில்லை. டிக்கட் பரிசோதகர்கூட உன்னிடம் வருவதில்லை. உன்னிடம் டிக்கட் இருக்கும் என்றுதான் நினைத்துக் கொள்வார். எல்லோருக்கும் ஓர் ஆச்சரியம் இருக்கவே இருக்கிறது. டிக்கட் இருக்கும்போது யாரும் பரிசோதனை செய்ய வருவதே இல்லை. டிக்கட் இல்லாதபோது பரிசோதகர் வந்து தொலைக்கிறார். யார் குற்றவாளி என்பதைச் சுலபமாகக் கண்டுபிடித்து விடலாம். இதில் எந்தச் சிரமமும் இல்லை. டிக்கட் இல்லாதவன் இயல்பாக இருக்கமுடியாது. இயல்பற்ற அலைகளைத் தன்னைச் சுற்றிப் படர விட்டுவிடுகிறான். உடனே டிக்கட் பரிசோதகர் அவனிடம் போய்ச் சேருகிறார்.

கவலையே படாதே. நீ இங்கே இருக்கிறாய். உன்னைச் சுற்றி நிகழ்வது ஜீவனோடு இருக்கிறது. துடிப்போடு இருக்கிறது. உன்னோடு பேசிக்கொண்டு இருக்கிறது. உன்னை ஊடுருவி நிற்கிறது. உனக்கு உதவியாக இருக்கிறது. அந்தப் பரவசத்தை அனுபவி. அப்படிப் பரவசப்பட்டவனாக நீ இருந்தால் உனக்குள் ஒரு பிரகாசம் தோன்றுகிறது. மற்றவர்கள் உன்னிடமிருந்து பரவசம் பெறுவார்கள்.

ஜீவனுள்ள ஆன்மிகத்தில் இருப்பவர்கள் ஞானோதயம் பெற்றவர்களாக இருக்கிறார்கள். விழிப்போடு இருக்கிறார்கள். அதனாலேயே அந்த ஆன்மிகம் ஜீவனுள்ளதாக இருக்கிறது. என்னோடு இருக்கும்போது விழிப்புடையவனாக நீ இருக்க முடிந்தால் பிறரையும் விழிப்புடையவர்களாக ஆக்க முடியும். அது ஒரு சங்கிலித் தொடர். விழிப்புணர்வு இல்லாமல் போகும்போது அங்கே அந்தச் சங்கிலித் தொடர்பு துண்டிக்கப்படுகிறது. ஒரு துண்டு விழுந்து விடுகிறது. யாருமே விழிப்புணர்வு இல்லாதவராக யாருமே ஞானம் பெற்றவராக இல்லாமல் இருக்க அங்கே ஒரு காலியிடம் வந்து விடுகிறது. அந்த ஆன்மிகம் செத்துப்போன ஆன்மிகம். அப்போது அது ஒரு மதத்தின் பிரிவாக ஆகிப்போய் விடுகிறது. இந்து, முகம்மதியம்,

சமணம் என்று ஆகிப்போகிறது. அது ஓர் அமைப்பாகிப் போகிறது. அதில் இருப்பதெல்லாம் வறட்டுச் சைகைகள்தான்.

ஆனால் அதைப்பற்றி ஒன்றும் செய்யமுடியாது. ஒரே ஒரு காரியம் வேண்டுமானால் செய்யலாம். அதைப்பற்றிக் கவலைப்படாமல் இருந்துவிடலாம். அதைப்பற்றிக் கவலைப்பட்டு நேரத்தை வீணடிக்க வேண்டியதில்லை. எனக்குள் இருந்து பார். நான் உனக்குள் இருக்க விடு. ஏற்றி வைக்கப்பட்ட நமது மெழுகுவர்த்திகள் பிற மெழுகுவர்த்திகளை ஏற்றி வைக்கும். சங்கிலித் தொடர்பு ஏற்படுத்திவை. தானாகவே அந்தத் தொடர்பு நகர ஆரம்பிக்கும்.

நாளைக்கு என்ன என்பதைப்பற்றி நினைத்துக்கூடப் பார்க்காதே. எதிர்காலம் கவலைப்பட வேண்டிய ஒன்றல்ல. நிகழ்கணத்தைப்பற்றிக் கவலைப்படு. அது போதும்.

**நான்காவது கேள்வி:**

**நான் ஓர் இன்மை என்கிறீர்கள். இங்கே வந்ததில் இருந்து என் நடுமத்தை நான் உணர ஆரம்பித்துவிட்டேன். அது எப்படி ஏதுமற்றதில் ஒரு நடுமம் இருப்பது?**

இருக்கிறதப்பா. அது எப்படி அல்லது ஏன் என்பதை நான் உனக்கு விளக்க முடியாது. அது வெகு யதார்த்தமான உண்மை. இரண்டு ஹைட்ரஜன் அணுக்களும் ஓர் ஆக்ஸிஜன் அணுவும் சேர்ந்தது தண்ணீர் என்கிறது அறிவியல். ஏன் என்று கேட்க முடியுமா? அது ஏன் தண்ணீரில் மூன்று ஹைட்ரஜன் அணுக்களும் ஓர் ஆக்ஸிஜன் அணுவும் இருக்கக் கூடாது? ஏன் நான்கு ஆக்ஸிஜன் அணுக்களும் ஒரு ஹைட்ரஜன் அணுவும் இருக்கக் கூடாது? ஏன் $H_2O$ வேறு எந்த அமைப்பிலும் இருக்கக்கூடாது? அப்படிக் கேட்டால் அறிவியலில் என்ன பதில் இருக்க முடியும்? அது அப்படித்தான் இருக்கிறது. உன் கேள்விக்கு என்னிடம் பதில் இல்லை.

ஆமாம். உன்னுடைய உள்ளிருப்பு சூன்யம்தான். என்றாலும் அதில் ஒரு நடுமம் இருக்கத்தான் செய்கிறது. சூறாவளியைப் பார்த்திருக்கிறாயா? இந்தியாவில் வெய்யில் காலத்தில் சூறாவளிகள் தோன்றும். ஒரு சூறாவளிக் காற்று ஓரிடத்தைத் தாக்கிய பின் அந்த இடத்தைப் போய்ப் பார். சுற்றி இருக்கும் பொருட்களை எல்லாம் அலைக்கழித்துத் தூர வீசிக் கடாசிவிட்டுப் போகும் சூறைக் காற்று அதன் நடுவில் இருந்த பொருட்களை ஒன்றுமே செய்வதில்லை. புயலுக்குக்கூட ஒரு மையம் இருக்கிறது. சூறாவளிக் காற்றுக்குக்கூட ஒரு மையம் இருக்கிறது. சூன்யத்திலும் ஒரு

மையம் இருக்கிறது. அனுபவமாக அதைத் தெரிந்து கொள்ளலாம். அது எப்படி என்ற கேள்வியே இல்லை.

ஒரு சிறு பையன் டி. ஹெச். லாரன்ஸோடு நடந்து கொண்டிருந்தான். திடீரென அவன், ''மரங்கள் ஏன் பச்சையாக இருக்கின்றன?'' என்று கேட்டான்.

அவர், ''அவை பச்சையாக இருப்பதால் பச்சையாக இருக்கின்றன'' என்று பதில் சொன்னார்.

அதற்குமேல் எதுவும் சொல்லமுடியாது. வேறு எந்தப் பதிலும் பயனில்லாத பதில்தான். இதனால் அல்லது அதனால் மரங்கள் பச்சையாக இருக்கின்றன என்று சொல்லலாம். ஆனால் அந்தப் பதில்களும் அதே கேள்வியைத்தான் கொண்டுவரும். ஏன் அப்படி அல்லது இப்படி என்ற கேள்விதான்.

சூன்யத்தில் ஒரு மையம் இருக்கிறது என்றால் அது தர்க்க வாதத்துக்குப் பொருந்தி வருவதில்லை. பகுத்தறிவுக்குப் பொருந்தி வருவதில்லை. ஆனால் வாழ்க்கை தர்க்கத்துக்கும் பகுத்தறிவுக்கும் பொருந்த இருப்பதில்லை. வாழ்க்கை எப்படி இருக்கிறதோ அப்படியே அதை ஏற்றுக்கொள்ள வேண்டும். உன்னுடைய தர்க்கத்துக்கும் பகுத்தறிவுக்கும் உட்பட்டுத்தான் வாழ்க்கை இருக்கவேண்டும் என்பதில்லை.

இதுதான் அறிவியலிலும் நடக்கிறது. ஐன்ஸ்டீன் முதல்முதலாக தன் சார்பு விதியைச் சொன்னபோது யாரும் ஏற்றுக் கொள்ளவில்லை. நேரம்கூடச் சார்புடையது என்று சொன்னபோது அறிவியல் உலகில் ஏகப்பட்ட சலசலப்பு இருந்தது. ஏன்? எப்படி? என்றார்கள்.

ஐன்ஸ்டீன் சொன்னதில் மிக முட்டாள்தனமாக ஒன்று தெரிந்தது. ஒரு விண்கலத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அது ஒளியைவிட வேகமாக அல்லது ஒளி வேகத்தில் போகிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். இருபத்தைந்து ஆண்டுகள் கழித்து அந்த விண்கலம் திரும்பப் பூமிக்கு வருகிறது என்று வைத்துக்கொண்டால் அதில் பயணித்த ஒரு பையன் இன்னும் பையனாகவே இருப்பான். இருபத்தைந்து வயதுக்காரன் போயிருந்தால் அவன் இருபத்தைந்து வயதுக்காரனாகவே திரும்பி வருவான். அவனுடைய நண்பனுக்கு வயது ஐம்பதாகிப் போயிருக்கும். அவனோ இருபத்தைந்து வயதிலேயே இருப்பான். வெகு முட்டாள்தனமாகத் தெரிகிறது இல்லையா? பூமியிலேயே இருக்கும் அவனுடைய நண்பர்களுக்கு ஐம்பது வயதாகி இருக்கும். அவனோ

இருபத்தைந்து வயதிலேயே இருப்பான். இதில் என்ன லாஜிக் இருக்கிறது என்று கேட்டார்கள். ''லாஜிக் என்றால் என்ன? எனக்கு லாஜிக் பற்றியெல்லாம் ஒன்றும் தெரியாது. இது அப்படித்தான்'' என்றார் ஐன்ஸ்டீன்

அந்த வேகத்தில் வயதாகாது. நூறு டிகிரி வெப்பத்தில் தண்ணீர் கொதிப்பதைப் போலத்தான். அந்த வேகத்தில் வயதாவது என்பதில்லை. அதைவிட முட்டாள்தனமாகத் தெரிவதும் ஒன்று உண்டு. உன்னுடைய வேகம் ஒளி வேகத்தைப்போல இரண்டு மடங்காக இருந்தால் இருபது வயதில்போய் பத்து வருடம் கழித்து வந்தால் பத்து வயதுக்காரனாகிப் போயிருப்பாய். காலத்தில் பின்னோக்கி நகர்ந்து விடுவாய். வயதாவதென்பது பூமியின் வேகத்தைச் சார்ந்த ஒரு நிகழ்ச்சி. அதனால்தான் அப்படி என்கிறார் ஐன்ஸ்டீன். பூமி ஒரு குறிப்பிட்ட வேகத்தில் நகர்கிறது. அந்த வேகத்தைப் பொருத்துத்தான் உனக்கு வயதாவதும் இருக்கிறது. நம்ப முடியவில்லைதான். தர்க்கவாதத்துக்கு முற்றிலும் பொருந்தாதிருக்கிறது.

பௌதிக விஞ்ஞானிகள் பொருட்களின் இயல்புகளைப்பற்றி ஆராய்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட கணத்தில் எந்தப் பொருளும் இல்லாமல் போய்விடுவதைக் காண்கிறார்கள். எனவே பொருண்மை என்பது சூன்யத்தைப் பொருத்து அமைகிறது என்கிறார்கள். பொருண்மை என்பது அடர்த்தியான சூன்யம்தான் என்று சொல்லவேண்டி வருகிறது.

இதுவும் தர்க்கவாதத்துக்குப் பொருந்தவில்லை. எப்படி சூன்யத்தில் அடர்த்தி இருக்கமுடியும்? அடர்த்தியான பொருளற்றதில் இருந்து இந்தத் தூண் என்ற பொருள் எப்படி வந்திருக்க முடியும்? ஆனால் பௌதிகம் அப்படித்தான் என்கிறது. இயற்கையும் ஜீவிதமும் நம்முடைய தர்க்கத்துக்கு ஏற்புடையதாக இருப்பதில்லை. அவைகளுக்கு என்று ஒரு போக்கு இருக்கிறது. அந்தப் போக்கை நம்முடைய தர்க்கத்துக்கு ஏற்ப மாற்ற முடிவதில்லை. நம்முடைய தர்க்கம் அவற்றின் போக்குக்கு ஏற்ப மாறிக்கொள்ளவேண்டி இருக்கிறது.

அக வெளிக்கும் இது பொருந்தும். தர்க்க பூர்வமாகக் கேட்டால் சூன்யத்துக்கு ஏது ஒரு மையம்? சரியான கேள்விதான். ஆனால் நான் முதல்முதலாக அந்த மையத்துக்குப் போய்ச் சேர்ந்தபோது இதே கேள்விதான் எனக்குள்ளும் தோன்றியது. எப்படி சூன்யத்தில் ஒரு மையம் இருக்க முடியும்?

ஒரு மையம் இருக்கவேண்டும் என்றால் ஏதோ ஒன்று இருக்க வேண்டுமே. இருக்கிறதுதான். ஆனால் அது நம்முடைய தர்க்க வாதத்துக்குட்பட்ட ஒன்றாக இருப்பதில்லை. அதை ஏற்றுக்கொள். உன்

மனதில் அதைப்பற்றிய தர்க்க பூர்வமான பிரச்சனைகளைக் கொண்டு வராதே. ஏனென்றால் எந்தத் தர்க்கத்தாலும் எந்தப் பயனும் இல்லை.

வாழ்க்கை தர்க்க பூர்வமானதல்ல. நீ இங்கே இருக்கிறாய். ஏன் இங்கே இருக்கிறாய் என்பதற்குத் தர்க்க பூர்வமான விளக்கம் ஏதாவது இருக்கிறதா என்ன? நீ இங்கே இல்லை என்று வைத்துக்கொள். ஏன் இங்கே இல்லாமல் போனாய் என்று கேட்கவா முடியும்? அதது அப்படி அப்படி இருக்கிறது. அவ்வளவுதான். எதையும் இது இதனால் இப்படி என்று சொல்ல முடிவதில்லை. எதையும் அதுவன்றிப் பிறிதொன்றாகக் காட்டமுடியாது. எதுவும் கேட்கவும் முடியாது.

இந்த விழிப்பு நிலைக்கு நீ வந்து சேரும்போது, அதாவது அதது அப்படி அப்படி இருக்கிறது என்பதை ஏற்றுக்கொள்ளும்போது உனக்குள் ஒரு பக்குவம் வந்துவிடுகிறது. அப்போது எவ்வளவுதான் தர்க்க பூர்வமாக இல்லை என்றாலும் எதையும் அப்படி அப்படியே ஏற்றுக் கொள்கிறாய். எதிர்த்துப் போராடுவ்திலலை. அப்படியே மிதக்கிறாய். நீந்துவதுகூட இல்லை. எல்லாவற்றையும் போக விடுத்து மிதக்கிறாய்.

போகப்போக இன்னமும் இன்னமும் என்று ரகசியங்களை ஒவ்வொன்றாகக் காண ஆரம்பிக்கிறாய். அதனால்தான் ஆன்மிகம், வாழ்வே ஒரு அதிரகசியம் என்று சொல்கிறது. அது ஒரு பிரச்சனையே அல்ல. ஒரு பிரச்சனையைத் தீர்த்து வைத்து விடலாம். ஒரு ரகசியத்தைத் தீர்த்து வைக்க முடியாது. எவ்வளவுக்கெவ்வளவு தீர்த்து வைக்கிறாயோ அவ்வளவுக்கு அவ்வளவு அது மீண்டும் ரகசியமாக மாறுகிறது. எவ்வளவுக்கெவ்வளவு தெரிந்து கொள்கிறாயோ அவ்வளவுக்கு அவ்வளவு தெரிந்துகொள்ள இருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்கிறாய்.

கடவுள் அருகே இருக்கிறார். அவரே வெகு தொலைவிலும் இருக்கிறார் என்று உபநிடதங்கள் சொல்கின்றன. ஏன்? எவ்வளவுக்கு எவ்வளவு அருகே போகிறாயோ அவ்வளவுக்கு அவ்வளவு அவர் தூரமாக இருக்கிறார். ஏறக்குறைய அவரை ஸ்பரிசித்து விட்டாய். என்றாலும் அவரிடம் இருந்து வெகு தூரத்தில் இருப்பதாகத்தான் தெரிகிறது. அவருக்குள் ஊடுருவிப் போய்விட்டாய். அவருடைய இதயத்துக்குப் போய்ச் சேர்ந்துவிட்டாய். என்றாலும் அந்தப் புதிர் விடுபட்ட பாடில்லை. மாறாக, புதிர் இன்னமும் பெரிய புதிராகிப் போய்விட்டது.

அதுதான் அதன் அழகே. எல்லாப் புதிர்களுக்கும் விடை கண்டுவிட்ட ஓர் உலகில் வாழ்வதை நினைத்துப்பார். வெகு சலிப்பாகத்தான் போய்விடும். எல்லாமும் தர்க்கத்துக்கும் பகுத்தறிவுக்கும் கணக்குக்கும்

உட்பட்ட உலகில் வாழ்வதை நினைத்துப்பார். வெகு சலிப்பாகத்தான் இருக்கும். எந்த மாற்றமும் இல்லாததாகிப் போய்விடும். அங்கே கவிதை இருக்காது. காதல் இருக்காது. அன்புக்கான சாத்தியம் இருக்காது. தியானத்துக்கு எந்தச் சாத்தியமும் இல்லாமல் போய்விடும்.

தியானிப்பது என்றால் அந்த அற்புத ரகசியத்துக்குள் போய்ச் சேர்வது. அன்பு என்பது அதே கதவை வேறு வகையில் தட்டிப் பார்ப்பது. பிரார்த்தனை என்பது அந்த ரகசியத்தை இருக்கவிடுவது. புத்தியை வைத்துக்கொண்டு அதை எதிர்த்துப் போராடுவதல்ல.

எல்லாமும் ரகசியமாக இருப்பதால்தான் எதுவும் அழகாக இருக்கிறது. அதனுடைய ஆழத்தை அளந்துவிட முடியாது. பகுத்துப் பார்க்க வேண்டும் என்று தோன்றினால் பகுத்துத்தான் பாரேன். ஆனால் ஒவ்வொரு முறையும் இன்னும் ரகசியமாகத்தான் எதுவும் இருக்கிறது. தீர்க்கப்படாத பிரச்சனைகள் இருந்துகொண்டேதான் இருக்கின்றன. முடிந்த பதில் இதுதான் என்று சொல்லும்படியான பதில்' கிடைப்பதே இல்லை. அப்படிக் கிடைக்காததும் நல்லதுக்குத்தான். அப்படியே அந்தப் பதில் கிடைத்துவிட்டது என்று வைத்துக்கொள். அதைக்கொண்டு என்ன செய்யப் போகிறாய்? வாழ்வின் பொருளும், முக்கியமும் இல்லாமல் போய்விடுகிறதே!

நான் ஒரு தத்துவ ஞானி அல்ல. எள்ளளவுக்குக்கூட இல்லை. கடைசிக்கு என்னை நான் ஒரு கவிஞன் என்று வேண்டுமானால் சொல்லிக் கொள்ளலாம். வாழ்வைப் பார்த்து அது எப்படி இருக்கிறதோ அப்படி ஏற்றுக் கொள்கிறேன். இரண்டும் இரண்டும் நான்கு என்றால் சரிதான். அப்படி இல்லாமல் இரண்டும் இரண்டும் ஐந்தாக ஆனாலும் சரிதான். அல்லது மூன்றாக இருந்தாலும் சரிதான். அது என்னவாக இருந்தாலும் அப்படியே ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். இதுதான் எனக்கு ஆன்மிகத்தின் பொருள். ஆமாம் என்று சொல்லி ஏற்றுக்கொள்வது.

**ஐந்தாவது கேள்வி:**

**டான் ஜுவான் கார்லாஸ் கேஸ்டநேடாவின் குரு. அவர் ஒரு ஞானியா?**

டான் ஜுவானைப்போல ஒருவர் எங்காவது இருக்கமுடியும் என்றால் அவர் ஞானியாகத்தான் இருக்கவேண்டும். அவர் ஒரு புத்தரைப்போல ஒரு லாவோட்சுவைப்போல இருக்கவேண்டும். ஆனால் அப்படிப்பட்டவர் யாரையும் எங்கேயும் காணோமே! கார்லாஸ் கேஸ்டநேடாவின் புத்தகங்கள் அத்தனையும் கற்பனைக் கதை சொல்பவை. அழகாக இருக்கின்றன. கலைப்

படைப்புகள்தான். என்றாலும் கதைகள்தான். அறிவியல் கதைகள் இருப்பதைப்போல ஆன்மிகக் கதைகளும் இருக்கின்றன. முதல்தரமான ஆன்மிகக் கதைகள் இருக்கின்றன. அதேசமயம் மூன்றாம்தர ஆன்மிகக் கதைகளும் இருக்கின்றன. மூன்றாம்தரக் கதைகள் வேண்டுமா? லோப்சங் ராம்பாவின் கதைகளைப் படி. முதல்தரக் கதைகள் வேண்டுமா? கார்லாஸ் காஸ்டநேடாவின் கதைகளைப் படி. அருமையான கலைஞர். என்றாலும் கதைகளைத்தான் எழுதிப் போயிருக்கிறார்.

ஆனாலும் அவர் எழுத்தில் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் கதையாக இருந்தாலும் ஒரு சதவிகிதம் உண்மையும் இருக்கிறது. இங்கும் அங்கும் தெரிந்தும் தெரியாமலும் ஒரு சதவிகிதம் உண்மை இருக்கிறதுதான். தேடிக் கண்டுபிடிக்கவேண்டி இருக்கிறது.

ராம்பாவின் கதைகளைப்பற்றிக் கவலைப்படாதே. அது ஒரு சாதாரணமான மனது படைத்த குப்பை. ஆமாம். சாதாரண மனதை உடைய வர்களுக்காக எழுதப்பட்டதுதான். ஆனால் கார்லாஸ் காஸ்டநேடாவின் கதைகள் படிக்கத் தகுந்தவை. அவர் எழுதியதெல்லாம் கதைதான் என்று நான் சொல்லும்போது படிக்கவேண்டாம் என்று சொல்கிறேன் என்றில்லை. எச்சரிக்கையோடு படி என்று பொருள். ஏனென்றால் அதில் ஒரு சதவிகிதம் உண்மை இருக்கிறது. வெகு எச்சரிக்கையோடு படிக்கவேண்டி இருக்கிறது. தொண்ணூற்று ஒன்பது சதவிகிதக் கதையைக் கழித்துவிட்டு ஒரு சதவிகித உண்மையைத் தெரிந்துகொள்ளவேண்டி இருக்கிறதே, அதனால்தான்.

உன்னுடைய வளர்ச்சிக்கு அது உதவியாக இருக்கும். வளரவேண்டும் என்ற ஆசையைத் தரும். அதனால்தான் அதை அருமையானது என்கிறேன். ஆனால் அதை மேம்போக்காக எடுத்துக்கொண்டால் உன் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்திவிடும்.

இந்தக் கார்லாஸ் இருக்கிறாரே அவர் மிகச்சிறந்த கலைஞர்தான். வெகு அரிதாகத்தான் இப்படிப்பட்டவர்கள் இருக்கிறார்கள். அறிவியல் கதைகள் எழுதுவது மிகச் சுலபம். அதற்கு வெகுவாகக் கற்பனை தேவையில்லை. ஆனால் ஆன்மிகக் கதைகளை எழுதக் கற்பனை வளம் அவசியம். கலைத்திறன் வெகு அவசியம். தெரியாத ஒன்றைப்பற்றிக் கற்பனை செய்வது கடினமல்லவா? அதனால்தான் அவருடைய எழுத்தில் ஒரு சதவிகிதம் உண்மை இருக்கிறது என்கிறேன். அந்த ஒரு சதவிகித உண்மை என்ற அஸ்திரவாரத்தின்மீது அவர் மிகப்பெரிய மாளிகையைக் கட்டியிருக்கிறார். அந்த ஒரு சதவிகித உண்மையை வைத்துக்கொண்டு அதிகமான கற்பனையைக் கொட்ட முடிந்திருக்கிறது. அந்த ஒரு சதவிகித உண்மையின்மேல் ஓர் அழகான வீட்டைக் கட்டியிருக்கிறார். ஒரு

அரண்மனையையே கட்டியிருக்கிறார். ஒரு தேவதைக் கதையை எழுதியிருக்கிறார். ஆனாலும் அந்த ஒரு சதவிகித உண்மை இருப்பதை மறுக்க முடியாது. அப்படி இல்லாமல் போயிருந்தால் அவரால் எழுதியிருக்க முடியாது.

எனவே ஒரு சதவிகித டான் ஜுவான் எங்கேயோ இருக்க வேண்டியிருக்கிறது. அப்படிப்பட்ட யாரோ ஒருவரை அவர் சந்தித்திருக்க வேண்டும். அது டான் ஜுவானாக இருக்கலாம். அல்லது அது டான் ஜுவானாக இல்லாமலும் இருக்கலாம். அது அவ்வளவு முக்கியமில்லை. கார்லாஸ் தன்னைவிடச் சிறந்த ஒருவரை எப்போதோ சந்தித்திருக்கிறார். அவருக்குச் சில ரகசியங்கள் தெரிந்திருக்கின்றன. கார்லாஸுக்கு அந்த ரகசியங்கள் தெரியாமலேயே இருக்கலாம். அல்லது அவற்றை அவர் இன்னொருவரிடம் இருந்து திருடியிருக்கலாம். அல்லது அவற்றை அவர் இரவல் வாங்கியிருக்கலாம். ஆனால் அவர் ஆன்மிகத்தில் விஷயம் தெரிந்த ஒருவரை எங்கோ எப்போதோ சந்தித்திருப்பது உண்மை. அப்படிச் சந்தித்துத் தெரிந்து கொண்டதைச் சுற்றிக் கற்பனை கதைகளை விரித்திருக்கிறார். போதை மருந்துகளைப் பயன்படுத்தினால் கற்பனை பெருக்கெடுப்பது சாத்தியமே. போதை மருந்துகள் கற்பனையை வெகுவாகத் தூண்டிவிடும்.

சிறிதளவாவது ஆன்மிக உண்மைகள் தெரிந்த எவரையோ கார்லாஸ் சந்தித்திருக்கிறார். அதற்குப்பின் எல்எஸ்டி போன்ற ஏதோ ஒரு போதை மருந்தின் உதவியோடு கற்பனைக் குதிரையைத் தட்டி விட்டிருக்கிறார். அப்படித்தான் அவருடைய கற்பனா லோகம் படைக்கப்பட்டு இருக்கிறது. அது ஒரு போதைப் பயணம். என்றாலும் மிகச்சிறப்பான ஒரு பரிசோதனை.

இதையெல்லாம் சொல்லும்போது கார்லாஸைக் குறை சொல்கிறேன் என்று பொருள் அல்ல. எனக்கு அவர்மீது மிகவும் பிரியம் இருக்கிறது. அரிதான கற்பனைப் பயணம் அவருடைய இலக்கியம். அது நூற்றுக்கு நூறு உண்மை என்றால் கார்லாஸ் மிக அரிதான மனிதராகத்தான் இருக்கவேண்டும். அப்படி ஆன்மிக உண்மை தெரிந்தவர் யாரையும் சந்திக்காமலேயே அவருடைய எழுத்தில் அந்த ஒரு சதவிகித உண்மை இருக்குமேயானால் அந்த ஆன்மிக உண்மை அவருக்கே தெரிந்திருக்க வேண்டும்.

அப்படி இல்லையானால் அவர் எழுதியதைப்போல எழுதியிருக்க முடியாது. அஸ்திவாரம் இல்லாமல் கட்டிடம் கட்ட முடியாது. கற்பனை வீட்டைக் கட்டக்கூட எதார்த்தத்தில் ஒரு அஸ்திவாரம் தேவை. சீட்டுக் கட்டு மாளிகை கட்டக்கூடத் தளம் ஒன்று தேவை. அந்த அளவுக்காவது அவருடைய எழுத்தில் உண்மை இருக்கிறது.

எனவே படி. ஏனென்றால் படிக்கவேண்டி இருக்கிறது. ஒவ்வொரு காலகட்டத்துக்குமான கதைகள் இருக்கின்றன. கற்பனைகள் இருக்கின்றன. அவற்றைத் தாண்டித்தான் போகவேண்டி இருக்கிறது. அவற்றைப் படித்துத்தான் ஆகவேண்டி இருக்கிறது. கார்லாஸ் காஸ்டநேடாவைத் தவிர்த்துவிட்டுப் போய்விட முடியாது. ஆனால் மறந்துவிடாதே. அவருடைய எழுத்தில் ஒரு சதவிகிதமே உண்மை இருக்கிறது. அதையும் தேடிக் கண்டுபிடிக்கவேண்டி இருக்கிறது.

குர்ட்ஜீஃபின் நூல்களை நீ படித்திருக்க வேண்டும். குறிப்பாக ஆல் அண்ட் எவ்ரிதிங் என்ற நூலை நீ படித்திருந்தால் தானியத்தைத் தவிட்டில் இருந்து பிரித்துப் பார்ப்பது எப்படி என்பது உனக்குத் தெரிந்துவிடும். நீ இன்னமும் அந்தப் புத்தகத்தைப் படிக்கவில்லை என்றால் படி. அது மிகச் சரியான ஆரம்பமாக இருக்கும். முதலில் ஜார்ஜ் குர்ட்ஜீஃபின் ஆல் அண்ட் எவ்ரிதிங் படி. பிறகு கார்லாஸ் காஸ்டநேடாவைப் படிக்கலாம்.

குர்ட்ஜீஃபின் புத்தகங்களைப் படிப்பதென்பது மிகச் சிரமமான பயிற்சி. அவருடைய ஆல் அண்ட் எவ்ரிதிங் என்ற புத்தகத்தை முழுவதுமாகப் படித்தவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். சிரமம். ஆயிரம் பக்கங்கள். குர்ட்ஜீஃப் மறைத்து எழுதுவதில் வல்லவர். அவர் பாட்டுக்கு முக்கியமில்லாதவற்றைப்பற்றி வெகு சாதாரணமானது பற்றிப் பேசிக்கொண்டே போகிறார். கதைக்குள் கதை என்று திரித்துக்கொண்டே போகிறார். திடீரென ஓர் உண்மையைச் சொல்லிப் போகிறார். ஆனால் தேடிக் கண்டுபிடிக்கும் அளவுக்கு முக்கியமானதுதான் அது. ஒரு வைரத்தைப்போல. நூறு பக்கங்கள் குப்பையும் கூளமும். திடீரென ஒரு வைரம். இதுதான் அவருடைய எழுத்து.

குர்ட்ஜீஃபின் நூல்களில் இருக்கும் வைரத்தைக் கண்டுபிடிக்க முயற்சி செய்வதே சிறந்த பயிற்சியாக அமையும். பிறகு கார்லாஸ் காஸ்டநேடாவின் எழுத்தில் எங்கே என்ன உண்மை இருக்கிறது என்பதைக் கண்டுகொள்வது மிகச் சுலபம். இல்லையேல் நீ கதைக்குள் புகுந்து உண்மையைத் தொலைத்து விடுவாய். பல அமெரிக்கர்கள் கார்லாஸ் காஸ்டநேடாவின் எழுத்தைப் படித்துவிட்டு டான் ஜுவானைத் தேடி மெக்ஸிகோவில் அலைகிறார்கள் என்று நினைக்கிறேன். முட்டாள்கள்.

**ஆறாவது கேள்வி:**

**திலோபா போல அல்லது புத்தரைப் போல சரியான வாரிசைத் தேடி நீங்களும் இந்தியாவை விட்டுப் போகவேண்டி இருக்குமோ?**

முட்டாள்களே! ஏற்கெனவே நான் இந்தியாவை விட்டு விலகி வந்துவிட்டேன் என்பது இன்னமுமா உங்களுக்குத் தெரியவில்லை? நான் இன்னமும் இந்தியாவில் இல்லை.

கடைசிக் கேள்வி:

சின்மயா இந்தக் கேள்வியை அடிக்கடி கேட்டுக் கொண்டிருந் திருக்கிறான். நான்தான் தவிர்த்துக்கொண்டே வந்திருக்கி றேன். ஆனால் பதில் சொல்ல நேரம் வந்துவிட்டது. அவன் கேட்கிறான் –

ஞானிகள் எல்லோருக்கும் வழுக்கை இருக்கிறதா என்ன?

இனியும் இந்தக் கேள்விக்குப் பதிலைத் தராமல் இருக்கமுடியாது. வழுக்கைத் தலையன் ஆகும் முயற்சியில் அவன் மொட்டையடித்துக் கொண்டிருக்கிறான் பாருங்கள்.

வழுக்கைக்கும் ஞானத்துக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. எனவே வழுக்கையாக வேண்டும் என்று எந்த முயற்சியும் செய்யாதே.

வழுக்கைத் தலையர்கள் சாமர்த்தியசாலிகள். தங்களைப்பற்றி அவர்கள் வதந்திகளைப் பரப்புகிறார்கள். அப்படிப் பரப்பிய வதந்திகளில் ஒன்றுதான் அவர்கள் காமத்தில் மற்றவர்களைவிடச் சிறந்தவர்கள் என்பது. வழுக்கைத் தலையை வைத்துக்கொண்டு பெண்களைக் கவர்வது சிரமம். அதனால் எதையாவது சொல்லி அவர்களைக் கவரவேண்டி இருக்கிறது. அப்படித்தான் அவர்கள் தம்மைப்பற்றிய வதந்திகளைப் பரப்புகிறார்கள். எல்லா நாட்டிலும் எல்லா மக்களிடமும் இந்த வதந்தி இருக்கிறது. ஆனால் இது ஒரு தந்திரம்தானே ஒழிய உண்மை இல்லை.

ஆனால் வழுக்கைத் தலையர்கள் மட்டுமே ஞானிகள் என்று சொல்வது கொஞ்சம் அதிகம்தான்.



ஏழு

## இல்லாததன் பயன்பாடு

முப்பது ஆரங்கள் ஒரு கும்பத்தில் சேர்கின்றன.
அவை தம்மை இழப்பதில்
சக்கரத்தின் பயன்பாடு தோன்றி வருகிறது.
மண்ணால் ஒரு பானை செய்.
அந்தப் பானையில் மண் இல்லாததில்
பானையின் பயன்பாடு தோன்றி வருகிறது.
சுவரில் சுவரற்ற இடத்தில் வைப்பதுதான்
சன்னலும் கதவும்.
வீட்டின் பயன்பாடு சுவரற்றதில் தோன்றி வருகிறது.
எனவே பொருட்களின் இருப்பில் நமக்கு நன்மை.
பொருட்களில் இல்லாததில் இருப்பது பயன்பாடு.

(இருப்பதன் ஆழத்தின் மையத்தில் இல்லாதது இருக்கிறது. இருப்பதன் அடித்தளம் இந்த இல்லாதிருப்பதுதான். இல்லாதிருப்பது எனும்போது நான் ஏதுமற்றது என்ற பொருளில் சொல்லவில்லை. எதுவும் இல்லாதது என்ற பொருளில் சொல்கிறேன்.)

வடிவற்றதன் அடிப்படையில் வடிவம் அமைகிறது. கடலில் அலைகள் தோன்றி வருவதைப்போல வடிவற்றதில் இருந்து வடிவம் தோன்றி வருகிறது. பிறகு அலைகள் எழுந்து விழுந்து இல்லாமல் போவதைப்போல வடிவங்கள் கரைந்துபோய் மறுபடி வடிவற்றதாகிப் போகின்றன. பெயரற்றதில் இருந்து பெயர் தோன்றுகிறது. பிறகு திரும்பப் பெயரற்றுப் போய் தன் மூலத்துக்குப் போய் மீண்டும் பெயரற்றுப் போகிறது.

வாழ்க்கை மரணத்தில் இருந்து தோன்றி மீண்டும் மரணத்துக்கே போய்ச் சேருகிறது. எனவே நீ புரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால் எதிர்மறையாகத் தோன்றும் இவற்றுக்கிடையே எந்தப் பிணக்கும் இல்லை என்பதுதான். வாழ்க்கை மரணத்துக்கு எதிரானதல்ல. அஜீவிதம் ஜீவிதத்துக்கு எதிரானதல்ல. எதுவும் இல்லாதது இருப்பதற்கு எதிரானதல்ல. அவை ஒரே நிகழ்வின் இரண்டு துருவங்கள். புரிதலைத் தாண்டிய இயல்புடையவை.

சிலசமயம் இருப்பவையாக அது வெளிப்படுத்திக் கொள்கிறது. சிலசமயம் இல்லாததாகத் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது. இரண்டிலும் வெளிப்படுவது என்னவோ ஒன்றுதான். இதை மிக ஆழமாகப் புரிந்துகொள்ள வேண்டும். உன்னுடைய சாதகம் இந்தப் புரிதலைச் சார்ந்தது. முடிந்த ஞானத்தை நோக்கிய உன் முயற்சிகள் எல்லாமும் இதைச் சார்ந்தது. எதுவும் இல்லாதவனாக முடியாத வரைக்கும் அசலான ஜீவனாக முடியாது. முரண்பட்டுத் தெரிகிறதா?

உன்னை நீ இழந்துவிடும்வரை உன்னை நீ அடைய முடியாது என்றுதான் யேசு கிறித்து சொல்கிறார். உன்னையே பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கும் வரையிலும் உனக்கு அழிவு நிச்சயம்தான். அப்படிப்

பிடித்துத் தொங்காதபோது உனக்கு ஈடேற்றம்தான். உனக்குள் எதுவும் இல்லாததை நோக்கி நகரும்போது உன்னுடைய ஈடேற்றம் சாத்தியமாகிறது என்கிறார்.

உபநிடதம் ஒன்றில் மிகப்பழைய கதை ஒன்று இருக்கிறது.

உத்தாலகர் ஒரு ஞானி. அவருடைய மகன் ஸ்வேதகேது. மகன் ஒருநாள் தந்தையிடம், ''நான் யார்? எனக்குள் இருப்பது என்ன? தெரிந்துகொள்ள முயற்சி செய்கிறேன். செய்துகொண்டே இருக்கிறேன். முடியவில்லையே'' என்று சொல்கிறான்.

ஸ்வேதகேது சின்னப் பையன். என்றாலும் மிகப்பெரிய கேள்வியைக் கேட்டுவிட்டான். பதில் சொல்ல மிகச் சிரமமான கேள்விதான். வேறு யாராவது இந்தக் கேள்வியைக் கேட்டிருந்தால் உத்தாலகர் சுலபமாகப் பதில் சொல்லியிருப்பார். ஆனால் ஒரு குழந்தை புரிந்துகொள்ளும் வகையில் எப்படிப் பதில் சொல்வது? இருப்பதிலேயே மிகப்பெரிய விஷயத்தைப் பற்றி அல்லவா அவன் கேட்டிருந்தான்!

உத்தாலகர் சாதுரியமாகப் பதில் சொல்லவேண்டி இருக்கிறது. ''அதோ அங்கே போய் அந்த ஆல மரத்தின் ஒரு பழத்தைக் கொண்டுவா'' என்றார்.

பையன் ஓடிப் போனான். சிறிய பழத்தோடு திரும்பி வந்தான்.

''அதை வெட்டு? என்ன இருக்கிறது?''

''நிறைய விதைகள்.''

''அதில் ஒரு விதையை எடுத்துக்கொள். அதையும் வெட்டிப்பார். என்ன இருக்கிறது?''

''ஒன்றுமே இல்லை.''

''அந்த ஒன்றுமே இல்லாததில் இருந்துதான் இவ்வளவு பெரிய மரம் வந்திருக்கிறது. அந்த விதையின் நடுமத்தில் ஒன்றுமே இல்லை. அதை வெட்டிப் பார்த்தாயல்லவா? ஒன்றுமே இல்லைதானே? அந்த எதுவுமில்லாததில் இருந்துதான் இவ்வளவு பெரிய மரம் வந்திருக்கிறது. அப்படியேதான் நீயும் ஸ்வேதகேது!''

தத் த்வம் அசி ஸ்வேதகேது என்பதுதான் மனிதனாகப் பிறந்தவர்களில் சிறந்தவர்கள் சொன்ன வார்த்தைகளில் முக்கியமான ஒன்று. அதுதான் நீ, நீதான் அது, ஸ்வேதகேது.

விதையின் நடுமத்தில் எதுவுமற்றதாக இருப்பது எதுவோ அதுவே நீ. உனக்குள் இருக்கும் இந்த எதுவுமற்றதைக் கண்டுபிடிக்கும்வரை நீ சத்தியத்தைச் சென்றுசேர முடியாது. அதுவரையிலும் கொள்கை கோட்பாடுகள் சாத்திரங்கள் என்று எதைப்பற்றி வேண்டுமானாலும் தெரிந்து கொள்ளலாம். உன்னைத் தெரிந்துகொள்ள முடியாது.

தந்தை சொன்னதைப்பற்றித் தனயன் வெகுவாகச் சிந்தித்துப் பார்த்தான். மௌனித்துப் போனான். தன்னுடைய எதுவுமற்றதை மகிழ்ந்து அனுபவித்தான். மீண்டும் ஒரு கேள்வி எழுந்தது. சிலநாட்கள் கழித்துத் தந்தையிடம் வந்தான். ''அதை என்னால் உணர முடிகிறது. என்றாலும் தெளிவாகப் புரியவில்லை. எதுவுமாக இல்லாததில் இருந்து இருக்கும் எல்லாமும் தோன்றி வந்திருக்கின்றன. ஆனால் எப்படி எதுவுமற்றது, இருப்பதோடு கலந்து விடுகிறது. எப்படி இருப்பது இல்லாததோடு ஐக்கியமாகிப் போகிறது? முரண்பாடாகத் தெரிகிறதே!'' என்றான்.

தந்தைக்கு மறுபடி சிரமம் வந்துவிட்டது. குழந்தைகள் கேள்வி கேட்க ஆரம்பித்து விட்டாலேயே சிரமம்தானே! குழந்தைகளின் கேள்விகளுக்குப் பெரியவர்கள் தரும் பதில்களில் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் தவறானவைதான். எதையோ சொல்லித் தொலைக்க வேண்டியிருக்கிறது. ஏமாற்றுகிறார்கள். உத்தாலகர் தன் மகனை ஏமாற்ற விரும்பவில்லை.

ஸ்வேதகேதுவின் கேள்வியில் ஆர்வம் மட்டும் இருக்கவில்லை. அதில் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற தேடல் இருந்தது. உண்மையாகவே அவனுக்கு விடை தேவை. அவன் உடலளவில் மிக இளையவனாக இருக்கலாம். ஆனால் மனத்தளவில் அவன் மிக மூத்தவனாகத்தான் இருந்தான். தன் முற்பிறவிகளில் அவன் இந்த ரகசியத்தைத் தெரிந்துகொள்ள வெகுவாகத்தான் முயன்றிருக்க வேண்டும். அவன் வெறுமனே ஆர்வத்துடன் கேட்ட கேள்வி அல்ல அது. அவனுடைய கேள்வியில் அசலான தேடுதல் இருந்தது. அலைப்புற்ற மனதின் கேள்வி அல்ல அது. வெகு ஆழத்திலிருந்து வந்த கேள்வி.

''போய் ஒரு குவளை தண்ணீர் கொண்டுவா.''

பையன் கொண்டு வந்தான்.

''போய் கொஞ்சம் சர்க்கரை கொண்டு வா.''

பையன் கொண்டு வந்தான்.

''இரண்டையும் கலக்கு.''

பையன் கலந்தான்.

''இப்போது இரண்டையும் தனித்தனியே பிரிக்க முடியுமா?''

''முடியாது. சர்க்கரை எங்கே இருக்கிறது என்றுகூட எனக்குத் தெரியவில்லையே!'' என்றான் பையன்.

''முயன்று பாரேன்.''

அவன் நன்றாகப் பார்த்தான். சர்க்கரை தெரியவில்லை. கரைந்து போய்விட்டது. நீராகி விட்டது.

''அதைச் சுவைத்துப் பார்.''

சுவைத்துப் பார்த்தான். இனித்தது.

''இப்படித்தான். இருப்பது எது, இல்லாதது எது என்பதை உன்னால் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடிவதில்லை. நீரும் சர்க்கரையும் போல அவை ஒன்றுக்குள் ஒன்று கரைந்து இருக்கின்றன. சுவைத்துப் பார்த்து இந்த நீரில் சர்க்கரை இருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம். அவற்றை ஒன்றிலிருந்து இன்னொன்றாகப் பிரிக்க முடியாது. யாராலும் முடியாது. ஏனென்றால் அவை தனித்தனியானவை அல்ல.''

சர்க்கரையை நீரில் இருந்து பிரித்து விடலாம்தான். ஆனால் குழந்தை புரிந்துகொள்ளும் வகையில் விளக்கம் தரத்தான் அதைச் சொன்னார். ஆனால் இருப்பதையும் எதுவுமற்றதையும் பிரிக்கவே முடியாது. வாழ்வையும் மரணத்தையும் பிரிக்கவே முடியாது.

அவை தனித்தனியானவை அல்ல எனும்போது அவற்றை எப்படித் தனித்தனியாகப் பிரிப்பது? அவை எப்போதும் ஏகமாக இருக்கின்றன. ஏகமாக இருக்கின்றன என்று சொல்வதுகூடத் தவறுதான். அவை தனித்தனியானவை. எனவே ஒன்றாக இருக்கின்றன என்று பொருளாகிப் போகும். அவற்றில் துவைதம் இல்லை. அவை ஒரு அத்வைதக் கலவை. இரண்டாக இருப்பதாகத் தெரிகின்றன - அவ்வளவுதான்.

எங்கே இருந்து வந்திருக்கிறாய்? இந்த அடிப்படைக் கேள்வி பற்றி எப்போதாவது ஆழமாகச் சிந்தித்தது உண்டா? எங்கே இருந்து வந்திருக்கிறாய்? ஏதுமற்றதில் இருந்து வந்திருக்கிறாய். எதை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறாய்? எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்? ஏதுமற்றதை நோக்கித்தான். ஏதுமற்றதில் இருந்து ஏதுமற்றதை நோக்கித்தான். இரண்டு ஏதுமற்றதுக்கு இடையே இருப்பது இருக்கிறது.

ஜீவிதம் இன்மையின் இரண்டு கரைகளுக்கு இடையே ஓடிக் கொண்டிருக்கும் ஒரு நதி. ஜீவிதம் அழகானது. அஜீவிதமும் அழகானதே. வாழ்க்கை அருமையானது. இறப்பும் அப்படியே அருமையானது. இறப்பு இல்லாமல் வாழ்க்கை இருக்க முடியாதல்லவா? சாதாரணமாகச் சிந்தித்துப் பார்க்கும்போது இறப்பு வாழ்வுக்கு எதிரிடையானது என்று தோன்றுகிறது. வாழ்வை இறப்பு மறித்து நிறுத்திவிடுகிறதல்லவா? ஆனால் அப்படி நினைப்பது தவறு. இறப்பு இல்லையென்றால் வாழ்க்கை ஒரு கணம்கூட இருக்க முடியாது. இறப்பு வாழ்வுக்குத் துணையாக இருக்கிறது. இறப்பு வாழ்வின் அடிப்படை. சாக முடியும் என்பதால்தான் நீ வாழ்கிறாய்.

வாழ்வும் சாவும் இரண்டல்ல. இரண்டு இறக்கைகள். ஒரே நிகழ்வின் இரண்டு இறக்கைகள். ஆன்மிகம் முரண்பட்டுப் பேசுகிறது என்றுதான் அறிவியல் சொல்கிறது. ஆன்மிகம் பகுத்தறிவுக்கு உட்பட்டுப் பேசுவதில்லை. தர்க்கத்துக்கு உட்பட்டுப் பேசுவதில்லை.

ஆனால் சென்ற சில வருடங்களுக்குள் அறிவியலில் சில முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ளன. குறிப்பாக இயற்பியலில் ஏற்பட்டுள்ள அந்த முன்னேற்றங்களால் ஜீவிதத்துக்கும் அஜீவிதத்துக்கும் இடையேயான உறவைப் புரிந்துகொள்ள ஏதுவாகச் சில கொள்கைகள் ஏற்பட்டுள்ளன. பிளாக் ஹோல் என்பது அந்தவகைக் கொள்கை. ஏதுமற்றதாகப் பிரபஞ்சத்தில் சில இடங்கள் இருக்கின்றன என்று அறிவியல் ஏற்றுக் கொண்டுள்ளது. முதலில் அவற்றை ஏற்றுக் கொள்வதில் சிக்கல்கள் இருந்தன. போகப்போக அந்தக் கருத்து மேலும் மேலும் தெளிவடைந்து கொண்டுள்ளது. அறிவியல்கூட ஒன்றை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலைக்கு வந்துவிட்டது. அதாவது எதற்கும் ஒரு மறுதலை உண்டு என்பதுதான்.

ஜீவிதம் இருக்கிறதென்றால் அஜீவிதம் இல்லாமல் ஜீவிதம் இருக்கமுடியாது. வாழ்க்கையும் இறப்பும் எதார்த்தங்கள். அன்பும் வெறுப்பும் எதார்த்தங்கள். கருணையும் கோபமும் எதார்த்தங்கள். எனவே எப்படி ஜீவிதம் மட்டும் அஜீவிதம் இல்லாதபோது இருக்க முடியும்? எப்படியோ அஜீவிதமும் ஜீவிதமும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையதாக இருக்கத்தான் வேண்டும். பிளாக் ஹோல் இருக்கவேண்டுமே என்று தேடித் தேடிப் பார்த்தார்கள். அதைக் கண்டுபிடித்து விட்ட ஒருவருக்கு இப்போது நோபல் பரிசு தந்திருக்கிறார்கள். பிளாக் ஹோல் என்பது ஏதுமற்று இருப்பது. அது ஓர் இடம்கூட அல்ல. வெகு அபாயமானவை அந்த பிளாக் ஹோல்கள். ஏதாவது அதற்குள் புகுந்துவிட்டால் அவ்வளவுதான். மறைந்து போகும். ஏனென்றால் ஏதுமற்ற பிளாக் ஹோல் எதையும் ஏதுமற்றதாக்கி விடுகிறது.

பிளாக் ஹோல்களின் கண்டுபிடிப்பு பல அதிசயங்களைப் பற்றிய ரகசியங்களைத் தீர்த்து வைத்திருக்கிறது.

சில வருடங்களுக்கு முன் அமெரிக்காவில் நடந்த ஒரு நிகழ்ச்சி. ராணுவ விமானம் ஒன்று பறந்து கொண்டிருந்திருக்கிறது. அதனோடு வழக்கமான தொடர்பு இருந்து கொண்டிருந்திருக்கிறது. திடீரெனத் தொடர்பு அறுந்துவிட்டது. இன்னொரு விமானத்தை அனுப்பி அதைத் தேடி இருக்கிறார்கள். என்ன நடந்தது என்கிறாய்? முதல் விமானம் பறந்து மறைந்துபோன அதே நேரத்தில் இரண்டாவது விமானமும் மறைந்து போய்விட்டது. ஓர் அரைமணி நேரம்தான்.

ஏதோ அபாயம் என்று நினைத்த ராணுவத்தினர் இன்னும் மூன்று விமானங்களை அனுப்பிப் பார்த்தார்கள். அவையும் அரை மணி நேரத்தில் மறைந்துபோயின. அந்த ஐந்து விமானங்களைப்பற்றி இன்றுவரை எதுவும் தெரியவில்லை. அவை இருந்ததற்கான எந்தச் சுவட்டையும் விட்டுப் போகாமல் மறைந்துவிட்டன. எங்கேயாவது கீழே விழுந்திருந்தால் தெரிந்திருக்குமே. அவை பறந்துகொண்டே இருக்கமுடியாது. முடிவில்லாமல் பறந்து கொண்டிருப்பது சாத்தியம் இல்லை. என்னதான் நடந்தது? அவை ஒரு பிளாக் ஹோலுக்குள் மாட்டிக் கொண்டிருக்க வேண்டும் என்று நம்புகிறார்கள். அவை ஒரு பிளாக் ஹோலுக்குள் நுழைந்து மறைந்திருக்க வேண்டும் என்கிறார்கள்.

பிளாக் ஹோல் என்றால் ஏதுமற்றதன் சக்தி என்று பொருள். எதுவுமற்றதன் பலம் என்று பொருள். அதில் மாட்டிக் கொண்டால் எதுவும் எதுவுமற்றுப் போகிறது. எந்த அடையாளத்தையும் விட்டுப் போகாமல் மறைந்து போகிறது. பொருளாக இருந்தது பொருள் அல்லாததாகிப் போகிறது. அப்பொருண்மை ஆகிப்போகிறது.

கையை ஆட்டிப் பொருட்களை மாயமாகத் தருவிப்பவர்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். வெகு அற்புதம்தான். ஆனால் பொருளாக இருந்தவற்றின் பொருண்மை அற்றுப் போகுமாறு செய்வதைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? ஒரு பொருளாக இருந்தது வேறு எந்தப் பொருளாகவும் ஆகாமல் அப்படியே மறைந்து போவதைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?

பல தடவையும் அப்படி நடந்திருக்கிறது. ஒரு தடவை ஒரு கப்பல் மறைந்து போயிருக்கிறது. எழுநூறு பேரைச் சுமந்து போய்க்கொண்டிருந்த ஒரு கப்பல் அப்படியே மறைந்து போயிருக்கிறது. கடைசித் துறைமுகத்தை விட்டுப் போனபோது எல்லாமும் சரியாகத்தான் இருந்திருக்கிறது. ஆனால்

அடுத்த துறைமுகத்துக்குப் போய்ச்சேரவே இல்லை. இரண்டு துறைமுகங்களுக்கும் இடையே அப்படி ஒன்றும் வெகு தூரமும் இல்லை. எழுநூறு பேரோடு கப்பல் முழுகியிருக்குமானால் யாரோ ஒருவராவது தப்பித்திருக்க வேண்டும். யாருமே தப்பிக்கவில்லை என்றாலும் கப்பலின் மிச்சம் மீதி எங்கேயாவது கிடக்கவேண்டும். ஆனால் அப்படி எதுவும் இதுவரை தட்டுப்படவே இல்லை. அப்படியே மறைந்துபோய்விட்டது. ஏதாவது மிதக்கும் பிளாக் ஹோலுக்குள் மாட்டிக் கொண்டிருக்க வேண்டும்.

தினமும்தான் இப்படி நடக்கிறது. தினமும் நடப்பதால் நமக்குத் தெரிவதில்லை. இப்போது பேசிக் கொண்டிருந்த, நடந்து கொண்டிருந்த, சுவாசித்துக் கொண்டிருந்த ஒருவன் செத்துப் போகிறான். இருப்பதெல்லாம் அவனுடைய உடல் மட்டுமே. அழுகிப் போகக்கூடிய பொருண்மை மட்டுமே. என்னவாகி விட்டது. செத்துப் போனான் என்கிறோம். அவன் ஒரு பிளாக் ஹோலுக்குள் போய்விட்டான். அவனிடம் இருந்த ஏதோ ஒன்று எதுவுமற்றதற்குள் போய் மறைந்துவிட்டது. இறப்பு ஒரு பிளாக் ஹோல்.

நட்சத்திரங்கள்கூடப் பிறந்து மறைகின்றவைதான் என்று அறிவியல் சொல்கிறது. அவை பல லட்சம் வருடங்கள் வாழ்கின்றன. ஆனால் அதுவல்ல கேள்வி. அவை பிறக்கின்றன. எதிலிருந்து பிறக்கின்றன? இந்தக் கணத்தில்கூட நிறைய நட்சத்திரங்கள் தோன்றிக் கொண்டிருக்கின்றன. பிரசவ வார்டில் நிறையக் குழந்தைகள் பிறந்து கொண்டிருப்பதைப்போலப் பிரபஞ்சத்தில் நிறைய நட்சத்திரங்கள் பிறந்து கொண்டிருக்கின்றன. ஏதுமற்றதில் இருந்து தோன்றிக்கொண்டே இருக்கின்றன. இருந்ததெல்லாம் ஒன்றுமே இல்லை. திடீரென ஒரு நெபுலா தோன்றுகிறது. ஏதுமற்றதில் இருந்து புகை தோன்றுகிறது. புகை திரள்கிறது. குளிர்கிறது. மெதுமெதுவாக அடர்த்தி கூடுகிறது. இதற்கு லட்சக்கணக்கான ஆண்டுகள் ஆகின்றன. குழந்தை ஆவதற்கு ஒன்பது மாதங்கள் ஆவதைப் போலத்தான். லட்சக்கணக்கான ஆண்டுகளாக ஒரு நட்சத்திரம் ஆகிக்கொண்டே இருக்கிறது. ஏதுமற்றது திரண்டு திரண்டு ஒரு நட்சத்திரம் ஆவதற்கு லட்சக்கணக்கான ஆண்டுகள் ஆகின்றன. பிறகு லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு நட்சத்திரமாக இருக்கிறது. பிறகு செத்துப் போகிறது. பிறகு அப்படியே பரவிப் பரவித் தன் அடர்த்தியை இழந்து இழந்து, ஆவியாகி, புகையாகிப் போகிறது. லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு மரணப்படுக் கையில் கிடந்து ஒருநாள் அந்த நட்சத்திரம் மறைந்து போகிறது. நட்சத்திரம் இருந்த இடம் இப்போது ஒரு பிளாக்ஹோல் ஆகிப்போகிறது. அப்படி ஆகிப்போன பிளாக் ஹோலுக்கு அருகே போனால் போதும். எதுவும் எதுவுமற்றுப் போகிறது. உட்கொள்ளப்படுகிறது. ஒரு பிளாக்ஹோல்

அவ்வளவு பெரிய நட்சத்திரத்தையே உள்ளே இழுத்துக் கொள்கிறது என்றால் பார்த்துக்கொள்.

நமது சூரியன் ஓரளவுக்குச் சிறிய நட்சத்திரம். பூமியைவிட அறுபதினாயிரம் மடங்கு பெரியது. ஆமாம், நமது பூமியைவிட அறுபதினாயிரம் மடங்கு பெரிய சூரியனும் ஒருநாள் சாகத்தான் போகிறது. இன்னும் நாலாயிரம் ஆண்டுகளுக்கு இருக்கும் என்று அறிவியல் சொல்கிறது. ஏற்கெனவே வயதாகிப் போய்விட்டதாம். ஆஸ்பத்திரியில் கிடக்கிறதாம். ஆனால் நட்சத்திரங்களுக்கு ஏது ஆஸ்பத்திரி? அது இறந்து கொண்டுதான் இருக்கிறது. முதலில் வெளிச்சம் மறையும். பிறகு பொருண்மை மறையும். பிறகு அதுவும் ஒரு பிளாக் ஹோலாகிப்போகும்.

இப்போது சூரியன் இருக்கும் இடம் ஒரு காலத்துக்கு எதுவுமற்ற ஒன்றாகிப் போகும். பக்கத்தில் இருக்கும் பூமி அதில் மாட்டிக்கொள்ளும். ஒரே கணத்தில் நொறுங்கிப் போகும்.

சூரியனைவிடப் பெரிய நட்சத்திரங்கள் இருக்கின்றன. நமக்குத் தெரிந்த நட்சத்திரங்களைவிடப் பிரம்மாண்டமான நட்சத்திரங்கள் இருக்கின்றன. லட்சக்கணக்கான பெரிய பெரிய நட்சத்திர்ங்கள் பிரபஞ்சத்தில் இருக்கின்றன. அப்படி லட்சக்கணக்கானவை இறந்தும் போயிருக்கின்றன. விண்வெளிப் பயணத்தில் சந்திரனுக்குப் போய் வந்துவிட்டது அவ்வளவு பெரிய சாதனை அல்ல. அதைவிடப் பிரம்மாண்டமான தூரங்களைக் கொண்டதுதான் பிரபஞ்சம். ஆனால் சூரிய மண்டலத்துக்கு அப்பால் போனால் அபாயம்தான். எந்த ஒரு பிளாக் ஹோலிலும் சிக்கிக்கொள்ள நேரிடலாம். அப்படிச் சிக்கிக் கொள்வோம் என்பதற்கு எந்த முன்னெச்சரிக்கையும் இருக்காது. விண்கலம் அப்படியே இழுத்துக் கொள்ளப்படும். அவ்வளவுதான். அதைப்பற்றி யாருக்கும் எதுவும் தெரியாமல் போய்விடும். இந்த பிளாக் ஹோல்கள் ஜீவிதத்தின் மறுதலைகள். அவை எதுவுமற்றவை. அப்படி இருந்துதான் ஆகவேண்டும். ஏனெனில் இருத்தலை இல்லாதிருத்தல்தான் சரிகட்ட வேண்டும்.

இல்லாதிருத்தல்மீது லாவோட் சுவுக்கு வெகு நம்பிக்கை இருந்திருக்கிறது. அவர்தான் ஆன்மிகத்தில் சூன்யத்தின் பலன்பற்றிப் பேசிய முதல் ஆள். அவருக்கு பிளாக் ஹோல்பற்றி எதுவும் தெரிந்திருக்க வில்லை. அவர் வெகு சாதாரணமானவர். கிராமத்தான். பட்டிக்காட்டானாக வாழ்ந்தவர். அவருக்கு நாகரிகம் தெரியாது. விஞ்ஞானம் தெரியாது. அவர் நாகரிகத்துக்கு எதிரானவர். இயற்கைக்கு உகந்தவர். அவர் தரும் உவமைகள் எல்லாமும் வெகு எளிமையானவை. அதில் ஒன்று சக்கரம்.

சக்கரத்தின் கும்பத்தில் எதுவும் இல்லை என்கிறார். ஆனால் சக்கரத்தின் பயன்பாடு அந்த எதுவுமற்ற துளையைச் சார்ந்தது என்கிறார்.

சக்கரத்தின் மையம் அது என்கிறோம். ஏன்? அது மனிதனின் நடுமத்தைப்போல. மனிதனின் தொப்புளுக்கு அருகே இருக்கும் நடுமத்தைப்போல. ஜப்பானியர்கள் அதை ஹர என்பார்கள். ஹர என்பது உன் உடலின் பிளாக் ஹோல்.

லாவோட் சூவைச் சரியாகப் புரிந்துகொண்ட ஜப்பானியர்கள் இந்த உடலில் இறப்புக்கு என்று ஓரிடம் இருக்கவேண்டும் என்று தெரிந்து கொண்டார்கள். இறப்பு என்பது உடலுக்கு வெளியே இருந்து வருவதல்ல. அது ஒரு விபத்தல்ல. இறப்பு வருகிறது என்கிறார்கள். இறப்பு வருவதே இல்லை. இறப்பு உனக்குள்ளே வளர்ந்துகொண்டே இருக்கிறது. வாழ்வின் பாதையில் எங்கோ ஓரிடத்தில் இறப்பைச் சந்திக்கிறோம் என்பதில்லை. அப்படித்தான் என்றால் அதைச் சந்திக்காமலேயே போய்விடுவதற்கான வழிவகைகளைக் கண்டுபிடித்திருக்கலாமே. அல்லது அந்த இடத்துக்கே போகாமல் வேறு வழியில் வாழ்வை நடத்திப் போகலாமே. அல்லது உனக்குப் பதிலாக வேறொருவரை அங்கே அனுப்பிப் பலிகொடுத்து விடலாமே. இறப்பு உனக்குப் புறமானது என்றால் இதில் ஏதாவது ஒன்றைச் செய்து இறப்பைத் தவிர்த்துவிடலாம்.

ஆனால் வாழ்வில் இறப்பை ஒரு விதையாகச் சுமந்துகொண்டே இருக்கிறோம். நீ இருக்க வரும்போதே இறப்பு இருக்க வந்துவிட்டது. பார்க்கப்போனால் நீ இருக்க வருவதற்கு முன்பேயே இறப்பு இருக்க வந்துவிட்டது. நீ இறப்பிலிருந்து வந்திருக்கிறாய்.

இறப்புக்கென்று உடலில் எங்கோ ஒரு புள்ளி இருக்கவேண்டும். எனவே ஜப்பானியர்கள் உடலின் இந்த பிளாக் ஹோல் எங்கே இருக்கிறது என்று பார்க்க முனைந்தார்கள். அது தொப்புளுக்குச் சற்றுக் கீழே இருக்கக் கண்டார்கள். அது மிக சூட்சுமமான புள்ளி. ஹரகிரி என்ற வார்த்தையைக் கேட்டிருக்கிறாய் அல்லவா? ஹர என்றால் உடம்பின் பிளாக் ஹோல். ஹரகிரி என்றால் தற்கொலை. அந்த பிளாக் ஹோலைப் பயன்படுத்திக் கொள்வது.

தற்கொலையில் ஜப்பானியர்கள் மிகுந்த திறமை வாய்ந்தவர்கள். அவர்களைப்போல யாரும் அவ்வளவு சுலபமாகத் தற்கொலை செய்துகொள்ள முடியாது. அவர்களுக்கு இறப்பின் புள்ளி அவ்வளவு தெளிவாகத் தெரிந்திருக்கிறது. ஒரு சிறு கத்திகொண்டு ஹர என்ற அந்தப் புள்ளியைக் குத்திவிடுகிறார்கள். ஒரு துளி ரத்தம்கூடச் சிந்துவதில்லை.

ரத்தம் சிந்தாத தற்கொலை. வலியில்லாத தற்கொலை. உயிர் அப்படியே மறைந்து போய்விடுகிறது. நேராக உடலின் பிளாக் ஹோலைத் தொட்டுவிடுகிறார்கள். தொண்டையை அறுத்துக்கொண்டும் சாகலாம்தான். ஆனால் அதில் வலி அதிகம். ஏனென்றால் தொண்டைக்கும் ஹரவுக்கும் தூரம் அதிகம். மரணம் அவ்வளவு தொலைவு பயணிக்கவேண்டி இருக்கிறது.

ஒருவர் தலையைத் துண்டித்துவிட்டால் உடல் கொஞ்சநேரம் உயிரோடு இருக்கிறது. துடித்துத் துவள்கிறது. ஏனென்றால் ஹரவைத் துண்டிக்காமல் தலையைத் துண்டித்தால் இறக்க நேரம் ஆகிறது. ஹரகிரி செய்துகொண்ட ஜப்பானியனைப் பார்த்தால் துளியும் வலி தெரியாது. சாவின் அடையாளம் எதுவும் அவன் முகத்தில் தெரியாது. வெகு சுலபமாக வெகு அமைதியாக அவன் செத்துப் போகிறான். செத்த பின்னும் அவன் முகத்தில் சாவுக்களை இருக்காது. அவன் தன்னுடைய பிளாக் ஹோலுக்குள்போய் மறைந்துவிடுகிறான். அவ்வளவுதான்.

உடம்பில் அந்த ஹர என்பது எதுவுமில்லாதது. அது இன்மை. அது இருப்பின்மை. இந்த ஹரவைப்பற்றிய விழிப்புணர்வோடு இருப்பதைப் பற்றியதுதான் தாவோ சாதகம். இதற்கென வெவ்வேறு மூச்சுப் பயிற்சிகளை வகுத்து வைத்திருக்கிறார்கள். இதை வயிற்றால் சுவாசிப்பது என்பார்கள். வயிற்றால் சுவாசிக்கும் தாவோயிஸ்ட்டைவிட மௌனமானவரை நீ பார்த்திருக்கவே முடியாது.

நீ நெஞ்சிலிருந்து சுவாசிக்கிறாய். உலகம் முழுக்க இந்த நெஞ்சின் சுவாசம்தான் இருக்கிறது. இது ஆழ்ந்த சுவாசம் அல்ல. சாவுக்குப் பயந்துதான் வயிற்றால் சுவாசிப்பதை நிறுத்திவிட்டோம் என நினைக்கிறேன். வயிற்றால் சுவாசிக்கும்போது மரணத்துக்கு வெகு அருகில் போய்ச் சேர்கிறாய். ஹரவுக்குப் போய்ச் சேர்கிறாய். அப்போது சாவைத் தொட்டு விடுகிறாய். சாவுக்குப் பயந்தவனாகிப்போய் மேம்போக்கான சுவாசத்துக்கு வந்து சேர்கிறாய்.

பயந்துகொள்ளும் போதெல்லாம் உன் மூச்சு மெல்லியதாகிப் போகிறது என்பதைக் கவனித்துப் பார். பயந்துவிடும்போது ஆழ்ந்த சுவாசம் சாத்தியமில்லை. ஒவ்வொரு பயமும் இறப்பைக் கண்டு பயப்படுவதுதானே! உணர்வு நிலையில் அதை உணராது போனாலும் இறப்பு எங்கே இருக்கிறது என்பது உடலுக்குத் தெரிந்திருக்கிறது. எனவே அந்தப் பக்கம் போவதைத் தடுக்கிறது. உன்னுடைய மனதை விட உன் உடல் புத்திசாலி. அப்படித்தான் இருக்கவேண்டும். உடலுக்குப்பின் வந்ததுதானே மனம்! உடல் மனதுக்கு முன்பே இருக்க வந்துவிட்டது. பலகோடிப்

பிறவிகளைத் தாண்டி வந்திருக்கிறது. மனமற்ற பிறவிகள். எனவே உடல் தனக்கென ஒரு புத்திசாலித்தனத்தைச் சேர்த்து வைத்துக் கொண்டிருக்கிறது. எப்போதெல்லாம் பயப்படுகிறாயோ அப்போதெல்லாம் சுவாசிப்பதை நிறுத்திவிடுகிறாய். அல்லது மெல்ல மூச்சு விடுகிறாய். மரணத்துக்கு அருகில் வரப் பயப்படுவதால்தான்.

ஆழ்ந்த மூச்சு இறப்பை வாழ்வுக்குள் இழுத்துக்கொண்டு விடுகிறது. ஆழ்ந்த மூச்சு இறப்புக்கும் வாழ்வுக்கும் இடையே ஓர் இடைவெளியைத் தோற்றுவிக்கிறது. வயிற்றில் இருந்து ஆழ்ந்து மூச்சுவிட்டுப் பழகினால் பயம் போய்விடுகிறது. அதனால்தான் ஜப்பானியர் மற்ற எவரையும்விடச் சுலபமாகத் தற்கொலை செய்துகொள்ள முடிகிறது.

இது ஒரு விளையாட்டைப்போலத் தோன்றுகிறது. சின்னஞ்சிறு விஷயத்துக்கு எல்லாம் தற்கொலை செய்து கொள்வார்கள். மற்றவர்களுக்கு அது புரிவதே இல்லை. அவர்களுக்கு இறப்பும் வாழ்வும் ஒன்றே என்பது தெரிந்திருக்கிறது என்பதால்தான் இது சாத்தியமாகிறது. இறப்பும் ஒரு வாழ்வே. ஒரு நாணயத்தின் மறுபக்கம். அது ஓய்ந்து விடுவது. அவ்வளவுதான்.

ஆழ்ந்து மூச்சுவிட்டால் உடல் சமனப்பட்டு விடுகிறது. ஒருவிதமான தளர்வு தெரிகிறது. இறுக்கம் தவிர்கிறது. ஒரு குழந்தை மூச்சு விடுவதைப் பார்த்திருக்கிறாயா? வயிற்றிலிருந்துதான் மூச்சு வருகிறது. நன்றாகக் கவனித்துப் பார்த்தால் தெரியும். அப்படித்தான் எல்லோரும் மூச்சுவிட வேண்டும் என்கிறார் லாவோட் சூ. அதுதான் தாவோ யோகா. ஒரு குழந்தையைப்போல. வயிறு மேலெழுந்து கீழிறங்குகிறது. நெஞ்சு அப்படியே இருக்கிறது. மூச்சு விடுவதற்கும் நெஞ்சுக்கும் சம்பந்தமே இல்லை என்பதைப்போல. ஆமாம். நெஞ்சுக்கும் மூச்சு விடுவதற்கும் சம்பந்தமே இல்லைதான்.

ஆனால் இதில் நிறையச் சிக்கல்கள் இருக்கின்றன. சாவைக் கண்டு பயம். அதனால் ஆழ்ந்து மூச்சு விடுவதில்லை. ஹர அங்கே இருக்கிறதே. அந்த ஹரவுக்கு வெகு அருகிலேயே உயிர் முனை இருக்கிறது. அதுதான் காமத்தின் முனை. அதைக் கண்டும் பயம். ஆழ்ந்து மூச்சு விட்டால் காம உணர்வு மேலோங்குகிறது. எனவே காமத்தைக் கண்டு பயந்துபோய் ஆழ்ந்து மூச்சுவிட மறந்து போனார்கள். ஆழ்ந்து மூச்சு விட்டால் காம உணர்வு மேலோங்கி உன் நாடி நரம்புகளில் பாய்கிறது. அப்படித்தான் இருக்கவேண்டும். ஏனென்றால் உயிரின் முனை சாவின் முனைக்கு வெகு அருகிலேயே இருக்கிறதே. ஹர என்ற சாவின் முனை, காமத்தின் முனை, உயிரின் முனை எல்லாமும் வெகு அருகில் இருக்கின்றன. ஒன்றை ஒன்று

தொட்டுக் கொள்ளும் அளவுக்கு மிக அருகில் இருக்கின்றன. ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்களாக இருக்கின்றன. அதனால்தான் காமத்தைக் கண்டு மக்களுக்குப் பயம் வந்துவிட்டது.

உண்மையான காம அனுபவம் சாவை அனுபவிப்பதுபோல. நீ இறக்கிறாய். அதனால்தான் காமத்தைக் கண்டு அவ்வளவு பயம். பெண்களைக் கண்டு அவ்வளவு பயம். பெண்களைக் கண்டு பயப்படாதவர்களை நான் அதிகம் கண்டதில்லை. உனக்குப் பிறவி தந்த பெண்ணே உனக்கு இறப்பையும் தரப் போகிறாள். அந்தப் பயம்தான்.

இந்துக்களின் காளியைப் பார். தாய். அவள் இறப்புக்கும் வாழ்வுக்கும் கடவுள். தருகிறவள். எடுத்துக் கொள்கிறவள். அழகான பெண். கறுப்பானவள். இறப்பைப்போலக் கறுப்பானவள். அழகான பெண். ஆனால் ஆபத்தானவள். தன் கணவனைக் கொன்றுவிட்டு அவன் உடல்மேல் கால் வைத்து நடனம் ஆடுகிறவள். சிவன் கீழே கிடக்க அவன்மேல் நடனமாடுகிறாள். அவன் உடலை ஏறக்குறைய மிதித்துத் துவைத்து விடுகிறாள். அவளுடைய மாலையைப் பார். மண்டை ஓட்டு மாலை. அவளுடைய ஒரு கையில் கொய்த தலை. ரத்தம் சொட்டும் தலை.

ஒரு தாய் ஏன் இவ்வளவு பயங்கரமாக இருக்கவேண்டும் என்பதை மேலை நாட்டினர் புரிந்துகொள்ளவே முடிவதில்லை. ஏன் அழகான ஒரு பெண் இப்படிப் பயங்கரமாகச் சித்திரிக்கப்பட வேண்டும்? இந்துக்களுக்கு விவரம் தெரியும். சாவின் அற்புத ரகசியத்தை அவர்கள் வேறு எவரையும்விட நன்றாகப் புரிந்து வைத்திருக்கிறார்கள். காமமும் இறப்பும் வெகு அருகில் இருப்பவை என்பதை அவர்கள் புரிந்து வைத்திருக் கிறார்கள். ஒன்றேதான் என்று கொள்ளும் அளவுக்கு நெருக்கமானவை. காம உணர்வு துடித்துக் கிளம்பும்போது இறப்பும் துடித்துக் கிளம்பி உன் உடல் முழுக்கப் பரவுகிறது. அதனால்தான் காமத்தின் உச்சம் வெறும் வார்த்தை அளவிலேயே நின்றுவிட்டது. காமத்தில் உச்சம் கிடைப்பதே இல்லை. சாவை ஏற்றுக்கொள்ளாத வரையிலும் காமத்தின் உச்சத்தை அடையவே முடியாது. காமத்தின் உச்சம் என்பது எல்லாக் கட்டுப்பாட்டையும் இழந்து விடுவது. புத்தியை இழந்துவிடுவது. உடல் முழுக்கப் பரவசத்தில் துடிப்பது. உடலின் ஒவ்வொரு நாடி நரம்பும் துடிப்பது. இன்னதெனத் தெரியாத ஒரு பரவசத்தை உடல் முழுக்கக் கொண்டாடுகிறது. மனம் அங்கே எந்தக் கட்டுப்பாட்டையும் விதிக்க இருப்பதில்லை.

ஆணுக்குச் சில்லறை உச்சம்தான் கிடைக்கும். விந்து வெளியேறுவது. அவ்வளவுதான். அது உச்ச உணர்வல்ல. ஏனென்றால் உச்ச உணர்வு வரும்போது நீ இல்லாமல் போய்விடுகிறாய். வாழ்வும் இறப்பும் ஒருசேர

உன்னைப் பிடித்துக் கொள்கின்றன. பயம் உன்னைப் பிடித்துக் கொள்கிறது.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகவே பெண்கள் காமத்தின் உச்சத்தைக் கண்டவரில்லை. இப்போதுகூட இந்தியாவில் இரண்டு சதவிகிதப் பெண்கள் காமத்தில் உச்சத்தை அடைகிறார்களா என்பதே சந்தேகம்தான். சென்ற சில வருடங்களாகத்தான் பெண்களுக்கு உச்சம் இருக்கிறது என்பது ஆண்களுக்குத் தெரிய வந்திருக்கிறது. அந்த அளவுக்கு அதை அடக்கி வைத்திருக்கிறார்கள். ஏனென்றால் காமத்தில் உச்சத்தைக் கண்ட பெண் காளியாகி விடுகிறாள். பரவசத்தில் பைத்தியம் பிடித்தவளாகி உன் நெஞ்சுமீது கால்வைத்து நடனம் ஆட ஆரம்பித்துவிடுவாள். அவள் அவளாக இருக்கவே முடியாது. அவள் சிரிப்பாள். அழுவாள். யாருக்கும் அடுத்து என்ன நடக்கும் என்பது தெரியாது. அவள் போடும் சத்தத்தில் அவள் உச்சத்தில் இருக்கிறாள் என்பது அக்கம்பக்கம் எல்லாம் தெரிந்துவிடும்.

காமம் தனிப்பட்ட விஷயம் அல்லவா? மறைபொருள். ரகசியம். இருட்டில் செய்வது. ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் சரியாகப் பார்த்துக்கொள்வதுகூட இல்லை. பெண்ணோ எந்தச் செயலும் அற்றவளாகக் கிடக்கவேண்டி இருக்கிறது. அசையாமல் கிடக்க வேண்டியதுதான். மரணத்தைக் கண்டு அவ்வளவு பயம். ஏனென்றால் காமத்தின் உண்மையான பரவசம் என்ன என்பதைத் தெரிந்து கொண்டால் அவளைக் கட்டுப்படுத்தவே முடியாது போகும். எந்த ஓர் ஆணும் பெண்ணைத் திருப்தி செய்யவே முடியாமல் போகும். பெண்ணுக்கு ஒன்றுக்குமேல் .உச்ச அனுபவம் இருக்கிறது. ஆணுக்கு ஒரே ஒரு தடவைதான். சில நிமிடங்களில் பெண் பல உச்ச அனுபவத்தைப் பெறமுடியும். ஆறிலிருந்து அறுபது தடவை அவளுக்கு உச்ச அனுபவம் சில நிமிடங்களில் கிடைக்கும். ஆணுக்குப் பெண்ணைத் திருப்தி செய்வது கடினம்தான். இயல்பாகக் காமத்தை அனுபவிப்பதால் அவளுக்குப் பரவசத்தில் பைத்தியமே பிடித்துவிடும். அவளை அடக்கி வைப்பதுதான் சரி என்று நினைத்துச் செயல்படுகிறார்கள்.

மரணத்தின் ஒரு பகுதி என்றுதான் காமத்தை அடக்கி வைத்திருக்கிறார்கள். காமம் மரணம் என்ற இரண்டு மட்டுமே அடக்கி வைக்கப்பட்டுள்ளன. இதைத்தான் நான் கண்டிருக்கிறேன். எந்தச் சமூகம் காமத்தை அடக்கி வைத்திருக்கிறதோ அந்தச் சமூகம் சாவை அடக்கி வைப்பதைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. அந்த உணர்வை அடக்கினாலேயே இந்த உணர்வை அடக்கியது போலத்தான். மரண உணர்வை அடக்கி வைக்கும் எந்தச் சமூகமும் காம உணர்வை அடக்கி

வைக்க எந்த முயற்சியும் செய்யவேண்டியது இல்லை. தானாகவே அது அடங்கிப்போகும். ஒன்றை அடக்கினால் இரண்டும் அடங்கிப்போகும். இரண்டும் ஒன்றாகவே இருக்கின்றன. இரண்டையும் விட்டு விடுதலை செய்யவேண்டும். அப்போதுதான் பிரமாதமாக வாழ்வாய். ஆனால் இறப்புக்கும் வெகு அருகில் இருப்பாய். நீ ஒரு ஜீவனாக இருப்பாய். என்றாலும் எந்தக் கணமும் ஜீவனற்றுப் போனதைப் பார்த்துக்கொண்டே இருப்பாய். அதுதான் அதன் அருமையே. அதன் பயங்கரமும் அதுதான். பார்க்கப்போனால் அதுதான் மிக இயல்பானது. அழகான பொருட்கள் எல்லாமும் பயங்கரமான பொருட்களும்தான்.

கடவுள் அழகானவர். கடவுள் பயங்கரமானவரும் கூடத்தான். அவர் ரகசியமானவர் மட்டுமல்ல. அவர் பிரமாதமானவரும் கூடத்தான். அவர் ஜீவன் மட்டுமல்ல. அவரே சாவும் கூடத்தான். உன்னுடைய இருப்பையும் இருப்பற்றதையும் அடக்கி வைக்கும் அந்தக் கணமே நீ இரண்டுக்கும் இடையே இருக்கும் தொடர்பையும் துண்டித்து விடுகிறாய். ஜீவிதத்தைப்போல இரு. அப்போதுதான் அந்தப் பாலமும் இருக்கும். அப்போது உன் ஜீவிதமும் நீயும் தொடர்புள்ளவர்களாக இருப்பீர்கள்.

பிராய்டு காலத்துக்குப் பின் மேற்கத்திய நாடுகளில் காமத்தை அந்த அளவுக்கு அடக்கி வைப்பதை நிறுத்திவிட்டார்கள். ஆனால் சாவு என்ற உணர்வை அடக்கி வைத்து விட்டார்கள். சாவைக் கண்டு அவர்களுக்கு அவ்வளவு பயம். அதைப்பற்றி யாரும் பேசுவதே இல்லை. என்னவோ சாவே நிகழாத உலகத்தில் இருப்பதைப்போல. செத்துப் போனபின் பிணத்துக்கு அலங்காரம் செய்து விடுவதற்கென்றே ஒரு தொழில் இருக்கிறது. சாயம் பூசிச் செத்தவனை உயிரோடிருப்பவன்போலத் தெரிய வைப்பது. ஒரு பெண் செத்துப் போகிறாள். அவளுக்கு முகச்சாயம் பூசுகிறார்கள். உதடுகளுக்கு லிப்ஸ்டிக் போட்டு விடுகிறார்கள். அழகான உடைகளைப் போட்டு விடுகிறார்கள். அழகான சவப்பெட்டி செய்கிறார்கள். தூங்கிக் கொண்டிருக்கிறவளை அலுங்காமல் குலுங்காமல் தூக்கிக்கொண்டு போவதைப்போல. செத்துக் கிடக்கும் பிணம் என்பதையே மறந்து விடுகிறார்கள். இதுதான் மரணத்தைக் கண்டு பயம் என்கிறேன். மரணத்தின் முகத்தைக் காணப் பயம்.

கல்லறைகளை ஊருக்கு ஒதுக்குப்பறத்தில் கட்டி வைக்கிறார்கள். அழகான பளிங்குக்கற்களைப் பதித்து வைக்கிறார்கள். அலங்காரம் செய்து வைக்கிறார்கள். அலங்காரம் செய்துவைத்து மரணத்தைத் தவிர்க்கலாம் என்ற நினைப்புத்தான். அதை எங்கும் சந்திக்க வேண்டியது இல்லை பார். ஆனால் மறந்துவிடாதே. இறப்பு வாழ்வின் மறுபக்கம்.

வாழ்வைப் பயன்படுத்து. இறப்பையும் பயன்படுத்திக் கொள். அதுதான் சேதி. இருப்பதைப் பயன்படுத்திக்கொள். இல்லாதிருப்பதையும் பயன்படுத்திக்கொள். எதைக் கண்டும் பயம் தேவையில்லை. ஏனென்றால் உன்னுடையது எதுவும் உன்னிடமிருந்து எடுத்துக் கொள்ளப்பட மாட்டாது. உன்னிடம் இல்லாதது உன்னிடம் இல்லாததுதான். ஏற்கெனவே உன்னிடமிருந்து எடுத்துக் கொண்டாயிற்று. அதை இன்னமும் சுமந்து கொண்டிருக்க முடியாது. அப்படிச் சுமந்து கொண்டுதான் இருப்பேன் என்றால் அது மிகப்பெரும் பாரமாகித்தான் போகும்.

லாவோட் சுவின் வார்த்தைகளைப் புரிந்துகொள்ள முயற்சி செய். இல்லாததன் பயன்பாடு பற்றிச் சொல்கிறார்.

**முப்பது ஆரங்கள் ஒரு கும்பத்தில் சேர்கின்றன.**
**அவை தம்மை இழப்பதில்**
**சக்கரத்தின் பயன்பாடு தோன்றி வருகிறது.**

ஒரு சக்கரம் சுழலக் காரணமே கும்பத்தின் நடுவே துளை இருப்பதுதான். எதுவும் அங்கே இல்லாத அந்தத் துளை இல்லையென்றால் சக்கரம் சுழல முடியாது. சக்கரம் சுழல்வது எதுவுமற்ற துளையின் வழியாகத்தான்.

**மண்ணால் ஒரு பானை செய்.**
**அந்தப் பானையில் மண் இல்லாததில்**
**பானையின் பயன்பாடு தோன்றி வருகிறது.**

**சுவரில் சுவரற்ற இடத்தில் வைப்பதுதான்**
**சன்னலும் கதவும்.**

**வீட்டின் பயன்பாடு சுவரற்றதில் தோன்றி வருகிறது.**

**எனவே பொருட்களின் இருப்பில் நமக்கு நன்மை.**
**பொருட்களில் இல்லாததில் இருப்பது பயன்பாடு.**

இப்படித்தான் ஒருவர் முழுமையானவராக ஆவது என்கிறேன். முழுமையானவனாக இருப்பது புனிதமானவனாக இருப்பது என்கிறார் லாவோட் சு. வேறு எந்தப் புனிதமும் எங்கும் எதிலும் இல்லை. சமயச் சடங்குள் புரிவதல்ல புனிதம். ஒழுக்கமான வாழ்வு வாழ்வதல்ல புனிதம். நற்குணத்துக்கும் புனிதத்துக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. முழுமையான வாழ்வே புனிதமான வாழ்வு. எதையும் மறுக்காத வாழ்வே புனிதமான வாழ்வு. எதையும் துறக்காத வாழ்வே புனிதமான வாழ்வு. எதையும் வேண்டாம் என்று சொல்லாத வாழ்வே புனிதமான வாழ்வு. எதிரெதிரே

இருப்பதையும் ஏற்றுக்கொள்ளும் வாழ்வே புனிதமான வாழ்வு. இதுதான் வேண்டும் அதுதான் வேண்டும் என்று சொல்லாத வாழ்வே புனிதமான வாழ்வு.

*Holy* வார்த்தை *Wholeness* என்ற வார்த்தையில் இருந்து வருவது. முழுவதுமாக இருந்தால் நீ புனிதமானவனாகவும் இருக்கிறாய். முழுமையானவனாக இருந்தால் நீ இறப்பும் வாழ்வுமாக இருக்கிறாய். இறப்பு என்னும் சத்தியத்தை மறைத்து வைக்க முயல மாட்டாய். உனக்குள் இருக்கும் வெறுமையை மறைக்க முயலமாட்டாய். அதைக் குப்பை கூளம் கொண்டு நிரப்ப முயலமாட்டாய். வெறுமையின் பரிசுத்தத்தையும் அனுபவிப்பாய். வெறுமையைப்போலப் பரிபூரண மானது வேறு எதுவும் இல்லை. எங்கே ஏதாவது இருக்கிறதோ அங்கே பரிசுத்தம் இல்லாமல் போய்விடுகிறது. வெறுமைதான் பரிசுத்தமானதாக இருக்கமுடியும்.

ஆனால் நமக்கோ வெறுமையைக் கண்டு பயம். தனியாக இருக்கப் பயம். அப்போதுதானே ஒருவருடைய வெறுமை நன்கு தெரிகிறது! நண்பர்களைத் தேடுகிறாய். காதலரைத் தேடுகிறாய். ஆரம்பத்திலேயே வியர்த்தமான முயற்சிதான் அது. தன்னுடைய வெறுமையைக் கண்டு பயப்படும் யாரும் காதலிக்க முடியாது. அவன் பயந்தவன். அடி ஆழத்தில் பயத்தை வைத்துக் கொண்டிருக்கிறவன். அவனெப்படிக் காதலிப்பது?

ஒருவரைக் காதலிப்பதாக அவன் சொல்லும்போது பாசாங்கு செய்கிறான். தன்னிடமிருந்தே தப்பித்துப்போகும் முயற்சியாகத்தான் காதல் அவனுக்கு ஆகிப்போகிறது. அவனுடைய வெறுமையில் இருந்து தப்பிக்க அல்லவா முயல்கிறான்? தனக்குள் எங்கோ அடி ஆழத்தில் வெறுமையும் எதுவுமற்றதும் இருக்கிறது என்பதை அவன் மறந்துவிட முயல்கிறான். அந்த வெறுமையை ஒருவரைக்கொண்டு நிரப்பிக்கொள்ள முயல்கிறான். மற்றவரும் அதையே செய்கிறார்.

எனவே இந்த உலகத்தில் காதல் என்று சொல்வது தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் ஒரு மாயை. இப்போதோ அப்போதோ நீ உன்னையே ஏமாற்றிக் கொண்டுதான் இருக்கிறாய் என்பதைப் புரிந்துகொள்வாய். தாம் ஏமாற்றப்பட்டுக் கொண்டிருந்திருக்கிறோம் என்பதைக் காதலர்கள் உணர்ந்து கொள்கிறார்கள். முட்டாளடிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறோம் என்பதைப் புரிந்துகொள்கிறார்கள். ஆனால் மற்றவர் தம்மை முட்டாளடித்து விட்டார்கள் என்று நினைத்துக்கொள்கிறார்கள். அவர்கள் மாந்தர்தம் துயரத்தையும் முட்டாள்தனத்தையும் புரிந்துகொள்வதே இல்லை. அவர்களுடைய முட்டாள்தனத்தைப் புரிந்துகொண்டால், தாம் என்ன

செய்து கொண்டிருக்கிறோம் என்பதைப் புரிந்துகொண்டால், மற்றவர்கள்மேல் கருணை வைப்பதற்கு அவர்களால் முடியும்.

தனியாக, மௌனமாக இருக்கப் பயம் என்றால் உன்னுடைய தனிமை கண்டு உனக்குப் பயம் என்றாகிப் போகிறது. அந்தத் தனிமையை மற்றவரைக் கொண்டு நிறைக்க முயல்கிறாய் என்றாகிப் போகிறது. அது ஒரு பாசாங்கு, பசப்பு. மற்றவரும் அதையேதான் செய்கிறார். அவனும் தனியாக இருக்கப் பயந்தவன். தனியாக இருக்கமுடியாத இருவர் ஒன்றாக இருக்க முயல்கிறார்கள். இது வெகு துயரத்துக்குத்தான் இட்டுச் செல்லப்போகிறது.

உன் தனிமையில் உன்மீது நீ அன்பு வைக்க முடியாது என்றால் மற்றவர் எப்படி உன்மீது அன்பு வைப்பது? நீயே உன்னிடம் அன்பு வைக்க முடியாது என்றால் மற்றவர் உன்மீது அன்பு வைக்கவேண்டும் என்று எப்படி எதிர்பார்க்கலாம்? உன்னுடைய தனிமை உனக்கே வெறுப்பாக இருக்கிறது என்றால் மற்றவருக்கும் அந்த உன் தனிமை வெறுப்பாகிப் போகலாம் அல்லவா? அதை இன்னொருவரை வைத்துக்கொண்டு நிறைக்க முடியாது. நிறைக்க முடியாததை எதை வைத்துக்கொண்டு நிறைக்க முடியும் என்கிறாய்? அது உன்னுடைய ஒரு பகுதியாக இருந்து கொண்டிருக்கவே செய்யும். அதை நிறைக்க முடியாது, அது காலியாகத்தான் இருந்தாக வேண்டும். அது காலியாகத்தான் இருக்கும். அதை நிறைக்க எடுக்கும் எந்த மூயற்சியும் தோற்றுத்தான் போகும்.

எனவே முதல் காரியம் இந்த வெறுமையோடு இசைந்து போய்விடுவதுதான். அதை இருக்க விடுவது. அதனோடு வாழ்ந்திருப்பது. அதை அடக்கி வைக்க முயலாதே. அதனிடம் இருந்து தப்பிக்க முயலாதே. அதை உணர்ந்துகொள். அதை அனுபவி. போகப்போக அதனுடைய அருமை உனக்குப் புரிந்துவிடும். உன்னுடைய தனிமையின் அருமையைப் புரிந்துகொண்டால் தனிமை ஏகாந்தமாகிப் போகும். அதன்பின் அது வெறுமையற்றதாகிப் போகும். எதுவுமற்றது என்று சொல்லத்தக்கது அல்லதாகிப் போகும். அது பரிசுத்தமானதாகிப் போகும். வடிவம் என்று ஒன்றைச் சாதிக்க முடியாத பரிசுத்தமானதாகிப் போகும்.

தனிமைக்கும் ஏகாந்தத்துக்கும் இடையே இருக்கும் வேறுபாட்டை உணர்ந்துகொள். தனிமை ஒரு காயம். தனிமை எனும்போது மற்றவரை இழந்து நிற்கிறாய் என்று பொருள். தனிமை என்றாலே மற்றவரைச் சதா நினைத்துக் கொண்டிருக்கிறாய் என்று பொருள். மற்றவர் உனக்கு வேண்டும் என்று ஏங்கிக் கொண்டிருக்கிறாய் என்று பொருள். அந்த மற்றவரோ உன்னுடைய மாயை தந்த வடிவம்தான். அவர் உன் மனதின் ஆக்கம். உன்

கற்பனையின் ஆக்கம். ஆனால் மற்றவர் இருந்துகொண்டே இருப்பதற்குக் காரணம் அசலான நீ தனிமையில் இல்லை என்பதுதான்.

உன்னுடைய ஏகாந்தத்தை உணரமுடியும் என்கிறபோது மற்றவர் தாமாகக் கழன்று போகிறார். உன்னுடைய மனதில் ஒரு நிழலாக எதுவும் எவரும் இருப்பதில்லை. எதுவும் எவரும் உன்னுடைய பரிசுத்தத்தை மாசுபடுத்துவதில்லை. நீ உன்னோடேயே மகிழ்ந்திருக்கிறாய். நீ உன்னோடேயே பரவசத்தில் இருக்கிறாய். நீ உன்னையே அனுபவித்துக் கொண்டிருக்கிறாய். முதல்முதலாக உனக்குள்ளே ஓர் ஒத்திசைவு வந்துவிடுகிறது. உன் ஜீவிதத்துக்கும் அஜீவிதத்துக்கும் இடையே ஒரு சுருதி சுத்தமான இசை வந்து சேர்கிறது. நீ முழுமையானவனாகிப் போகிறாய்.

அப்போது நீ காதலிக்கலாம். அப்போது காதல் பிரவகிக்கலாம். அப்போது காதல் ஒருவிதமான பங்களிப்பாக ஆகிப்போகிறது. தப்பிப் போவதல்ல. போ... போய் உன் ஜீவிதத்தையும் அஜீவிதத்தையும் பங்குபோட்டுக்கொள். உன்னுடைய முழுமையைப் பங்குபோட்டுக் கொள்ளலாம். மனம் திறந்த எவரும் உன் திறந்த மனத்தோடு சேர்ந்துகொள்ளலாம். நீங்கள் இருவரும் நித்தியமான பரவசத்தின் பங்குதாரர்கள் ஆகிப் போகலாம்.

இந்தக் காதலில் நீ என்னுடையவன், நான் உன்னுடையவள் என்ற உணர்வு இல்லை. ஏனென்றால் எப்போது வேண்டுமானாலும் ஏகாந்தத்துக்குத் திரும்ப நீ தயாராக இருக்கிறாய். பார்க்கப்போனால் அவளோடு இருந்தாலும் மகிழ்ச்சி. ஏகாந்தமாக இருக்கும்போதும் மகிழ்ச்சி. எதையும் இப்படித்தான் இருக்கவேண்டும் அல்லது அப்படித்தான் இருக்கவேண்டும் என்று தேர்வு செய்வதில்லையே. உன்னுடைய மகிழ்ச்சியைச் சிதைக்கவே முடியாது. அதை இன்னொருவர் அனுபவிக்க லாம். அதை இன்னொருவர் உன்னோடு பங்கிட்டுக் கொள்ளலாம். ஆனால் யாரும் அதைச் சிதைத்துவிட முடியாது.

நீ அதைப் பங்கிட்டுக் கொள்ளலாம். பிரித்துத் தரலாம். உலகத்துக் கெல்லாம் தரலாம். இந்த உலகம் முழுக்க அதைத் தரும் அளவுக்கு உன்னிடம் அத்தனை அன்பு இருக்கிறதப்பா. இன்னமும் வளர்ந்து கொண்டே வேறு இருக்கிறது. எந்த அளவுக்குக் கொடுக்கிறாயோ அந்த அளவுக்கு உன்னிடம் இருக்கக் காண்கிறாய்.

கஞ்சத்தனம் இல்லை உன்னிடம். மலச்சிக்கல் இல்லை உன்னிடம். மூடிக்கொண்டவன் அல்ல நீ. பயந்தவன் அல்ல நீ. கொடுக்க முடியும். பகிர்ந்துகொள்ள முடியும். ஏனென்றால் உனக்கு உன்னுடைய எதுவுமற்ற

தன்மையும் புரிந்திருக்கிறது. யாருமற்று எதுவுமற்று இருப்பதைப்பற்றிய பயம் உனக்கு இல்லை. அதுவும் உன்னுடைய ஒரு பகுதிதான் என்பதை நன்றாகத் தெரிந்துகொண்டாய். அதுதான் உன்னுடைய இருப்பின் அருமை என்பதையும் தெரிந்துகொண்டாய். நீ இயங்கத் தகுந்த களம் அது என்று கண்டுகொண்டாய். அது உன்னுடைய அகக்கோயில் என்பதைக் கண்டுகொண்டாய். கோயில் உனக்குள்ளேயே இருக்கிறது.

உன்னுடைய உடம்பில் அதைத் தேடினால் தொப்புளருகே இருக்கக் காண்பாய். அதனால்தான் இந்தியர்கள் தொப்புளைப் பார்ப்பதில் ஆர்வம் உள்ளவர்களாக இருக்கிறார்கள். இதைக் கேட்டால் மேற்கத்தியர்களுக்குச் சிரிப்புத்தான் வரும். தியானத்தில் இருக்கும்போது தொப்புளைப் பார்க்கிறாயா என்று கேட்டால் வேறு என்ன செய்வார்கள்? ஆனால் இந்தியர்களுக்கு அந்தக் கேள்வியின் பொருள் புரியும். ஜப்பானியர்கள் ஹரவைக் கண்ட இடத்தில் இந்தியர்கள் கோயிலைக் கண்டார்கள்.

கண்களை மூடித் தியானித்து உடம்பின் கோயிலுக்கு மனதைத் திருப்புகிறார்கள். உன்னுடைய உடம்பு உன்னைச் சுமக்கிறது என்பதால் அது உன் கோயில். அந்தக் கோயிலில் இருந்து இன்னமும் ஆழப் போகும்போது நீ உன்னுடைய இன்மையைக் காண்கிறாய். உன்னுடைய கர்ப்பக் கிரகத்துக்குப் போவதற்கு உன் உடல் ஒரு வாயிலாகிப் போகிறது. அந்தக் கர்ப்பக் கிரகத்தைச் சுற்றிலும் உன்னுடைய இன்மை இருக்கிறது. சிம்மாசனத்தில் கடவுள் இருக்கிறார். அதுதான் உன்னுடைய இன்மையின் நடுமம்.

அது எப்படி அகத்தின் வெறுமையில் நடுமத்தைக் காண்பது என்று என்னைக் கேட்டார்கள். முடியும் என்கிறேன். அதற்கு நடுமம் மட்டும்தான் இருக்கிறது. ஆரம் இல்லை. எங்கெங்கும் நடுமம். ஆரம் இல்லாத நடுமம். தர்க்கத்துக்கு ஒத்து வரவில்லையா? வாழ்வின் தர்க்கமே தர்க்கபூர்வமாக இருப்பதில்லை. தொடர்புடையதாக இருப்பதில்லை. வாழ்வுக்கு என்று ஒரு தர்க்க நியாயம் இருக்கிறது. அந்தத் தர்க்க நியாயத்தின் அடிப்படையே எதிர்மறையானது எதிரிடையானதல்ல என்பதுதான். அவை ஒன்றுக்கொன்று இட்டு நிரப்புகிறவையாகத்தான் இருக்கின்றன.

வெறுமைக்கு ஒரு நடுமம் இருக்கிறது. சக்கரத்தைப் பார். நடுவே வெற்றிடம்தான். கும்பத்தின் நடுவில் எதுவுமில்லைதான். ஆனால் சக்கரம் நகரும்போது கும்பம் வடிவுள்ளது. வடிவற்ற கும்பத்தின் துளை இன்மை. இன்மையே இருப்பின் ஒளிவட்டம். உன் ஜீவிதத்தின் ஒளி. உன் ஜீவிதத்தின் களம். உன் ஜீவிதத்தின் யதாஸ்தானம். அதனுடைய அருமையே அது காலியாக இருப்பதுதான். அது பரிசுத்தமாக இருப்பதே அது காலியாக

இருப்பதால்தான்.) அதைக் கண்டு பயந்துவிடாதே. முதலில் அது இறப்பைப்போலத் தெரியும். ஆனால் அதை அனுமதித்தால் அதுவே புனர் ஜென்மம் ஆகிவிடுகிறது. ஒவ்வொரு முறை உள்ளே சாகும்போதும் நீ புனர் ஜென்மம் எடுக்கிறாய்.

யேசு கிறித்து உயிர்த்தெழுந்த கதையின் சாராம்சமே அதுதான். அவர் உடம்போடு கூடிய வாழ்வுக்குத் திரும்பி வந்தார் என்பதல்ல. மரணத்தினூடு போய், சிலுவை வழியே போய் அவர் தன்னுடைய அகத்தின் ஆழ்ந்த வாழ்வுக்குப் போனார் என்பதுதான். ஒவ்வொருவரும் அப்படிப் புகுந்து வரவேண்டும். வெறுமையைத் தாண்டி வரவேண்டும். அதுதான் உன்னுடைய சிலுவை. யாரும் அந்தச் சிலுவையை உனக்குச் சுமந்து வந்து தரமுடியாது. நீயேதான் உன்னுடைய சிலுவையைச் சுமந்தாக வேண்டும். அப்படிச் சுமந்து போகாவிட்டால் அப்படி அந்த வெறுமையைக் கடந்து வராவிட்டால் நீ உன்னுடைய அகத்தின் நடுமத்துக்குப் போய்ச்சேர முடியாது. அந்த அகத்தின் நடுமத்தில் நீ தனிப்பட்ட ஒருவன் என்பது இல்லாமல் போய்விடுகிறது. நீயே கடவுளாகிப் போகிறாய்.

அஹம் பிரம்மம் என்பார்கள் இந்துக்கள். நான் கடவுளேதான். அகத்தின் நடுமத்துக்குப் போய்ச் சேர்ந்தவர்கள் சொல்லியது அது. தத்தமது தானின்மையைத் தாண்டிப்போய் கடவுள் இருக்கும் கர்ப்பக் கிரகத்துக்குப் போய்ச் சேர்ந்தவர்கள் சொல்லியது. அங்கே தாமின்றிப் போய்ச் சொல்லியது. ஆனால் நீயோ அதிலிருந்து தப்பித்து ஓடப் பார்க்கிறாய். அதை எப்படிப் பயன்படுத்துவது என்பது உனக்குத் தெரியவில்லை. வெறுமையாகிப் போய் செய்ய ஏதும் இல்லாதபோது நீ எதையோ செய்ய ஆரம்பிக்கிறாய். எது வேண்டுமானாலும்தான் செய்கிறாய். ரேடியோவைப் போடுகிறாய். டெலிவிஷனைப் போடுகிறாய். பத்திரிகை படிக்கிறாய். நாவல் படிக்கிறாய். ஓட்டலுக்குப் போகிறாய். கிளப்புக்குப் போகிறாய். எதையோ செய்யவேண்டி இருக்கிறது. சும்மா இருக்க முடியவில்லை. பொருளுள்ள எதுவும் செய்ய முடியவில்லை என்றால் பொருளற்ற காரியத்தைப் பண்ணு என்கிறார்கள். சும்மா மட்டும் உட்காராதே என்கிறார்கள்.

வெறுமனே உட்கார்ந்திரு என்கிறேன். வெறுமனே உட்கார்ந் திருந்தால் மிகப் பிரமாதமான ஒரு சந்திப்புக்கு வருகிறீர்கள். சாவோடான சந்திப்பு. அதைத் தாண்டிப்போக முடியுமானால் அதை நடனத்தோடு கொண்டாட்டத்தோடு சுவையோடு தாண்டிப்போக முடியுமானால் உன் வெறுமை உனக்குப் போஷாக்காக முடியுமானால் எதுவும் உன்னை அழித்துவிட முடியாது. நீ நித்தியத்தைச் சாதித்துவிட்டாய். அழிக்க முடியாததைச் சாதித்துவிட்டாய். இறப்பில்லாததைச் சாதித்துவிட்டாய்.

அதனால்தான் நான் நடனமாடிக் கொண்டே தியானி என்று சொல்கிறேன். அது உடலசைவால் மட்டுமேயான நடனம் அல்ல. வெளியே தெரியும் அசைவுகளைப் பழகிக் கொள்வது உள்ளே இருக்கவேண்டிய அசைவுகளுக்கான பயிற்சிதான். உடலால் நடனம் ஆடிக்கொண்டே இரு. அப்படி ஆடிக்கொண்டே இருக்கும்போது போகப்போக உள்ளேயும் ஒரு நடனம் ஆரம்பித்து விடுகிறது. உன் அகத்தின் நடுமத்தை நோக்கி நகர ஆரம்பிக்கிறாய். உன் ஜீவிதத்தின் நடுமம்.

மரணத்தை நடனமிட்டுக் கொண்டுதான் கடக்க முடியும். அக ஆழத்தின் புன்முறுவலைக் கொண்டே இறப்பை வெல்ல முடியும். தன் சிலுவையைச் சுமக்கும்போது ஒருவன் மகிழ்ச்சியாகச் சுமக்க வேண்டும். பரவசத்தோடு சுமக்க வேண்டும். அது ஒரு வரம் என்று நினைத்துச் சுமக்கவேண்டும். சோகமாகச் சுமந்தால் அது ஒரு பாரமாகிப் போகும். உன்னுடைய வெறுமையே ஒரு சுமையாகிப் போகும். அதிலிருந்து தப்பிக்கத்தான் நினைப்பாய். உன்னிலிருந்து வெளியே வந்து இந்த உலகத்தில் உழல்வாய்.

புறத்தே நடனமிடுவது எப்படி என்பதைக் கற்றுக்கொள். அகத்தகத்து நடனம் தானாகச் சாத்தியமாகும். அது ஒரு மனோநிலை. ஒரு பருவம். ஆமாம். அக நடனம் ஒரு பருவம்தான். நடன அசைவுகளுக்கும் அதற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அது அகமெனும் வெளியில் ஒரு பருவம். உள்ளே முகிழ்த்தெழும் ஒரு பரவசம். உள்ளே துடித்து நிற்கும் ஒரு பரவசம். அந்தப் படகில் போய்த்தான், கடப்பதற்கு வெகு சிரமமான நீரைக் கடக்க முடியும். உன்னுடைய அகத்தகத்து வெறுமையைக் கண்ணுற்ற அந்தக் கணத்தில் தப்பித்துப் போக நினைக்கிறாய். மரண பயம் வந்துவிடுகிறது. அதனால்தான் பெரும்பாலோர் தம்மைப் பற்றியே நினைத்துப் பார்ப்பதில்லை. அகில உலகம் பற்றி நினைத்துப் பார்க்கிறார்கள். அகில உலகத்துக்காகவும் கவலைப்படுவார்கள். தம்மைப்பற்றி மட்டும் நினைத்துப் பார்ப்பதே இல்லை. ஏனென்றால் தம்மைப்பற்றி நினைத்துப் பார்ப்பது என்பதே ஒரு புண்ணைத் தொட்டுப் பார்ப்பதைப்போல வலி தருவதாக அமைந்துவிடுகிறது. அவர்கள் பயந்து போகிறார்கள்.

பயப்படாதே. பொருட்கள் இருப்பது நல்லதுதான். அதன் பயனை நீ அனுபவிக்கலாம். ஆனால் அதுமட்டும் போதுமானதல்ல. இன்மையின் பயனையும் அனுபவிப்பது எப்படி என்று தெரிந்துகொள்ளாத வரைக்கும் முழுக்கலையைத் தெரிந்தவனாவதில்லை. முழுக்கலைதான் உன்னை முழுமையானவனாக்கும்.

செத்துப் போகாமல் உனக்குப் புனர்ஜென்மம் கிடையாது. எப்படி இருக்கிறாயோ அப்படியே மரணத்தைத் தாண்டி வரவேண்டி இருக்கிறது. வாழ்வைக் குரங்குப் பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறாய். அதனால் எந்தப் பயனும் இருக்கப் போவதில்லை. இறப்பு வரத்தான் போகிறது. இறப்பு இரண்டு வகைகளில் வருகிறது. வாழ்வைக் குரங்குப் பிடியாகப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கும்போது இறப்பு ஒரு விரோதியாக வந்து சேர்கிறது. அதனோடு சண்டையிடவேண்டி இருக்கிறது. அதை எதிர்த்துப் போராடவேண்டி இருக்கிறது. அதைத் தவிர்க்க என்னென்ன செய்ய முடியுமோ அத்தனையும் செய்யவேண்டி இருக்கிறது. ஆனால் அதை எப்படித் தவிர்ப்பது? பிறந்த அன்றே இறப்பும் சர்வ நிச்சயம் என்று ஆகிப் போய்விட்டதே. ஒவ்வொரு பிறப்பும் தன்னோடு இறப்பின் விதையைச் சுமந்தவாறுதானே நிகழ்கிறது. பார்க்கப்போனால் இறப்பைத் தவிர வாழ்வில் வேறு எதுவும் அவ்வளவு நிச்சயமில்லைதான். வேறு எல்லாமும் நடக்கலாம்தான். ஆனால் இறப்பு மட்டும் சர்வ நிச்சயம். நடந்தே தீரவேண்டிய ஒன்றுதான் சாவு. அதைத் தவிர்க்கலாம். சற்றே தள்ளிப் போடலாம். ஆனால் அதனால் எதுவும் மாறிவிடப் போவதில்லை. நடந்தே தீரும். தொண்ணூற்று ஒன்பது சதவிகிதத்தினர் இறப்பை அப்படித்தான் எதிர்கொள்கின்றனர். ஒரு விரோதியை எதிர்கொள்வதைப்போல. அவர்கள் அதைத் தவறவிட்டு விடுகிறார்கள். அவர்களுடைய விரோத பாவமே அதைப் பயன்படுத்த முடியாமல் செய்துவிடுகிறது. சாவின் லாபம் அவர்களுக்குக் கிட்டுவதில்லை. சாவின் தொண்டு அவர்களுக்குக் கிடைப்பதில்லை.

இன்னொரு வழியும் இருக்கிறது. சாவை ஒரு நண்பனாக ஏற்றுக் கொள்ளுதல். அவரவருடைய ஜீவிதத்தின் ஆழ்ந்த பகுதியாக ஏற்றுக் கொள்வது. அதை அனுபவிப்பது. அதை வரவேற்பது. அதற்குத் தயாராக இருப்பது. வரும்போது அணைத்துக் கொள்வது. திடீரெனச் சாவின் இயல்பே மாறிப் போகிறது. அது சாவாக இருப்பதில்லை. அது ஒரு வாயிலாகிப் போகிறது. அது உன்னை அழிப்பதாக இருப்பதில்லை. மாறாக உனக்குச் சேவகம் செய்ய வருகிறது. இறப்பற்ற நிலைக்கு உன்னை இட்டுச் செல்கிறது.

செத்துப் போகத்தான் வேண்டியிருக்கிறது. எனவே கம்பீரமாகச் செத்துப் போ. அதற்காக வெகு கட்டுப்பாட்டோடு சாகவேண்டும் என்று நான் சொல்லவில்லை. அப்படியல்ல. கம்பீரமாகச் செத்துப்போ என்கிறேன். அழகாகச் செத்துப் போ என்கிறேன். நண்பர் ஒருவர் வந்து கதவைத் தட்டுவதைப் போலத்தான். மகிழ்ச்சியோடு கதவைத் திறக்க மாட்டாயா?

நண்பனை அணைத்து வரவேற்க மாட்டாயா? அவனுக்காக எத்தனை நேரம் காத்திருந்திருக்கிறாய்!

சாவை விரும்பினால் நீ சிரஞ்சீவியாகிப் போவாய். அஜீவிதத்தைப் புரிந்துகொண்டால் உன்னுடைய ஜீவிதம் ஜீவிதத்தின் நாதத்துக்குக் களமாகிப் போகிறது. கடவுளின் களமாகிப் போகிறது. இன்மையைக் காதலித்தால் வேறு எதுவும் உன்னை அழிக்க முடியாது. கால தேச வர்த்தமானங்களைக் கடந்து போகிறாய். அப்போது நீ முழுமையோடு ஒன்றிப் போகிறாய். இதைத்தான் புனிதம் என்பது. முழுமையாகிப் போவது புனிதமாகிப் போவது.



எட்டு

# பரிபூரண சமநிலையை அடைதல்

முதல் கேள்வி:

வெகு சமீபத்தில் உள்ளிருக்கும் மௌனத்தைப் பற்றியும் வெறுமை பற்றியும் பேசினீர்கள். நான் உங்களுடைய சீடனாக இரண்டு வருடங்களாக இருக்கிறேன். அதற்குப் பின்னும் வெகு நேரமும் என் மனம் என் கட்டுப்பாட்டுக்குள் இருப்பதே இல்லை. குறிப்பாக ஆஸ்ரமத்தில் தியானிக்க வரும்போது என் மனம் கிறுக்குப் பிடித்த கம்ப்யூட்டர் போலத்தான் நடந்துகொள்கிறது. இந்த முட்டாள் தனத்துக்கு ஒரு சாட்சியாக இருக்கத்தான் நான் வெகுவாக முயற்சி செய்கிறேன். ஆனால் இந்த அசுர மனது அலைந்துகொண்டே இருக்கிறதே.

அந்த அசுரனை அலைய விட்டுவிடு. அதைப்பற்றிக் கவலைப் படாதே. அந்தக் கவலைதான் உன் பிரச்சனையே. அந்த அசுரன் அல்ல.

உலகம் முழுக்க இயங்கிக் கொண்டுதான் இருக்கிறது. நதிகள் ஓடிக் கொண்டிருக்கின்றன. வானத்தில் மேகங்கள் நகர்ந்துகொண்டே இருக்கின்றன. பறவைகள் கிளைகளில் பேசிக்கொண்டே இருக்கின்றன. நீ ஏன் மனதுக்கு எதிராகத் திரும்ப வேண்டும்? அது போகட்டும் விட்டுவிடு. நீ அதைப்பற்றி எந்த அக்கறையும் இல்லாதவனாக இரு.

சாட்சியாக இருப்பது ஒரு முயற்சியே அல்ல. அக்கறையே இல்லாமல் இருக்கும்போது சாட்சி பாவம் உன்னிடம் எழுகிறது. மனதிடம் விருப்பு வெறுப்பற்று இரு. அந்த விருப்பு வெறுப்பற்ற சூழலில் சாட்சி பாவம் எழுகிறது. மனதை நிறுத்தி வைக்கவேண்டும் என்ற எண்ணமே தவறானது. அதை அலைபாயாமல் வைத்திருக்க வேண்டும் என்று நினைப்பதே தவறு. நிற்காமல் நிகழ்ந்து கொண்டிருக்கும் அந்த அலைபாய்தலைத் தடுக்கவேண்டும் என்று நினைப்பதே தவறு. நீ எதுவும் செய்ய

வேண்டியதில்லை. என்ன செய்தாலும் எந்த நன்மையும் விளையப் போவதில்லை. அது அந்த அலைக்கழிப்புக்கு உதவியாகப் போகுமே தவிர உனக்கு உதவியாக இருக்காது.

அதனால்தான் தியானிக்கும்போது மனம் கிறுக்குத்தனமாக அலைபாய்வதாக உணர்கிறாய். தியானம் செய்யாதபோது அது அந்த அளவுக்குக் கிறுக்குத்தனமாக இருப்பதாகத் தெரிவதில்லை. தியானம் செய்யும்போது மனதைப்பற்றி மிகவும் அலட்டிக் கொள்கிறாய். அதை நிலைநிறுத்த வேண்டும் என்று பிரம்மப் பிரயத்தனம் செய்கிறாய்.

நீ யார்? நீ ஏன் மனதைப்பற்றி அவ்வளவு அலட்டிக் கொள்ள வேண்டும்? மனதில் என்ன தவறு கண்டாய்? எண்ணங்களை இருக்க விட்டுவிடு. அவை மேகங்களைப்போல நகர்ந்துகொண்டே இருக்கட்டும்.

நீ விருப்பு வெறுப்பற்று இருக்கும்போது, சமநிலையில் இருக்கும்போது, திடீரென சாட்சியாகிப் போகிறாய். செய்வதற்கு ஒன்றுமில்லாதபோது என்ன செய்வது? கவனித்து இருக்க வேண்டியது தான். சாட்சியாக இருக்க வேண்டியதுதான். அப்படிச் சாட்சியாக இருக்கும்போது மனது அலைபாயாமல் நின்றுபோகிறது. நீயாக அதை நிறுத்த முடியாது. யாரும் தம் மனதை நிறுத்தியதில்லை. ஏனென்றால் அப்படி நிறுத்துகிறவர்கூட அந்த மனதின் ஒரு பகுதியாக இருப்பதுதான்.

தியானம் என்பதும் மனதின் ஒரு பகுதிதான். மௌனத்தைச் சாதகம் செய்தால் முழுச் சத்தியத்தையும் தெரிந்து கொள்ளலாம் என்ற நினைப்பும் மனதில் இருந்து வருவதுதான். எனவே முட்டாள்தனமாக நடந்து கொள்ளாதே. மனம் மனதை அடக்கிவிட முடியாது. கேள்வி கேட்பது யார்? நீயா அல்லது உன் மனமா?

நீ உன்னைப்பற்றிய விழிப்புணர்வே இல்லாமல் இருக்கிறாய். மனம்தான் இத்தனை விளையாட்டையும் நடத்திக் கொண்டிருக்கிறது. செய்யக்கூடிய ஒரே காரியம் மனதை அலட்சியப்படுத்தி விடுவதுதான். மனம் அது பாட்டுக்கு அலைந்து கொண்டிருக்க விட்டுவிடுவதுதான்.

அப்படி விருப்பு வெறுப்பற்ற சமநிலையில் இருக்கும்போது உனக்கும் உன் மனதுக்கும் இடையே ஓர் இடைவெளி தோன்றிவிடுகிறது. இன்னமும் அதன் குறக்களியைக் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறாய். என்றாலும் அதை அலட்சியப்படுத்துகிறாய். அது அலைந்து கொண் டிருக்கிறதா இல்லை அமைதியாகி விட்டதா என்ற கவலை உனக்குள் இல்லை. இதைச் செய்யவேண்டும் அல்லது அதைச் செய்யவேண்டும் என்ற விருப்பம் எதுவும் உனக்கு இருப்பதில்லை.

"அலைகிறாயா? அலைந்துகொள். நின்று விடுகிறாயா? நின்றுவிடு. எனக்கு எதைப்பற்றியும் எந்த அக்கறையும் இல்லை" என்று சொல்லிவிடு. இந்த அக்கறையில்லாத்தனம்தான் வேண்டும் என்பது. அப்படி அக்கறையற்று அலட்சியமாக இருக்கும்போது சாட்சியாக இருப்பது நிகழ்கிறது. திடீரென ஒன்றை உணர்ந்து கொள்கிறாய். இந்த மனம் உன்னுடையதாக எப்போதும் இருந்ததில்லை என்பதுதான் அது. அது ஒரு கம்ப்யூட்டரைப் போல... ஒரு இயந்திரத்தைப் போல. நீ அதிலிருந்து முழுக்க வேறானவன்.

அதை அமைதிப்படுத்தும் முயற்சிகளையும் விட்டுவிடு. எந்தச் செயலும் செய்யாமல் இருந்துவிடு. என்ன நடக்கிறதோ அதைப் பார்த்துக்கொண்டு இருந்துவிடு. மனதுக்கு இதைச் செய் அதைச் செய் என்று ஆணையிடாதே. இப்படி இரு என்று சொல்லாதே. மனதுக்கு ஒரு வழிகாட்டியாக இருக்காதே. அதைக் கட்டுப்படுத்துகிறவனாக இருக்காதே. ஜீவிதம் முழுக்க அசைந்துகொண்டே இருக்கிறது. அலைபாயும் இந்த மனது மட்டும் ஏன் உனக்குத் தொல்லையாகத் தெரியவேண்டும்? இந்தச் சின்னக் கம்ப்யூட்டர், இந்தச் சின்ன இயந்திரம் மட்டும் ஏன் உனக்குத் தொல்லையாகத் தெரியவேண்டும்?

முடிந்தால் அதன் அலைப்பையும் அனுபவித்துப் பார். முடியவில்லை என்றால் அலட்சியப்படுத்திவிடு. அப்படிச் செய்தால் ஒருநாள் திடீரென இதுவரை உனக்குள் தூங்கிக் கொண்டிருந்த ஒன்று திடீரென விழித்துக் கொண்டதை உணர்வாய். ஒரு புதிய உத்வேகம் பிறக்கக் காண்பாய். மனதிலிருந்து தூர விலகிப் போய்விட்டதை உணர்வாய். போகப்போக மனதிலிருந்து வெகுதூரம் போய்க்கொண்டே இருப்பாய். அப்போதும் அது சளசளத்துக் கொண்டுதான் இருக்கிறது. என்றாலும் வெகு தூரத்துச் சளசளப்பு அது. என்ன சொல்கிறது என்றுகூட உனக்குத் தெரிவதில்லை. இந்தத் தூரம் அதிகமாகிக்கொண்டே போகிறது. ஒருநாள் திடீரென மனம் காணாமல் போய்விடுகிறது.

இந்த மௌனம் நீ சாதகம் செய்யும் மௌனத்தில் இருந்து முழுக்க வேறுபட்டது. உண்மையான மௌனம் தானாகக் கனிவது. சாதகத்தின் மூலம் பெறுவதல்ல. சாதகத்தால் போலியான ஒரு மௌனத்தைத்தான் கொண்டுவரப் போகிறாய். மனம் மிகச் சாதுரியமானது என்பதால் மௌனத்தைப் பற்றிக்கூடத் தவறான கருத்துகளைத் தந்துவிடும். அந்தக் கருத்தும் மனத்தினுடையதாகத்தான் இருக்கும். எனவே மனதை அடக்க எந்த முயற்சியும் செய்ய வேண்டியதில்லை.

அதை விட்டுவிட்டு. தள்ளி நின்று பார். பாதை ஓரத்தில் நின்றுகொண்டு போக்குவரத்தை வேடிக்கை பார்ப்பதைப்போல. சும்மா கவனித்துக் கொண்டிரு. அக்கறையில்லாத கண்களோடு அதைப் பார்த்துக் கொண்டிரு. அலட்சியப்படுத்து. நீ எது நடக்கவேண்டும் என்று விரும்புகிறாயோ அது நடக்கும். ஆனால் ஆசைப்படுவதால் அல்ல அது நடப்பது. ஏனென்றால் ஆசை உன்னை அக்கறையின்றி இருக்க வைக்காது.

புத்தர் உபேக்ஷா என்ற வார்த்தையைப் பயன்படுத்துவார். ஒட்டு மொத்தமான அலட்சியம். உபேக்ஷா பெறவில்லை என்றால் நீ தியானம் செய்யவே முடியாது என்பார். அதுதான் தியானம் என்ற பயிருக்கு மண். அந்த மண்ணில்தான் தியானத்தின் விதைகள் முளைத்துவர முடியும். அதைத் தவிர வேறு எந்த வழியும் இல்லை.

**இரண்டாவது கேள்வி:**

**ஆயிரக்கணக்கான ஞானியர் வார்த்தைகளைக் குறைத்து மௌனத்தை வளர்த்துக்கொள்ளத் தம் சீடர்களுக்கு உதவி செய்திருக்கிறார்கள். லாவோட் சூ பேசியது மிகக் குறைவே. ஆனால் நீங்களோ பேசிக்கொண்டே இருக்கிறீர்களே. உலகத்திலேயே அதிகம் பேசியவர் நீங்களாகத்தான் இருக்கவேண்டும். இது ஏன் இப்படி?**

அவர்கள் மௌனத்தின்மூலம் முயன்றார்கள். தோற்றுப் போனார்கள். நான் அதன் மறுதலையை முயற்சித்துப் பார்க்கலாமே என்றுதான் பேசிக்கொண்டே இருக்கிறேன்.

**மூன்றாவது கேள்வி:**

**ஐ சிங்கின் அறுபத்து நான்கு எண்கோணத்தில் உலகத்தில் மற்றும் வானத்தில் இருக்கும் அத்தனை விஷய ஞானமும் இருப்பதாகச் சொல்கிறார்களே. அப்படித்தானா? அப்படித்தான் என்றால் எப்படி அதைப் பயன்படுத்துவது?**

பிரபஞ்சத்தின் எல்லா விஷய ஞானமும் எல்லாவற்றிலும்தான் இருக்கின்றது. அந்த அறுபத்து நான்கு எண்கோணத்தில் மட்டுமல்ல. வழியில் கிடக்கும் கூழாங்கல்லில் கூடத்தான் அத்தனை விஷய ஞானமும் இருக்கிறது. ஒரு புல்லின் இலையில் கூடத்தான் அத்தனை அறிவும் கொட்டிக் கிடக்கிறது. எல்லாவற்றிலும்தான். ஏனென்றால் ஜீவிதத்தின் ஒவ்வொரு பகுதியும் முழுமையைத் தம்முள் தாங்கி நிற்கின்றன.

சமுத்திரத்தின் ஒரு துளி நீரில் சமுத்திரம் முழுக்க அடக்கம். சமுத்திரத்தின் அத்தனை விஷயமும் அத்தனை ஜீவனும் அந்த ஒரு துளி நீருக்குள் அடக்கம். அதுவே சமுத்திரம். அது ஒரு சமுத்திரமாக முடியாது. என்றாலும் அதுவே சமுத்திரம்.

உன்னிடம் கூடத்தான் முழுமையும் இருக்கிறது. எனவே ஐ சிங்கைப் பார்த்துத் தெரிந்துகொள்ள ஏதுமில்லை. அதை விட்டுவிட்டு உனக்குள்ளே போய்ப்பார். ஏனென்றால் கடைசியில் ஐ சிங் உனக்குச் சொல்ல எதையும் வைத்திருக்கப் போவதில்லை. கடைசியில் நீதான் உனக்கான வியாக்கியானங்களைச் செய்துகொள்ள வேண்டி இருக்கிறது.

டேரட் கார்டுகளையோ அல்லது ஐ சிங் எண்கோணத்தையோ அல்லது வேறு எதை வேண்டுமானாலும் யார் வியாக்கியானம் செய்வது? நீதானே? எனவே அனைத்தும் கடைசியில் உன்னைத்தான் சார்ந் திருக்கின்றன.

உன்னிடம் விழிப்பு இல்லையென்றால் ஐ சிங்கால் எந்தப் பயனும் இல்லை. நீ விழித்திருப்பவன் என்றால் எல்லாமும் ஐ சிங் செய்வதைச் செய்யும். எனவே மற்றவற்றில் உன் நேரத்தை வீணாக்காதே. நீ விழித்திரு. நீ விழித்திருக்கும்போது பிரபஞ்சம் முழுக்க எல்லாவற்றிலும் எழுதப்பட்டிருப்பது உனக்குத் தெரியும். ஒவ்வொரு புல்லின் ஒவ்வொரு இலையிலும் தெய்வத்தின் கையெழுத்தைக் காண்பாய். புல்லின் இலையைப் புரிந்துகொண்டால் வேர் முதல் அனைத்தையும் புரிந்து கொள்வாய்.

எனவே உன்னையே ஏமாற்றிக் கொண்டிருக்காதே. லட்சக்கணக்கான வழிகளில் மக்கள் தம்மைத்தாமே ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள். கோயிலுக்குள் ஏதாவது பின்புற வழியாகப் புகுந்துவிடலாம் என்ற நப்பாசைதான் காரணம். ஆனால் அப்படிப் பின்புற வழி ஏதுமில்லை. கோயிலுக்குப் புறக்கடைக் கதவு ஏதும் இல்லை. முன்புற வாயில்தான் இருக்கிறது. நிறையப் பின்புற வழிகள் இருப்பதாகத் தெரியும். ஆனால் எதுவும் கர்ப்பக்கிரகத்துக்குள் போவதில்லை. எவனாவது ஏமாற்றுப் பேர்வழி உன்னைப் பிடித்துக் கொள்வான். அவ்வளவுதான்.

ஜீவிதத்தில் எந்தப் பின்புற வழியும் இல்லை. ஏனென்றால் ஜீவிதம் மறைந்திருப்பதில் நம்பிக்கை வைப்பதில்லை. பார். எல்லாமும் திறந்தவாறே இருக்கின்றன. ரகசியம்கூடத் திறந்தவாறே இருக்கிறது. எதுவும் மறைந்து கிடக்கவில்லை. பார்ப்பதற்கு உனக்குக் கண்கள் வேண்டும். அவ்வளவுதான். அனுபவிக்க உனக்குத் திறமை வேண்டும்.

அவ்வளவுதான். எங்கெங்கும் எல்லாமும் திறந்த ரகசியங்கள்தான். எதுவும் ஆதியில் இருந்தே மறைத்து வைத்திருக்கவில்லை.

ஜீவிதம் திறந்து கிடக்கிறது. நீதான் மூடிவைத்த மனத்தனாக இருக்கிறாய். அப்படி மூடிக்கிடக்கும் மனதுதான் ஐ சிங்கை வைத்துக் கொண்டு அலைகிறது. அதை வைத்துக்கொண்டு என்ன சாதிக்கப் போகிறாய்? உன்னுடைய எண்ணங்கள். உன்னையேதான் அதில் பார்க்கப் போகிறாய். உன்னுடைய ஆழ்மனம் அதில் பிரதிபலிக்கப் போகிறது.

இவை எல்லாம் வெறும் அடிகள். அவை உன்னுடைய ஆழ்மனதைப் பிரதிபலிக்கின்றன. அவ்வளவுதான். புதிதாக எதையும் உனக்குத் தர அவற்றிடம் ஏதும் இல்லை. அவை உன்னைப் பிரதிபலிக்கின்றன. ஆனால் உனக்கு உன்னையே தெரியாது. அதனால்தான் அவை என்னவோ புதியதை உனக்குத் தருகின்றன என்று நினைத்துக் கொள்கிறாய். அவற்றின் மூலம் புதிய விஷய ஞானம் கிடைத்துவிட்டது என்று நினைக்கிறாய்.

ஒரு நிகழ்ச்சி பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ரஷ்ய அதிபர் குருஷ்சேவ் ஒருமுறை பாரிசுக்குப் போனாராம். நவீன ஓவியக் கண்காட்சியைப் பார்க்கப் போனார். அவருக்கு அவ்வளவாகக் கலை ஞானம் கிடையாது. அவருக்கு அழகுணர்ச்சியே கிடையாது. அவர் ஒரு வல்கர் பேர்வழி. ஆனால் கண்காட்சிக்கு அவரை அழைத்திருந்தார்கள். அதனால் அவர் அங்கே போகவேண்டி இருந்தது.

பிரமாதமான ஓவியங்கள் கண்காட்சிக்கு வைக்கப்பட்டு இருந்தன. அவர் ஓர் ஓவியத்தைப் பார்த்து, ''இது என்ன என்றே எனக்குப் புரியவில்லை. அசிங்கமாக இருக்கிறது'' என்றார்.

அவருக்குக் கண்காட்சியைச் சுற்றிக் காண்பித்துக் கொண்டிருந்தவர் மிகப்பெரிய கலை விமரிசகர். ''இது பிக்காஸோவின் ஓவியம். இந்த நூற்றாண்டில் வரைந்த ஓவியங்களிலேயே மிக அழகானது இதுதான். ஆனால் அதைப் புரிந்துகொள்ளத் திறமை வேண்டும். யார் வேண்டு மானாலும் புரிந்துகொள்ளக்கூடிய சாதாரண சமாச்சாரம் அல்ல இது. உங்களுடைய அழகுணர்ச்சியை மேல்நோக்கிச் செலுத்தவேண்டும். அப்போதுதான் அது என்ன என்பதைத் தெரிந்துகொள்ள முடியும்.''

மேலும் போய்க்கொண்டே இருந்தார்கள். குருஷ்சேவுக்கு அவ்வளவாக ஒன்றும் பிடிக்கவில்லை. தன்னை ஒருவர் தரக்குறைவாகப் பேசுவதா? ரஷ்யாவில் யாரும் அப்படிப் பேசியிருக்க முடியாது. எவ்வளவுதான் பெரிய கலைஞராக இருந்தாலும் சரி அல்லது கலை

விமரிசகராக இருந்தாலும் சரி அவருக்குக் கலை ஞானம் போறாது என்று தைரியமாகச் சொல்லியிருக்க முடியாது.

அடுத்த ஓவியத்துக்கு அருகே கொஞ்சநேரம் நின்று பார்த்தார். ஆழமாகப் பார்த்துவிட்டு, ''இதுவும் பிக்காஸோ வரைந்ததாகத்தான் இருக்கவேண்டும்'' என்றார்.

''மன்னிக்க வேண்டும். இது வெறும் கண்ணாடி. நீங்கள் உங்களையேதான் அதில் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்.''

அவர் அசிங்கமான தோற்றம் உள்ளவர். அவருடைய பிரதிபலிப்பு பிக்காஸோவின் ஓவியத்தைப் போலத்தான் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும். இயல்பாக இருப்பதைக் கோணல் மாணலாகக் காண் பிக்கிறவர்தானே பிக்காஸோ!

ஐ சிங்கில் அப்படி ஒரு கண்ணாடியைத்தான் காண்கிறாய். ஒரு புத்தர் ஐ சிங்கைப் பார்த்தால் அது சுத்தமாக வேறாக இருக்கும். ஏனென்றால் அது புத்தரைப் பிரதிபலித்து நிற்கும். லாவோட் சு அதைப் பார்த்தால் அது லாவோட் சுவைக் காண்பிக்கும். நீ பார்த்தால் உன்னைத்தானே பார்ப்பாய்? உன்னுடைய முகத்தைத்தான் அதில் பார்ப்பாய்.

எனவே அதைப் பற்றியெல்லாம் ஒன்றும் கவலைப்படாதே. ஒரு புத்தனாகிவிடு. பிறகு அந்தக் கண்ணாடியில் உன்னைப் பார்த்துக் கொள்வது சிறப்பாக இருக்கும். ஆனால் எந்தப் புத்தரும் தம்மைக் கண்ணாடியில் பார்த்துக் கொள்வதில்லை. இதுதான் புதிர். வெகு ஆழத்தின் இருப்பில் தன்னை அவருக்கு நன்றாகத் தெரிந்திருக்கிறது என்பதால் அவருக்குத் தன்னைப் பார்த்துக்கொள்ள ஒரு கண்ணாடி தேவைப்படுவது இல்லை. எனவே கண்ணாடியை அவர் பார்ப்பதே இல்லை. அப்படிப் பார்க்க வேண்டிய அவசியமும் அவருக்கு இல்லை.

ஆனால் உனக்குக் கண்ணாடி தேவைதான். ஆனால் கண்ணாடி இருப்பதைத்தானே காட்ட முடியும். எனவே கண்ணாடிக்கு முன் நின்றுகொண்டு உன்னையே முட்டாளாக்கிக் கொள்கிறாய். எதுவெல்லாம் அதில் தெரியவேண்டும் என்று நினைக்கிறாயோ அதுவெல்லாம் அதில் தெரியும். ஆனால் அதையெல்லாம் காட்டுவது ஐ சிங் என்று சொல்லிக் கொள்வாய்.

ஒருநாள் முல்லா நஸ்ருதீன் ஆபீஸுக்குப் போகவில்லை. மாலையில் என்னைப் பார்க்க வந்தபோது ஏகக் குஷியில் இருந்தான். நாள் முழுக்க எந்தக் கவலையும் இல்லாமல் தூங்கியிருக்கிறான் அல்லவா?

''இன்னைக்கு என்னப்பா லீவு எடுத்துக்கிட்டே?'' என்று கேட்டேன்.

''முடியல்லீங்க. காலையிலே ஒரு காசைச் சுண்டிப் போட்டு லீவு எடுக்கறதா வேண்டாமான்னு பார்த்தேன். தலை விழுந்தாப் போறதுன்னு நினைச்சுக்கிட்டுச் சுண்டினேன். பூ விழுந்தாப் போறதில்லேன்னு வெச்சுக்கிட்டேன்.''

''அப்ப பூ விழுந்துச்சு. நீ போகல்லே. அவ்வளவுதானே?''

''ஆமாங்க. ஆனா அதுக்கு நான் பத்துத் தடவை சுண்டிப் பார்க்கவேண்டி இருந்துச்சு'' என்றான்.

இதுதான் நடக்கிறது. ஐ சிங், டேரட் கார்டுகள், வேறு என்னவாக இருந்தாலும் நடப்பது இதுதான். உனக்கு என்ன செய்யவேண்டும் என்று தோன்றுகிறதோ அதைச் செய்கிறாய். அப்படியானால் அதற்குக் காரணம் ஐ சிங் என்றோ டேரட் அட்டை என்றோ ஏன் சொல்லிக்கொள்ள வேண்டும்? நீயே அதற்குப் பொறுப்பு ஏற்றுக் கொள்ளலாம் இல்லையா? இதுவெல்லாம் தந்திரங்கள்தான்.

ஆமாம். எல்லாவற்றையும் எல்லாவற்றிலிருந்தும் பெற்றுக் கொள்ளலாம் என்று சொன்னேன். ஐ சிங்கில்கூட இந்தப் பிரபஞ்சம் எல்லாம் இருக்கிறது. இல்லையேல் எதுவும் சாத்தியம் இல்லை. இப்படித்தான் ஜீவிதம் இருக்கிறது. ஒவ்வொரு பகுதியிலும் முழுவதும் இருக்கிறது. முழுமை ஒளிந்திருக்கிறது. எந்தப் பக்கம் போனாலும் முழுமைக்குள்தான் போகிறாய். ஆனால் நீ எப்படி அதைப் பார்க்கிறாய் என்பதைப் பொருத்துத்தான் அது அமைகிறது.

எனவே எனக்கு ஐ சிங் பற்றி எந்த அக்கறையும் இல்லை. உன்னைப்பற்றியும் உன் புரிதலைப் பற்றியும்தான் என் அக்கறை முழுவதும். அதற்குள் வளர முயற்சி செய். வேறு எதையும் பார்த்து உன் நேரத்தை வீணடிக்காதே. வாழ்க்கை மிகக் குறுகியது. அதற்குள் எத்தனையோ செய்யவேண்டி இருக்கிறது. சும்மா முட்டாள்தனமாக நேரத்தைக் கழிக்காதே.

**நான்காவது கேள்வி:**

**முன்னேற்றத்துக்கும் ஆன்மிகத்துக்கும் தாவோவோடு ஏதாவது தொடர்பு இருக்கிறதா?**

ஏதுமில்லை. தாவோ இந்தக் கணத்தில் என்ன என்பதைப் பற்றியது. தாவோ என்றாலே நிகழ்காலம் என்று பொருள். முன்னேற்றம் என்றாலேயே எதிர்காலத்தை உள்ளே கொண்டு வந்தாயிற்று. முன்னேற்றம் என்றாலேயே

என்ன நடக்கப் போகிறது என்பதைப்பற்றிய எண்ணம் வந்துவிட்டது என்றாகிப் போகிறது. எனவே எதுவும் வக்கரித்துப் போகிறது.

தாவோவில் முன்னேற்றம் என்பது இல்லை என்று பொருள் இல்லை. பார்க்கப்போனால் முன்னேற்றம் தாவோவில் தவிர வேறு எந்த நெறியிலும் இல்லை. ஆனால் முன்னேற்றம் அல்லது வளர்ச்சி என்ற கருத்தே தாவோவுக்கு அயலானது. அவர்கள் வளர்ச்சி பற்றிப் பேசுவதே இல்லை. இப்போது எப்படி இருப்பது என்பதுபற்றிப் பேசுகிறார்கள். எப்படி வளர்வது என்பதைப்பற்றிப் பேசுவதே இல்லை.

இப்போது எப்படி இருப்பது என்று தெரிந்துகொண்டால் அதுதான் வளர்ச்சிக்கான ஒரே வழி. இந்தக் கணத்தில் எப்படி இருப்பது என்பது உனக்குத் தெரியும் என்றால் நீ வளர்ச்சிக்கான பாதையில் இருக்கிறாய் என்று பொருள். அதைப்பற்றி நினைத்துப் பார்க்கவே வேண்டியதில்லை. அது தானாகவே நடந்தேறும். எந்த வழிகாட்டியையும் கலந்து கொள்ளாமல் நதி கடலுக்குப் போய்ச் சேருவதைப் போலத்தான். யாரையும் வழி கேட்காமல்தானே நதி கடலுக்குப் போய்ச் சேருகிறது? கண்டுபிடிக்க முயற்சி செய்யாமலேயே கண்டுபிடித்துக் கொள்கிறது. நகர்ந்துகொண்டே இருக்கிறது. கணத்துக்குக் கணம் தன் வாழ்வை வாழ்ந்துகொண்டே இருக்கிறது. கடைசியாகக் கடலைச் சென்று சேர்கிறது. இந்தக் கணத்தைச் சரியாகவும், முழுமையாகவும் வாழ்ந்தால் போதும். அடுத்த கணம் இந்தக் கணத்திலிருந்து தானாகத் தோன்றி வருகிறது. வேறு எங்கே இருந்து வரமுடியும் என்கிறாய்? அதிலிருந்து இது தானாகத் தோன்றி வளரும். அதைப்பற்றி நீ எந்தக் கவலையும் படவேண்டியதில்லை. இந்தக் கணத்தை முழுவதுமாக வாழ்ந்தால் அடுத்த கணம் அதிலிருந்து பிறந்து வருகிறது. இந்தக் கணத்தை முழுக்க வாழ்ந்துவிட்டால் அடுத்த கணத்துக்கான சாத்தியம் அதோடேயே பிறந்து விடுகிறது. அதுவும் முழுவதுமாக வாழத் தயாராகத் தோன்றிவிடுகிறது.

இந்தக் கணத்தை முழுக்க வாழ்வது எப்படி என்று உனக்குத் தெரியும் என்றால் அடுத்த கணத்தை முழுக்க வாழ்வது எப்படி என்றும் உனக்குத் தெரியும் என்றாகிறது. ஒவ்வொரு கணமும் மேலும்மேலும் முழுக்க வாழ்ந்து கழிக்க வளர்ச்சி என்பது தானாக ஏற்பட்டு விடுகிறது. ஆனால் வளர்ச்சிபற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தால் இந்தக் கணத்தைத் தவறவிட்டு விடுகிறாய். இந்தக் கணம்தான் நீ வளர்வதற்கான ஒரே கணம் என்பதை மறந்துவிடாதே.

எனவே லாவோட் சூ வளர்ச்சிபற்றிப் பேசுவதே இல்லை. வளர்ச்சி பற்றிப் பேசினாலேயே தள்ளிப் போடுவது என்றுதான் பொருள். இது

அவருக்குத் தெரிந்திருந்தது. "நாளை வளரலாம் அல்லவா. இன்றைக்கு நேரம் சரியில்லை. வேறு எத்தனையோ செய்யவேண்டி இருக்கிறது. வளர்ச்சி நாளை வரைக்கும் பொறுக்கலாம். அவசரம் இல்லை." இப்படித்தான் சொல்லிக் கொள்ளலாம்.

தள்ளிப் போட்டுக்கொண்டே போவதில் இந்தக் கணத்தைப் பகுதி பகுதியாக வாழ்ந்து கழித்துவிடுகிறாய். அடுத்த கணம் இந்தக் கணத்தில் இருந்து தோன்றி வருகிறது. இந்தக் கணமே பின்னப்பட்டுப் போய்விடும் போது அடுத்த கணம் எப்படி முழுமையாக இருக்க முடியும்? மேலும் பின்னப்பட்டுப் போய் அதற்கு அடுத்தடுத்த கணங்கள் இன்னமும் பின்னப்பட்டுப் போகின்றன. யார் அப்படிப்பட்ட சூழலில் வளர முடியும்? எப்படி ஒருவர் வளர்வது?

ஒருவர் யாராக இருக்கிறாரோ அவராக முதலில் ஆகிவிட வேண்டும். எதனோடு பிறந்திருக்கிறாரோ அதைக் கையகப்படுத்திக் கொள்ள வேண்டும். உன்னுடைய அடிப்படை ஜீவிதத்தைக் கையகப்படுத்திக் கொள்ளவேண்டும். அதைச் சாதிக்க இந்தக் கணமே சரியான கணம். கழிந்து கொண்டிருக்கும் இந்தக் கணத்தைச் செறிவாகப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். அதில் அவ்வளவு செறிவாக ஆழ்ந்துவிட வேண்டும். அப்படிச் செய்யும்போது அதுவே வளர்ச்சியாகி விடுகிறது. வளர்ச்சி என்பது தாவோவின் இலக்கல்ல. அது ஒரு துணைப்பொருள்.

ஆன்மிகமா? தாவோவுக்கு அதைப்பற்றியெல்லாம் அக்கறை கிடையாது. லாவோட் சூவிடம் கேட்டிருந்தால் சிரித்திருப்பார். ஆன்மிகத்தைப்பற்றிப் பேசினால் கன்னத்தில் அறைந்துவிடுவார். உன்னை வெளியே துரத்தி அடித்துவிடுவார். "வேறு எங்காவது போய்ப் பார். அதைப்போன்ற முட்டாள்தனத்தை எல்லாம் என்னிடம் கொண்டுவராதே" என்று கத்தியிருப்பார்.

ஏன் என்கிறாயா? ஆன்மிகம் என்று சொன்னவுடனே நீ ஜீவிதத்தை இரண்டாகக் கூறுபோட்டு விடுகிறாய். லோகாயதம், ஆன்மிகம் என்ற இரண்டு கூறுகளைத்தான் சொல்கிறேன். அவருக்குக் கூறுகள்மீது எந்த அக்கறையும் இல்லை. அவருடைய அக்கறையெல்லாம் முழுமையின் மீதுதான். ஆன்மிகம் என்று சொன்னாலேயே லோகாயதத்தில் எதையோ குறை சொல்கிறாய் என்று பொருள். இந்த உடல், இந்த உலகம் இவைபற்றி உனக்குச் சரியான எண்ணம் இல்லை என்று பொருள். ஆன்மிகம் என்ற வார்த்தையிலேயே ஒரு நிந்தனை இருக்கிறது. கூறுபோடும் போக்கு இருக்கிறது.

தம்மை ஆன்மிகவாதிகள் என்று சொல்கிறவர்களை நீதான் பார்த்திருக்கிறாயே. அவர்களுடைய கண்களில் ஒரு நிந்தனை இருக்கும். அவர்களுக்கு வெகு அருகே போய்விடாதே. அவர்களிடம் விஷம் இருக்கிறது. அவர்களுடைய மூச்சுக் காற்றிலேயே அபாயமும் நோய்த் தொற்றும் இருக்கின்றன. அவர்களிடம் இருந்து தப்பித்துக் கொள். ஆன்மிகவாதி யாராவது உன்னை நோக்கி வந்தால் ஓடிப் போய்விடு. அவர்கள் வியாதியஸ்தர்கள். அடி ஆழத்தில் அவர்கள் மனோ வியாதிக்காரர்கள். அவர்கள் வாழ்வை வகிர்ந்துபோட்டு விட்டவர்கள். வாழ்வோ இரண்டற்ற முழுமையானது. அதைக் கூறுபோட முடியாது.

வாழ்க்கை உடல் மட்டுமல்ல. வாழ்க்கை ஆன்மா மட்டுமல்ல. இரண்டும் ஒன்றாக இணைந்ததுதான் வாழ்க்கை. நீ உடலும் ஆன்மாவும் அல்ல. ஆன்மஉடல் அல்லது உடலான்மா. உடலும் ஆன்மாவும் என்பதில் உள்ளனவும் ஆபத்தானது. அதை விட்டுவிடு. என்னதான் உடலும் ஆன்மாவும் வெவ்வேறு அல்ல என்று சொல்கிறவர்கள்கூட இந்தக் கூட்டல் உம்மையை விடுவதில்லை. ஆன்மா - உடல் என்று ஒரு சிறு கோடிட்டுத்தான் இரண்டு வார்த்தைகளை ஒரு வார்த்தை ஆக்குகிறார்கள். அந்தக் கோடும்கூட ஆபத்தானது. அதையும் விட்டுவிடு.

ஆன்மஉடல் அல்லது உடலான்மா என்று ஒரே வார்த்தையைப் பயன்படுத்து. அது ஒன்றுதான். பொருள்மனம் என்பதை ஒரு வார்த்தையாக்கி விடு. இவ்வுலகையும் அவ்வுலகையும் ஒன்றாக்கிவிடு. உன்னுடைய கடவுள் இங்கே இருக்கட்டும். பொருள்களோடு பொருளாக இருக்கட்டும் கடவுள். பொருட்களோ உயர்ந்து கடவுளுக்குள் நுழைந்து விடட்டும். பிறகெப்படி ஆன்மிகத்தைப்பற்றிப் பேசுவது?

இந்தியாவில் இந்த வியாதி பலகாலம்மாகவே இருக்கிறது. ஆன்மிகம் என்ற இந்த வியாதி. ஆன்மிகவாதிகள் என்னிடம் வருகிறார்கள். என்னைப்பற்றி ஒன்றும் தெரிந்துகொள்ளாமல் வந்து சேர்ந்து விடுகிறார்கள். தம்முடைய ஆன்மிகத்தைப்பற்றிப் பேசிய அதே மூச்சில் பிறருடைய லோகாயதத்தைப்பற்றிப் பேசுகிறார்கள். மேற்கத்திய நாடுகள் லோகாயதமானவை. கிழக்கத்திய நாடுகள் ஆன்மிகமானவை என்று சொல்வது ஒரு வழக்கமாகிப் போய்விட்டது. இது முட்டாள்தனம். இப்படிச் சொல்லும் மனது நோய்கொண்ட மனது. உடல் மனம் என்ற இரண்டைப் பிரித்துப் பார்ப்பதால் வந்த வினை. இவற்றைப் பிரித்துப் பார்த்தால் எல்லாவற்றையும் இரண்டாக வகிர்ந்தாயிற்று. பிறகு உன் வாழ்க்கை முழுக்க இந்த இரட்டைக் கொள்கையைச் சுமந்து திரிய வேண்டியதுதான்.

உடலைக்கூட இரண்டாகப் பிரிக்கிறார்கள். உயர்ந்தது இடுப்புக்கு மேலே இருப்பது. தாழ்ந்தது இடுப்புக்குக் கீழே இருப்பது. மேலே கீழே என்பது ஒரு மதிப்பீடாகிப் போகிறது. மனமும் ஆன்மாவும் பிரிந்தாயிற்று. பிறகு உடலையும் பிரித்தாயிற்று. கீழே இருப்பது அசுத்தமானது. மேலே இருப்பது புனிதமானது.

எங்கே உன் உடலில் அந்த எல்லைக்கோடு இருக்கிறது என்கிறாய்? இந்த இடத்தில் இருந்து கீழானது என்று சொல்லமுடியுமா? ஒரே ரத்தம்தான் உடல் முழுக்க ஓடுகிறது. உடல் முழுக்க ஒரே வலைத் தொடர். அதை எப்படிப் பிரிப்பது? அப்படிப் பிரித்துப் பேசுகிறவர்களிடம் போ. ''கீழான பகுதியை வெட்டி எறிந்துவிட்டு வாழலாமே என்று சொல்லிப் பார். மேலானதை மட்டும் வைத்துக்கொண்டு வாழ்ந்து பார். பிறகு என்ன நடக்கிறது என்று பார்க்கலாம்'' என்று சொல்லிப் பார். அவர்கள் உடனே செத்துப் போவார்கள்.

இதுதான் ஆன்மிகவாதிகளுக்கு நடக்கிறது. அவர்கள் செத்துப் போனவர்கள். இதுதான் நான் பார்த்தது. லோகாயதவாதிகள்கூட இந்த ஆன்மிகவாதிகளைவிட ஜீவனோடு இருக்கிறார்கள். அவர்கள் தம் அடி ஆழத்தில் தாமும் ஒருநாள் ஆன்மிகவாதிகள் ஆகப்போகிறோம் என்று நம்புகிறார்கள்.

அவர்கள் மற்றவரை நிந்திப்பதில்லை. என்றாலும் தாம் ஆன்மிகத்தில் இல்லையே என்ற குற்றக் குறுகுறுப்பு அவர்களிடம் இருக்கிறது. கோயிலுக்குப் போகாமல் விலைமாதர்களிடம் போகிறோமே என்ற குறுகுறுப்பு அவர்களிடம் இருக்கிறது. வழிபாட்டுக்குப் போகாமல் பாட்டுப் பார்ட்டிக்குப் போகிறோமே என்ற குறுகுறுப்பு இருக்கிறது. என்னவோ தவறு செய்கிறோம் என்று நினைக்கிறார்கள். கொஞ்சம் தலைகுனிவு இருக்கிறது. எனவே அவர்களுடைய ஆணவம் காயப்பட்டுப் போவதால் அவர்களுடைய ஈடேற்றத்துக்குச் சாத்தியங்கள் இருக்கின்றன.

ஆனால் இந்த ஆன்மிகவாதிகளோ ஆணவம் பிடித்தவர்கள் கடவுள் கொள்கையே தம்மை உயர்த்தி மற்றவரைத் தாழ்ச்சி சொல்லவந்த ஆணவக்காரர்கள் கண்டுபிடித்ததுதான் என்பேன்.

கடவுள் முழுமையானவர். ஆனால் ஆன்மிகவாதிகளின் கடவுள் முழுமையானவர் அல்ல. அவர்களுடைய கடவுள் ஓர் அனுமானம். ஒரு சிந்தனை. ஜீவனில்லாத வெற்றுச் சிந்தனைதான்.

இந்த வகையில் லாவோட் சு ஆன்மிகவாதியல்ல. தன் பக்கத்தில் எந்த ஆன்மிகமும் வரவிடமாட்டார். அவர் முழுமை வேண்டும் என்கிறவர். கூறு போடுவது ஆகாது என்கிறவர். எனக்கும் கூறுபோடுவது ஆகாது. உங்களுக்கு சன்யாச தீட்சை கொடுக்கும்போது உங்களை நான் ஆன்மிகவாதிகளாக்குவதில்லை. முழுமையான வாழ்க்கைக்குள் நுழையத் தீட்சை தருகிறேன். உன்னைப் புனிதமானவனாக்க விழைகிறேன். ஆன்மிகவாதியாக்க அல்ல.

புனிதம் என்று சொல்லும்போது முழுமை என்ற பொருளில் சொல்கிறேன் என்பதை மறந்துவிடாதே. அதில் ஒருங்கிணைந்த வாழ்வு வாழப் போகிறாய். உடல், ஆன்மா, உலகம் ஆகியவை ஒருங்கிணைந்த வாழ்வை வாழப்போகிறாய். கடவுள், கடைவீதி, தியானம் என்றெல்லாம் அங்கே பாகுபாடுகள் கிடையாது. சீராகப் பாயும் சக்தி இருக்கிறது அங்கே. பெட்டி பெட்டியாகப் பிரித்த வாழ்வு அல்ல. காற்றுப் புகக்கூட முடியாத அளவுக்கு ஒவ்வொரு பெட்டியாக வாழ்வைப் பிரித்துப்போட மாட்டேன். உன்னுடைய ஜீவிதம் திரவமாக ஓடவேண்டும்.

இதற்குத் தைரியம் வேண்டும். உனக்குள் மகானும் பாவியும் ஒருங்கே இருக்கமுடியும் என்பதை ஏற்றுக்கொள்ளும் தைரியம் வேண்டும். மகானிடம் எந்தப் பயமும் இருக்கக்கூடாது. பாவியை யாரும் நிந்திப்பதாக இருக்கக்கூடாது. நீயே பாவியும் மகானும் நித்தியமாக அருகருகே வந்து கொண்டிருக்கும் முழுமை எனும்போது நீ புனிதனாகிப் போகிறாய்.

அப்போது எதையும் மறுக்கப் போவதில்லை. இல்லை என்று சொல்கிறவனாக இருக்கப் போவதில்லை. வாழ்க்கை எப்படி இருக்கிறதோ அதற்கு ஆமாம் என்று சொல்லிவிடுகிறாய். எந்த நிபந்தனையும் போடுவதில்லை. முழுமையான வாழ்க்கைக்கு ஆமாம் என்று சொல்லிவிடுகிறாய். இதுதான் என்னைப் பொருத்த அளவில் ஒரு சமயவாதியாக இருக்கிறவன் செய்ய வேண்டியது.

லாவோட் சுவைப் பொருத்த அளவிலும் இதுதான் உண்மை. வளர்ச்சி பற்றியெல்லாம் அவருக்கு அக்கறை கிடையாது. வளர்ச்சி தானாக வந்து போய்க் கொண்டிருக்கும். நீ இந்தக் கணத்தை வாழ்ந்தால் போதும். அவருக்கு ஆன்மிகத்தைப்பற்றி எந்த அக்கறையும் கிடையாது. இந்தக் கணத்தை வாழ்ந்தால் போதும். ஆன்மிகத்தைப்பற்றி அக்கறை எதுவும் இல்லாத அவருக்கு முழுமையாக வாழ்ந்தால் போதும். ஆன்மிகம் தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளும். அது வரத்தான் செய்யும். அது ஒரு மலர்ச்சி. ஓர் ஒழுக்கம்.

ஒருவர் முழுமையானவராகும்போது வாழ்க்கை மலர்கிறது. அந்த மலர்ச்சிதான் ஆன்மிகம். ஆன்மிகம் ஒரு நோக்கல்ல. அது ஓர் ஒழுக்கமும் அல்ல. அது முழுக்க வாழ்வதன் வெளிப்பாடு. மகிழ்ச்சியாக வாழ்வதன் வெளிப்பாடு. புகாரிடல் இல்லாத வாழ்வின் வெளிப்பாடு. தைரியமாக வாழும் வாழ்வின் வெளிப்பாடு. அப்போது இந்த மலர்தலும் விகசிப்பும் நடந்தேறுகின்றன.

ஐந்தாவது கேள்வி:

**சமநிலை பற்றிச் சொன்னீர்கள். ஒரு சந்திப்பு என்றீர்கள். எதிரிடையானவை கலந்துவிடும் புள்ளி என்றீர்கள். ஆனால் அது கண்ணுக்குத் தெரியாத காலம்கடந்த புள்ளியாகத் தெரிகிறது. நானோ காலத்திட்குட்பட்டவன். பின் எனக்கு எப்படி அது தெரியவரும்?**

நீ காலம் ஆனவன். காலம் அற்றவன் கூடத்தான். இல்லையெனில் சமநிலையை எட்ட முடியாது. ஆனால் நீ உன்னுடைய ஒரு பகுதியை மட்டுமே தெரிந்து வைத்திருக்கிறாய். அந்தப் பகுதி காலத்திற்குட்பட்ட பகுதி. உன்னுடைய முழுமையை நீ தெரிந்துகொண்டால் காலம் கழிந்த அந்தப் பகுதியையும் தெரிந்து கொள்வாய். முழுமைக்குக் காலம் இல்லை. காலம் என்பதே சார்புடையது. முழுமையைத் தெரிந்து கொள்ளாதவர் களுக்கே காலம் இருக்கிறது. இதைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். சற்றே நெகிழ்வான சிக்கலான விஷயம், காலம் என்பது புரிந்துகொள்ளக் கடினமான ஒரு விஷயம்.

யாரும் என்னைக் கேட்காதபோது காலம் என்பது என்ன என்பது எனக்குத் தெரிந்திருக்கிறது. ஆனால் யாராவது காலம் என்றால் என்ன என்று கேட்டுவிட்டால் எனக்குத் தெரியாமல் போகிறது என்று செயின்ட் அகஸ்டின் சொல்லியிருக்கிறார். எல்லோருக்கும் அப்படித்தான். யாராவது என்ன என்று கேட்கும் வரைக்கும் காலம் என்பது என்ன என்று தெரிந்திருக்கிறது. ஆனால் யாராவது வந்து அதை விவரித்துத்தான் ஆகவேண்டும் என்று வற்புறுத்தும்போது கை பிசைந்து நிற்கத்தான் வேண்டி இருக்கிறது. அதைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறாய். ஒவ்வொரு கணமும் அதைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறாய். மிக சூட்சுமமாக அதைப்பற்றித் தெரிந்து வைத்திருக்கிறாய். அது என்ன என்பதைப்பற்றிய சூட்சும உணர்வு உனக்கு இருக்கிறது. என்றாலும் அதைப்பற்றி விவரமாகச் சொல்லவேண்டும் எனும்போது கை பிசைந்து நிற்கிறாய்.

காலம் என்பது புரிந்துகொள்ளக் கடினமான ஒரு விஷயம். புரிந்துகொள்ள முயற்சி செய். காலம் சார்புடைய தத்துவம். அதில் முற்ற

முடிந்தது என்பது எதும் இல்லை. பிரபஞ்சத்துக்கு நேரம் என்பதில்லை. ஏனெனில் பிரபஞ்சம் நகர்ந்துகொண்டே இருக்கவேண்டி இருக்கிறது. எந்த இரண்டு புள்ளிகளுக்கிடையே அது நகர்ந்து கொண்டிருக்கிறதோ அந்த இரண்டு புள்ளிகளும் அதில் இருக்கின்றன. அதில் கடந்ததும் நிகழ்வதும் வருவதும் எல்லாமும் இருக்கின்றன. அதில் எதிர்காலம் என்பது இல்லையென்றால் எதிர்காலம் என்ற ஒன்று எப்படிச் சாத்தியமாகும்?

முழுமை காலத்துக்குள் நகர முடியாது. ஏனென்றால் காலம் முழுமைக்குட்பட்டது. காலம் அதன் இருப்பின் ஒரு பகுதி. அதனால்தான் முழுமை நித்தியத்தில் இருக்கிறது என்கிறோம். நித்தியம் என்றால் காலம் கழிந்தது என்று பொருள். அதில் காலம் என்பதே இல்லை. கடந்ததும் நிகழ்வதும் வருவதும் எல்லாமும் அதில் இருக்கின்றன.

நாம் பகுதி பகுதியாக வாழ்வதால் நமக்குக் காலம் இருக்கிறது. வெளி நமக்கு இருக்கிறது. அதுவும் நாம் பகுதி பகுதியாக வாழ்வதால்தான். அவை சார்புடைய நிகழ்வுகள். முழுமைக்கு இடம் என்ற ஒன்று இல்லை. ஏனென்றால் இடம் யாவும் முழுமைக்குள் அடங்கிப் போகின்றன. வேறு எங்கும் முழுமை போக முடியாது. ஏனென்றால் அதற்கு வேறு இடம் என்று எதுவும் கிடையாது. இடம் முழுக்க முழுமைக்குள் அடக்கம். வேறு எங்கே போக முடியும்? அது இங்கே இருக்கிறது. அது எப்போதும் இங்கேயும் இப்போதும் இருப்பது. வேறு எங்கேயாவது எப்போதாவது என்பது அதற்கு இல்லவே இல்லை.

நீ இரண்டுமானவன். கூறுபோட்ட வாழ்வை வாழ்கிறவன் என்றால், பகுதி பகுதியாக வாழ்கிறவன் என்றால் பாதித் தூக்கத்தில் வாழ்கிறவன் என்றால் நீ காலத்தில் வாழ்கிறவன். முழுக்க விழித்து வாழ்கிறவன் என்றால் திடீரெனக் காலம் கழிந்தவன் நீ என்பதைத் தெரிந்து கொள்கிறாய். நீ வாழ்வது நித்தியத்தில். காலம் கழிந்ததில். நீயே முழுமையாகிப் போகிறாய். அப்போது காலம் என்ற ஒன்று உனக்கு இருப்பதில்லை.

எக்ஹார்ட் என்பவர் ஜெர்மானிய ஞானி. அவர் மரணப் படுக்கையில் இருந்தார். அவருடைய சீடர் ஒருவன். ஆவல் அதிகம் கொண்டவன். தெரிந்து கொள்ளவென்று கேள்விகள் கேட்கச் சலிப்பில்லாதவன். தத்துவவியல் மாணவன். அவரிடம் கேட்டான். "குருவே! நீங்கள் இறந்து கொண்டிருக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால் ஒரே ஒரு கேள்வி கேட்டுத்தான் ஆகவேண்டும். இந்த உடலை விட்டுப் போவதற்கு முன் பதில் சொல்லிவிட்டுப் போங்களேன். இல்லையென்றால் சாகும்வரை அந்தக் கேள்வி என்னை வருத்திக்கொண்டே இருக்கும்."

அவர் கண்களைத் திறந்து, ''என்ன அது?'' என்று கேட்டார்.

''நீங்கள் இறக்கும்போது எங்கே போகிறீர்கள்?''

''எங்கேயும் போகவேண்டிய அவசியம் ஏதும் இல்லை.'' சொல்லிவிட்டுக் கண்களை மூடியவர் இறந்து போனார்.

எங்கேயும் போகவேண்டிய அவசியம் ஏதுமில்லை என்று சொன்னார். கேட்டவனுக்குப் பதில் கிடைத்துவிட்டது என்று சொல்ல மாட்டேன். ஆனால் அருமையான பதில் ஒன்று கொடுத்துவிட்டார். அதை ஆழமாகப் புரிந்துகொள்ள வேண்டும். எங்கேயும் போகவேண்டிய அவசியம் இல்லை என்று சொன்னபோது என்ன பொருளில் சொன்னார்? இப்போது நான் எங்கெங்கும் இருக்கிறேனே! எங்கேயாவது போகவேண்டும் என்ற தேவை என்ன? இப்படித்தான் அதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

புத்தரைப் பலரும் இந்தக் கேள்வி கேட்டிருக்கிறார்கள். திரும்பத் திரும்ப அவரிடம் கேட்கப்பட்ட கேள்வி இது. ஒரு புத்தர் இறக்கும்போது எங்கே போகிறார்? புத்தர் இந்தக் கேள்வியைக் கேட்டபோதெல்லாம் சிரித்துக்கொண்டு சும்மா இருந்துவிடுவது வழக்கம்.

அவருடைய கடைசிக் கணத்தில் இந்தக் கேள்வியை மறுபடி கேட்டார்கள். அவர் ''ஒரு தீபத்தைக் கொண்டு வா'' என்றார்.

ஏற்றிய தீபம் ஒன்றைக் கொண்டு வந்தார்கள். ''இன்னமும் பக்கத்துக்குக் கொண்டு வாருங்கள்'' என்றார்.

அருகே கொண்டு வந்தார்கள். இன்னமும் அருகே கொண்டு வந்தார்கள். அவர் ஒரு கணம் அதை ஊதி அணைத்து விட்டார். ''அந்தத் தீபத்தின் ஒளி இப்போது எங்கே போய்விட்டது? அதன் சுவாலை எங்கே போனது?'' என்று கேட்டார். சீடர்களிடம் பதில் ஏதும் இல்லை.

சமஸ்கிருதத்தில் சுவாலையை ஏற்றி வைப்பதை நிர்வாணம் என்றார்கள். எனவே புத்தர் சொன்னார். ''இப்படித்தான். ஒரு புத்தர் சாகும்போது அவர் மறைந்து போகிறார். முழுமையோடு கலந்து விடுகிறார். எனவே அவர் எங்கே போகிறார் என்பதே சம்பந்தமில்லாத விஷயம்தான். முழுமை எங்கே போக முடியும்? அந்தச் சுவாலை எங்கே போய்விட்டது? அது முழுமையோடு சங்கமித்து விட்டது. தனித்த ஒரு சுவாலையாக அது இன்னமும் இல்லாமல் போய்விட்டது. அதனுடைய தனித்தன்மை கழிந்து போய்விட்டது.

அதனால்தான் நிர்வாணம் என்பது பௌத்த சாத்திர மொழியில் மிக முக்கியமான வார்த்தையாகிப் போனது. கழிந்துபோன சுவாலை என்பது அதன் பொருள். ஒரு சுவாலை முழுக்க ஏதுமில்லாமல் போய்விடுவது. அது இன்னமும் இருக்கிறதுதான். ஏனென்றால் எல்லாமும் இருக்கின்றவைதான். ஆனால் அதைக் கண்டுகொள்ள முடியவில்லை. சுவாலை இல்லாது போய்விட்ட சுவாலையை எங்கே தேடிப்போய்க் கண்டுபிடிப்பது? அதன் தனித்தன்மை கழிந்துபோக அதன் வடிவம் இல்லாமல் போய்விட்டது. எங்கே போய் அதைக் கண்டுபிடிப்பது? ஆனால் அது இல்லாமல் போய்விட்டது என்று சொல்ல முடியுமா? அது இன்னமும் இருக்கிறதுதான். ஏனென்றால் இருந்தது இல்லாமல் போக முடியாது. மறைந்து விட்டது உண்மை. வடிவற்றதோடு கூடிப் போய்விட்டது என்பது உண்மை. முழுமையோடு ஒன்றிப் போய்விட்டது என்பது உண்மை. ஆனாலும் அது இருக்கிறது. இது முழுமையாகிப்போய் இன்னமும் இருக்கத்தான் செய்கிறது.

உன்னிடம் இரண்டு சாத்தியங்களும் இருக்கின்றன. காலத்தில் வாழலாம். அப்போது மனம் என்ற ஒன்றைக் கொண்டிருப்பாய். மனம்தான் காலம். ஏனென்றால் மனம் காலத்தைக் கடந்தது. நிகழ்வது வருவது என்று பிரித்துப் பார்க்கிறது. மனம்தான் கூறு போடுகிறது. அது எல்லாவற்றையும் கூறுபோட்டுப் பார்த்து விடுகிறது. வாழ்வைக் காலத்தில் கழிக்கலாம். அப்போது மனதால் வாழ்கிறாய்.

ஆனால் வாழ்வை நேரிடையாக வாழ்வதும் சாத்தியமே. மனம் கழிந்த நிலையில் வாழ்வை மிக அண்மையில் வாழ முடியும். மனதை ஓரம் கட்டி வைத்துவிட்டுக் காலம் கழிந்த வாழ்வும் வாழலாம். நித்தியமாக வாழலாம். அப்போது கடந்ததும் வருவதும் இல்லாமல் போய்விடுகிறது. இருப்பதெல்லாம் நிகழ்வது மட்டுமே. எங்கெங்குக் காணினும் நிகழ்காலமே.

கடந்த காலம் என்பது நீ பார்க்க முடியாத நிகழ்காலம். எதிர்காலம் என்பது இன்னமும் நீ பார்க்க வந்திராத நிகழ்காலம். கடந்த காலம் என்பது உன் பட்டறிவைத் தாண்டிக் கடந்து போய்விட்ட நிகழ்காலம். எதிர்காலம் என்பது இன்னமும் உன் பட்டறிவு எல்லைக்குள் வந்திராத நிகழ்காலம்.

ஓர் உதாரணத்தைப் பார்க்கலாமா? நண்பன் ஒருவனுக்காக உயரமான ஒரு மரத்தடியில் காத்திருக்கிறாய். பாதையைப் பார்க்க முடிகிறது. என்றாலும் இந்தப் பக்கம் ஒரு பர்லாங்கு தூரத்துக்கும் அந்தப் பக்கம் ஒரு பர்லாங் தூரத்துக்கும்தான் உன் பார்வை போகிறது. அதற்கப்பால் பாதை

மறைந்து போகிறது. இன்னொருவன் மரத்தின் உச்சியில் உட்கார்ந் திருக்கிறான். அவனுக்கு இன்னமும் கொஞ்சம் கூடுதல் தூரம் பார்க்க முடிகிறது. இந்தப் பக்கம் ஒரு மைல் தூரம். அந்தப் பக்கம் ஒரு மைல் தூரம்.

நண்பனுக்காகக் காத்திருக்கிறீர்கள். அவன் வருகிறான். உனக்கு அல்ல. மரத்தின் மேலே இருக்கிறவனுக்கு. பாதைக்கு அவன் வந்துசேர்ந்த உடனே உயரத்தில் இருக்கிறவனுக்கு அவன் தெரிந்துவிடுகிறான். ஆனால் உனக்கோ இன்னமும் அவன் வந்து சேரவில்லை. மரத்தின்மேல் இருக்கிறவனுக்கு அவன் நிகழ்காலம் ஆகிவிட்டான். உனக்கோ அவன் இன்னமும் எதிர்காலமாகத்தான் இருக்கிறான். உனக்குத் தெரியும் பாதையில் அவன் இன்னமும் தோன்றவில்லையே.

உன்னுடைய பார்வைப் பொறிக்குள் அவன் வந்து சேரும்வரைக்கும் அவன் உனக்கு நிகழ்காலம் ஆவதில்லை. எதிர்காலமாகத்தான் இருக்கிறான். கடந்தது நிகழ்வது வருவது எல்லாமும் சார்புடையவை. நீ எந்த உயரத்தில் இருக்கிறாய் என்பதைப் பொருத்தது. நீ எங்கே இருக்கிறாய் என்பதைப் பொருத்தது.

அதனால்தான் சமணர்கள் மகாவீரரை முக்காலமும் தெரிந்தவர் என்று கொண்டாடுகிறார்கள். அவருடைய உயரம் அப்படி. இந்தக் கடைசியில் இருந்து அந்தக் கடைசி வரைக்கும் பார்க்க முடிந்தவர். எதுவும் அவருடைய பார்வைக்கு அப்பாற்பட்டது இல்லை. எனவே நீ எதைக் கடந்தது என்று நினைக்கிறாயோ அது அவருக்கு இன்னமும் நிகழ்வது. எதை நீ வரப்போவது என்று கொள்கிறாயோ அதுவும் அவருக்கு நிகழ்வது.

பிறகு நண்பன் வந்து சேர்கிறான். அவனோடு பேசுகிறாய். அவன் போய்விடுகிறான். ஒரு பர்லாங் தூரம் போனவுடன் உனக்கு அவன் மறைந்துவிடுகிறான். அவன் உனக்குக் கடந்ததாகிப் போகிறான். ஆனால் மரத்தின்மேல் இருக்கிறவனுக்கு அவன் இன்னமும் நிகழ்வதன் ஒரு பகுதிதான்.

உன்னுடைய புரிதல் எவ்வளவு பரந்தது என்பதைப் பொருத்தது எதுவும். அது முழுமையானது என்றால் காலம் கழிந்து போய்விடுகிறது. இந்தக்கடைசி முதல் அந்தக்கடைசி வரை பார்க்க முடிகிறது. கடந்து போய்விட்டதன் ஒவ்வொன்றும் நிகழ்வதுமாகிப் போகிறது. நடக்கப் போவதும் அப்படியே நிகழ்வதாகிப் போகிறது. அப்போது கடந்ததும் நிகழ்வதும் வருவதும் இல்லாமல் போய்விடுகிறது. நிகழ்வின் ஒரு கணம் மட்டுமே இருக்கிறது. அந்தக் கணமே காலம் கழிந்த நித்தியம்.

உன்னிடம் இரண்டு சாத்தியங்களும் இருக்கின்றன. மனத்தளவில் வாழலாம். அப்போது எல்லைக்குள் வாழ்கிறாய். சன்னல் வழியாக வானத்தைப் பார்ப்பது போலத்தான். சன்னலின் பிரேம் வானத்தின் பிரேம் ஆகிவிடுகிறது. மனதின் பிரேம் வாழ்வின் பிரேம் ஆகிவிடுகிறது. பிறகு சன்னலைத் தாண்டி வெளியே குதித்து விடுகிறாய். முழுமையான வானத்தின்கீழ் நிற்கிறாய். அப்போது எந்த பிரேமும் இல்லை.

பிரெஞ்சு ஓவிய உலகில் இப்போது ஒரு புதிய வர்க்கம் ஒன்று தோன்றியிருக்கிறது. பிரேம்கள் இல்லாத ஓவியங்கள். மிக அருமையாக இருக்கிறது. எல்லா பிரேம்களும் போலியானவை. வாழ்வில் எல்லாமும் பிரேம்கள் இல்லாத முழுமையாக இருக்கின்றன. ஆனால் ஓவியமாக எதை வரைந்தாலும் அதை ஒரு சட்டத்துக்குள் அடக்கி வைத்து விடுகிறாய். அந்த பிரேம் மிகவும் போலித்தனமானது.

இதில் வேடிக்கை என்னவென்றால் சில ஓவியங்களை பிரேமுக்காகவே வாங்குவதுதான். ஓவியங்களைவிட பிரேம்கள் விலை அதிகமாக இருக்கின்றன. இத்தனைக்கும் பிரேம் போலியானது. வாழ்வில் ஏதாவது அப்படி ஒரு பிரேமுக்குள் அடங்கி இருப்பதைப் பார்த்திருக்கிறாயா? ஆனால் ஓர் ஓவியம் என்றால் உடனே பிரேம் ஒன்றும் கண்ணுக்குத் தெரிகிறது. இத்தனைக்கும் பிரேம் போலியானது. எல்லா பிரேம்களும் மனதிலிருந்து வருகிறவை. மனம் ஒவ்வொன்றுக்கும் ஒரு பிரேமைத் தந்து விடுகிறது. பிரேம் இல்லாத ஒவ்வொன்றுக்கும் வடிவம் இல்லாத ஒவ்வொன்றுக்கும் போலி பிரேம் வடிவத்தைத் தந்து விடுகிறது.

நீ இரண்டுமாக இருக்கலாம். உன்னைப் பொருத்தது அது. ஆழ்ந்த தியானத்தில் மனம் கழிந்து போகிறது. ஆரம்பத்தில் மனம் இருந்து கொண்டுதான் இருக்கிறது. போகப்போக இல்லாமல் போய்விடுகிறது. அதனுடைய சளசளப்பு இருக்கிறதுதான் என்றாலும் நீ அதைக் கேட்பதில்லை. நீ அதைக் கேட்பதில்லை எனும்போது மனம் கழிந்து போய் விடுகிறது. தன்னுடைய சளசளப்பை நிறுத்திக் கொள்கிறது. யாரும் கண்டுகொள்ளவில்லை எனும்போது யாரும் கேட்கவில்லை எனும்போது அது நின்றுவிடுகிறது.

மனம் ஒரு குழந்தையைப்போல. ஒரு குழந்தை இப்படி நடந்துகொள்வதைப் பார்த்ததில்லையா? கீழே விழுந்துவிடுகிறது. தாய் பார்க்கிறாளா என்று பார்க்கிறது. எங்கேயாவது அருகே இருக்கிறாளா என்று பார்க்கிறது. இருக்கிறாள் என்றால் அழ ஆரம்பித்து விடுகிறது. இல்லையென்றால் அழுவதால் என்ன பயன்? தாய் பக்கத்தில் இல்லையென்றால்,எழுந்து நின்று மறுபடி விளையாடப் போய்விடுகிறது.

அழுவதால் என்ன பயன்? யாரும் வந்து கவனிக்கப் போவதில்லை. தாய் அங்கே இல்லை என்றால் யாரும் கவலைப்படப் போவதில்லை.

சிலசமயம் அரைமணி நேரம் கழித்துத் தாய் வந்தவுடன் குழந்தை அழ ஆரம்பித்துவிடுகிறது. இது முட்டாள்தனம்தான். என்றாலும் அதிலும் ஒரு நியாயம் இருக்கத்தான் செய்கிறது. தாய் இல்லாதபோது அழுது என்ன செய்வது? என்னதான் வலிக்கிறது என்றாலும் அழுவதால் எதுவும் நடக்கப்போவதில்லை. ஆனால் தாய் வந்து விட்டாள் என்றால் அரை மணி நேரத்துக்கு முன்னால் ஆன காயம்கூட வலிக்க ஆரம்பித்து விடுகிறது. வலி இல்லையென்றாலும்கூட கழிந்துபோன வலிக்காக அழுவதில் ஒரு நியாயம் இருக்கிறது. என்ன ஏது என்று கேட்கத்தான் தாய் வந்துவிட்டாளே.

மனம் ஒரு குழந்தையைப்போல. அதைக் கவனிக்க நீ இருக்கிறாய் என்றால் அழுகிறது. அதைக் கவனித்தால் பிரச்சனை தருகிறது. அதைக் கண்டுகொண்டாய் என்றால் மேலும் மேலும் பிரச்சனைகளைத் தந்துகொண்டே இருக்கிறது. நீ அதைக் கவனிக்காமல் விட்டுவிட்டால் தாய் அருகே இல்லாத குழந்தையைப்போல ஆகிப்போகிறது. அவள்தான் போய்விட்டாளே என்று தெரிந்துகொண்டு மெல்ல மெல்ல அழுகையை நிறுத்திவிடுகிறது. மனம் நின்றுவிடும்போது நீ உனக்கு வெகு அணுக்கமானவனாகிப் போகிறாய். எதார்த்தத்தை நேரடியாகச் சந்திக் கிறாய். உனக்கும் எதார்த்தத்துக்கும் இடையே யாரும் இருப்பதில்லை. யாரும் எதார்த்தத்துக்கு வர்ணம் பூசிவிட இருப்பதில்லை. அப்போது நீ அதைச் சரியாகப் புரிந்து கொள்கிறாய். பரிசுத்தமாகத் தெரிந்து கொள்கிறாய். நித்தியத்துக்குள் நுழைந்துவிடுகிறாய்.

**ஆறாவது கேள்வி:**

**அகந்தை தற்கொலை செய்துகொள்ள முடியுமா?**

முடியாது. ஏனென்றால் அகந்தை என்பது இருக்கும் ஒன்றல்ல. இருப்பதுதானே தற்கொலை செய்துகொள்ள முடியும்? இதையே இன்னொரு விதத்தில் சொல்லட்டுமா?

நிழல் தற்கொலை செய்துகொள்ள முடியுமா? நிழல் என்பது இல்லாத ஒன்று என்பதால் தற்கொலை செய்துகொள்ள முடியாது. தலையை மட்டும் வெட்டிவிட்டால் உடலுக்கும் நிழல் உண்டு. தலையில்லாத நிழல். அது சும்மா உன்னைத் தொடர்வது. அகந்தையும் உன்னைத் தொடரும் ஒன்றுதான். தற்கொலை செய்துகொள்ள முடியாது. உன் தலையை வெட்டி உன்னைக் கொன்றுவிட்டால் அகந்தையும் தற்கொலை செய்துகொள்ளும். செய்து கொள்கிறது என்பதுகூட இல்லை. அது நடந்துவிடுகிறது.

அகந்தை என்பது பொருண்மை வயப்பட்டது அல்ல என்பதைத் தெரிந்துகொள். அகந்தை நிழலைப் போலத்தான். உடல் நகரும்போது நிழல் உருவாகிறது. மனம் நகரும்போது அகந்தை உருவாகிறது. மனதின் நிழல்.

மனதின் நிழல்தான் அகந்தை. மனம் நின்றுவிடும்போது அகந்தை இல்லாமல் போய்விடுகிறது. மனம் இயங்கும்போது அகந்தை இருக்கிறது. மனம் அதீதமாக இயங்கும்போது அகந்தையும் அதீதமாக இயங்குகிறது. அதனால்தான் புத்தி ஜீவிதர்கள் பிறரைவிட அகந்தை அதிகம் உள்ளவர்களாக இருக்கிறார்கள்.

பிராமணர்கள், மெத்தப் படித்தவர்கள், பேராசிரியர்கள், பண்டிதர்கள், அறிவு ஜீவிகள் என்று சொல்லப்படுகிறவர்கள் - இவர்களுக்கு சூட்சுமமான அகந்தை இருக்கிறது. அவர்கள் அகந்தையின் வடிவங்களே தவிர வேறு ஏதும் இல்லை. நிறையத்தான் புத்தி.

உடலால் உழைப்போருக்கு அவ்வளவு அகந்தை இருப்பதில்லை. சாதாரண மக்களைத்தான் சொல்கிறேன். விவசாயத் தொழிலாளிகள், வேலையாட்கள், தொழிலாளிகள் இருக்கும் கிராமத்துக்குப் போய்ப் பார். அவர்கள் எளிமையானவர்கள்.

கன்ஃப்யூஸியஸ் பற்றி ஒரு கதை.

ஒருநாள் அவர் ஒரு கிராமத்து வழியாகப் போய்க் கொண்டிருந்தார். வயதானவர் ஒருவரைப் பார்த்தார். தொண்டுக் கிழவர். கிணற்றில் இருந்து நீர் இறைத்துப் பயிர்களுக்குப் பாய்ச்சிக் கொண்டிருந்தார். சரியான வெய்யில். கடினமான வேலை. அப்போதெல்லாம் நீர் இறைக்கக் கருவிகள் வந்துவிட்டன. அதைப்பற்றி இவர் கேள்விப்பட்டு இருக்க மாட்டாரோ என்று கன்ஃப்யூஸியஸ் நினைத்தார். மனிதர்கள் நீரை இறைப்பதற்குப் பதிலாகக் குதிரைகள் அல்லது மாடுகளை வைத்துக்கொண்டு நீர் இறைக்கலாமே. எனவே கன்ஃப்யூஸியஸ் அவரிடம் போய், ''இப்போ எல்லாம் தண்ணி இறைக்க வேறுவிதம் இருக்கிறது உங்களுக்குத் தெரியாதா என்ன? பன்னெண்டு மணி நேரம் நீங்க இறைக்கற தண்ணியெ அரை மணி நேரத்துலே இறைச்சுப் போடலாமே. ஏத்தம் கட்டி இறைக்கலாமே! குதிரையைப் பூட்டித் தண்ணி இறைக்கலாம். நீங்க ஏன் இவ்வளவு சிரமப்படணும்? உங்களுக்கும் வயதாகிப் போச்சு இல்லியா?'' என்றார். தொண்ணூறு வயதாவது இருக்கவேண்டும்.

அவரோ, ''கையாலே வேலை செய்யறதுதான் நல்லதப்பா. இந்த சாமர்த்தியமான கருவி எல்லாம் பயன்படுத்தினா மனுஷன் தந்திரக்காரன் ஆகிப் போவான். பார்க்கப்போனா தந்திர மனசுதான் தந்திரக் கருவிகளைப்

பயன்படுத்தும். என்னைக் கெடுக்காதே. எனக்கோ வயசாகிப் போச்சு. எந்த அளவுக்குக் குத்தமில்லாமப் பிறந்தேனோ அதே அளவுக்குக் குத்தமில்லாமச் செத்துப் போறேன். கையாலே வேலை செய்யறதுதான் நல்லா இருக்குதப்பா. எப்பவும் எளிமையா இருக்கலாம்'' என்றார்.

தன் சீடர்களிடம் கன்ஃப்யூஸியஸ் திரும்ப வந்து சேர்ந்தார். ''அந்தக் கிழவன்கூட என்ன பேசிக்கிட்டு இருந்தீங்க?'' என்று அவர்கள் கேட்டார்கள்.

''அவரு லாவோட் சுவோட உண்மையான சீடராத்தான் இருக்கணும். சரியாச் சொல்லி வாயடைக்க வெச்சுட்டார். அவரு சொன்னதும் சரியாத்தான் இருக்குது.''

உடல் உழைப்பு எனும்போது புத்தியின் நிழல் தோன்றவில்லை. அவர் எளிமையானவராக அப்பாவியாக இயல்பானவராக இருக்கிறார். ஆனால் தந்திரமான கருவிகளைப் பயன்படுத்தும்போது புத்தி வந்து சேர்கிறது. தலையால் வேலை செய்கிறவர்கள் என்பதால்தான் அவர்களை ஹெட் என்கிறார்கள். ஹெட் கிளார்க், ஹெட் மாஸ்டர் - இவர்களைத்தான் சொல்கிறேன். எந்த ஹெட் ஆகவும் இருக்க வேண்டாம். கிளார்க்காக இருப்பதே மோசம். அதிலும் ஹெட் கிளார்க்கா? வேறு வினையே வேண்டாம். மாஸ்டராக இருப்பதே போதும் நரகத்துக்கு இட்டுப் போக. ஹெட் மாஸ்டராக இருந்தால் என்ன ஆகுமோ?

உடலால் உழைப்பவராக இருந்தால் போதும். அதைப்பற்றிக் கேவலமாகத்தான் பேசுகிறார்கள். ஏனென்றால் உடலால் உழைப்பவன் தந்திரசாலியாக இருக்கமுடியாது. போட்டி போடுகிறவனாக இருக்கமுடியாது. ஆதி மனிதர்களைப்போல இருக்கிறார்கள். உடலால் உழைப்பவனாக இருந்து பார். நிழல் தோன்றுவது குறைந்து குறைந்து இல்லாமல் போய்விடும்.

அகந்தை தானாக இருப்பது அல்ல என்பதால் அது தற்கொலை செய்துகொள்ள முடியாதுதான். தற்கொலை செய்து கொள்வதைத்தான் சமாதி என்கிறார்கள். அதைத்தான் நான் கடைசித் தியானம் என்கிறேன். தற்கொலை செய்து கொள்கிறாய் என்றால் மறைந்து போய்விடுகிறாய் என்று பொருள். யாருமற்றவனாகிப் போகிறாய். எந்த நிழலும் இருப்பதில்லை.

முற்காலத்தில் புத்தராக யாராவது ஆகிவிட்டால் அவர்கள் நிழல் தவிர்ந்தவர்களாகிப் போகிறார்கள் என்று சொல்வார்கள். இது ஒரு குறியீடாகத்தான் இருக்க வேண்டும். மிக அர்த்தபூர்வமான குறியீடு. புத்தர்

நடந்து போகும்போது அவருடைய நிழல் விழுவதில்லை என்பதல்ல பொருள். நிழல் விழுகிறதுதான். ஆனால் மனத்தின் நிழல் இருப்பதில்லை.

அவர் நடக்கிறார். வேலை செய்கிறார். எல்லாமும்தான் செய்கிறார். ஆனால் கர்த்தா என்று யாரும் இருப்பதில்லை. இதைத்தான் நிழல் விழுவதில்லை என்று சொன்னார்கள். தேவைப்பட்டால் சிந்தனை வசப்படுகிறார். ஆனால் சிந்திப்பவன் என்று யாரும் இருப்பதில்லை. அதனால்தான் நிழல் விழுவதில்லை என்றாகிப் போகிறது. அவர் வாழ்கிறார். ஆனால் எதையும் தம் சௌகரியத்துக்கு மாற்றிக் கொள்வதில்லை. எதையும் கட்டுப்படுத்துவதில்லை.

அவர் வழிந்து ஓடுகிறார். அவருடைய வாழ்க்கை இயல்பாக ஓடும் நீரோட்டம்போல. அவர் நீந்துவதில்லை. அப்படியே மிதக்கிறார். நீரை அடித்து நீந்துவதில்லை. எல்லாவற்றையும் அதனதன் இயல்புக்கு விட்டுவிடுகிறார். ஜீவிதத்தை இருக்கவிட்டு விடுகிறார். நதி என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும் என்று விட்டுவிடுகிறார். அப்போது நிழல் விழுவதில்லை. அகந்தை மறைந்து போகிறது.

அகந்தையோடு நேரிடையாக மோதாதே. அப்படிச் செய்தால் தோற்றுப் போவாய். ஏனென்றால் யாராவது நிழலோடு போராட முடியுமா என்ன? நிழலை வைத்துக்கொண்டு ஏதாவது செய்யவேண்டும் என்றால் உன்னுடைய ஜீவிதத்தை வைத்துக்கொண்டு ஏதாவது செய்யவேண்டும்.

எங்கோ ஏதோ தவறான கொள்கை தோன்றிவிட்டது. அகத்தில் நீ எதுவுமற்றவன். உள்ளே இருக்கும் பொந்தை உணர். வெறுமையை உணர். திடீரென ஒருநாள் உன் அகந்தை உன்னை விட்டுப் போய்விட்டது என்பதை உணர்ந்துகொள்வாய். அகந்தை என்ற ஒன்று இருந்திருக்கவே இல்லை என்பதைத் தெரிந்துகொள்வாய். இருந்திருக்கிறது என்று நினைத்திருந்ததே தவறு என்பதை உணர்வாய். ஒரு மாயைக்குள் இருந்திருக்கிறாய் என்பதைத் தெரிந்துகொள்வாய். அது ஒரு கானல் நீர். அது இல்லவே இல்லை. இருப்பதாகத் தெரிந்திருக்கிறது. அது எதார்த்தமானதல்ல. ஒரு கனவு. உண்மையில் அது ஒரு பயங்கரக் கனவு.

**ஏழாவது கேள்வி:**

**கோபம் கருணை என்ற தளங்களில் வாழும் ஒருவன் அன்பு வெறுப்பு என்ற தளங்களிலும் வாழ முடியுமா?**

முடியும். முழுமையானவன் எனும்போது அவன் முழுமையானவன் தான். எந்த நிபந்தனையும் அவனைக் கட்டுப்படுத்தாது. ஆனால் அவனுடைய வெறுப்பின் இயல்பே அலாதியானது. உன்னுடைய

அன்பைவிட அன்பாக இருப்பது அவனுடைய வெறுப்பு. உன்னுடைய கருணையைவிட அதிகக் கருணையோடு இருப்பது அவனுடைய கருணை.

அவன் முழுமையாக வாழ்கிறவன் என்பதால் அவனிடம் எல்லாமும் புதிய இயல்பைப் பெறுகின்றன. அவன் செய்வதெல்லாம் வித்தியாச மானதுதான். நீ இருக்கும் களத்தில் இருந்துகொண்டு அவன்மேல் தீர்ப்புச் சொல்லிவிட முடியாது. ஏனென்றால் உனக்கு முழுமை என்பதன் பொருள் தெரியாது.

உனக்கு வெறுப்பு என்றால் என்ன என்று தெரியும். அன்பு என்றால் என்ன என்று தெரியும். சிலசமயம் அன்பு காட்டியிருக்கிறாய். சிலசமயம் வெறுப்பைக் கக்கியிருக்கிறாய். இரண்டையும் அவ்வப்போது பார்த்துக் கடந்து வந்திருக்கிறாய். ஆனால் நீ முழுமையானவனாக இருந்ததே இல்லை. அப்படி இருக்கும்போது உன்னுடைய அன்பு வித்தியாசமான தாகிப் போகிறது. உன்னுடைய அன்பில் வெறுப்பின் வேகம் இருக்கும்.

அன்புக்கு வெறுப்பின் வேகம் இருப்பதை எப்போதாவது உணர்ந்திருக்கிறாயா? ஒருவரை வெறுக்கும்போது உண்மையாகவே வெறுக்கிறாய். அன்புகாட்டும்போதோ ஏதோ அன்புடையவனாக இருக்கிறாய். உன்னுடைய அன்பில் உன்னை முழுமையாகச் செலுத்துவ தில்லை. ஆனால் வெறுக்கும்போது, ஆழமாகத்தான் வெறுக்கிறாய். உன்னுடைய கருணை மலடாகத்தான் இருக்கிறது என்பது உனக்குத் தெரியுமா? அது ஒரு முகமூடி. அலங்காரச் சுவர். ஆனால் உன் கோபம் எப்போதும் அசலாகவே இருந்திருக்கிறது.

எதுவெல்லாம் தவறு என்று படுகிறதோ அதுவெல்லாம் அசலாக இருந்திருக்கிறது. எதுவெல்லாம் சரி என்று படுகிறதோ அதுவெல்லாம் போலியாகத்தான் இருந்திருக்கிறது. ஒருவன் முழுமையானவனாகிப் போகும்போது அவனுடைய அன்பு அவனுடைய வெறுப்பின் அளவுக்கே தீவிரம் உள்ளதாக இருக்கிறது. முழுமையான ஒருவன் வெறுக்கும்போது அவன் வெறுப்போடு முழுமையான அன்பையும் சுமந்து வருகிறான். அன்புடையவனாக இருப்பதாலேயே அவனால் வெறுக்கவும் முடிகிறது. கருணை உடையவன் என்பதாலேயே அவனால் கோபப்படவும் முடிகிறது.

புரிந்துகொள்ளச் சிரமம்தான். உடனே புரிந்துகொள்ள முடியவில்லை என்பதால் உன்னைக் குழப்புகிறது. உன்னுடைய புரிதல் இன்னமும் பக்குவம் அடையவேண்டியிருக்கிறது. கொஞ்சம் முயற்சி செய்யவேண்டி இருக்கிறது.

இரண்டும் கெட்ட நிலையை விட்டுவிடு. அதற்குத் தைரியம் வேண்டும். முழுமையாக வாழ்வதற்கு மிகப் பிரமாதமான தைரியம்

வேண்டும். ஏனென்றால் அப்போது நடக்கப்போவது எல்லாமும் தெளிவாகத் தெரிந்துவிடுகிறது. நீயோ எப்போதும் பயந்துபோய்க் கிடக்கிறாய்.

ஒருவரைக் காதலிக்கிறாய் என்று வைத்துக்கொள். அவர்மீது கோபம்கொள்ளத் தயங்குகிறாய். ஏனென்றால் அவரை நீ உண்மையாகவே காதலிக்கிறாயா இல்லையா என்பதே உனக்குத் தெரிவதில்லை. கோபத்தை மீறிக் காதல் இருக்கமுடியும் என்பது உனக்குத் தெரியவில்லை. எனவே கோபத்தை அடக்குகிறாய். ஏனென்றால் உனக்குத் தைரியம் இல்லை. உன் காதல் நிசமாகவே இருக்கிறதா இல்லையா என்பதே உனக்குத் தெரியவில்லை. இருக்கலாம். இல்லாதிருக்கலாம். இப்படி ஊசலாடிக் கொண்டிருக்கிறாய்.

நீ புகை மூடிய பனித்திரைக்குள் எப்போதும் இருப்பவன். எதுவும் எப்போதும் தெளிவாகத் தெரிந்ததே இல்லை. உன்னுடைய பார்வை எப்போதுமே மேகம் மூடியதாக இருக்கிறது. எனவே நீ பயந்து போகிறாய். இந்த அளவுக்குக் கோபம் உறவை முறித்துவிடும் என்று நினைக்கிறாய். வேண்டாம் வேண்டாம் என்று கத்திக்கொண்டே கோபத்தை அடக்கிக் கொள்கிறாய். அப்போது கோபம் உன்னுடைய ஒரு பகுதியாக ஆகிப்போகிறது. அப்போது உன் அன்பிலும் கோபம் கலந்துவிடுகிறது.

படுக்கை அறையில் ஆணும் பெண்ணும் உறவுகொள்ளும் விதத்தைத்தான் பாரேன். அங்கே வன்முறை இருக்கிறது. உடல் உறவு அவ்வளவாக ஒன்றும் அழகான காரியம் அல்ல. அவன் முகத்தைத்தான் பாரேன். அவளைக் கொன்றுவிட எத்தனிக்கிறவனைப்போல இருக்கிறான். அதனால்தான் பெண்கள் அந்தக் கணத்தில் கண்களை மூடிக்கொள்கிறார்கள் என்று நினைக்கிறேன். இவன் என்ன செய்யப்போகிறான் என்பதைப் பார்க்காமல் இருந்துவிடுவதே மேல் என்று நினைப்பதைப்போல.

உடல் உறவு முழுக்க அவ்வளவாக அழகான காரியமாக இருப்பதில்லை. முகத்தைச் சுளித்துக் கொள்கிறாய். வக்கரித்துக் கொள் கிறாய். அழகு விகசிக்க வேண்டிய இடத்தில் வக்கிரம் கொக்கரிக்கிறது. சாதாரணமாக அழகாகத் தெரியும் முகம்கூட அசிங்கமாகிப் போகிறது. என்னவோ ஒரு வலியை அனுபவித்துக் கடப்பதைப்போல. பரவசம் அல்ல ஒரு வலி என்றாகிப் போகிறது. அவளுடைய முகத்தைத்தான் பாரேன். சுளித்துக் கொள்கிறாள். மேக் அப் எல்லாம் கலைந்து போகிறது. முகத்தில் அழகு இல்லாமல் போய்விடுகிறது. என்னவோ வலியை அடக்கி வைத்துக்கொண்டு இருப்பதைப் போலத்தான் தெரிகிறாள்.

உடல் உறவின்போதுகூட முழுமையாக இயங்கினால் ஏதோ ஆபத்து என்று நினைத்துத்தான் நடந்து கொள்கிறார்கள். அவர்களுடைய மனதில் அடிக்கடி சிவப்பு விளக்கு எரிந்துகொண்டே இருக்கிறது. எச்சரிக்கை ஒலி கேட்டுக்கொண்டே இருக்கிறது. நின்றுவிடு. இனியும் போகாதே.

அவர்கள் அடக்கி வைத்தது எல்லாமும் கதவைத் தட்டித் தயாராக இருக்கின்றனவே. அவை உடல் உறவில் வெளிப்பட்டு விட்டால் என்ன செய்வது? எங்களை விடு. ஒரு கை பார்த்து விடுகிறோம் என்று கூவுகின்றன. எனவே உடல் உறவில்கூட அவர்கள் தளர்வுகொள்ள முடிவதில்லை. ஏனெனில் தளர்வு நிலை நிபந்தனையற்றதாக மட்டுமே இருக்கமுடியும். நிபந்தனைக்குட்பட்ட தளர்வு நிலை என்பது கிடையாது.

நீ தளர்வு கொள்கிறாய் என்றால் காதலில் தளர்வு கொள்கிறாய்; கோபத்தில் தளர்வு கொள்கிறாய்; வெறுப்பில் தளர்வு கொள்கிறாய். இது கதவைத் திறந்து வைப்பதைப்போல. ஒரு கதவைத் திறக்கும்போது நண்பனுக்காகவும் விரோதிக்காகவும் திறப்பது போலத்தான். இரவு முழுக்கக் கதவைத் திறந்துபோட்டால் நண்பன் வந்து சேரலாம்தான். ஆனால் அதே கதவின் வழியாக விரோதியும் வந்துசேரும் சாத்தியமும் இருக்கிறதே. எனவே கதவைச் சாத்தி வைத்து விடுகிறாய். ஆனால் மூடிய க்தவு நண்பனுக்கும் சேர்த்தே மூடிய கதவாகிப் போகிறது.

உனக்கு அசலான கோபம் இன்னதெனத் தெரியவே தெரியாது. உண்மையான காதல் எதுவென்றும் உனக்குத் தெரியாது. முழுமை யானவனாக இருக்கும்போது எதுவும் அசலானதாகிப் போகிறது. என்னதான் விளைவு என்றாலும் சரி, அந்த விளைவுகளைப்பற்றிக் கவலைப்படாது எதையும் அசலாகச் செய்கிறாய்.

இதுதான் வாழ்வைப்பற்றிய என்னுடைய கணித சாத்திரம். என்னதான் விளைவு என்றாலும் சரியே என்று முழுமையானவனாக வாழ்ந்தால் அது மிக நல்லது. என்னதான் விளைவு என்றாலும் சரிதான் என்கிறேன். எப்போதுமே அப்படிப்பட்ட வாழ்வு உயர்ந்தது. ஆனால் பின்னப்பட்ட வாழ்வை வாழ்ந்தால் என்னதான் விளைவு என்றாலும் அது அவ்வளவாக நல்ல விளைவாக இருப்பதில்லை.

உன் வாழ்வையே சரியாகப் பார்த்தால் கனவான்போல வாழ்ந்திருக்கிறாய் என்பது புரியும். இரண்டும் கெட்டான் வாழ்வுதான். சுடுவதில்லை. குளிர்ந்தும் கிடக்கவில்லை. என்னதான் நடந்துவிட்டது? எதுவுமே நடக்கவில்லை. ஏறக்குறைய எதுவுமே நடக்கவில்லை என்கிறேன்.

உன்னையே நீ வீணடித்துக் கொண்டிருந்திருக்கிறாய். இனியும் வீணடிக்காதே. வாழ்வுக்கு விசுவாசமாக இரு. அப்படி அசலான வாழ்க்கை வாழ்வதில் ஆபத்தான ஆபத்துகள் இருக்கின்றன. அதனால்தான் அதற்கு யாரும் தயாராக இருப்பதில்லை. அதில் ஆபத்துகள் இல்லை என்றால் ஏன் இவ்வளவு பேர் போலியான வாழ்வை வாழ்ந்து கொண்டிருக்கவேண்டும்? பயந்தவர்கள். கோழைகள். எப்படியோ இட்டுக்கட்டி வாழவேண்டும் என்று நினைக்கிறவர்கள்.

சௌகரியமான வாழ்க்கைதான். சௌகரியயமாக வாழவேண்டும் என்றால் கோழையாகத்தான் இருக்கவேண்டி இருக்கிறது. ஆனால் சௌகரியமான வாழ்க்கை ஒரு சௌகரியமான சாவுதான். சாஸ்வதமான வாழ்க்கை இருபுறமும் எரியும் கொள்ளிக்கட்டை. எப்போதும் ஆபத்து சூழ்ந்த இறப்பு வட்டத்துக்குள் இருக்கிற ஒரு தீச்சுடர். ஆபத்து சூழ்ந்திருக்கும் போதுதான் இறப்பு சூழ்ந்திருக்கும் போதுதான் வாழ்க்கை தன் உச்சத்தை அடைகிறது.

**கடைசிக் கேள்வி:**

***சில நாட்களுக்கு முன் உங்கள் காலடியில் விழுந்து ஒரு பறவை இறந்தது. எங்களுக்கும் நேரம் வரும்போது நாங்களும் உங்களுடைய காலடியில் விழுந்து இறக்கலாமா?***

வரவேண்டிய தேவையே இருக்காது. நான் அங்கே இருப்பேன். என்மீது உனக்கு உண்மையான அன்பு இருக்குமானால் உண்மையான நம்பிக்கை இருக்குமானால் நான் அங்கே வந்து சேர்ந்து விடுவேன். ஆனால் இறப்புக்காகக் காத்திருக்காதே. வாழ்வில் உன்னோடு இருந்தால்தான் இறப்பிலும் நான் உன்னோடு இருப்பேன்.

வாழ்க்கை ஓர் அளவுகோல். இறப்பு ஒரு முகிழ்வு. வாழ்வில் இருப்பதெல்லாம் இறப்பில் தம் உச்சத்தை அடைகின்றன. என் இருப்பை உன் வாழ்வில் உணர முடிகிறதா? என் இருப்பை உன் நெஞ்சுக்கருகே உணர முடிகிறதா? அப்படியானால் இறப்பில் நான் உன்னோடு இருப்பேன். நீ என்னைத்தேடி வரவேண்டியதே இல்லை. நானே வருவேன்.

ஆனால் சாவுக்காகக் காத்திருக்காதே. முதலில் வாழ்வில் அது நடக்கவேண்டும். சாவில் நடக்கவேண்டும் என்று நீ விரும்புவதெல்லாம் முதலில் வாழ்வில் நடக்கவேண்டும். ஏனென்றால் வாழ்க்கை சாவுக்கான ஓர் ஒத்திகை. சாவு என்றென்றைக்கும் வாழ்வுக்கு எதிரானதல்ல. சாவு வாழ்வின் நிறைவேற்றம். வாழ்வில் இருந்தது எல்லாமும் சாவில் தத்தமது உச்சத்தை அடைகின்றன.

❑

ஒன்பது

## அன்றைய ஞானியரைப் பற்றி...

அன்றைய ஞானியரிடம் சூட்சுமம் இருந்தது.

ஆழமான புரிதல் இருந்தது.

புரிந்துகொள்ளக்கூட முடியாத ஆழம் இருந்தது.

புரிந்துகொள்ள முடியாது என்பதால்
விவரித்துப் பார்க்கலாமா?

பனிக்காலத்து ஓடையைக் கடப்பதைப்போல ஜாக்கிரதையாக...

ஆபத்து சூழ்ந்திருக்கும்போது தீர்மானமற்று இருப்பதைப்போல..

விருந்தாளியைப்போலக் கட்டுப்பாடாக...

உருக ஆரம்பித்த பனிக்கட்டிபோலத் தன்னைக் கரைத்தவராக...

இழைக்காத மரக்கட்டைபோல அசலாக...

பள்ளத்தாக்கைப்போலத் திறந்த மனத்தராக...

சேற்றில் மண்ணும் நீரும் கரைந்திருப்பதைப்போல
மற்றவரோடு எளிதாகக் கலந்து உறவாடுகிறவராக...

கலங்கிக் கிடக்கும் உலகில் அமைதியைக் காண்பது எங்கே?

அசைவிலாது கிடக்கும்போது தெளிவு பிறக்கிறது.

நிம்மதியை யாரால் வெகுநேரம் அனுபவிக்க முடிகிறது?

செயல்கள் மூலமாக வாழ்க்கைக்கு வந்து சேர்கிறது.

தாவோவைத் தழுவி நடக்கிறவர்

தளும்ப நிறைந்து போவதைத் தவிர்க்கக் காவலிடுகிறார்.

தன்னைத் தன்னைக் கொண்டு நிறைக்க விடாததாலேயே
தேய்ந்து ஓய்வதையும் புத்தாக்கத்தையும் கடந்துவிடுகிறார்.

**சா**க்ரெட்டெஸ் செத்துக் கொண்டிருந்தார்.

ஒரு சீடன் வந்தான். ''இறப்பைக் கண்டு ஏன் பயப்பட மாட்டேனென்கிறீர்கள்?''

மரணம் அவருக்கு நிச்சயம். ஒரு சில கணங்களில் சாகத்தான் போகிறார். அவரைக் கொல்வதற்கான விஷம் தயாராகிக்கொண்டு இருந்தது. அவர் சொன்னார்:

''எனக்குத் தெரியாத ஒன்றைப்பற்றிய பயம் எனக்கு எப்படி இருக்கும் என்று நினைக்கிறாய்? சாவைக்கண்டு பயப்படவேண்டும் என்றால் சாவைச் சந்தித்திருக்க வேண்டும். சாகும்போதுதானே சாவைச் சந்திக்க முடிகிறது! இரண்டு சாத்தியங்கள் இருக்கின்றன. நான் முழுவதுமாக இறக்கவேண்டும். எந்த எச்சத்தையும் விட்டுவிட்டுப் போகாமல் நான் செத்துப் போகவேண்டும். எனவே செத்துப்போனபின் சாவைப்பற்றித் தெரிந்து கொண்ட யாரும் இருக்க முடியாது. அந்தத் துன்பத்தை அனுபவிக்க யாரும் இருக்கப் போவதில்லை. எனவே இந்த முதல் சாத்தியம் நடக்கப் போகிறது என்றால் அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை.

''இரண்டாவது சாத்தியம். நான் தொடர்ந்து இருக்கப் போகிறேன். இந்த உடல் மறைந்துபோகும். ஆனால் ஆன்மா நிலைத்திருக்கும். அப்படித்தான் என்றால் நான் கவலைப்பட ஏதுமில்லை. நான் இருக்கத்தான் போகிறேன் என்றால் சாவு நான் சம்பந்தப்பட்டது அல்ல. என்றாகிப் போகிறது. இந்த இரண்டு சாத்தியங்கள்தான் இருக்கின்றன. என்ன நடக்கப் போகிறதோ அதைப்பற்றி இப்போது சொல்ல எனக்கு ஏதும் இல்லை. எனக்குத் தெரியாது. இப்போது எனக்குத் தெரியாது.''

சாக்ரெட்டெஸ் ஒரு ஞானி. வெறும் விஷயஞானம் மட்டும் வைத்துக் கொண்டிருந்தவர் அல்ல. விஷயஞானம் மட்டும் கொண்டவர் குறிப்பான ஒரு பதிலைச் சொல்லியிருப்பார். விஷயஞானம் கொண்டவர்கள் தமக்கென்று சில பதில்களை வைத்திருக்கிறார்கள். சர்வ நிச்சயமான பதில்கள். அது அவர்களுடைய முட்டாள்தனத்தின் ஒரு பகுதி. உண்மையில் முட்டாள் மனங்கள்தான் எதைப்பற்றியும் நிச்சயங்களோடு இருக்கும். வாழ்க்கை மிகப் பரந்த அற்புதம். தெரிந்துகொள்ள முடியாதது. நீ ஞானி என்றால் எதைப்பற்றியும் நிச்சயமாக இருக்கமாட்டாய்.

ஞானம் என்றும் எச்சரிக்கையாக இருப்பது. ஞானம் தயங்கித் தயங்கிப் படர்கிறது. எதைப்பற்றியும் நிச்சயமான முடிவைக் கொள்வதில்லை. அதனால்தான் ஞானத்தை எந்தக் கொள்கை கோட்பாட்டுக்குள்ளும் அடக்க முடிவதில்லை. எல்லாக் கொள்கைகளும் வாழ்வைவிடக் குறைந்தவை. குறுகியவை. வாழ்க்கை அதற்குள் நுழைய முடிவதில்லை. வாழ்க்கை அந்த அளவுக்கு பிரம்மாண்டமானது. பிரம்மாண்டமாக முடிவில்லாது நீண்டிருப்பது வாழ்க்கை.

ஞானிக்கு ஒன்று மட்டுமே தெரியும். தனக்குத் தெரியாது என்பது மட்டுமே அவருக்குத் தெரியும். விஷயஞானம் உடையவருக்கு ஆயிரத்து ஒன்று பற்றி எல்லாமும் தெரியும். தனக்குத் தெரியும் என்பதும் தெரியும். அதில்தான் அவனுடைய முட்டாள்தனமும் தங்கி இருக்கிறது. அவன் வாழ்வின் அனுபவமாகிப் போயிருக்காத தகவல்களை எல்லாம் அவன் சேர்த்து வைத்துக்கொண்டே இருக்கிறான். அவனுடைய ஜீவிதம் தொட்டுப் பார்த்திராத கொள்கைகள், வார்த்தைகள், தத்துவங்கள் - இவற்றைத் தன் நினைவில் ஏற்றிக்கொண்டே இருக்கிறான். விஷயஞானம் தேங்கியிருக்கிற அணையாகிப் போகிறான். நடமாடும் என்சைக்ளோபீடியா ஆகிறான். ஆனால் செத்துப் போனவனாகத்தான் இருக்கிறான்.

எவ்வளவுக்கெவ்வளவு அவன் நினைவில் விஷயஞானம் ஏறுகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு குறைவாகவே அவன் தன் ஜீவிதத்தில் வாழ்கிறான். எவ்வளவுக்கெவ்வளவு அவன் தன் புத்தியால் வாழ்கிறானோ அவ்வளவுக்கு அவ்வளவு அவன் பின்னப்பட்டுப் போகிறான். அவ்வளவுக்கவ்வளவு அவன் பிரபஞ்சத்தில் இருந்து பிரம்மாண்டமான ஜீவிதத்தில் இருந்து வேறுபட்டுப் போகிறான். ஒருவிதத்தில் அவன் இல்லாதவன் ஆகிப் போகிறான். உயிர்ப்புள்ளவனாக இராமல் தேஜஸ் இல்லாதவனாக உயிர்த்துடிப்பு இல்லாதவனாக ஆகிப்போய் இனியும் ஜீவிதத்தின் ஒரு பகுதி என்று சொல்ல முடியாதவனாகிப் போகிறான். உறைந்து போனவன். வாழ்வோடு சேர்ந்து பிரவகிப்பதில்லை. ஒரு பனிப்பாறைபோல உறைந்துபோய் ஓரிடத்தில் மாட்டிக் கொண்டவனாகிப் போகிறான். புத்தியில் மாட்டிக் கொண்டவன்.

உணர்வு விஷயஞானமாகிப் போகும்போது உறைந்துபோய் விடுகிறது. உணர்வு ஞானமாகும்போது நீரோட்டமாகிப் போகிறது. ஞானி வாழ்கிறார். முழுக்க வாழ்கிறார். அவருக்குத் தெரிந்ததெல்லாம் தனக்கு ஒன்றும் தெரியாது என்பதுதான். ஞானியிடம் இருந்து எதையும் கற்றுக்கொள்வது மிகச் சிரமம். அறிஞனிடம் இருந்து கற்றுக்கொள்வது மிகச் சுலபம். அறிஞன் தனக்குத் தெரிந்ததை எல்லாம் சுலபமாகக் கற்றுத்தர

முடியும். தன்னிடம் இருப்பதை உனக்கு மாற்றித்தர முடியும். இதற்கு மொழி ஒன்று போதும்.]

அறிஞன் தான் கற்றுக்கொண்டதை எல்லாம் புத்தியின் மூலமாகக் கற்றுக் கொண்டிருக்கிறான். மொழியின் வாயிலாகக் கற்றுக் கொண்டிருக்கிறான். அதைப் பிறருக்குச் சொல்லிவிடுவது மிகச் சுலபம். அருமையாகச் சொல்லிக் கொடுக்கமுடியும். தான் உணர்ந்து கொள்ளாததை எல்லாம் அவன் சுலபமாகச் சொல்லிக்கொடுத்து விடுகிறான். அதனால் தானோ என்னவோ ஞானியிடம் இருக்கும் தயக்கம் அவனிடம் இருப்பதில்லை. உணர்ந்து கொண்டவர்தான் உணர்ந்துகொண்ட ஒவ்வொன்றுக்கும் அடுத்த துருவம் என்று ஒன்று இருப்பதைத் தெரிந்து வைத்திருக்கிறார். உண்மையாகவே புரிந்து வைத்திருப்பவர் தெரிந்து உணர்ந்து வைத்திருப்பவர் ஒவ்வொன்றும் தனக்கு நேர் எதிரிடை யானதோடு ஐக்கியமாகித்தான் இருக்கிறது என்பதைத் தெரிந்து வைத்திருக்கிறார். எல்லாமும் அவ்வவற்றின் எதிரிடையோடு ஒரு சந்திப்பிலும் கரைதலிலுமாக இருக்கின்றன என்பதைத் தெரிந்து வைத்திருக்கிறார்.

எதையும் நிச்சயமாகச் சொல்ல முடிவதில்லை. அப்படி அல்லது இப்படித்தான் என்று எதைப்பற்றியும் தீர்மானமாகச் சொன்ன அந்தக் கணமே அதன் ஓட்டத்தை நிறுத்தி விடுகிறாய். உறைந்துபோன உண்மையாகிப் போகிறது. நதியின் ஒரு பகுதியாக இருப்பதில்லை பனிப்பாறையாக ஆகிப்போகிறது. அப்படி உருக்கொண்டபின் அதைப் புத்தி எனும் கிடங்கில் வைத்துக் கொள்ளலாம்.

ஞானி ஓர் ஆசிரியர் அல்ல. அவர் குருவாக இருக்கமுடியும். ஆனால் ஆசிரியராக இருக்கமுடியாது. இருவருக்கும் என்ன வித்தியாசம்? ஆசிரியர் சொல்லிக்கொடுக்கத் தயாராக இருக்கிறார். குரு தயாராக இருப்பதில்லை. ஆசிரியர் ஆளுமை உணர்ச்சி கொண்டவர். செயல்வயப்பட்டவர். குருவோ ஆளுமை செய்யமாட்டார். செயல் வசப்பட்டிருக்க மாட்டார். ஆசிரியர் உன்னைத் தேடிவந்து கட்டாயப்படுத்துவார். தன்னுடைய விஷயஞானத்தை உன் தோள்களில் ஏற்றிச் சுமக்க வைத்துவிடுவார். குருவோ காத்திருப்பார். நீ அவரிடம் இருந்து பிடுங்கிக்கொள்ள வேண்டும். உன்னைத் தொடர்ந்து வருவார். ஆனால் உன்னைக் கட்டாயப்படுத்த மாட்டார். உன் கதவைத் தட்ட மாட்டார்.

வெறுமனே காத்திருப்பார். அவருடைய ஜீவிதத்தை அவரோடு பங்குபோட்டுக் கொள்ளலாம். அவருடைய அகத்தகத்துக் காலியிடத் துக்குள் நீ புகுந்து கொள்ளலாம். அவருடைய அகத்தின் மாளிகையைத்தான்

சொல்கிறேன். அவருடைய ராஜாங்கம் அது. ஆனால் அது உன்னைப் பொருத்த விஷயம். அதற்காக என்ன செய்யவேண்டுமோ அதை நீதான் செய்தாக வேண்டும். குரு ஒரு சாந்நித்தியம். நீ அவரால் கவரப்பட்டால் அவருடைய சாந்நித்தியத்தில் விழுந்து விடுகிறாய்.

ஆசிரியன் வா வா என்று அழைக்கிறான். நீ புரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக எல்லா முயற்சியும் செய்கிறான். குரு என்பவர் அதோ அங்கே இருக்கிறார். அவ்வளவே. மூடி வைத்தவராக அல்ல. நீ அவருக்குள் போய்ச்சேர ஏதுவாகத் திறந்த கதவுகளோடு அதோ அங்கே இருக்கிறார். ஆனால் ஒரு சைகைகூடச் செய்வதில்லை. அப்படிச் சைகை செய்தால் உன்னை அழைத்து உன்மேல் ஆதிக்கம் செலுத்துவதாக ஆகிப்போகும். அப்படிச் செய்தால் உனக்கே தெரியாமல் அவருடைய சாந்நித்தியத்துக்குள் போய்ச் சேர்ந்துவிடுவாய். அது சரியல்ல. தவறான பாதையில் உன்னைச் செலுத்திவிட்டதாக ஆகிப்போகும்.

குரு ஓர் அமைதியான சாந்நித்தியம். அவரிடம் இருந்து நீ கற்றுக்கொள்ளலாம். ஆனால் அவரால் சொல்லித்தர முடியாது. ஓர் ஆசிரியரோடு இருக்கும்போது நீ மாணவனாக இருப்பாய். அப்போது உங்களுக்கிடையே பரஸ்பரம் ஓர் உறவு இருக்க வருகிறது. ஆனால் குருவோடு இருக்கும்போது நீ சீடனாக மட்டுமே இருக்கமுடியும். அந்த உறவு ஒருவழிப்பாதை. நீயாகக் கற்றுக்கொள்ள வேண்டும்.

கற்றுக்கொண்டால் கற்றுக் கொள்கிறாய். இல்லையேல் இல்லைதான். தன்னுடைய ஜீவிதத்தில் ஆழ்ந்து பரவசத்தில் இருக்கும் குருவுக்கு அதைப்பற்றி எல்லாம் எந்த அக்கறையும் கிடையாது. கற்றுக் கொள்கிறாயா? ஆசீர்வதிக்கிறார். கற்றுக் கொள்ளவில்லையா? அப் போதும் ஆசீர்வதிக்கிறார். அவர் ஒரு வரம். ஆசீர்வாதம்.

குரு பரீட்சைகள் வைப்பதில்லை. ஏனென்றால் வாழ்வில் பரீட்சைகள் இருப்பதில்லை. பரீட்சைகள் என்ற அளவீடுகளைக்கொண்டு நினைத்துப் பார்ப்பதே முட்டாள்தனம். அதனால்தான் பல்கலைக் கழகங்கள் முட்டாள்களை உருவாக்கிக்கொண்டே இருக்கின்றன. அதற்கு ஒரு காரணம் இருக்கிறது. அறிவைப் பரீட்சை செய்து பார்க்கமுடியாது. அதை எடைபோட அளவீடுகள் இல்லை. நினைவாற்றலைச் சோதிக்கலாம். நினைவில் நிறுத்தி வைத்துக்கொள்ளும் திறனைச் சோதிக்கலாம். ஆனால் தெரிந்துகொள்வதைச் சோதிக்க முடியாது. குரு எந்தப் பரீட்சையும் வைப்பதில்லை. வருகிறாய். கற்றுக் கொள்கிறாய். பங்குபோட்டுக் கொள்கிறாய். பரந்து முடிவில்லாத ஒன்றுக்கான கதவை உனக்காகத் திறந்துவிடுகிறார். அவ்வளவுதான்.

அறிந்தவன் ஆசிரியனாகிறான். லட்சக்கணக்கானோர் அவனிடம் போய்ச் சேர்கிறார்கள். கற்றுக்கொள்வதால் அவர்கள் அகந்தை ஊக்கம் பெறுகிறது. வெகு சில அரிதான ஆன்மாக்களையே குரு கவர்கிறார். ஏனென்றால் குருவோடு இருக்கும்போது கற்றது கழிதல்தான் நடக்கிறதே ஒழியக் கற்றுக்கொள்வது நடப்பதில்லை. குருவோடு இருக்கும்போது ஒருவர் செத்துப்போக வேண்டி இருக்கிறது. அகந்தை முழுக்கப் பொடிப்பொடியாக நொறுங்கிப் போகிறது. அப்போதுதான் கோயிலுக்குள் நுழைய முடிகிறது. அப்போதுதான் குருவின் ஜீவிதத்தின் கர்ப்பக் கிரகத்துக்குள் நுழைய முடிகிறது.

குரு ஒரு ஞானிதான். அவருடைய புரிதல் வெகு ஆழமானது. அதைப் புரிந்துகொள்வது முடிவதில்லை. அதை வாழ்ந்து அனுபவிக்க முடியும். குருவுக்கும் விஷயஞானம் இருக்கிறது. அந்த விஷயஞானத்தில் எதிரிடையானவை சந்தித்துக் கைகுலுக்கிக் கொள்கின்றன. வாழ்வும் சாவும் ஒன்றேயாகிப் போகின்றன. ஜீவிதத்துக்கும் அஜீவிதத்துக்கும் வெவ்வேறு பொருள் இருப்பதில்லை. எல்லா நதிகளும் கடலில் சங்கமிப்பதைப்போல - எல்லாமும் குருவின் ஆழத்தில் இருக்க வருகின்றன.

அவரைப் புரிந்துகொள்வது சிரமம். ஏனென்றால் புரிந்துகொள்ளுதல் மேம்போக்கான ஒரு செயல். எல்லாவகையான புரிந்துகொள்ளுதலும் ஏதோ ஒருவகையில் தவறாகப் புரிந்துகொள்வதுதான். குருவோடு இருக்கும்போது அவரைப் புரிந்துகொள்ள முயற்சிக்காதே. அவரை எப்படிப் புரிந்துகொள்ள முடியும்? எப்படி முடிவே இல்லாத ஒன்றைப் புரிந்துகொள்வது? அதை வாழ்ந்து அனுபவிக்கலாம். அதற்குள் கரைந்து போகலாம். அதை உனக்குள் கரைந்துபோக விடலாம். அவ்வளவுதான் சாத்தியம்.

அது காதலைப்போல. காதலைப் புரிந்துகொள்ள முடியாது. அற்புதமானது. அதைப் புரிந்துகொள்ளவே முடியாது. இன்னதுதான் என்று சொல்லிவிட முடியாது. ஆயிரக்கணக்கில் காதலுக்கு வரையறைகள் இருக்கின்றன. ஆனால் இதுவரை காதல் இன்னதுதான் என்று வரையறுத்தவர்கள் எவருமில்லை. இருக்கப் போவதுமில்லை.

வரையறுத்தாலேயே ஏதோ ஒன்று விட்டுப் போயிருக்கிறதே என்ற உணர்வுதான் வருகிறது. அந்த ஒன்று எப்போதும் விட்டுப் போனதாகவே இருக்கப் போகிறது. ஏனென்றால் அதுதான் ஆழம். வரையறுத்துச் சொல்லும் எந்த வாசகமும் ஆழத்தைத் தாங்கி வரமுடியாது. வரையறைகள் மேம்போக்கிலேயே நின்று விடுகின்றன.

ஞானி ஆழத்தில் வாழ்கிறார். அறிஞன் ஆரத்தில் வாழ்கிறான். ஞானி நடுமத்தில் நிலைத்தவர். ஞானியிடம் போய்ச் சேர்வதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. அது உன் நடுமத்துக்கு நீ போய்ச் சேர்ந்து விடுவதுதான். நடுமத்துக்கும் நடுமத்துக்கும் தொடர்பு ஏற்படும்போது ஞானிக்கும் உனக்கும் தொடர்பு ஏற்பட்டு விடுகிறது. புத்திக்கும் புத்திக்கும் தொடர்பு ஏற்படும்போது உனக்கும் அறிஞனுக்கும் இடையே தொடர்பு ஏற்பட்டு விடுகிறது.

போகப்போக ஞானி இந்த உலகத்தை விட்டு நீங்கிப் போகிறார். மேற்கத்திய நாடுகளில் தத்துவார்த்தமானவர்களைப் பார்க்க முடியவில்லை. தத்துவ அறிஞர்களைப் பார்க்க முடிகிறது. தத்துவப் பேராசிரியர்கள்தான் இருக்கிறார்கள். இது முட்டாள்தனமானது. தத்துவப் பேராசிரியர் தத்துவ ஞானி அல்ல. அவர் ஒரு ஆசிரியர். அவ்வளவுதான். அவரிடம் விஷயஞானம் இருக்கிறது. அவர் ஞானி அல்ல. ஒரு சாக்ரெட்டெஸ் அல்ல. ஒரு லாவோட் சூ அல்ல. ஒரு புத்தர் அல்ல.

அவர்கள் பேராசிரியர்கள் அல்ல. எதையும் கடைப்பிடிக்கிறவர்கள் அல்ல. எதையும் எவர்க்கும் கற்றுத் தருகிறவர்கள் அல்ல. சூரியன் இருப்பதைப்போலச் சும்மா அங்கே இருக்கிறார்கள். கண்களைத் திறந்து பார்த்தால் இருட்டு மறைந்துபோகிறது.

பாதை ஓரத்து மலரைப்போல. அதனோடு சில கணங்கள் இருக்கிறாய். அதன் மணம் உன் அடி ஆழத்தை நிறைத்துவிடுகிறது. ஒரு நதியைப்போல. தாகத்தோடு வருகிறாய். தாகம் தவிர்ந்து போய்விடுகிறாய். அவர்கள் பேராசிரியர்கள் அல்ல. ஜீவிதத்தின் நிகழ்வுகள். வேறு யாரை விடவும் ஜீவனுள்ளவர்கள். அவர்கள் புரிதலுக்கு அப்பாற்பட்ட அற்புதங்க ளாகிக்கொண்டே இருக்கிறார்கள்.

லாவோட் சூவின் சூத்திரங்களைப் பார்க்குமுன் இன்னும் சில.

கிழக்கத்திய நாடுகளில் கடந்த காலத்துக்கு, என்றும் மதிப்பும் மரியாதையும் தருகிறார்கள். ஆழ்ந்த மரியாதையோடு நாம் கடந்த காலத்தைப் பார்க்கிறோம்.

மேற்கத்திய நாடுகளில் கடந்தகாலம் தன் மதிப்பை இழந்துவிட்டது. மாறாக எதிர்காலத்துக்கு மதிப்பும் மரியாதையும் கூடிப் போய்விட்டது. இதற்கு இணையாக வயதானவர்களை மதிக்கும் போக்கும் அங்கே மறைந்துவிட்டது. கடந்த காலத்துக்கு ஏன்ற எந்த மதிப்பும் இல்லை எனும்போது வயதானவர்களுக்கு எப்படி மரியாதை கிடைக்கும்? எப்படியோ அவர்களைச் சகித்துக்கொள்கிறார்கள். அவர்களுக்கு.

வயதாகும்போது இவர்கள் செத்துப்போனால் நன்றாக இருக்குமே என்ற ஆசை உனக்குள் வந்துவிடுகிறது. அவர்களால் என்ன பயன்? மேற்கத்திய சிந்தனை பயன்பாடுகளைச் சார்ந்தது. இளம் வயதுக்காரர்களால் பயன் அதிகம்தான்.

பயன்பாட்டைப்பற்றி மட்டுமே நினைத்துப் பார்த்தால் இளைய வர்கள் முதியவர்களைவிடப் பயனுள்ளவர்கள்தான். முதியவர் தன் சக்தியை இழந்துவிட்டவர். அவருடைய உடல் சிதைந்துவிட்டது. நோய்வாய்ப்பட்டு விட்டார். ஒருநாள் இறக்கப் போகிறார். அவரால் எந்தப் பயனும் இல்லை. அவர் ஒரு சுமையாகிப் போனார்.

வயதானவர்களுக்கு எந்த மரியாதையும் இல்லை. இது ஒரு தொடர் விளைவுதான். கடந்த காலத்தை மதிக்காதபோது உன் தந்தையை உன்னால் மதிக்க முடியாது. உன் பாட்டனாரை மதிக்க முடியாது. உன் முப்பாட்டன் பெயர்கூட உனக்குத் தெரிவதில்லை. அவர் இருந்ததே இல்லை என்பதைப் போலத்தான். உன்னுடைய குழந்தைகளைப்பற்றியே அதிகம் சிந்திக்கிறாய். அவர்கள் எதிர்காலம் அல்லவா? அவர்கள் தங்களுடைய குழந்தை களைப்பற்றி நினைத்திருக்கப் போகிறார்கள். மறந்துவிடாதே. உன்னைப் பற்றி நினைக்கப் போவதில்லை. எனவே அவர்களுடைய உதாசீனத்தின் வலியைப்பற்றி அலட்டிக் கொள்ளாதே. அந்தக் காயத்தைப்பற்றிக் கவலைப்படாதே.

மேற்கத்திய நாடுகளில் எதிர்காலத்துக்கு முக்கியத்துவம் வந்துவிட்டது. கீழ்த்திசை நாடுகளிலோ எப்போதும் கடந்த காலத்துக்கே மதிப்பும் மரியாதையும்.

இதில் பலவற்றையும் புரிந்துகொள்ள வேண்டி இருக்கிறது. ஏன் மேற்கத்திய நாடுகளில் எதிர்காலத்துக்கு முக்கியத்துவம்? மேற்கத்திய நாடுகள் விஷயஞானம் உள்ளோரின் ஆதிக்கத்துக்கு உட்பட்டே இருந்திருக்கிறது - பேராசிரியர்கள், விஞ்ஞானிகள், நாவலாசிரியர்கள், இறைமறை பற்றிய அறிஞர்கள், அரசியல் தலைவர்கள். மேற்கத்திய நாடுகளில் அறிவின் ஆதிக்கம் அதிகம்தான். இப்படிப்பட்ட சூழலில் இளையவர்கள் அதிகம் தெரிந்துகொள்ளச் சாத்தியங்களும் அதிகம்தான். அவர்கள்தான் முதியவர்களின் தோள்கள்மேல் ஏறி நிற்கிறார்களே! அவர்கள் இன்னமும் கொஞ்சதூரம் அதிகம் பார்க்கமுடியும்.

முப்பது வருடங்களுக்கு முன் உன் தந்தை பல்கலைக்கழகத்தில் படித்துக் கொண்டிருந்தார். இந்த முப்பது நாற்பது வருடங்களில் எல்லாமும் மாறிப் போய்விட்டன. அவருக்குத் தெரிந்திருந்தது எல்லாமும் காலாவதியாகிப் போய்விட்டன. அவர் பல்கலைக்கழகத்தில் படித்துக்

கொண்டிருந்த புத்தகங்களின் காப்பிரைட் காலாவதியாகிப் போய்விட்டது. யாரும் அந்தப் புத்தகங்களைப்பற்றிக் கவலைப்படுவதே இல்லை. அவற்றைப் பழைய புத்தகக் கடைகளில்தான் பார்க்க முடிகிறது. அவை பயனற்றுப் போய்விட்டன. அவர் நாற்பது வருடங்களாகச் சேர்த்து வைத்திருந்த அத்தனையும் பயனற்றுப் போய்விட்டன. நாற்பது வருடங்களில் அறிவுப் புரட்சி ஏற்பட்டு விட்டதே! இன்னமும் நடந்துகொண்டே இருக்கிறதே! உன்னுடைய குழந்தைகளுக்கு உன்னைவிட அதிகம் தெரிந்திருக்கப் போகிறது. பார்க்கப்போனால் அவர்களுக்கு இப்போதே உன்னைவிட அதிகம் தெரியும்.

ஒரு சிறு நிகழ்ச்சி.

இரண்டு சின்னக் குழந்தைகள் பாட்டியோடு மிருகக்காட்சி சாலைக்குப் போனார்கள். பாட்டி கொஞ்சம் வயதானவர்தான். அவர் ஒவ்வொன்றையும்பற்றிக் குழந்தைகளுக்குச் சொல்லிக்கொண்டே இருந்தார். கொக்கு இருக்கும் இடத்துக்கு வந்தார்கள். அதைக் காட்டி, ''சொர்க்கத்திலேருந்து குழந்தைகளைக் கொண்டுவர்ரது இதுதான். உங்களைக்கூடக் கொண்டு வந்தது இது. எப்பவும் குழந்தைகளை கொண்டுட்டு வர்ரதுதான் இதோட வேலை'' என்றார்.

குழந்தைகள் சிரித்துக் கொண்டார்கள். தமக்குள் கிசுகிசுத்துக் கொண்டார்கள். ''இந்தக் கிழவிக்கு விவரம் சொல்லிவிடலாமா?''

இன்னொரு குழந்தை, ''விடப்பா! அவ அவளோட நம்பிக்கை யிலேயே கிடக்கட்டும்.''

முல்லா நஸ்ருதீனுடைய பையன் வளர்ந்துவிட்டான். வாழ்க்கை பற்றி எல்லாமும் அவனுக்குச் சொல்லவேண்டிய நேரம் வந்துவிட்டது. அவனைக் கூப்பிட்டான். ''என்கூட என்னோட ரூமுக்கு வா. உன்கூட வாழ்க்கை பற்றிய சில விஷயம் பேசணும். உனக்கும் வயசாகிப் போச்சு இல்லையா? நீயும் விவரம் தெரிஞ்சுக்கணும்.''

முல்லாவுக்கு மகனோடு பேசுவதில் சற்றே தர்ம சங்கடம் இருந்தது. தன் மக்களிடம் வாழ்க்கை பற்றிப் பேசும் எந்தத் தந்தைக்கும் அப்படித்தானே இருக்கும்! வயதானவன். காலாவதியாகிப்போன மனமுடையவன். கொஞ்சம் தர்ம சங்கடமாகத்தான் இருக்கும்.

அறைக்குள் போனவுடன் கதவைச் சாத்தினான். மகன், ''ஏன் நெளியறே அப்பா? உனக்கு ஏதாவது தெரிஞ்சுக்கணும்னா என்னைக் கேளு. நான் சொல்றேன். இதுக்குப்போய் இப்படி நெளியலாமா?''

குழந்தைகள் நிறைய விஷயங்களைப்பற்றி நமக்குச் சொல்லமுடியும். என்னவோ கொஞ்ச விவரம் தெரியாதவன் என்றுதான் குழந்தைகள் நம்மைப் பார்க்கின்றன. மேற்கத்திய நாடுகளில் ஒவ்வொரு குழந்தையும் பெற்றோருக்கு ஒன்றும் தெரியாது என்றுதான் நினைக்கிறது. மதிப்பும் மரியாதையும் இல்லாமல் போய்விட்டது.

விஷயஞானம் உள்ளவர்கள் ஆதிக்கத்தில் இருக்கும் சமூகத்தில் இதுதான் நடக்கும். விஷயஞானமோ ஒவ்வொரு நாளும் விரிந்துகொண்டே இருக்கிறது. கூடச் சேர்ந்துகொண்டே இருக்கிறது. குழந்தைகள் பெற்றோரைவிட அதிகம் தெரிந்து வைத்திருக்கிறார்கள். அப்படித்தான் இருக்கும். அவர்களுக்குத்தான் லேட்டஸ்ட் விஷயம் எல்லாம் தெரிந்திருக்கிறதே.

கிழக்கத்திய நாடுகளில் ஞானிக்கே முக்கியத்துவம் இருந்திருக்கிறது. அறிஞனுக்கல்ல. அறிவு வளர்ந்துகொண்டே இருப்பது. மாறிக்கொண்டே இருப்பது. இயங்கிக்கொண்டே இருப்பது. ஞானமோ நித்தியமானது. அது என்றென்றும் ஒன்றாகவே இருப்பது. அதை எப்போது அடைந்தாலும் சரி. அதில் எந்த மாற்றமும் இருப்பதில்லை. வானம் எப்போதும் மாறாமல் இருக்கிறதே அப்படித்தான். பருவங்கள் வந்து போகின்றன. குளிர்காலம். கோடைக்காலம். மழைக்காலம். மழை நின்றுவிட்ட காலம். மரங்கள் வருகின்றன போகின்றன. தலைமுறைகள் வந்துபோகின்றன. வாழ்வெனும் நாடகம் நடந்துகொண்டே இருக்கிறது. ஆனால் வானமோ அப்படியே இருக்கிறது. எப்போதும் அப்படியே எப்போதும் புதிதாக எப்போதும் புத்துணர்ச்சியோடு எப்போதும் பழையதாக அப்படியே இருக்கிறது. ஞானம் வானத்தைப் போலத்தான்.

பல்கலைக்கழகங்களிலும் கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் அறிவைக் கற்றுத் தந்துவிடலாம். ஞானத்தை எப்போதும் எங்கும் கற்றுத்தர முடியாது. ஞானத்தை வாழ்வோடு சேர்த்துப் பெற்றுக்கொள்ளலாம். வேறு எந்த வழியும் இல்லைதான். எனவே முதியவர்கள்தான் ஞானிகளாக இருக்கமுடியும். ஞானத்தில் எந்த இளைஞனும் முதியவரைத் தோற்கடிக்க முடியாது. ஆனால் அறிவைப் பொருத்த அளவில் முதியவரை எப்போது வேண்டுமானாலும் தோற்கடித்து விடலாம்.

முதியவரை எப்படி ஞானத்தில் தோற்கடிப்பது? அனுபவத்தால் வருவது ஞானம். அறிவு அனுபவத்தால் வருவதல்ல. கற்பதால் வருவது. அதைப்போட்டுத் திணித்து வைத்துக் கொள்ளலாம். சாதாரணமானவரை விடச் சற்றே புத்திசாலி என்றால் ஆசிரியரைவிட விஷயஞானம் அதிகம்

உள்ளவனாக ஆகிவிடலாம். உன் தந்தையைவிட அதிகம் தெரிந்து வைத்திருப்பதற்கு எந்தத் தடையும் இல்லை. கொஞ்சம் முயற்சி இருந்தால் போதும்.

ஆனால் ஞானம் என்பது வேறு விஷயம். அதைப்பெற வேறு வழியே இல்லை. அனுபவத்தின்மூலம் கொஞ்சம் கொஞ்சமாக வருவது ஞானம். வாழ்ந்தால், அதுவும் முழுமையாக வாழ்ந்தால், விழித்தவனாக வாழ்ந்தால் கொஞ்சம் கொஞ்சமாக, துளித்துளியாக ஞானம் முகிழ்ந்து வருகிறது. வெகு சூட்சுமமான விஷயம் அது. அதைச் சென்றுசேர ராஜபாட்டை ஏதுமில்லை. வயதானவர்கள்தான் ஞானியராக இருக்க முடியும். அதனால்தான் இளம் வயதிலேயே பெரும் ஞானம் பெற்றவரைக் கீழ்த்திசையில் பெரியவர் என்கிறோம். அவர் மூத்தவர் என்பது நமக்குத் தெரியும். மிக மூத்தவர்தான் என்பது நமக்குத் தெரியும்.

பிறக்கும் போதே வயதானவராக இருந்தவர் லாவோட் சு என்று அவரைப்பற்றிய அருமையான கதை ஒன்று இருக்கிறது. பிறந்தபோது அவருக்கு வயது எண்பத்து நான்காம். எண்பத்து நான்கு வருடங்கள் கருவறையில் இருந்தவராம். நம்ப முடியவில்லை. முட்டாள்தனம்தான். என்றாலும் அருமையான கதை. எதையோ சொல்கிறது. மிக முக்கியமான எதையோ இந்தக் கதை நமக்குச் சொல்கிறது. குழந்தையாக இருந்தபோதே வயதானவராகத் தெரிந்தார் என்று சொல்கிறது. அவருடைய ஞானத்துக்கு அவர் குழந்தையாக இருந்திருக்கவே முடியாது. இந்தக் கதை எதையோ சொல்கிறது. குறியீடாக எதையோ சொல்கிறது. அவர் குழந்தையாக இருந்தபோது எண்பத்து நான்கு வயதானவருக்குள்ள ஞானம் அவரிடம் இருந்தது என்று சொல்கிறது. அவர் பிரமாதமாக விழித்திருந்தவராக இருந்திருக்க வேண்டும்.

பிரமாதமான விழிப்புணர்வு உள்ளவர்களுக்கு ஒரு நிகழ்ச்சி போதும், பலவற்றையும் விளங்க வைக்க. அப்படி இல்லை என்றால் ஒரே அனுப வத்தைப் பலமுறை பெற்றும் எதையும் தெரிந்து கொள்வதில்லை.

ஞானி ஒரே ஒருமுறைதான் காதல் வயப்படுவார். அதன்பின் அது என்ன என்பதைப்பற்றி அவர் முழுக்கத் தெரிந்தவராக இருப்பார். அற்புதத்தின் அடிஆழம் வரைக்கும் போய்வந்து விடுகிறார். அதன் அற்புதத்தை முழுக்க வாழ்ந்து விடுகிறார். அதனுடைய லோகத்துக்குள் நுழைந்து விடுகிறார். எந்த மூலை முடுக்கையும் மிச்சம் விடாமல் போய்வந்து விடுகிறார். பிறகு வெளியே வந்து விடுகிறார். அதன்பின் மீண்டும் காதலிக்க வேண்டிய அவசியம் அவருக்கு இருப்பதில்லை. அதை

வாழ்ந்து அனுபவித்துத் தெரிந்து கொண்டபின் அனுபவத்தின் ஞானம் அவருக்குக் கிடைத்து விடுகிறது.

முட்டாள்தான் ஒரே அனுபவத்தைப் பலமுறையும் திரும்பத் திரும்ப அனுபவிப்பான். என்றாலும் எதையும் தெரிந்துகொள்ள மாட்டான். விழித்திருக்க வேண்டும். தைரியம் இருக்கவேண்டும். எனவேதான் ஒரு குழந்தையோ அல்லது இளைஞனோ அரிதே ஞானியாக இருப்பது நடக்கிறது.

பொதுவாக ஒருவன் ஞானியாக இருக்க வேண்டுமானால் வயதாகிப் போகவேண்டி இருக்கிறது. வாழ்வின் பருவங்களை எல்லாம் கடந்து வந்திருக்க வேண்டி இருக்கிறது. பக்குவப்பட்டவனாக இருக்கவேண்டி இருக்கிறது. எல்லாத் தட்ப வெட்பத்தையும் கடந்து வந்திருக்க வேண்டி இருக்கிறது. எல்லா மன நிலைகளையும் கடந்து வந்திருக்க வேண்டி இருக்கிறது. வெய்யிற் காலத்திலும் வாழ்வின் நதி ஓடிக் கொண்டிருப்பதைத் தெரிந்திருக்கும்போது, நதிப் படுகை காய்ந்துபோன மணல் துண்டாக இருக்க அங்கே இருப்பதெல்லாம் தாகம், பசி, வறட்சி, சுடுகின்ற ஓர் ஆசை மட்டுமே என்றிருக்கும்போது அவன் ஞானியாகிறான். வெள்ளப் பெருக்கில் நதி ஓடிக் கொண்டிருக்கும்போது, கடலேதானோ என்ற மயக்கத்தைத் தரும் அளவுக்கு நீர் நிறைந்திருக்கும் போதும், அது நதிதான் என்று தெரிந்திருக்கும் போதும் அவன் ஞானியாகிறான்.

எல்லா மனநிலைகளும் வாழ்வின் எல்லாத் திசைகளும் அவருக்கு அத்துப்படியாகிப் போகிறது. பாவியாக வாழ்ந்திருக்கிறார். மகானாக இருந்திருக்கிறார். அனுபவத்தின் செல்வம் அனைத்தும் அவருடையதாகிப் போய்விட்டது. தலைமுடி அனைத்தும் வெளுத்துப்போக ஓர் அழகு வந்து சேருமே, அந்த அழகு முதியவருக்குத்தான் வரமுடியுமே தவிர இளைஞனுக்கு வரவே முடியாது. தோற்றத்தில் மட்டுமே இளையவர் அழகாக இருக்கலாம். வடிவம், திருத்தம், பலம் இவற்றில் இளையவர்கள் மிக அழகானவர்தான். ஆனால் பரிணாமத்துக்கு எப்போதும் ஆளாகி யிருக்கிற அனுபவத்தால் எப்போதும் விருத்தியாகிக் கொண்டிருக்கிற ஆன்மாவைப் பொருத்த அளவில் வயதானவர் மட்டும்தான் அழகாக இருக்கமுடியும்.

அரிதாகத்தான் இது நடக்கிறது. ஏனென்றால் அரிதாகத்தான் மக்கள் விழித்திருக்கிறார்கள். அரிதாகத்தான் வாழ்க்கை முழுவதையும் தியானமாக்குகிறார்கள். இல்லையேல் இளைஞனும் முதியவரோடு அழகுப் போட்டியில் கலந்து கொள்ளலாம். முதியவரின் அழகில் ஒரு நளினம்

இருக்கிறது. ஓர் ஆழம் இருக்கிறது. இளைஞனின் அழகு மேடிட்டுப்போன அழகு. மேம்போக்கானது. தோலுக்குக் கீழே போகாதது. முதியவரின் அழகிலோ ஓர் ஆழம் இருக்கிறது. உள்ளே போகப்போக, போய்க் கொண்டே இருக்கவும் அதன் முடிவு தெரிவதில்லை.

பனி மூடிய இமயமலையின் சிகரம் போன்றது முதியவரின் அழகு. அங்கே ஒரு சாந்தம் இருக்கிறது. புயல் எல்லாம் கடந்து போய்விட்டது. தெரிந்துகொள்ள வேண்டியது எல்லாம் தெரிந்து கொண்டாயிற்று. இனித் தெரிந்துகொள்ள ஏதும் இல்லை என்றாகிவிட்டது. சுமைதான் என்று தெரிந்து கொண்டபின் அந்தச் சுமையாகிய அகந்தையை எங்கோ வழியில் கழித்துப் போட்டாகிவிட்டது. சுமையோடு எப்படிச் சிகரத்தைச் சென்று சேர்வது? சிகரத்துக்கு அருகே அருகே போகும்போது சுமைகளை ஒவ்வொன்றாகக் கழித்து விடத்தான் வேண்டி இருக்கிறது. மலையுச்சியை அடையும்போது உன்னையேகூடக் கழித்துவிட வேண்டி இருக்கிறது. யாருமற்றவனாகச் சிகரத்தை அடைகிறாய். ஏனென்றால் நீயாக இருப்பதுகூட வாழ்வின் கடைசிக் கணங்களில் ஒரு சுமையாகிப் போகிறது.

கிழக்கத்திய நாடுகளில் வயதானவருக்கு மதிப்பும் மரியாதையும் இருக்கின்றன. வயதானவரை மதிக்கிறாய் என்றால் கடந்த காலத்தை மதிக்கிறாய் என்று பொருள். கிழக்கத்திய நாடுகளில் கடந்து போய்விட்டதை நோக்கிய ஏக்கம் இருக்கிறது.

இனி சூத்திரத்துக்கு வருவோம்.

**அன்றைய ஞானியரிடம் சூட்சுமம் இருந்தது.**
**ஆழமான புரிதல் இருந்தது.**

அன்றைய ஞானியர் என்கிறார்.

கிழக்கத்திய நாடுகளைப் பொருத்த அளவில் வயதானவரையே ஞானியர் என்று கொண்டனர். தன்னைப்பற்றி ஓர் எளிமை இருக்கிறது. நிகழ்காலத்தைப்பற்றிய ஓர் எளிமை இருந்திருக்கிறது. உன் தந்தையைவிட நீ எப்படி ஞானத்தில் மிக்கவனாக இருக்கமுடியும்? உன்னுடைய பாட்டனாரைவிட நீ எப்படி ஞானத்தில் மிக்கவனாக இருக்கமுடியும்? அல்லது உன் முப்பாட்டனைவிட... இருக்கமுடியாது. அவர்களைவிட அதிகம் தெரிந்தவனாக இருக்கமுடியாது.

புத்தரைவிட அதிக விஷயஞானம் உன்னிடம் இருக்கலாம். இருக்கிறதுதான். ஆனால் அவரைவிட ஞானத்தில் மிக்கவன் அல்ல.

மிஞ்சிய ஞானம் என்ற ஒன்றே இல்லை. ஒருவர் ஞானி அல்லது ஞானி இல்லை. அவ்வளவுதான். இவரைவிட அவருக்கு ஞானம் கூட அல்லது குறைவு என்பதெல்லாம் இல்லை. அறிவியலில் கூடக்குறைய என்பது இருக்கிறது. ஆனால் ஞானத்தில் கூடிய ஞானம் என்பது ஏதும் இல்லை. பார்க்கப்போனால் எவ்வளவுக்கெவ்வளவு ஞானம் அதிகம் இருக்கிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு எளிமையானவனாக இருப்பாய்.

லாவோட் சூ அப்படித்தான். மிக எளிமையானவர். எனவே அவர் தமக்கு முந்தைய ஞானியரைப்பற்றி மரியாதையோடு நினைத்துப் பார்த்துக் கொள்கிறார். அப்படி முந்தைய ஞானியரோடு போய்ச் சேரும்போது அவர்கள் தமக்கு முந்தைய ஞானியரைப்பற்றிப் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்பாய்.

கிழக்கத்திய சாத்திரங்களைப் படித்துப்பார். எதைச் சொன்னாலும் இது புதியது என்று யாரும் சொல்லிக் கொள்வதில்லை. ஏற்கெனவே சொல்லப்பட்டது. தாம் கேள்விப்பட்டது என்றுதான் எதையும் சொல் கிறார்கள். அதனால்தான் சாத்திரங்களுக்கு இந்தியர்கள் இரண்டு பெயர்கள் வைத்தார்கள். ஸ்ருதி என்பதும் ஸ்ம்ருதி என்பதும் அப்பெயர்கள். ஸ்ருதி என்றால் நாங்கள் கேட்டுத் தெரிந்துகொண்டது என்று பொருள். தெரிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொண்டது. ஸ்ம்ருதி என்றால் தெரிந்தவர்களிடம் இருந்து பெற்றுக் காப்பாற்றி வைத்தது என்று பொருள். யாரும் எதையும் தம்முடையது என்று தம்பட்டம் அடித்துக்கொள்வதே இல்லை. எனக்குத் தெரியும் என்று சொல்வதே அறியாமையின் வெளிப்பாடு என்று நினைத்தார்கள். நான் என்பது திணித்து வைக்கப்பட்ட அறியாமை.

பின்னால் போகிறார்கள். வெகு காலத்துக்குப் பின்னோக்கிப் போகிறார்கள். உபநிடதங்களில் பின்னோக்கிப் போனால் எதைக் காண்கிறாய்? என்னுடைய குருவிடம் கேட்டுத் தெரிந்துகொண்டேன். அவர் தன்னுடைய குருவிடம் கேட்டுத் தெரிந்துகொண்டவர். அவருடைய குரு அவருடைய குருவிடம் கேட்டுத் தெரிந்துகொண்டவர். இப்படியே போய்க்கொண்டே இருப்பார்கள். . ஆதியில் என்று கேட்டால் அதற்கும் ஒரு பதில் இருக்கிறது. உலகைப் படைத்த பிரும்மா பிரபஞ்சத்தின் சக்தியாகிய பிரம்மத்திடம் இருந்து கேட்டுத் தெரிந்துகொண்டார் என்பார்கள்.

பிரம்மன் பிரம்மத்திடம் இருந்து தெரிந்துகொண்டான். பிரம்மம் ஸ்தூலமான கடவுள். பிரம்மன் வடிவம் எடுத்த கடவுள். ரூப லாவண்யத்தோடு கூடிய இறைவன் அரூபமான இறைவனிடமிருந்து

தெரிந்துகொண்டான். பிரம்மனிடம் இருந்து கங்கை பிரவகிக்கிறது. ஆச்சாரியருக்கு முன் ஆச்சாரியர் - அந்த ஆச்சாரியருக்கு முன் இன்னோர் ஆச்சாரியர். இப்படிப் போய்க்கொண்டே இருக்கிறது. ஒவ்வொருவரும் நான் கேட்டதைச் சொல்கிறேன் என்கிறார்.

இது ஓர் அருமையான நிகழ்ச்சி. எவரும் ஒரு தனித்தீவு அல்ல என்று சொல்லும் நிகழ்ச்சி. எல்லோரும் எல்லோரையும் சார்ந்தவர் என்று சொல்லும் நிகழ்ச்சி. உன்னிடத்தில் கடந்த காலம் முழுக்க ஈடுபட்டிருக்கிறது என்று சொல்லும் நிகழ்ச்சி. நீ இங்கே தனியாக வந்து தனியாக இருக்கிறவன் அல்ல. திடீரென்று தோன்றிவந்த நீர்க்குமிழ் அல்ல. கடந்தகாலம் முழுக்க உன்னிடம் சுமந்திருக்கிறாய். உன்னுடைய பிரக்ஞை ஒரு சங்கிலித் தொடரில் ஒரு கண்ணி. முழுமையான கடந்தகாலத்தோடு தொடர்புடையது. ஆதியில் இருந்து நடந்துபோனதெல்லாம் உனக்கும் நடந்திருக்கிறது. நீ கடந்தகாலத்தை அதன் முழுமையில் சுமக்கிறவன். இப்படியாகக் காலப் பருமானத்துக்குள் ஒரு தொடர்பு ஏற்பட்டு விடுகிறது. தொடர்பைப்பற்றிய ஓர் உணர்வு தோன்றிவிடுகிறது.

இரண்டுவிதமான சார்புத்தன்மை இருக்கமுடியும். ஒன்று சிறப்பானது. நீ இந்த மரத்தோடு இப்படித் தொடர்புடையவன். இன்றைய சூரியனோடு இப்படித் தொடர்புடையவன். சூரியன் இப்படியாகப் பிற நட்சத்திரங்க ளோடு தொடர்புடையது. பிரபஞ்சத்தில் எல்லாமும் எல்லாவற்றோடும் தொடர்புடையவை. இது ஒருவகைச் சார்புத் தன்மை.

இன்னொரு வகையான சார்புடைமையும் இருக்கிறது. அது காலத்தினூடே போவது. கடந்தகாலம் முழுக்க உன்னிடம் ஈடுபட்டி ருக்கிறது. கடந்தகாலத்தின் விளைவாக நீ வந்திருக்கிறாய். உன்னுடைய விளைவாக எதிர்காலம் வரப்போகிறது. நீ கடந்த காலத்தின் பழம். நீ எதிர்காலத்தின் விதை. இப்படியாக இடமும் காலமும் சார்புடையவை யாகிப் போகின்றன. இரண்டு தளங்களிலும் நீ சார்புடையவனாக இருக்கிறாய்.

அன்றைய ஞானியரிடம் சூட்சுமம் இருந்தது.
ஆழமான புரிதல் இருந்தது.
புரிந்துகொள்ளக்கூட முடியாத ஆழம் இருந்தது.

இது என்ன சூட்சுமமான ஞானம் என்பது? அவர்களுக்கு நேரிடையாகத் தெரிந்திருந்தது. சத்தியத்தை அவர்கள் நேருக்கு நேராகத் தெரிந்து கொண்டவர்கள். இரவல் அறிவல்ல அவர்களுடையது. ஞானம் நேரிடையானது எனும்போதுதான் அது ஞானமே ஆகிறது. இல்லையேல்

அது ஞானம் என்ற முகமூடி போட்டுக் கொண்டிருக்கும் அறியாமைதான். உன்னுடைய அறியாமையை அறிவு என்ற முகமூடி போட்டு மறைத்துக்கொண்டு திரிகிறாய்.

சரி. அது ஏன் ஞானத்தைச் சூட்சுமமான ஞானம் என்று சொல்வது? வெறுமனே ஞானம் என்று சொன்னால் போதாதா? அதைச் சூட்சுமமானது என்று சொல்வதேன்?

அதுதான் விஷயமே. ஞானம் நேரிடையானது என்றாலும் சூட்சுமமானது. இங்கே இப்போது அனுபவ சாத்தியமாவது என்ற வகையில் அது நேரிடையானது. ஆனால் வாழ்வில் எதையும் நேரிடையாகப் பெறமுடியாது என்ற வகையில் அது சூட்சுமமானது. சுற்றிச்சுற்றி வரவேண்டி இருக்கிறது.

புரிந்துகொள்ள முயற்சி செய். முதலாவதாக ஞானம் நேரிடையானது எனும்போது அதை இரவலாக வாங்கிக்கொள்ள முடியாது என்று சொல்கிறேன். இன்னொருவருக்குத் தெரிந்ததை அப்படியே கை நீட்டிப் பெற்றுக்கொள்வது ஞானமாகாது. அப்படி அதை வாங்கி மனதுக்குள் திணித்துக் கொண்டால் அது ஞானமாகிவிடாது. நீயாக அதைச் சந்தித்தாக வேண்டும். இந்தப் பொருளில் ஞானம் நேரிடையானது. அறிவைவிட நேரிடையானது. ஆனாலும் அது சூட்சுமமானது. ஏனென்றால் ஞானத்துக்கு நேர்வழி ஏதும் கிடையாது. சுற்றுப் பாதைதான் இருக்கிறது என்றால் அது எந்தப் பாதை?

ஆனந்தம் வேண்டும் என்றால் ஓர் அம்பு இலக்கை நோக்கிப் போவதைப்போல நீ ஆனந்தத்துக்குப் போய்ச்சேர முடியாது. அப்படிச் செய்தால் அதைத் தவற விட்டுவிடுவாய். உதாரணமாக ஒருவர் உன்னிடம், "ஆத்துக்குப் போயிருந்தேன். அப்படியே நீந்திக் கொண்டிருக்கறப்போ அவ்வளவு அருமையா இருந்துச்சு. வெய்யில்லே அப்படியே மிதந்துக்கிட்டு இருக்கறப்போ அவ்வளவு தளர்வா இருந்துச்சு. கவலையெல்லாம் மறந்து போச்சு. இறுக்கமெல்லாம் மறந்து போச்சு. இந்த உலகத்தையே மறந்து போயிட்டேன். அவ்வளவு ஆனந்தமா இருந்துச்சு. ஆழமா ஒரு பரவசம் அதிலே இருந்து எனக்கு வந்து சேர்ந்துச்சு" என்று சொல்கிறான் என்று வைத்துக்கொள். உனக்கும் ஆசை வந்துவிடுகிறது. "நானும் போய்ப் பார்க்கலாமே!" என்று தோன்றுகிறது. போகிறாய். ஆனால் வெகு நேரிடையாக மகிழ்வைத் தேடிப் போகிறாய். நீந்துவதில் மனம் லயிக்கவில்லை. மிதந்திருப்பதில் மனம் லயிக்கவில்லை. ஆற்றில் மனம் லயிக்கவில்லை. வெய்யிலில் மனம் லயிக்கவில்லை. மெல்லிய காற்றில்

மனம் லயிக்கவில்லை. ஓர் அம்பைப்போல உன் மனம் நேராக மகிழ்ச்சியை நோக்கித் தைக்க ஓடுகிறது. தவற விட்டுவிடுவாய்.

வாழ்க்கைக்குக் கூச்சம் அதிகம். ஆதிக்க உணர்வோடு அதை நோக்கிப் போவோரிடமிருந்து மறைந்து கொள்கிறது. வெகு சூட்சுமமான வழிகளில் சுற்றி வளைத்து அதனிடம் பிரியம் வைத்துப் பேசுகிறவர்களிடமே வந்து சேர்கிறது. கொஞ்சிப் பேசி வாழ்வை மயக்கவேண்டி இருக்கிறது.

வாழ்க்கை ஒரு பெண்ணைப்போல. ஆதிக்க உணர்வோடு அவளிடம் போகக்கூடாது. அவளைக் கற்பழிக்க முடியாது. அப்படியே கற்பழிக்க முடிந்தாலும் வெறுங்கையனாகத்தான் திரும்புவாய். அதிலிருந்து உனக்கு ஏதும் கிடைக்காது. வாழ்வைக் கசக்கி முகர்ந்து பார்க்க முடியாது.

அதைத்தான் பலரும் செய்கிறார்கள். வாழ்வைக் கற்பழிக்கிறார்கள். காதலிப்பதில் ஆபத்து இருக்கிறது. கற்பழிப்பதில் எந்த ஆபத்தும் இல்லை. எந்தப் பொறுப்பும் இல்லையே! ஆனால் பொறுப்புகளை ஏற்றுக்கொள்ளாமல் எதையும் கற்றுக்கொள்ள முடியாது. ஈடுபாடு இல்லையென்றால் நிலை மாறுதல் கிடையாது.

ஆற்றைத் தேடிப் போகிறாய். ஆனால் உன் மனமோ மகிழ்ச்சியைப்பற்றி மட்டுமே நினைத்துக் கொண்டிருக்கிறது. ஆற்றை எங்கே பார்க்கிறாய்? உன்னிடம் உணர்வின் துடிப்பு இல்லை. ஆசை மட்டுமே இருக்கிறது. ஆற்றுக்குள் குதிக்கிறாய். ஆனால் அதில் எந்த மகிழ்ச்சியும் கண்டாயில்லை. ஓய்ந்துதான் போகிறாய். நீந்துகிறாய் என்றாலும் தொடர்ந்து எங்கே ஆனந்தம், எங்கே ஆனந்தம் என்று கேட்டுக்கொண்டே இருக்கிறாய். ''நீ சொன்ன அந்த ஆனந்தம் எங்கே? சூரியன் இருக்கிறான். நதி இருக்கிறது. காற்று அடிக்கிறது. ஆனால் நீ சொன்ன அந்தப் பரவசம் எங்கே?''

இதைத்தான் நேரான முயற்சி என்கிறேன். யாரும் இப்படிப் போய் ஆனந்தத்தைப் பெறமுடியாது. நீந்துவதில் உன்னை நீ மறந்துவிட வேண்டும். ஆனந்தத்தைத் தேடி அங்கே வந்திருக்கிறாய் என்பதை மறந்துவிட வேண்டும். உன்னையும் உன் குறிக்கோளையும் உன் ஆசையையும் மறந்துவிடு. குறிக்கோளை மறந்துவிடும்போது லட்சியத்தைச் சென்று சேர்கிறாய்.

முரண்பட்டுப் பேசுவதாகத் தெரிகிறதா? ஆனால் அதைத்தவிர வேறு எப்படியும் பேசமுடியாது. எனக்கு வேறு வழியில்லை. அப்படித்தான்

வாழ்க்கை இருக்கிறது. இலக்கை மறந்துவிடு. அம்பு இலக்கில் தைக்கிறது. இலக்கை வெறிக்கப் பார்த்துக்கொண்டே இருந்தால் அம்பு தவறிப் போகிறது. உன்னால் சாதிக்க முடிவதில்லை. வீட்டுக்குத் திரும்பி வந்து ''பிரயோசனமில்லே. நானும்தான் போய்ப் பார்த்துட்டேன்'' என்கிறாய்.

ஒருவருக்குத் தியானத்தில் பரவசம் கிடைக்கிறது என்று வைத்துக்கொள். உனக்கும் அந்தப் பரவசம் வேண்டும் என்று ஆசைப்படுகிறாய். அவரைப் பார்க்கும்போதெல்லாம் அவரிடம் இருக்கும் என்னவோ ஒன்று உன்னிடம் இல்லையே என்று ஏங்குகிறாய்.

''அப்படி என்னதான் நடக்கிறது உன்னிடம்?'' என்று கேட்கிறாய்.

அவர், தியானம் அவ்வளவு பரவசமான ஓர் அனுபவம் என்று சொல்லி நீயும் முயன்று பார் என்கிறார்.

நீயும் முயன்று பார்க்கிறாய். ஆனால் உனக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. வாழ்க்கைக்குப் பெண்மையின் இயல்பு இருக்கிறது என்பது உனக்குத் தெரியவில்லை. வாழ்க்கை ஒரு பெண்ணேதான். அவளைக் கொஞ்சவேண்டும். அவளைப் பலவிதங்களிலும் கொஞ்சவேண்டும். சூட்சுமமான பல விளையாட்டுக்களை அவளோடு விளையாட வேண்டும்.

நேராக ஒரு பெண்ணிடம் போய், ''படுக்கப் போகலாமா?'' என்று கேட்டு விடாதே. அவள் போலீசைக் கூப்பிட்டு விடுவாள். கொஞ்சம் கவித்துவத்தோடு போய்ப் பார். வாழ்க்கைக்கு அழகான காதல் கடிதங்களை எழுது. தியானம் என்பது அதைப்பற்றியதுதான். வாழ்க்கைக்குக் காதல் கடிதங்கள் எழுதுவது. ஆழமான உணர்வுகளைக் கொட்டி அனுப்புவது. ஆனால் மென்மையாக, மிக மென்மையாக எழுதி அனுப்புவது.

வாழ்க்கை உன்மேல் பிரியம் கொள்ளும்போது உனக்கு மேலும் மேலும் தைரியம் வருகிறது. என்றாலும் ஜாக்கிரதையாகவே இரு. அதைத் தவறவிட்டு விடலாம். கொஞ்சம் ஆக்கிரமிப்பு உணர்வைக் காட்டினாலும் வாழ்க்கையை இழந்துவிடுவாய். காதல், மகிழ்ச்சி, தியானம், சத்தியம் என்று என்ன பெயர் வேண்டுமானாலும் வைத்துக்கொள். அழகான எதைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்றாலும் மென்மையாகக் கொஞ்சித்தான் பெற்றுக்கொள்ள முடியும். அதனால்தான் லாவோட் சு சொல்கிறார்.

**அன்றைய ஞானியரிடம் சூட்சுமம் இருந்தது.**
**ஆழமான புரிதல் இருந்தது.**
**புரிந்துகொள்ளக்கூட முடியாத ஆழம் இருந்தது.**

அது என்ன புரிதலின் ஆழம்? மற்றவர்களுடைய இடத்தில் உன்னை வைத்துப் பார்க்கமுடியும் என்றால் உன்னுடைய புரிதலில் ஆழம் இருக்கிறது என்று பொருள். மற்றவர்கள் கண்களைக்கொண்டு எதையும் பார்க்கமுடியும் என்கிறபோது உன்னுடைய புரிதலில் ஓர் ஆழம் இருக்கிறது என்று பொருள். மற்றவர்களின் கரத்தைக்கொண்டு ஸ்பரிசிக்கமுடியும் என்றால், மற்றவர்களுடைய ஜீவிதத்தில் இருக்கமுடியும் என்றால், மற்றவருடைய நடுமத்தில் இருக்கமுடியும் என்றால், மற்றவர்கள் வழியாகப் பார்க்கமுடியும் என்றால், மற்றவர்கள் உணர்வதைப்போல உணர்ந்து அவர்கள் சொல்வதைப்போல எதையும் சொல்லி அவர்களை உணர்வதையே உணரமுடியும் என்றால் உன்னுடைய புரிதல் ஆழமான புரிதலாகிறது.

விஷயஞானம் இருக்கிறவன் எப்போதும் குருடனாகத்தான் இருக்கிறான். குறுக்குப் பேச்சு பேசுகிறவனாக இருக்கிறான். தான் சொல்வது எப்போதும் சரியானது. மற்றவர்கள் சொல்வது தவறு என்கிறான். எப்போதும் விவாதித்துக்கொண்டே இருக்கிறான். அவனுடைய வாதங்கள் அருவெறுக்க வைக்கின்றன. எப்போதும் திமிர் பிடித்தவனாக இருக்கிறான். எப்போதும் தற்காப்பு உணர்வோடு செயல்படுகிறான். எதற்கும் இல்லை என்ற பதில்தான் அவனிடம் இருந்து வரும். அப்படிச் சொல்வதில் ஒரு பலம் இருப்பதாக நினைக்கிறான். நீ என்ன சொன்னாலும் மறுத்துப் பேசுவான். ஆமாம் என்று சொல்வதன் பலம் இன்னதெனத் தெரியாதவன் இன்னமும் ஞானியாகவில்லை என்றுதான் பொருள். இல்லை இல்லை என்று சொல்லிக்கொண்டே திரிகிறான். அப்படிச் சொல்லும்போது தனக்கு என்னவோ ஒரு பலம் வந்துவிட்டதாக நினைக்கிறான். நீயும்தான் அதை உணர்ந்து பார்க்கலாம். இல்லை என்று மறுத்துப் பார். உனக்கும் காலரைத் தூக்கிவிட்டுக் கொள்ளலாம்போல இருக்கும். ஆமாம் என்று சொல்லி விட்டால் சரணடைந்து விட்டதைப்போல இருக்கும். ஆமாம் என்று சொல்வது மிகச் சிரமம். எனவேதான் யார் என்ன சொன்னாலும் மறுத்துப் பேசிக்கொண்டே இருக்கிறாய். நீ சொல்வதுதான் எப்போதும் சரி என்கிறாய்.

இது எப்படிச் சாத்தியம்? இந்த உலகத்தில் எத்தனை பேர் இருக்கிறார்கள்! ஒவ்வொருவருக்கும் ஒரு பிரக்ஞை இருக்கிறது. ஒவ்வொருவரும் தத்தமது கோணத்தில் எதையும் பார்க்கிறார்கள். அவர்கள் அத்தனை பேரும் சொல்வது தவறு, நீ சொல்வது மட்டுமே சரி என்பது எப்படிச் சாத்தியம்? இது மிகத் திமிர்பிடித்த வன் முறையான போக்கு. சரியான புரிதல் உள்ளவன் ஒவ்வொருவரும்

தத்தமது வகையில் சரியாக இருக்க உரிமை உள்ளவர்கள் என்பதை ஏற்றுக் கொள்வான்.

ஒரு ஸூபி ஞானி காஸி ஆனார். அவரை ஒரு நீதிபதியாக்கினார்கள். ஞானி. புரிந்து கொள்ளும் பக்குவம் மிக உண்டு அவரிடம். லாவோட் சு சொல்கிற அந்த ஆழ்ந்த புரிதல்.

அவர் விசாரிக்க வேண்டிய முதல் வழக்கு. வாதி தன் கட்சியைச் சொல்ல ஆரம்பித்தார். நன்றாகக் காதுகொடுத்துக் கேட்டுக்கொண்டார். "சரி. மிகச் சரியாகச் சொன்னாய்" என்றார்.

நீதிமன்றக் கிளார்க்குக்கு ஒரே கவலையாகிவிட்டது. பிரதிவாதி சொல்வதை இன்னமும் கேட்கவே இல்லை. ஒரு பக்கத்தை மட்டும் கேட்டுவிட்டு நீதிபதி எப்படிச் சரியாகத்தான் சொன்னாய் என்று சொல்லமுடியும்?

சற்றே சாய்ந்து அவரிடம், "நீதிமன்றத்தின் வழக்கங்கள் உங்களுக்குத் தெரியவில்லை என்று நினைக்கிறேன். இப்படிச் சொன்னால் விசாரணை முடிந்துவிட்டது என்று பொருள். நீங்கள் தீர்ப்புச் சொல்லிவிட்டீர்கள் என்று ஆகிப்போகும். பிரதிவாதி சொல்வதையும் கேட்கவேண்டுமே! அதற்குமுன் எப்படி அது சரி என்று சொல்லலாம்?" என்றான்.

"நீ சொல்வது ரொம்பச் சரி. அவங்க என்ன சொல்றாங்கன்னு கேட்கலாம்" என்றார்.

பிரதிவாதி சொன்னதைக் கவனமாகக் கேட்டார். "சரி, மிகச் சரியாகச் சொன்னாய்" என்றார்.

இவருக்குப் பைத்தியம்தான் பிடித்திருக்க வேண்டும் என்று கிளார்க் நினைத்துக் கொண்டான். அது எப்படி இருவர் சொல்வதும் சரியாக இருக்க முடியும்? மறுபடியும் அவரை நோக்கிச் சாய்ந்து காதில் கிசுகிசுத்தான். "இது என்ன நீங்கள் செய்வது? பைத்தியம் பிடித்துவிட்டதா? இல்லை குடிபோதையில் இருக்கிறீர்களா? எப்படி இருவர் சொல்வதும் சரியாக இருக்கமுடியும்?" என்று கேட்டான்.

அவர், "சரிதான். நீ சொல்வது சரி. எப்படி இருவர் சொல்வதும் சரியாக இருக்கமுடியும்?" என்றார்.

இந்த மனிதரைத்தான் ஆழமான புரிதல் உள்ளவன் என்று சொல்வது இவருக்கு எல்லாமும் சரிதான். உன்னுடைய ஜீவிதத்தின் ஆழத்துக்குப்

போய் நீ எப்படி ஒன்றைப் பார்க்கிறாயோ அப்படியே பார்க்க முடிகிறது அவருக்கு. தன்னுடைய நோக்கில் சிறைப்பட்டுப் போகாதவர் அவர். தன்னுடைய தத்துவம், தன்னுடைய சித்தாந்தம் ஆகிய இவற்றால் தளைப்பட்டுப் போனவர் அல்ல அவர். அவர் திறந்ததொரு நிகழ்வு. உனக்குள் புகுந்து உனக்குள் ஊடுருவிப் பார்த்து நீ ஏன் எதைச் சொல்கிறாய் என்பதைப் புரிந்துகொள்ளக் கூடியவர். நீ சொல்வதுதான் சரி என்று ஏன் நீ சொல்லிக் கொள்கிறாய் என்பதை அவரால் புரிந்துகொள்ள முடியும்.

ஆனால் இப்படிப்பட்டவரைப் புரிந்துகொள்ள முடியாது. அப்படிப் பேசுகிறவரைப் பைத்தியக்காரன் என்பாய். அல்லது லோகம் கடந்த ஒரு ஞானி என்பாய். இந்த உலக நடப்பில் இடையிட அவருக்கு எந்த உரிமையும் இல்லை என்பாய்.

மகாவீரருக்கு இதுதான் நடந்தது. அவர் ஒரு தர்க்க வாதத்தை நிறுவினார். அதைப்போன்ற தர்க்கவாதம் முன்பு இருந்ததே இல்லை. அதற்கு அவர் ஸ்யத்வாத் என்று பெயரிட்டார். இருக்கலாம் என்பதன் தர்க்கம்.

நீ என்ன சொன்னாலும் சரிதான். நீ சொல்வதும் சரியாகத்தான் இருக்கலாம் என்பார். யாராவது ஒருவர் வந்து எனக்குக் கடவுள்மீது நம்பிக்கை என்று சொன்னால் கடவுள் இருக்கலாம்தான் என்பார். எப்போதும் இருக்கலாம்தான்.

எப்படி நீ சொல்வது முழுக்கத் தவறாக இருக்கமுடியும்? உனக்கென்று ஒரு ஜீவசக்தி இருக்கிறது. உனக்குள்ளும் இறைவன் இருக்கிறான். பிறகெப்படி நீ சொல்வது முழுக்கத் தவறாக இருக்க முடியும்? அதில் ஏதாவது கொஞ்சமாவது சரியாக இருக்கவேண்டும். அதைப் புரிந்துகொள்வது சிரமமாக இருக்கலாம். அதைப் புரிந்துகொள்வது முடியாது போகலாம். ஆனால் நீ சொல்வதில் ஏதாவது கொஞ்சமாவது சரியாக இருக்கவேண்டும். கடவுள் எல்லோரிடமும் இருக்கிறார் என்றால் ஒவ்வொருவருக்கும் சரியாக இருக்க உரிமை இருக்கிறது.

மகாவீரர் ஆழ்ந்து பார்க்கிறவர். அவர் உட்கார்ந்திருக்கிறார். இன்னொருவர் வருகிறார். ''நான் கடவுளை நம்புவதில்லை. கடவுளே இல்லை'' என்கிறார். மகாவீரர், ''நீ சொல்வதும் சரியாகத்தான் இருக்க வேண்டும். ஒரு வகையில் கடவுள் இருக்கிறார். ஒரு வகையில் இல்லாதிருக்கிறார்'' என்று சொல்வார். இப்படியாக அவர் தர்க்கத்தில் ஒரு புதுமையைப் படைத்தார். தர்க்கத்துக்கு ஒரு புதிய பருமானம் தந்தார்.

இரண்டுவிதமான தர்க்க வாதங்கள் இருக்கின்றன. ஒன்று அரிஸ்டாட்டிலுடையது. இன்னொன்று மகாவீரருடையது. அரிஸ்டாட்டில் 'அ' என்பது 'அ' ஆக மட்டுமே இருக்க முடியும் என்பார். அது 'ஆ' 'ஆக' முடியாது என்பார். மகாவீரரோ 'அ' என்பது 'ஆ' ஆகவும் இருக்கலாம் என்பார். 'ஆ' ஆக மட்டுமல்ல. அது 'இ' ஆகக்கூட இருக்கலாம். அல்லது 'ஈ' ஆகக்கூட இருக்கலாம் என்பார். அப்படியே அது 'நூ' வரைக்கும் எதுவாகவும் இருக்கலாம் என்பார். ஒரே பொருளைப் பல கோணங் களில் இருந்தும் பார்க்கலாம் என்பார். ஏழு கோணங்கள் இருக்கின்றன என்பார்.

மகாவீரரைப் புரிந்துகொள்வது சிரமம். அதனால்தான் அவருடைய போதனைகளைப் பின்பற்றுகிறவர்கள் மிகப் பலராக இல்லை. அவர் சொன்னதை எல்லாம் அப்படியே பின்பற்றுவது முடியாத காரியம். தம்மைச் சமணர்கள் என்று சொல்லிக் கொள்கிறவர்கள்கூடச் சமணராகப் பிறந்துவிட்டதால் சமணராக இருக்கிறவர்கள்தான். மகாவீரர் சொன்னதை எல்லாம் அப்படியே பின்பற்றக்கூடிய ஒரு சமணரைக்கூட நான் கண்டேனில்லை.

நான் ஒரு சமண முனிவரோடு பேசிக் கொண்டிருந்தேன். சமண முனிவர்களில் மிகச் சிறந்தவர்களில் ஒருவர். அவரிடம் ''ஸ்யத்வாத் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''அது முழுக்கச் சத்தியமானது'' என்றார்.

நான், ''அப்படியானால் உங்களுக்கு ஸ்யத்வாத் பற்றி ஒன்றும் தெரியாது. இருக்கலாம் என்றுதான் சொல்லியிருக்க வேண்டும். மகாவீரரைப்பற்றிப் பேசும்போதுகூட அவர் சொல்வதும் சரியாக இருக்கலாம் என்றுதான் சொல்ல வேண்டும்'' என்றேன்.

ஆனால் எந்தச் சமணராவது இருக்கலாம் என்று சொல்வாரா என்ன? மகாவீரர் சொன்னது நூற்றுக்கு நூறு சத்தியமான வார்த்தைகள் என்றுதானே சொல்வார்? அப்படிச் சொல்லும்போது சமணத்தின் அடிப்படையையே அவர்கள் இழந்து விடுகிறார்கள். சமணம் முழுக்கச் சரியான மதம் என்பார்கள். ஆனால் சமணத்தின் அடிப்படையே எதுவும் முழுக்கச் சரியாக இருக்கமுடியாது என்பதுதான்.

முல்லா நஸ்ருதீனுடைய மனைவி ஸோனாவைப் பார்க்கப் போனாள். ஸோனாவா - அவள்தான் டேரட் அட்டைகளைப் பார்த்துக் குறி சொல்கிறவள். திரும்பி வந்தவள் மிகச் சோகமாக இருந்தாள்.

எதிர்காலம் நம்மை நிம்மதியாக இருக்கவிடாது. எதிர்காலத்தைப் பற்றிய எதுவும் நம் நிம்மதியைக் கெடுத்துவிடும். எதிர்காலத்தைப் பற்றி எதுவும் தெரிந்து கொள்ளாமல் இருப்பதுதான் நல்லது. ஏனென்றால் எதிர்காலத்தைப் பற்றி எதைத் தெரிந்து கொண்டாலும் அது நிகழ்காலத்தைப் பாதித்து விடுகிறது. நிம்மதியைக் கெடுத்து விடுகிறது.

அவள் பதைபதைத்துக் கொண்டு இருந்தாள். முல்லா, ''என்னாச்சு?'' என்று கேட்டான்.

அவள், ''டேரட் அட்டை பார்க்கப் போயிருந்தேன். அவள் நல்லாப் பாக்கறவ. அவ சொன்னா... அவ சொன்னதைக் கேட்டதுலே இருந்து எனக்கு ரொம்பத்தான் கவலையா இருக்குது'' என்றாள்.

முல்லாவோ, ''கவலையே படாதே. வாழ்க்கையிலே எதுவுமே நிச்சயமில்லே. எதையும் முன்கூட்டியே சொல்லமுடியாது. முட்டாப் பசங்கதான் எதைப் பத்தியும் நிச்சயமாப் பேசுவாங்க. இருப்பாங்க'' என்றான்.

''ரொம்ப நிச்சயமாத்தான் சொல்றீங்களா?''

''சர்வ நிச்சயமாத்தான்'' என்றான்.

முட்டாள்கள்தான் சர்வ நிச்சயம் என்பார்கள். எதைப்பற்றியும் சர்வ நிச்சயமாக யாராவது இருந்தால் அவன் சர்வ முட்டாள். எந்தச் சமணருக்கும் மகாவீரர் சொன்னது சரியாக இருக்கலாம் என்று சொல்லும் தைரியம் இல்லை. மகாவீரர் சொல்வதை மறுப்பவர் சொல்வதும் சரியாக இருக்கலாம்தான் என்று சொல்லும் தைரியம் இல்லை. எந்தச் சமணருக்கும் இல்லைதான். அதனால்தான் மகாவீரரைப் புரிந்துகொண்ட எந்தச் சமணரும் உலகில் இல்லை என்கிறேன். அது மிகச் சிரமம்.

**அன்றைய ஞானியரிடம் சூட்சுமம் இருந்தது.**
**ஆழமான புரிதல் இருந்தது.**
**புரிந்துகொள்ளக்கூட முடியாத ஆழம் இருந்தது.**

எந்த அளவுக்கு உனக்குள் நீ ஆழ்ந்து போகிறாயோ அந்த அளவுக்கு உன்னை மற்றவர்கள் புரிந்துகொள்வது சிரமமாகிப் போகிறது. அவர்கள் மேம்போக்காக வாழ்கிறவர்கள். நீயும் மேலாக வாழ்ந்திருந்தால் எந்தச் சிரமமும் இருக்காது. அவர்கள் உன்னைப் புரிந்து கொள்வார்கள். ஆனால் ஆழப்போகும்போது உன்னுடைய ஆழத்துக்குள் அமிழ்ந்து போகும்போது ஒரு குறிப்பிட்ட புள்ளிக்குமேல் நீ புரிந்துகொள்ள முடியாதவனாக

ஆகிப்போகிறாய். அவர்களைத் தாண்டிப் போய்விடுகிறாய். அவர்களுக்குப் புரியாத ஆழத்துக்குப் போய்விடுகிறாய்.

ஓரிரண்டு நாட்களுக்கு முன் ஒரு சன்னியாசி என்னைப் பார்க்க வந்தார். ''உங்க லெக்சர்களைக் கேட்க வர எனக்கு முடியல்லே. நீங்க போர் அடிக்கறீங்க'' என்றார்.

''வரவேண்டாம். வரவே வேண்டாம்'' என்றேன்.

என்னுடைய லெக்சர்கள் பற்றி ஏதோ சொல்லிக் கொண்டிருக்கிறோம் என்று அந்த ஆள் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும். ஆனால் அவர் அவரைப் பற்றித்தான் சொல்லிக் கொண்டிருந்தார். அவருக்குப் புரியாத அளவுக்குப் போய்விட்டது என்னுடைய பேச்சு என்கிறார். அந்த அளவுக்கு ஆழமான சிந்தனைகளுக்குள் அவர் போகமுடியாது என்று சொல்லி விட்டார். அதுவெல்லாம் அவரைத் தாண்டிப் போய்விட்ட விஷயம் என்கிறார். அதனால்தான் அவருக்கு அந்தச் சலிப்பு.

இரண்டு விதங்களில் சலிப்பு வரும். ஒன்றைத் திரும்பத் திரும்ப ஒரே மாதிரியாகச் சொல்லிக் கொண்டிருந்தால் சலிப்பு வந்துவிடும். தாலாட்டு அப்படிப்பட்டதுதான். ஒரே வரியைத் திரும்பத் திரும்பப் பாடிக் கொண்டிருந்தால் சலித்துப் போகும். குழந்தை தூங்கிப் போகிறது. தூக்கம் பிடிக்காதவர்கள் அதைத்தான் செய்யவேண்டும் என்கிறேன். இதற்குத்தான் மந்திரங்கள் வெகு உதவியாக இருக்கின்றன. மகரிஷி மகேஷ் யோகியின் ஆழ்நிலைத் தியானம் தூக்கம் பிடிக்காதவர்களுக்கு மிகச் சௌகரியமானது. அவர்களுக்கென்றே கண்டுபிடித்தது. மனதுக்குள் ஒரே மந்திரத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டே இருந்து பார். புதிதான ஒன்றும் இல்லை என்பதால் மனம் சலிப்புக் கொள்கிறது. எந்த உணர்வுத் தூண்டலும் இருப்பதில்லை. ஒரே வார்த்தை. திரும்பத் திரும்ப அதே வார்த்தைதான். அப்படியே தூங்க வேண்டியதுதான்.

அல்லது உனக்குப் புரியாத ஒன்று எனும்போது சலிப்புத் தோன்றிவிடும். உனக்குப் புரியாத அளவுக்கு ஆழமான விஷயம் பற்றிப் பேசினால் உனக்குச் சலிப்பு வந்துவிடும்.

புரிந்துகொள்ளக்கூட முடியாத ஆழம் இருந்தது.

எந்த அளவுக்கு உனக்கு விழிப்பு இருக்கிறதோ அந்த அளவுக்குத் தான் புரிந்துகொள்ள முடியும். அதைத்தாண்டி எதுவும் புரியாது போய்விடும். உன்னுடைய புரிதல் உன்னுடைய வரையறைகளுக்கு உட்பட்டது. ஞானிகளைப் புரிந்துகொள்ள வேண்டும் என்றால்

உன்னுடைய விழிப்புணர்வு அதீதமானதாக இருக்கவேண்டும். எந்த அளவுக்கு உன் விழிப்பு இருக்கிறதோ அந்த அளவுக்கு அவர்களுக்குள் போய்ப் புரிந்துகொள்ள முடியும். முழுக்க விழிப்படைந்த ஆன்மா வோடுதான் நீ லாவோட் சூ சொல்வதைப் புரிந்துகொள்ள முடியும். அவர் தம்மை மூடி வைத்துக் கொண்டிருக்கிறார் என்று பொருள் அல்ல. நீ அவருக்குள் நுழைய முடியவில்லை என்றுதான் பொருள். இன்னமும் அதற்கான திறன் உனக்கு வரவில்லை என்றுதான் பொருள்.

புரிந்துகொள்ள முடியாது என்பதால்
விவரித்துப் பார்க்கலாமா?

உண்மையான ஞானியரைப் புரிந்துகொள்ள முடியாமல் போய்விடுவதால் அவர்களைப் பார்க்கும்போது கலங்கிப் போகிறாய். அவர்களைப் பற்றிய முரண்பட்ட வதந்திகள் வந்துவிடுகின்றன. சுற்றிச் சுற்றி அப்படிப்பட்ட தவறான வதந்திகள்தான். கர்ட்ஜீஃப் கடவுள் என்கிறான் ஒருவன். கர்ட்ஜீஃப் சாத்தான் என்கிறான் இன்னொருவன். இரண்டுமே வதந்திகள்தான். ஏனென்றால் ஆழ்நிலையில் இருக்கும் ஞானி கடவுளும் சாத்தானும் ஒருசேர இருக்கிறவர்.

விவரித்துப் பார்க்கலாமா?

எனவே மக்கள் அவர்களை விவரித்துப் பார்க்கிறார்கள். எச்சரிக்கையானவர் என்கிறார்கள். ஞானி எச்சரிக்கையானவராகத்தான் தெரிவார். ஆனால் அவர் எச்சரிக்கையாக இருக்கிறார் என்று சொல்ல மாட்டேன். அவர் சுதாரித்தவராக இருக்கிறார். இரண்டுக்கும் இடையே வித்தியாசம் இருக்கிறது. எச்சரிக்கையோடு இருக்கிறவன் பயந்தவன்.

உதாரணமாக ஒருவன் இரவு நேரத்தில் காட்டு நடுவில் வழிதவறிப் போய்விட்டான் என்று வைத்துக்கொள். வெகு ஜாக்கிரதையாக நடப்பான். ஒவ்வோர் அடியிலும் ஆபத்து இருக்கிறது. மரணம் காத்திருக்கிறது. எனவே ஜாக்கிரதையாக நடப்பான். அந்த ஜாக்கிரதையால் அவன் சுதாரித்த நிலையில் இருப்பான். ஏதாவது ஆபத்து என்று தெரிந்தால் இன்னமும் அதிகமான சுதாரித்த நிலைக்கு வந்து விடுகிறான். இதை ஜாக்கிரதை என்று சொல்லலாம். ஆனால் ஜாக்கிரதையாக இருக்க ஒருவன் ஓரளவுக்குச் சுதாரித்தவனாக இருக்கவேண்டி இருக்கிறது. இரண்டும் தாமாக நடக்கின்றன. ஜாக்கிரதையின் இயல்பான நிழல்தான் சுதாரித்த நிலை.

ஆனால் நமக்குச் சுதாரிப்பு என்பது என்ன என்று தெரியாது. அதனால் ஒரு புத்தர், ஒரு ஞானி நடந்து போகும்போது அவர் வெகு எச்சரிக்கையாக

இருப்பதைப்போலத் தெரிகிறது. அவர்களுடைய சுதாரிப்பை நாம் புரிந்துகொண்டது அவ்வளவுதான்.

**பனிக்காலத்து ஓடையைக் கடப்பதைப்போல ஜாக்கிரதை யாக...**

அவர் எப்போதும் ஜாக்கிரதையாக இருப்பதாகத்தான் நமக்குப் படுகிறது.

ஆபத்து சூழ்ந்திருக்கும்போது தீர்மானமற்று இருப்பதைப்போல...

தவறு. எந்த ஞானியும் எப்போதும் தீர்மானமற்று இருப்பதில்லை. ஆனால் முட்டாள்களைப்போல அவர் தீர்மானவராகவும் இருப்பதில்லை. வாழ்வைப்பற்றிய எதற்கும் அவர் ரெடிமேட் தீர்வுகளைக் கையில் வைத்துக்கொண்டு திரிவதில்லை. அதனால்தான் அவர் தீர்மானமற்று இருப்பதுபோலத் தெரிகிறது. அவர் ஏற்கெனவே செய்துவிட்ட முடிவுகளின்படி வாழ்கிறவர் அல்ல. திறந்த ஜீவிதம் அவருடையது. என்னதான் நடந்தாலும் சரியே என்று திறந்த ஜீவிதத்தில் இருக்கிறவர் அவர். அவருடைய மனதில் முடிவுகள் என்று ஏதும் இல்லை. தன்னுடைய முடிவுகளை அவர் வாழ்வின்மீது திணிப்பதில்லை. அவர் சுதாரித் திருக்கிறார். வாழ்க்கை தன் முடிவுகளுக்குத் தானாகப் போய்ச்சேர உதவியாக இருக்கிறார். வாழ்வோடு ஒத்துழைக்கிறார். தன்னைத் திணிப்பதில்லை. இரண்டுக்கும் வித்தியாசம் இருக்கிறதுதான்.

ஏற்கெனவே எடுத்துவிட்ட முடிவுகளின்படி வாழ்கிறவர்கள்தானே நாம்! உதாரணமாக நீ என் பேச்சைக் கேட்க வந்திருக்கிறாய். யாரோ ஒருவர் உன்னிடம் என்னைப்பற்றிச் சொல்லியிருக்க வேண்டும். உனக்கு நண்பன். உன்னிடம் என்னைப்பற்றிச் சொல்லியிருக்கிறான். என்னைப் பாராட்டிப் பேசினான். அவன் சொன்னதைக் கேட்ட உனக்கு என்மேல் மதிப்பு தோன்றியிருக்கிறது. எனவே என் பேச்சைக் கேட்க, ஏற்கெனவே செய்துவிட்ட ஒரு முடிவோடு வந்திருக்கிறாய். நான் நல்லவன் என்ற முடிவு. இந்த முடிவின் வழி என் பேச்சைக் கேட்பாய். என்னைப்பற்றிய உன் அபிப்பிராயம் வலுவடைகிறது. திரும்பி வீட்டுக்குப் போனபின் அவர் சொன்னது சரிதான், நண்பன் சரியாகத்தான் சொன்னான் என்று நினைத்துக் கொள்கிறாய்.

அதே காலை நேரம் இன்னொருவர் என் பேச்சைக் கேட்க வந்திருக்கிறார் என்று வைத்துக்கொள். என்னைப் பிடிக்காத ஒருவரைச் சந்தித்திருக்கிறார். என்னைப்பற்றி நிறையத்தான் அவர் சொல்லியிருக்

கிறார். நான் தவறான பேர்வழி என்று வந்தவரை ஒப்புக்கொள்ள வைத்திருக்கிறார். என்றாலும் என்னதான் பேசுகிறார் என்ற ஆர்வத்தில் இங்கே வந்திருக்கிறார். தவறான பேர்வழிகளைப் பற்றியும்தான் நாம் ஆர்வம் கொள்கிறோமே! அன்று காலை அவர் என் பேச்சைக் கேட்கும்போது அவர் ஏற்கெனவே என்னைப்பற்றி என்ன முடிவோடு வந்திருக்கிறாரோ அதன்வழி என் பேச்சைக் கேட்கிறார். அவருடைய முடிவுகளும் வலுவடையத்தான் செய்யும்.

எந்தத் தீர்மானமும் இல்லாமல் என்னிடம் வருகிறவர்கள்தான் என் அசலான முகத்தைப் பார்க்கமுடியும். ஒரு கண்ணாடியைப்போல அவர்கள் என்னிடம் வந்திருக்க வேண்டும். திறந்த மனதோடு என் பேச்சைக் கேட்க வந்திருக்கவேண்டும்.

ஞானி தீர்மானமற்று இருப்பவர் அல்ல. ஆனால் எந்த முடிவுகளின்பாற்பட்டும் வாழ்வதில்லை என்பதால் தீர்மானமற்றவர் போலத் தெரிகிறார். கணத்துக்குக் கணம் வாழ்கிறவர். வாழ்க்கை எதைக்கொண்டு வருகிறதோ அதைப் புத்தம் புதிய பிரக்ஞையோடு எதிர்கொள்கிறார். ஏற்கெனவே எடுத்துவிட்ட முடிவுகளின் சுமையைச் சுமந்திருக்கும் பிரக்ஞையோடு அல்ல.

நீயோ உன் முடிவுகளின் வழி எதையும் பார்க்கிறாய். அதற்கு எதையும் நீ கடந்த காலத்தின் வழியாகப் பார்க்கிறாய் என்று பொருள். அதற்கு உன்னுடைய அனுபவத்தின் வழியாகப் பார்க்கிறாய் என்று பொருள். உன்னுடைய புத்தியின் வழியாகப் பார்க்கிறாய் என்று பொருள்.

வாழ்வோடு நேரிடையாகத் தொடர்பு கொள்வதே இல்லை. உனக்கும் வாழ்வுக்கும் இடையே ஒரு அதிர்ச்சி தாங்கி இருக்கிறது. உன் முடிவுகள்தான் அந்த அதிர்ச்சிதாங்கியாக இருக்கிறது. வாழ்வை நேரிடையாகத் தொட்டுப் பார்க்கத் தயங்குகிறாய்.

**பனிக்காலத்து ஓடையைக் கடப்பதைப்போல ஜாக்கிரதையாக...**

அவர் எச்சரிக்கையாக இருப்பதில்லை. சுதாரிப்போடு இருக்கிறார்.

**ஆபத்து சூழ்ந்திருக்கும்போது தீர்மானமற்று இருப்பதைப் போல...**

இல்லை. தீர்மானமற்று இருப்பதில்லை. எந்த முடிவுகளின் வழிப் போகவும் தயாராக இருப்பதில்லை.

விருந்தாளியைப்போலக் கட்டுப்பாடாக...

இல்லை. அவர் கருத்தூன்றியவராக இருப்பதில்லை. ஆனால் அப்படி இருப்பதாகத் தோன்றக் காரணம் அவரிடம் ஆழமிருக்கிறது என்பதுதான். வறட்டுப் பேர்வழியைப்போல அவர் சிரிப்பதில்லை. அதிகபட்சம் புன்னகை செய்கிறார். அதுவும்கூட அதிகம் இல்லை. அவருடைய ஜீவிதம் முழுக்க அழகால் நிறைந்திருப்பதால் கருணையால் நிறைந்திருப்பதால் அவர் புன்முறுவல்கூடச் செய்யவேண்டியதில்லை. அவரிடம் அவ்வளவு மகிழ்ச்சி நிறைந்திருக்கிறது.

அதிகம் சிரிக்கிறவர்கள் உண்மையில் அதிகம் துக்கித்திருக்கிறவர்கள் தான் என்று சொன்னால் உனக்கு ஆச்சரியமாக இருக்கும். சிரிப்பில் அவர்கள் தம் துக்கத்தை மறைத்துக்கொண்டு திரிகிறார்கள். சிரித்துச் சிரித்துத் தாம் மகிழ்ச்சியாக இருப்பதாக அவர்கள் தம்மையே முட்டாளாக்கிக் கொண்டிருக்கிறார்கள். சத்தமாகச் சிரிக்கிறவர்களுக்கு அடி ஆழத்தில் ஆழமான காயங்கள் இருக்கின்றன. அந்தக் காயங்களைப் பார்க்க அவர்கள் தயாராக இருப்பதில்லை.

பிரெடெரிக் நீட்ஷேயிடம் ''ஏன் அவ்வளவு சிரித்துக்கொண்டே இருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்கள். அவர் சொன்னாராம். அவர் வெகு உண்மையானவர். நேர்மையானவர். பைத்தியம் பிடிக்கும் அளவுக்கு நேர்மையானவர். இந்தப் பைத்தியம் பிடித்த உலகில் நீ நேர்மையானவனாக இருந்தால் மிக மோசமான விளைவுகள்தான் இருக்கும். அவர் சொன்னாராம், ''நான் சிரிக்கவில்லை என்றால் அழுதுவிடுவேன். அதுதான் சிரித்துக்கொண்டே இருக்கிறேன். நான் அழ ஆரம்பித்து விடுவேன். அது தர்ம சங்கடமாகப் போகும். என்னுடைய கண்ணீரை என் சிரிப்புக்குள் மறைத்துக் கொள்கிறேன்.''

ஞானி உனக்குக் கருத்தூன்றியவராகத் தெரிகிறார். அது உன்னுடைய வியாக்கியானம்தான். அவர் அப்படி இருப்பதில்லை. அவர் வறட்டுப் பேர்வழி அல்ல. ஆழம் குறைந்த நதியைப் பார். அதிகம் சத்தம் போடும். ஆழமான நதி சத்தமில்லாமல் ஓடுகிறது. ஏனென்றால் அது ஓடுவதே இல்லை. நகர்கிறது. ஆனால் மிக ஆழமாக நகர்கிறது என்பதால் சத்தம் கேட்பதில்லை.

ஞானி தன் அகத்தகத்தின் ஆழத்தில் சிரித்துக் கொண்டிருப்பவர். அவருடைய சிரிப்பு உதட்டுக்கு ஏறுவதில்லை. அவருடைய சிரிப்பைக் காணவேண்டும் என்றால் அவரைப்போல ஆகிவிட வேண்டும்.

உருக ஆரம்பித்த பனிக்கட்டிபோலத் தன்னைக் கரைத்தவராக...

ஞானி எளிமையானவராக, தான் என்ற உணர்வைக் கழித்தவராக இருப்பதைப்போல உனக்குத் தெரிகிறது. ஞானம் என்றாலே அடக்கமாக இருப்பது என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய். ஞானி தான் என்ற உணர்வில்லாதவர். அவ்வளவுதான். ஞானி எளிமையானவர் என்று சொல்லமாட்டேன். எளிமையாக இருப்பதுகூட ஒருவகையான அகந்தைதான். பாலிஷ் போட்ட தன்முனைப்பு. அடக்கமாக இருப்பது பழக்கப்படுத்திக்கொண்ட ஓர் அகந்தை. தான் என்ற உணர்வு இல்லை என்றால் நீ எப்படி அடக்கமாக இருக்க முடியும்? திமிரோடு இருக்கமுடியாது என்றால் அடக்கமாக இருக்கவும் முடியாது. இரண்டும் ஒன்றாகவே இருக்கின்றன. ஒரே நிகழ்வின் இரண்டு பக்கங்கள்தான் அவை.

வேலையாட்கள், சிப்பந்திகள் என்று மிகப் பணிவாக இருப்பவர்களுடைய கண்களை நன்றாகப் பார். பேச்சிலும், செய்கைகளிலும் பணிவு தெரியும். என்றாலும் கண்களில் திமிர் பளபளக்கும்.

ஒருத்தர் சாக்ரெட்டெஸைப் பார்க்க வந்தார். சரியான பக்கிரி. வெகு பணிவானவர். புதுத்துணி போடுவதே இல்லை. அந்த அளவுக்கு அடக்கமானவர். எளிமையானவர். அப்படியே யாராவது புதுத்துணியை அவருக்குக் கொடுத்தால் முதலில் அதைக் கிழித்து அழுக்காக்கி அப்புறம்தான் போட்டுக் கொள்வார். சாக்ரெட்டெஸைப் பார்க்க வந்தார். அவருடைய உடையில் ஏகத்துக்கு ஓட்டைகள். சாக்ரெட்டெஸ் அவரிடம், ''உனக்கு அடக்கமாக இருப்பதாக நினைப்புத்தான். உன்னுடைய ஓட்டைகள் வழியே உன் அகந்தையைக் காண்கிறேன்...'' என்றார்.

அகந்தை பணிவாக இருப்பதைப்போல நடிக்கமுடியும். தான் என்ற உணர்வைக் கழித்தவர்கள் உண்மையில் எளிமையானவர்கள் அல்ல. அவர்கள் சாமர்த்தியசாலிகள். ஞானியின் ஆழத்துக்குப் புகுந்து பார்க்க முடியாதவர்களுக்கு ஞானி தன்னைக் கழித்தவராகத் தெரிவார். அவருக்குத் தான் என்ற உணர்வே இல்லாதபோது தன்னை எப்படிக் கழிப்பது? தான் என்ற உணர்வே இன்றி அவர் வாழ்கிறார். எந்தத் திமிரும் இல்லாமல் எந்தப் பணிவும் இல்லாமல் வாழ்கிறார்.

இழைக்காத மரக்கட்டைபோல அசலாக...

ஞானி இழைக்காத மரத்தைப்போலக் கரடுமுரடாகத் தெரிகிறார் என்கிறாய். அவருடைய இயல்பு மிகவும் ஆழ்ந்ததாக இருக்கிறது. அவருடைய சூட்சுமத்தில் ஆழம் அதிகமிருக்கிறது. மேற்புறத்தை மட்டுமே

நீ தொட்டுப்பார்க்க முடிகிறது. அந்தச் சொரசொரப்பு மேற்புறத்தில் மட்டுமே இருக்கிறது.

குர்ட்ஜீஃபைப் பற்றிப் பேசும்போது அவர் கடுமையானவராக இருந்தார் என்பார்கள். அவரைக் கண்டாலே பிறர் ஓடி ஒளிந்து கொள்வார்களாம். அவருக்கு அருகில் இருப்பது வெகு சிரமம் என்பார்கள். ஆனால் அப்படி இருந்து பார்த்தவர்களுக்குத்தான் அவர் எவ்வளவு ஆழ்ந்த கருணையுடையவராக இருந்தார் என்பது தெரியும்.

இயற்கை என்ன செய்திருக்கிறது பார். எதுவெல்லாம் மிக மென்மையாக இருக்கிறதோ அதற்கெல்லாம் கெட்டியான பாதுகாப்புத் தந்து வைத்திருக்கிறது. விதைக்குமேல் கொட்டை. அதுவும் மட்டைக்குள். விதை மிக மென்மையானது. அப்படி இருக்கவேண்டி இருக்கிறது. அப்போதுதான் அதிலிருந்து முளை வெடித்துக் கிளம்பமுடியும். ஆனால் கெட்டியான ஓடு அதை மூடிக்கொண்டிருக்கிறது. இது வெகு இயல்பானது.

மனிதனிடமோ இதற்கு நேர் எதிரிடையைத்தான் பார்க்கிறாய். புறத்தில் மிக மென்மையானவனாக இருக்கிறான். ஓடும் கொட்டையும் மென்மையாக இருக்கின்றன. உள்ளே இருக்கும் விதையோ மிகக் கடினமாக இருக்கிறது. இது வக்கிரம். இயற்கையில் இயல்பானது வெளியே கடினமாகவும் உள்ளே மென்மையாகவும் இருப்பது. வெளியே கடினமாக இல்லையென்றால் உள்ளே மென்மையாக இருப்பது இயலாது. உள்ளே இருக்கும் மென்மையை வெளியே இருக்கும் கடினமானது பாதுகாக்க வேண்டி இருக்கிறது.

ஆனால் மனிதனிடம் இதனுடைய நேர் எதிர்மறையைத்தான் பார்க்கிறாய். இதைத்தான் பாசாங்கு என்கிறேன். வெளியே மென்மை. வெண்ணைபோல மென்மை. உள்ளேயோ எந்த அளவுக்கு ஒருவரைத் தெரியுமோ அந்த அளவுக்கு அவர் கடின சித்தம் உள்ளவராக இருக்கிறார். இது வக்கிரம்.

இப்படி இருக்கக்கூடாது. இதைத்தான் கனவானாக இருப்பது என்கிறாய். நாகரிகமானவன். பண்பாடுள்ளவன். ஒழுக்கமுள்ளவன். ஆன்மிகவாதி. வெளியே அவ்வளவு மென்மை. உள்ளே அவ்வளவு கடுமை. இது காரிய சாத்தியமில்லாததாக இருக்கவேண்டும். இது எப்படிச் சாத்தியமாகிறது என்றால் மனிதனுக்கு மட்டுமே பாசாங்கும் பசப்பும் தெரியும் என்பதால்தான்.

ஞானி இயற்கையின் ஒரு பகுதி. அவரிடம் எல்லா வக்கிரங்களும் தோற்றுப் போகின்றன. வெளியே முரட்டுத்தனமாக இருப்பவர் உள்ளே மென்மையானவராக இருக்கிறார். ஞானியிடம் மிகப் பொறுமையாக இருக்கவேண்டி இருக்கிறது. கொன்று விடுவாரோ என்ற அளவுக்குப் பயந்துபோய் அவரிடம் இருந்து தப்பித்து ஓடும் சந்தர்ப்பங்கள் அதிகம்தான். அல்லது ஆறுதல் தேடிவந்த உனக்கு அதிர்ச்சி தரலாம். அன்பைத் தேடி வந்தாய். ஆனால் எந்த அன்பும் அவரிடம் இருந்து வருவதாகத் தெரியவில்லை. உன்னைப் பார்க்கவே மாட்டேன் என்கிறாரே. உன்னைக் கவனிக்கவே மாட்டேன் என்கிறாரே.

கருணை வேண்டிவந்த உன்னிடம் கடுமையாக நடந்து கொள்கிறாரே. தப்பித்து ஓடத்தான் நினைக்கிறாய். ஞானி எப்போதும் அப்படித்தான் இருப்பார். ஏனென்றால் அவர் மிக இயல்பாக இருப்பவர். வெளியே கடுமையாகவும் உள்ளே கருணையோடும் இருப்பது ஒரு சௌகரியமான ஏற்பாடுதான்.

மரத்தின் பட்டையைப் பார். அவ்வளவு கடினமாக இருக்கிறது. உள்ளே போய்ப் பார். மென்மையான மரத்தைக் காண்கிறாய். உள்ளே போகப்போக இன்னும் இளக்கம்தான் அங்கே. நடுமத்தில் ஜீவிதம் இருக்கிறது, அதீத மென்மையில். அதைப் பாதுகாக்கத்தான் வேண்டும்.

இழைக்காத மரக்கட்டைபோல அசலாக...

பள்ளத்தாக்கைப்போலத் திறந்த மனத்தராக...

சேற்றில் மண்ணும் நீரும் கரைந்திருப்பதைப்போல
மற்றவரோடு எளிதாகக் கலந்து உறவாடுகிறவராக...

ஞானி திறந்த மனத்தராக உனக்குத் தெரிகிறார். ஆனால் அவர் மனம் கழிந்தவர். மனம் திறந்தவர் அல்ல. நீ மனம் திறந்தவனாக இருக்கலாம். அல்லது மூடிய மனத்தனாக இருக்கலாம். ஞானியோ மனம் கழிந்தவர். அந்தக் கழிந்த மனம்தான் உனக்குத் திறந்த மனமாகத் தெரிகிறது. அது புரிந்துகொள்ள முடியாத ஆழ்ந்த மனமாக இருக்கிறது. அதிகபட்சம் திறந்த மனத்தராக இருக்கிறார் என்று மட்டும் உனக்குத் தெரிகிறது. ஆனால் மூடி வைத்திருக்க அவரிடம் மனமே இல்லை என்பது உனக்குத் தெரிந்திருக்க வில்லை. அவர் திறந்த மனத்தர் அல்ல. இல்லாத மனத்தர். அவருடைய வீட்டின் கதவுகள் எப்போதும் விரியத் திறந்திருக்கின்றன என்பதல்ல.

அவருக்கு வீடே இல்லை என்பதுதான் உண்மை. வானத்துக்குக் கீழே நிற்கிறார். வீடில்லை. வாசலில்லை. அவர் திறந்த மனத்தர் அல்ல. அவர் திறப்பின் தன்மையாகிப் போனவர்.

ஆனால் வெளியே இருந்து ஞானியைப் பார்த்துப் புரிந்துகொள்ள நினைக்கும் நமக்கு இதுவெல்லாம் இப்படித்தான் தெரியும். அதனால்தான் புத்தரைப்பற்றி எழுதி வைத்திருப்பதெல்லாம் தப்பும் தவறுமாக இருக்கின்றன. லாவோட் சூவைப்பற்றி எழுதியதெல்லாம் தவறாகப் போய்விட்டன. மகாவீரர் அல்லது யேசு கிறித்துபற்றி எழுதியதெல்லாம் தவறாகப் போய்விட்டன. கொஞ்சம் சுதாரித்தும் தயங்கியும் இருந்து பார். அவரைப்பற்றி நீ தவறாகப் புரிந்துகொள்ளும் சாத்தியம் அதிகம் என்பதைத் தெரிந்து கொள்வாய்.

அவர்மீது அன்பு வை. புரிந்துகொள்ள முயற்சிக்காதே. பிறகு ஒருநாள் நீயாக அவரைப் புரிந்து கொள்வாய். அணுக்கத்தில் இரு. நெருக்கத்தில் இரு. ஆனால் புரிந்துகொள்ள முயலாதே. பிறகு ஒருநாள் அந்த அற்புதம் தன்னை வெளிக்காட்டும் சாத்தியம் இருக்கிறது.

ஆனால் புரிந்துகொள்ள முயன்றால் தோற்றுத்தான் போவாய். புரிந்துகொள்ளவும் புத்தகம் எழுதவும் கட்டுரைகள் எழுதவும் எத்தனிப்பவர்கள் கொள்கைகளின் பேராசிரியர்கள் ஆவார்கள். அவர்கள்தான் மதங்களைப் படைக்கிறவர்கள். முதலில் இருந்தே தவறாகப் புரிந்து கொண்டவர்கள்தான் அவர்கள் பெயரில் மதங்களை ஸ்தாபிக்கிறார்கள்.

**பள்ளத்தாக்கைப்போலத் திறந்த மனத்தராக...**

இல்லை. பள்ளத்தாக்கு மலைகளால் சூழப்பட்டு இருக்கிறது. திறந்திருப்பதாகத் தெரிகிறது. ஆனால் மலைகளால் சுற்றிலும் மூடப்பட்டுத் தான் இருக்கிறது. அவர் வானத்தைப்போலத் திறந்து பரந்து இருக்கிறார். எதனாலும் மூடப்படாதவராக. சுற்றி இருக்கும் மலைகள் மறைந்து போனால் பள்ளத்தாக்கு மறைந்துபோகும். எனவே மலைகள் பள்ளத் தாக்கின் பகுதிகள்தான். திறந்த மனத்தைப்பற்றிக் கேட்கிறாயா? மனம் இல்லை என்றாகிப் போகும்போது திறந்திருக்கும் அந்தத் தன்மை மறைந்துபோகும். அவருடைய திறந்த தன்மையும் மனதின் ஒரு பகுதிதான். ஞானி வானைப்போலத் திறந்து இருப்பவர். அவர் திறந்திருக்கும் தன்மை தவிர திறந்திருக்கும் எதுவும் அல்ல.

**சேற்றில் மண்ணும் நீரும் கரைந்திருப்பதைப்போல**
**மற்றவரோடு எளிதாகக் கலந்து உறவாடுகிறவராக...**

ஞானி வெகு சுலபமாக மற்றவரோடு கலந்து உறவாடுகிறவராக உனக்குத் தெரிகிறார். ஒரு விலைமாதின் வீட்டில் தங்கியவர் யேசு கிறித்து. அவள் விரும்பி அழைத்ததால் போய்த் தங்கினார். கிரிமினல்களோடு தங்கியிருக்கிறார், அவர்கள் அழைத்ததால். எனவே அவர் சேறு கலந்த நீராகத் தெரிகிறார். ஒரு பிராம்மணனைப்போலப் பரிசுத்தமானவராகத் தெரிவதில்லை. ''நான் ப்யூர் ஆக இருக்கிறேன். என்னைத் தொடாதே!'' என்று சொன்ன ப்யூரிட்டனைப்போல.

சங்கருக்குச் சத்தியத்தைப் போதித்தவர் ஒரு தீண்டத்தகாதவர் என்றால் உனக்கு வியப்பாக இருக்கும். அப்படித்தான் சொல்கிறார்கள். அவர் சங்கருக்குக் குருவாகிப் போனார். அதுவரை சங்கரர் பிரமாதமான ஆசிரியராக இருந்தார். பெரிய அறிஞராக இருந்தார். பிரம்ம சூத்திரம், பகவத் கீதை, உபநிடதங்கள் பற்றி நிறைய எழுதியிருந்தார். வேதாந்த நெறியைப் பரப்பிக் கொண்டிருந்தார். அத்வைத வேதாந்தம் என்று அதற்குப் பெயர். இரண்டல்ல, ஒன்றுதான் என்று சொல்லும் நெறி.

ஒருநாள் அவர் கங்கையில் குளித்துவிட்டுப் படியேறிக் கொண் டிருந்தார். அதிகாலைப் பொழுது. குளித்துவிட்டுத் தன் குடிசைக்குப் போகும்போது ஒரு சூத்திரன் அவரைத் தொட்டுவிட்டான்.

அவருக்குக் கோபம் வந்துவிட்டது. ''என்னுடைய குளியலைக் கெடுத்துவிட்டாய். நான் திரும்பப் போய்க் குளித்து மடியாக வரவேண்டி இருக்கிறது'' என்றார்.

சூத்திரன் சொன்னான். ''ஒரு நிமிடம் பொறுங்கள். ஒரு சந்தேகம் கேட்கவேண்டும். எல்லாம் ஒன்றுதான் என்றால், ஜீவிதம் முழுக்க ஒன்றேதான் என்றால், நீங்களும் நானும் நீங்களும் நானுமாக எப்படி இருக்கமுடியும்? எப்படி நான் தொட்டுவிட்டதால் உங்களுக்குத் தீட்டுப் பட்டதாகிப் போகும்? யார் யாரைத் தொட்டுவிட்டது?''

சங்கருக்கு ஆழ்ந்த உறக்கத்தில் இருந்து எழுந்ததைப்போல இருந்தது. அறிஞனின் ஆழ்ந்த மயக்கம். அதுதான் தூக்கத்திலேயே பெருந்தூக்கமாக இருந்திருக்க வேண்டும். ஒரு கோமாவைப்போல. சங்கருக்கு ஞானோதயம் ஏற்பட்டது.

அவன் கேட்டான். ''என்ன நினைக்கிறீர்கள்? என் உடலா அல்லது என் ஆன்மாவா உங்களைத் தொட்டுவிட்டது? என் உடல் உங்கள் உடலைத் தொட்டுவிட்டதா? அல்லது என் உடல் உங்கள் ஆன்மாவைத் தொட்டுவிட்டதா? உடல்களில் ஏதாவது வித்தியாசம் இருக்கிறதா?

பிராம்மணனின் உடலுக்கும் சூத்திரனின் உடலுக்கும் வித்தியாசம் இருக்கிறதா? பிராம்மணனின் உடல் பரிசுத்தமானது. என் உடல் அசுத்தமானது என்றா சொல்கிறீர்கள்? பிராம்மணர்களின் உடல்களையும் சூத்திரர்களின் உடல்களையும் ஆக்கி வைத்திருக்கும் பஞ்ச பூதங்கள் வெவ்வேறு என்கிறீர்களா? என் உடல் உங்களைத் தொட்டுவிட்டதால் உங்களுடைய ஆன்மாவைத் தொட்டுத் தீட்டுப்பட வைத்துவிட்டதா? அல்லது என் ஆன்மா உங்களைத் தொட்டுவிட்டது என்றால் ஆன்மாவிலும் சூத்திரனின் ஆன்மா என்று தனியாக இருக்கிறதா? சொல்லுங்கள்.''

சங்கரருக்கு எல்லாமும் தலைகீழாக மாறிப் போய்விட்டது. அவர் மறுபடி திரும்பப் போய்க் குளிக்கவில்லை.

அந்தச் சூத்திரனை வணங்கினார். ''நீங்களே என் குரு. என்னை அறியாமையில் இருந்து தட்டி எழுப்பிவிட்டீர்கள். அத்வைதம் பற்றிப் பேசிக் கொண்டிருந்தேனே ஒழியத் தெரிந்து வைத்திருந்தேனில்லை.''

உண்மையான ஞானி இருக்கிறார் என்றால் அவர் சேற்றுத் தண்ணீரைப்போல எதனோடும் சுலபமாகக் கலந்து போய்விடுகிறவர் போலத்தான் உனக்குத் தெரிவார். அவருக்குத் தூயவர் தீயவர் என்று யாரும் கிடையாது. தன்னைப் பரிசுத்தமானவர் என்றோ மற்றவரை அசுத்தமானவர் என்றோ அவர் நினைப்பதே இல்லை.

லீட் சு என்கிறவர் லாவோட் சுவின் சிறந்த சீடர். அவரோடு ஆசிரமத்தில் நிறையச் சீடர்கள் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் எப்போதும் எதையாவது திருடிக்கொண்டே இருந்தான். பெரிய தொந்திரவாகிப் போனான். ஆனால் அவனை எப்போதும் குரு மன்னித்துக்கொண்டே இருந்தார். ஒரு கட்டத்தில் இனியும் பொறுக்க முடியாது என்ற நிலைக்கு மற்றவர்கள் வந்துவிட்டார்கள். ஒரு ஐந்நூறு பேர் இருப்பார்கள். அவர்கள் எல்லோரும் குருவிடம் போனார்கள்.

''இனியும் பொறுக்கமுடியாது. எதற்கும் ஓர் அளவு இருக்கிறது. அவனை எத்தனை தடவைதான் மன்னித்து விடுவீர்கள்? ஆனால் அவனைத் திருத்தவே முடியாது போலிருக்கிறது. போதும் என்கிற அளவுக்கு அவனுக்குச் சந்தர்ப்பம் கொடுத்து விட்டீர்கள். அவனை இனியாவது ஆசிரமத்தை விட்டுத் துரத்தி விடுங்கள்'' என்று கேட்டுக் கொண்டார்கள்.

''கொஞ்சம் பொறுங்கள் சகோதரர்களே. நீங்கள் எல்லோரும் நல்லவர்கள். ஒழுக்க சீலர்கள். நீங்கள் எங்கே போனாலும் உங்களை ஏற்றுக்

கொள்வார்கள். மதிப்பார்கள். அன்புடன் நடத்துவார்கள். உங்களுக்குச் சேவை செய்வார்கள். நான் இல்லாது போனாலும் உங்களால் சத்தியத்தைத் தெரிந்துகொள்ள முடியும். அவ்வளவு நல்லவர்கள் நீங்கள். ஆனால் இந்தச் சகோதரர் எங்கே போவார்? லீட் சூவைத் தவிர அவருக்கு யாரும் இல்லை. யாரும் அவரை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். எனவே இவரோடு இருக்கமுடியாது என்று நினைக்கிறவர்கள் எல்லோரும் போய்விடுங்கள். ஆனால் நான் அவரோடு இருக்கவேண்டும். நானில்லாவிட்டால் பாவம் எங்கே போவார்? யார் இவரை ஏற்றுக் கொள்வார்கள்? லீட் சூவே இவரை ஒதுக்கித் தள்ளினால் வேறு யாரும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்'' என்றார்.

இப்படித்தான் ஞானி இருப்பார். சேற்றுத் தண்ணீரைப்போல எதனோடும் கலந்து விடுகிறவராகத் தெரிவார். ஆனால் அப்படி அவர் எதனோடும் சேர்ந்து இருக்கக் காரணம் அவருக்கு நல்லது கெட்டது என்ற வித்தியாசம் இல்லாமல் போய்விட்டதுதான். பரிசுத்தமும் அசுத்தமும் அவருக்கு இல்லை.

அவருக்கு ஒரே கடலளவு பிரக்ஞைதான் இருக்கிறது. அதனால்தான் அவர் எவரோடும் சுலபமாகக் கலந்து விடுகிறார். விலைமாதின் வீட்டில் இருந்தால் என்ன, கன்னியாஸ்திரீயின் வீட்டில் இருந்தால் என்ன? இரண்டிலும் தூங்கத்தானே போகிறார் யேசு கிறித்து? இருவரும் அவருக்கு ஒன்றுதான். விலைமாது எதன் வடிவமோ அதன் வடிவமே கன்னியாஸ்திரியும். யாரும் பரிசுத்தமானவர் இல்லை. யாரும் தீட்டானவர் இல்லை. எல்லா துவைதமும் இல்லாமல் போய்விடுகிறது. ஞானி அதை எல்லாம் கடந்தவர். ஞானி அத்வைதத்தில் வாழ்கிறார். அதனால்தான் எதனோடும் எளிதாகக் கலந்து விடுகிறார். அவருக்கு எந்தத் தடையும் இல்லை.

**கலங்கிக் கிடக்கும் உலகில் அமைதியைக் காண்பது எங்கே?**
**அசைவிலாது கிடக்கும்போது தெளிவு பிறக்கிறது.**

லாவோட் சூ சொல்கிறார்.

**கலங்கிக் கிடக்கும் உலகில் அமைதியைக் காண்பது எங்கே?**

உலகம் கலங்கித்தான் கிடக்கிறது. அதில் எப்படி நிம்மதியைக் காண்பது? எப்படி அதில் அமைதியைக் காண்பது? அசைவிலாது கிடந்துதான். எதையும் செய்யாதே. எதையும் பரிசுத்தமாக்க முயலாதே. அப்படிச் செய்தால் இன்னும் கலங்கலைத்தான் கொண்டு வருவாய். சும்மா அப்படியே நதிக்கரையில் படுத்துக்கிட. பொறுத்திரு. சும்மா கிடந்து

விடுவதால் கலங்கியது தானாகத் தெளிந்து விடுகிறது. உலகத்தைத் திருத்துவது பற்றிக் கவலைப்படாதே. மற்றவர்களை மாற்றி விடுவதைப் பற்றிக் கவலைப்படாதே. நீ யார் அதற்கு? மற்றவரைத் திருத்தவேண்டிய பொறுப்பை யார் உனக்குத் தந்திருப்பது? நீ ஏன் மற்றவர் வழியில் குறுக்கிட வேண்டும்? சும்மா உட்கார்ந்திரு. அது போதும்.

**நிம்மதியை யாரால் வெகுநேரம் அனுபவிக்க முடிகிறது?**

நிம்மதி வந்து சேர்கிறதுதான். அமைதி வந்து சேர்கிறதுதான். ஆனால் யாரால் அதைப் பலகாலமும் போற்றிப் பத்திரமாக வைத்திருக்க முடிகிறது என்கிறாய்?

**செயல்கள் மூலமாக வாழ்க்கைக்கு வந்து சேர்கிறது.**

செயல்படுவதன்மூலம் அதைப் பாதுகாத்து வைத்திருக்க முடியும். தொடர்ந்து ஏதும் செய்யாமல் இருந்தால் அதைப் பாதுகாத்து வைத்திருக்க முடியாது. அனைத்தையும் கடந்திருக்க வேண்டும் என்றால் இந்தக் கடைசிக்கும் அந்தக் கடைசிக்கும் போகவேண்டி இருக்கிறது. பகலில் உழைக்கிறாய். இரவில் ஓய்வெடுக்கிறாய். இருபத்து நான்கு மணி நேரமும் உழைப்பது என்றால் செத்துத்தான் போவாய். இருபத்து நான்கு மணி நேரமும் தூங்கியே கழிப்பது என்றால் அதுவும் சாவுதான்.

பகலில் கடுமையாக உழை. அப்படி உழைப்பதால் தூங்குவதற்கு உன்னைத் தயாராக்கிக் கொள்கிறாய். இரவில் நன்றாகத் தூங்கு. அப்படித் தூங்குவதால் உழைப்பதற்கு வேண்டிய சக்தியைத் தேடிக் கொள்கிறாய். தாள லயத்தோடு வாழ். வலது பக்கமும் இடது பக்கமும் சாய்ந்து சாய்ந்து நடுமத்தில் நிலைகொள். நிம்மதி, ஓய்வு, அமைதி என்று எல்லாவற்றையும் பாதுகாக்க எப்போதும் தூங்கிக்கொண்டே இருந்தால் முடியாது. இந்தத் தவறைத்தான் இந்தியாவில் பலரும் செய்கிறார்கள். எந்த வேலையும் செய்யாமல் இருக்கும் சன்னியாசிகள் மௌனமாக இருக்கமுடியாது. சம்சாரியாகவும் சன்னியாசியாகவும் ஒருசேர இருந்துவிடு. இந்த உலகத்தில் இரு. இதைத் தாண்டியும் இரு. அதுவும் ஒரே சமயத்தில். வாழ்க்கை என்பதே முரண்பாடுகளின் ஐக்கியம் என்பதை மறந்துவிடாதே. அதில் ஓர் ஆழ்ந்த லயம் இருக்கிறது.

**தாவோவைத் தழுவி நடக்கிறவர்**
**தளும்ப நிறைந்து போவதைத் தவிர்க்கக் காவலிடுகிறார்.**

தாவோ என்பது சமநிலை என்பதையும் ஆன்மிகம் என்பது சமநிலை என்பதையும் கடவுள் என்பது சமநிலை என்பதையும் தெரிந்து கொள்கிறவர் தளும்ப நிறைந்து போவதைத் தவிர்த்து விடுகிறார். ஒரு பக்கம் அதிகம் சாய்ந்து விடாதே. சமநிலை இருக்காது. சமநிலை பிறழ்ந்து போக விடுவதுதான் மிகப்பெரிய பாவம் என்கிறார் லாவோட் சு. சமநிலையைப் பராமரித்து வாழ்வது புண்ணிய வாழ்வு. சமநிலை பிறழ்ந்து வாழ்வது பாவம்.

**தன்னைத் தன்னைக்கொண்டு நிறைக்க விடாததாலேயே தேய்ந்து ஒய்வதையும் புத்தாக்கத்தையும் கடந்துவிடுகிறார்.**

அவர் எப்போதும் புத்துணர்ச்சியோடு இருக்கிறார். இளமையாக இருக்கிறார். அவருக்கு அலுப்பே கிடையாது. சமநிலை அவருக்கு நித்திய வாழ்வைத் தருகிறது. சமநிலையே உயிர். சமநிலையே வாழ்க்கை.



பத்து

# ஞானமும் புரிதலும்

முதல் கேள்வி:

**ஞானமும் புரிதலும் படிப்படியாக வளர்கின்றனவா அல்லது திடீரென வெடிக்கின்றனவா?**

புரிதல் வருவது என்பதே இல்லை. படிப்படியாக வளர்ந்து வருவதும் இல்லை. திடீரென வெடித்துக் கிளம்பி வருவதும் இல்லை. ஏனென்றால் அது எப்போதும் இருந்துகொண்டே இருக்கிறது. இந்தக் கணத்தில்கூட இருக்கிறது. எதிர்காலத்தில் எப்போதோ நடக்கப் போவதல்ல அது. விதை மரத்தைச் சுமந்து கொண்டிருப்பதைப்போல, பெண் குழந்தையைச் சுமந்து கொண்டிருப்பதைப்போல நீ இந்தக் கணத்தில்கூடச் சுமந்து கொண்டிருக்கிறாய்.

உன்னைப் பொருத்தது அது. உன்னுடைய தீவிரம் முழுமையானது என்றால் அதைத் திடீரென உணர வருகிறாய். முழுமையாக இல்லையென்றால் போகப்போகத் தெரிந்து கொள்வாய். படிப்படியாகத் தெரிந்து கொள்வாய். ஆனால் புரிதல் உன்னைத் தேடி வரவேண்டும் என்பதில்லை. நீயேதான் புரிதல். ஞானோதயம் என்பது ஏற்படுவதன்று. நீயேதான் ஞானம்.

மறந்துவிடாதே. அப்படியானால் ஒரு தேர்வு செய்யவேண்டி இருக்கிறது என்பதை மறந்துவிடாதே. அதைச் சாதிக்கவேண்டும் என்ற ஆசை முழுமையானது என்றால் அதன் அக்னியில் உன்னுடைய புரிதலை மூடி இருக்கும் அனைத்தும் எரிந்து போகின்றன. திடீரென ஒளி தோன்றி விடுகிறது. ஆனால் அது உன்னைப் பொருத்தது. திடீரென நிகழ்வதோ படிப்படியாக நிகழ்வதோ ஞானத்தின் இயல்பின் ஒரு பகுதி அல்ல.

பொறுப்பைத் தட்டிக் கழிக்காதே. அப்படித்தான் தத்துவ நெறிகளைப் படைக்க வருவது. ஜப்பானில் இரண்டு விதமான ஜென் நெறிகள்

இருக்கின்றன. ஒரு சாரார் திடீரென வருவது ஞானம் என்கிறார்கள். மற்றொரு சாரார் ஞானம் படிப்படியாக வந்து சேர்வது என்கிறார்கள். திடீரென வந்து சேர்வதும் படிப்படியாகப் படிவதும் ஞானத்தின் இயல்புகள் என்று சொல்வதைப்போல இருக்கிறது. ஆனால் அப்படிப்பட்ட குண விசேஷங்கள் ஏதும் ஞானத்துக்கு இல்லை.

ஞானம் எப்போதும் இருந்துகொண்டே இருக்கிறது. நீதான் அதைத் தெரிந்துகொள்வது என்ற தேர்வைச் செய்ய வேண்டியிருக்கிறது. உன்னுடைய தாகம் முழுமையானது என்றால் ஒரு கணம்கூட வீணாவதில்லை. ஆனால் உன்னுடைய தாகம் முழுமையானதில்லை என்றால் அங்கே அப்போதே ஞானத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆசை இல்லாமல் தள்ளிப் போடுகிறாய் என்று பொருள். இன்று வேண்டாம், நாளைக்கு என்கிறாய். இப்போது வேண்டாம், இன்னொரு நாளைக்கு என்கிறாய். அதன்பின் தந்திரங்களைக் கைக்கொள்கிறாய்.

உண்மையாகவே நேர்மையாக இருந்தால் கால இடைவெளி இருப்பதில்லை. இந்தக் கணமே ஞானம் சித்திக்கும். ஒரு கணத்தைக்கூட வீணாக்க வேண்டியதில்லை. ஏனென்றால் நீ ஏற்கெனவே ஞானவான்தான். வேண்டியதெல்லாம் அகத்திருஷ்டி. ஆனால் இப்போது வேண்டாம் என்று நினைத்தால் கோடி பல கோடி ஆண்டுகள் காத்திருக்கலாம்தான்.

ஒரு கதை சொல்லட்டுமா? சிரீலங்காவில் நடந்தது.

எண்பது வருடங்களாகத் தன் சீடர்களுக்குப் போதித்து வந்த பௌத்த குரு ஒருவர் இருந்தார். அவருக்கு வயது நூற்று இருபது ஆனபோது ஒருநாள், ''அடுத்த ஏழு நாட்களில் சாகப்போகிறேன்'' என்று அறிவித்தார். எனவே அவருடைய கடைசித் தரிசனத்துக்காக ஆயிரக்கணக்கில் சீடர்கள் குவிந்தார்கள்.

கண்களை மூடுமுன், தனக்குள் கரைந்து போகுமுன் அவர் கேட்டார். ''யாருக்காவது என்னோடு வரவேண்டும் என்று விருப்பமா? நிர்வாணத்தை அடைய வேண்டுமானால், ஞானோதயம் வேண்டும் என்றால், அதுவும் இப்போதே வேண்டும் என்றால் கையைத் தூக்கு. அதுபோதும்.''

அவர் வாக்குத் தவறாதவர் என்பது எல்லோருக்கும் தெரியும். அவர் ஜோக் அடிக்கவில்லை. தன் வாழ்வில் அவர் ஜோக் அடித்ததே இல்லை. வெகு காரியார்த்தமானவர். அவர் சொன்னது சொன்னதுதான். அங்கே இருந்தவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். ஆயிரக் கணக்கானவர்கள் இருந்தார்கள். ஆனால் யாரும் கை உயர்த்தவில்லை.

ஒருவன் மட்டும் எழுந்தான். "சொன்னால் தப்பா எடுத்துக்கக் கூடாது. இன்னும் செய்யவேண்டிய காரியம் நிறைய இருக்குதுங்க. அதனாலே இப்பவே உங்ககூட வரமுடியாது. இன்னும் கடமைகள் இருக்குதுங்க. நிறையப் பாக்கவேண்டி இருக்குது. கர்மாவைக் கழிக்கவேண்டி இருக்குது. அதனாலே இப்ப நான் தயாரா இல்லே. ஆனா ஒரு நாளைக்கு எனக்கும் ஞானோதயம் வேணுங்க. அதனாலே எப்படிங்கறதுக்குக் குறிப்பு ஏதாச்சும் தந்துட்டுப் போறீங்களா? இனி நீங்க இருக்கப் போறதில்லே..."

தம்முடைய வாழ்நாள் முழுக்கக் குறிப்புக் கொடுத்துக்கொண்டே இருந்தவருக்கு அதைக் கேட்டால் எப்படி இருக்கும்? என்பது வருடங்களாகத்தான்... என்றாலும் அவர் ஏதாவது சொல்லிட்டுப் போகவேண்டும் என்கிறார்கள். அப்படியாவது தள்ளிப் போடலாம் என்கிற நினைப்புத்தான். எதிர்காலத்துக்கு வேண்டியதை இப்போது தெரிந்துகொள்ள வேண்டுமாம்.

அவரோ தயாராக இருந்தார். அங்கே அப்போதே யாராவது தயாராக இருந்தால் அழைத்துப்போகத் தயாராக இருந்தார். ஆனால் யாரும் தயாராக இல்லை.

மக்கள் மிகவும் தந்திரசாலிகள்தான். ஏன் என்றால் இந்த மனம் மிகத் தந்திரமானது. அதிலும் சிறந்த தந்திரம் என்ன என்றால் எல்லாவற்றுக்கும் வேறு ஏதாவது மீது யாராவது மீது பொறுப்பை ஏற்றி வைத்து விடுவதுதான்.

ஞானத்தை அடைவது என்பது படிப்படியாக நடக்க வேண்டியதுதான் என்றால் என்ன செய்வது? ஒன்றும் செய்யமுடியாது. அதுதான் படிப்படியாக நடக்க வேண்டுமே! காலம் பிடிக்கும்தான். திடீரென நடப்பது என்றால் அது ஏன் இன்னமும் நடந்தேறவில்லை? "இல்லேப்பா. திடீர்னு நடக்கறதுன்னா எனக்கு நடந்திருக்கணும் இல்லையா? அது திடீர்னு நடக்கற சமாச்சாரம் இல்லே. அப்படியே அது திடீர்னு தன்னாலே நடக்கறதுன்னா நான் ஒண்ணும் செய்யவேண்டியது இல்லைதானே? நான் பொறுத்துப் பார்க்கறேன். எப்ப நடக்குமோ அப்ப நடக்கட்டும்."

தேர்வு செய்யவேண்டிய பொறுப்பில் இருந்து தப்பிக்கிறாய். சாத்ரே ஒரு வாசகம் சொல்லியிருக்கிறார். அருமையான வாசகம். "எப்படி யானாலும் தேர்வு செய்யத்தான் போகிறாய். முட்டாள்தனமாக இருக்காதே. தேர்வு செய்யாமல் இருக்கும் சுதந்திரம் உனக்குக் கிடையாது. எதையும் தேர்ந்தெடுக்கப் போவதில்லை என்று சொல்லும்போதும் அப்படித் தேர்ந்தெடுக்காமல் இருக்கத் தேர்ந்தெடுத்து விடுகிறாய்."

ஒருத்தன் என்னிடம் வந்தான். "நான் சன்னியாசத்துக்கு இன்னும் தயாராகல்லே. எழுபது என்பது பர்சென்ட் தயார். ஆனா இன்னும் இருபது

பர்செண்ட் தயாராகல்லே. எப்படிச் சன்னியாசி ஆகறது? இன்னும் நான் முழுக்கத் தயாராகல்லியே!'' என்றான்.

''சரிதான். அப்படின்னாலும் நீ முடிவு செய்யறே பார்த்தியா? உன் மனசின் பெரும்பான்மைக்குப் பதிலா கொஞ்சத்தைத் தேர்ந்தெடுத்து அது சொல்றாப்படி கேட்கறே இல்லியா? எண்பதுக்கு இருபது... சரிதான்'' என்றேன்.

எனவே நீ தேர்வுகள் செய்வதில்லை என்று நினைத்துக்கொண்டு உன்னையே ஏமாற்றிக்கொண்டு இருக்காதே. அது சாத்தியமே இல்லை. எதைச் செய்தாலும் சரி. ஒரு முடிவுக்கு வந்துவிட்டாய் என்றுதான் பொருள். எதையும் தேர்வு செய்வதில்லை என்றாலும் அப்படித் தேர்வு செய்யாதிருக்கத் தேர்வு செய்துவிட்டவன். தேர்வு செய்ய ஒருவனுக்குச் சுதந்திரம் இருக்கிறது. ஆனால் எதையும் தேர்வு செய்யாமலிருக்க அவனுக்குச் சுதந்திரம் இல்லவே இல்லை.

படிப்படியாக என்றால் அதிலும் ஒரு தேர்வு இருக்கிறது. திடீர் என்று நிகழவேண்டும் என்று சொல்லும்போதும் ஒரு தேர்வு இருக்கிறது. திடீர் என்று ஞானோதயம் கிடைக்கவேண்டும் என்று நினைக்கும்போது எந்த முயற்சியும் செய்யாமல் தானாக நடக்கவேண்டும் என்பதைத் தேர்ந்துவிட்டாய் என்று பொருள். அப்படியானால் எதுவும் செய்ய வேண்டியதில்லை அல்லவா? எப்படியும் நடக்கப் போகிறது. எதற்காக எதையாவது செய்து அலட்டிக் கொண்டிருக்கவேண்டும்? நடக்கும்போது நடக்கட்டும். செய்ய வேண்டியதும் ஒன்றுமில்லையே!

வானத்தில் மின்னல் தோன்றுவதைப் போலத்தான். எப்போது பளிச்சிடுகிறதோ அப்போது பளிச்சிடுகிறது. அதற்கான எந்த முன்னேற்பாடும் தேவையில்லை. வீட்டில் இருக்கும் மின்சாரத்தைப்போல அல்ல. வேண்டியபோது போட்டு வேண்டாதபோது அணைத்துவிட, மின்னல் வீட்டில் இருக்கும் மின்சாரம் அல்ல. அது திடீரென நடப்பது. அது நடக்கும்போது தானாக நடக்கிறது. உன் செயல்களை எந்தவிதத்திலும் சார்ந்தது அல்ல. செய்ய வேண்டியதெல்லாம் பொறுமையாகக் காத்திருக்க வேண்டியதுதான். வானத்தில் மின்னல் வரட்டும் - இந்தத் தந்தியைப் படிக்கலாம் என்றால் காத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான். மின்னல் வெட்டினால் படித்துக்கொள்ள வேண்டியதுதான். அதுவரை பொறுமையாக இருக்க வேண்டியதுதான்.

எந்த முயற்சியும் மேற்கொள்வதில் இருந்து தப்பிக்க நினைக்கிறவர்கள், திடீர் ஞானோதயம் வேண்டும் என்பார்கள். அதற்கான எல்லாப் பொறுப்புகளில் இருந்தும் முழுப் பொறுப்பில் இருந்தும் தப்பிக்க

நினைக்கிறவர்கள் இப்போதே நடக்கவேண்டும் என்று நினைக்கிறவர்கள் அது படிப்படியாக நடப்பது என்று சொல்லிக் கொள்வார்கள்.

நான் ஞானோதயம் பற்றி எதுவும் சொல்வதில்லை. உன்னைப்பற்றிச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். உன் ஆசையை உணரவேண்டியது நீதானே ஒழிய நான் அல்ல. முழுமையான ஆசை இருக்கிறதா - ஞானோதயம் திடீர் என நடப்பது. ஆசை அதி தீவிரமாக இல்லையா - ஞானோதயம் படிப்படியாக நடப்பது.

எப்படி இருந்தாலும் அதற்கும் ஞானத்தின் இயல்புக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை என்பதை மறந்துவிடாதே.

**இரண்டாவது கேள்வி:**

**தாவோவைப் பின்பற்றுகிறவர்கள் திடீர் ஞானோதயத்தின்மீது நம்பிக்கை வைத்திருக்கிறார்களா அல்லது படிப்படியான ஞானோ தயத்தின்மீது நம்பிக்கை வைத்திருக்கிறார்களா?**

அவர்களுக்கு இதைப்பற்றி எந்த அக்கறையும் இல்லை. லாவோட் சூவுக்குக் கவலை இல்லை. என்ன சொல்கிறார் தெரியுமா? இயல்பாக இருப்பதே ஞானம் என்கிறார். ஒருவர் முயற்சி செய்து சாதிப்பது அல்ல என்கிறார். அந்த அளவுக்கு அது சிறப்பான ஒன்றல்ல என்கிறார். போய்ச் சேரவேண்டிய ஒன்றல்ல என்கிறார். அது நீயேதான். உன்னுடைய சாதாரண இருப்பில் மலர்வது ஞானம். அசாதாரணமாக இருக்கவேண்டும் என்று நினைப்பதே மனோவியாகூலம்.

அகந்தைக்கு எப்போதுமே அசாதாரணமாக இருக்கவேண்டும் என்று ஆசை. சிறப்பானவனாக, ஒப்பீடில்லாதவனாக இருக்கவேண்டும். அதுதான் இந்த அகந்தையின் நச்சரிப்பு. ராக்பெல்லர் ஆகவேண்டும் என்றால் நல்லதுதான். ஹிட்லர் ஆகவேண்டும் என்றால் நல்லதுதான். அப்படி ராக்பெல்லராகவோ ஹிட்லராகவோ ஆக முடியாதா? சரி. ஒரு புத்தராகி விடு. என்னவானாலும் சரி. பிரபலமானவன், அசாதாரணமானவன் ஆகவேண்டும். சரித்திரப் புருஷனாக வேண்டும்.

லாவோட் சூவுக்கு ஞானி ஆகவேண்டும். இப்படி இருக்கவேண்டும். அப்படி இருக்கவேண்டும் என்றெல்லாம் எந்த அக்கறையும் கிடையாது. சாதாரணமாக இரு என்கிறார். பசித்தபோது சாப்பிடு. தூக்கம் வந்தால் தூங்கு. ஜீவிதம் எப்படி இயல்பாக இருக்கிறதோ அப்படி இரு. திடீரென ஒருநாள் அனைத்தும் தத்தமது பிரமாதத்தில் இருக்கக் காண்பாய். வேறு எதுவுமே தேவையிருக்காது.

சாதாரணமாக இருப்பதுதான் மிக அசாதாரணமான நிலை. ஏனென்றால் அப்போது அகந்தை கரைந்து போய்விடுகிறது. அகந்தை வெகு சூட்சுமமானது. ஒரு திசையில் அதைக் கழித்துக் கட்டினால் இன்னொரு திசையில் இருந்து வந்து ஒட்டிக் கொள்கிறது. ஒரு கதவின் வழியாக வெளியே தள்ளிப் பூட்டிவிட்டு உள்ளே போய்ப் பார். வீட்டுக்குள்ளே அது சிம்மாசனம் போட்டு உட்கார்ந்திருக்கிறது. வேறு கதவு வழியாக உள்ளே வந்துவிடுகிறது. நீ வருவதற்கு முன் வந்து சேர்ந்து விடுகிறது.

நண்பன் ஒருவன் ஒரு பூனை வைத்திருக்கிறான். வெகு அழகான பூனை. என்ன பெயர் வைக்கலாம் என்று கேட்டான். ஈகோ என்று பெயர் வை என்றேன். பூனை வெகு தந்திரமானதல்லவா? அதனால்தான். பூனையைப்போல எந்த மிருகமும் தந்திரமானதில்லை.

கொஞ்ச நாட்களில் அந்தப் பூனை அவனுக்குத் தொந்திரவாகிப் போய்விட்டது. அவன் தனியாக வாழ்ந்தவன். கல்யாணம், காட்சி, பெண்டாட்டி, பிள்ளை என்று ஏதும் இல்லாதவன். அவனுக்குத் தனிமை வெகுவாகப் பிடிக்கும். ஆனால் இந்தப் பூனை வெகு தொந்திரவாக இருந்தது. தூங்கிக் கொண்டிருக்கும்போது மார்புமேல் குதித்து உட்காரும். நகங்களில் ரத்தம் பூசிக்கொண்டு வந்து சோபாவைக் கெடுக்கும். அல்லது உடைகளில் ரத்தக் கறையைப் பூசி விட்டுவிடும். எப்போது பார்த்தாலும் எலிகளை வேட்டையாடிக் கொண்டிருந்தால் அப்படித்தானே நடக்கும்!

பெரிய உபத்திரவமாகப் போய்விட்டது. பிரம்மச்சாரியாக இருந்து யார்மீதும் எந்த அக்கறையும் இல்லாமல் இருந்த அவனுக்கு அந்தப் பூனை கொடுத்த உபத்திரவத்தை ஒரு மனைவி இருந்தாலும் கொடுத்திருக்க மாட்டாள். என்னிடம் வந்தான். என்ன செய்வது என்று கேட்டான். ஈகோவால் ஒரே தொந்திரவு என்றான். நான், ''ஈகோ என்றாலே தொந்திரவுதான். போய் அதை எங்கேயாவது கழித்துக் கட்டிவிடு'' என்றேன்.

ஆனால் அவனோ, ''அதுக்கு எல்லா வழியும் தெரிஞ்சிருக்குது. ஊர்லே எங்கே கொண்டுபோய் விட்டுட்டு வந்தாலும் திரும்பி வந்துடறது'' என்றான்.

''காட்டுலே கொண்டுபோய் விட்டுடு.''

எனவே அவன் காட்டுக்கு அதை எடுத்துப் போனான். அப்படியாவது அது திரும்பி வராமல் இருக்கவேண்டும் என்று நினைத்தான். காட்டுக்குள் போனான். இன்னும் இன்னும் என்று வெகுதூரம் காட்டுக்குள் போய்விட்டான். வழிதவறிப் போய்விட்டான். என்ன செய்வது? ஒரே

காரியம் என்னவென்றால் பூனையை இறக்கி விட்டுவிட்டு அதைத் தொடர்ந்து போவதுதான். அப்படிப் போனவன் கடைசியாக வீடு வந்து சேர்ந்தான். வேறு என்ன செய்திருக்க முடியும்? காட்டில் யாரிடம் வழி கேட்பது? அம்பைப்போல நேராக வீடு வந்து சேர்ந்தது பூனை. எந்தக் கணத்திலும் எந்தத் தயக்கமும் இல்லை. நேராக வீடுதான்.

எனவே அவனிடம் சொன்னேன். ''உன்னுடைய பூனைக்கு ஈகோவின் பிரமாதமான குணம் அப்படியே இருக்குது. அதை அவ்வளவு சுலபமாக வீசி எறிய முடியாது. எங்கே போய் வீசிவிட்டு வந்தாலும் நீ வீடு வந்து சேரும்போது உனக்கு முன்னால் வந்து சேர்ந்திருக்கக் காண்பாய். அல்லது சிலசமயம் உனக்கே வழி மறந்து போக அதைத் தொடர்ந்து போகவேண்டி இருக்கும். ஏனென்றால் அதற்கு மட்டுமே வழி தெரியும்.''

இந்த அகந்தை இருக்கிறதே அதற்கு வெகு புத்திசாலித்தனம் இருக்கிறது. தன்னுடைய தந்திரத்தில் அவ்வளவு புத்திசாலி. லாவோட் சு இந்த அகந்தைக்கு இடம் கொடுப்பதே இல்லை. நிற்க ஓர் அடி இடம் தருவதில்லை. எனவே அவர் ஞானோதயம் பற்றிப் பேசுவதே இல்லை.

அவரைச் சந்தித்து, ''ஞானோதயம் திடீர் என்று நடப்பதா அல்லது படிப்படியாக நடப்பதா? நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டால் சத்தமாகச் சிரித்துவிடுவார். உனக்குப் பதில் சொல்ல மாட்டார். இது என்ன முட்டாள்தனம். ஞானத்துக்கு என்ன தேவை? அந்த வார்த்தை அவருடைய அகராதியில் இல்லாத வார்த்தை.

அவர் வெகு எளிமையானவர். சாதாரணமாக இரு என்கிறார். எதற்கு அசாதாரணமான ஆளாக இருக்கவேண்டும்? இந்த உலகத்தில் வேறு எப்படியாவது பிரபலம் ஆக முடியவில்லையா? ஞானியாகிவிடு என்பதைப்போல இருக்கிறது. எதற்கு என்கிறேன்? நீ நீயாக இருந்து அதில் திருப்திப்பட்டுக்கொள்ள முடியாதா என்ன? என்னைக் கேட்டால் அவனவன் அவனவனாக இருப்பதில் திருப்தியாக இருப்பதே ஞானம் என்பேன். அதில் எந்தச் சிறப்பும் இல்லை. இந்த யோகியர் அது என்னவோ வெகு சிறப்பானது என்று நம்பவைத்து விட்டார்கள். குண்டலினி எழுகிறதாம். ஒளி தோன்றுகிறதாம். அக அனுபவமாம். தேவதைகளாம். கடவுள்களாம். இதுவெல்லாம் புரிந்து கொண்டவனுக்கு முட்டாள்தன மானவை. ஞானம் என்பதை இன்னதென யாரும் சொல்லவே முடியாது.

இதுவெல்லாம் - இந்தக் குண்டலினி, ஒளி, கடவுள், தேவதை, சொர்க்கம், நரகம் என்பதெல்லாம் மந்திரவாதியின் தந்திரங்கள். உனக்கு வேண்டுமா? இதோ வைத்துக்கொள் என்று பையில் இருந்து எடுத்துப் ்போட்டுவிடுவான். நீ அதற்கெல்லாம் ஒரு சந்தையைப் படைக்கிறாய்.

அவன் அதைத் தயாரித்துத் தருகிறான். சிறப்பாக என்னவோ வேண்டும் என்கிறாய். அவன் தொப்பியில் இருந்து முயலை எடுத்துத் தருகிறான். அவன் உன்னை ஏமாற்றுகிறான். உன்னுடைய முட்டாள்தனம் அவனுக்குப் பிழைப்பாகப் போய்விட்டது.

லாவோட் சூ வெகு சாதாரணமானவர். அவரிடம் எந்தப் பையோ, தொப்பியோ இல்லை. ''ஏன் அப்படியே இருக்கக் கூடாது? இப்படி இருப்பதில் என்ன தவறு கண்டாய்? நீயாக இருப்பதில் என்ன தவறு? எதற்கு இத்தனை பிரயாசையும்? அப்படியே முயற்சி செய்கிறாய் என்றாலும் முயற்சிகள் உன்னுடையவைதானே? அவை எப்படி உன்னைத் தாண்டிப் போகமுடியும்? நீ என்னவாக இருக்கிறாயோ அதைத் தாண்டி நீ என்ன செய்துவிட முடியும்? உன்னுடைய முயற்சிகள் மூலமாக உன்னையே கடந்து போவது எப்படி? சாத்தியமே இல்லை. ஆயிரக்கணக்கான பிறவிகளில் லட்சக் கணக்கான முயற்சிகள் செய் தாலும் சாத்தியமே இல்லை. சாத்தியமற்றதைச் சாதிக்கவேண்டும் என்கிறாய்.

உன்னை அப்படியே ஏற்றுக்கொள். அதுதான் எதார்த்தம். அதுதான் சாத்தியம். நீ எப்படி இருக்கிறாயோ அப்படியே உன்னை ஏற்றுக்கொள். திடீரென நீ மாறிப்போய் விட்டதைத் தெரிந்துகொள்வாய். லாவோட் சூவின் வாசகம் ஏற்றுக்கொள்வது. ஞானியாவதல்ல. முழுக்க ஏற்றுக்கொள்வது. நீ என்னவாக இருந்தாலும் சரியே. அப்படியே ஏற்றுக்கொள்வது. வேறு எதுவும் சாத்தியமே இல்லை.

அப்படித்தான் பிரபஞ்சத்தில் எல்லாமும் இருக்கின்றன. அப்படித்தான் நீ இந்தப் பிரபஞ்சத்தில் வந்து தோன்றியிருப்பது. இந்தப் பரந்த பிரபஞ்சம் நீ எப்படி இருக்கிறாயோ அப்படி இருக்க விரும்புகிறது. இருந்துவிட்டுப் போவதுதானே?

இரண்டுவகைத் தேர்வுகள்தான் சாத்தியம். ஒன்று உன்னை ஒதுக்கித் தள்ளுவது. இன்னொன்று உன்னை ஏற்றுக்கொள்வது. அப்படியே உன்னை ஒதுக்கித் தள்ளினாலும் அதிலும் இரண்டு சாத்தியங்கள் இருக்கின்றன. இவ்வுலகம் சம்பந்தப்பட்ட அளவில் நீ என்னவாக இருக்கிறாயோ அதை ஒதுக்கிவிடுவது. அல்லது அவ்வுலகம்பாற்பட்டு ஒதுக்கிவிடுவது. இவ்வுலகம்பாற்பட்டது உன்னுடைய அலட்சியம் என்றால் இருப்பதைவிட அழகாக இருக்கவேண்டும் என்று நினைப்பாய். இருப்பதைவிட இன்னும் பலசாலியாக இருக்கவேண்டும் என்று நினைப்பாய். இருப்பதைவிட இன்னும் பணக்காரனாக இருக்கவேண்டும் என்று நினைப்பாய். இருப்பதைவிட இன்னும் பெரிய வீடு வேண்டும் என்று நினைப்பாய். இதுவெல்லாம் இவ்வுலகு சார்ந்த அலகுகள்.

அவ்வுலகு சார்ந்த அலகுகள் என்ன என்கிறாயா? அது ஆன்மிகத்தைச் சார்ந்தது. சட்டோரி அடைய வேண்டும் என்பாய். சமாதி அடையவேண்டும் என்பாய். ஞானோதயம் வேண்டும் என்பாய். நிர்வாணம் வேண்டும் என்பாய். ஒரு புத்தராக வேண்டும் என்பாய். கடவுளை உன்னுடையவனாக்கிக்கொள்ள வேண்டும் என்பாய். முடிவில்லாத பரவசம் வேண்டும் என்பாய். இப்படித்தான் ஆன்மிக வழியில் இருக்கும் உன்னை ஏற்றுக் கொள்ளாமல் அலைவது. இவை இரண்டுமே இருப்பதை விட்டுவிட்டுப் பறப்பதைப் பிடிப்பது. இரண்டுமே தவறானவை. லாவோட் சூவுக்கு இரண்டுமே வெகு முட்டாள்தனமானவை.

உன்னுடைய கடைவீதி ஒரு கடைவீதிதான். உன்னுடைய கோயிலும் அதில் ஒரு பகுதிதான். இந்த உலகம்பாற்பட்ட ஆசைகள் ஒருவித ஆசைகள்தான். அவ்வுலகம் பற்றிய ஆசைகளும் ஆசைகள்தான். பார்க்கப்போனால் அவ்வுலக ஆசை என்பதே தவறு. எல்லா ஆசைகளும் இவ்வுலகம்பாற்பட்டவையே. ஆசை என்றாலே அது இந்த உலகம் பாற்பட்டதுதான். ஆசை என்றாலே அது இவ்வுலகம்தான்.

ஒரு கதை சொல்கிறேனே!

ஒரு ஸூபியின் வாழ்வில் நடந்தது. அவர் பெரிய ஞானி. மௌனமாகத் தன்னளவில் வாழ்ந்து கொண்டிருந்தார். ஒருநாள் திடீரெனக் கடவுளின் தூதர் அவரிடம் வந்தார்.

''உன்னுடைய பிரார்த்தனைகளைக் கடவுள் ஏற்றுக் கொண்டார். முழுமுதற் கடவுள், படைத்தவர், அவருக்கு உன்மீது வெகு பிரியம் வந்துவிட்டது. உனக்கு என்ன வரம் வேண்டுமானாலும் கேட்கலாம். எது கேட்டாலும் கிடைக்கும். என்ன வேண்டும்? கேள்.''

அவருக்குச் சற்றே குழப்பம் வந்துவிட்டது. ''நீங்கள் கொஞ்சம் காலம் தாழ்ந்து வந்துவிட்டீர்கள். எனக்கு இதுவேண்டும் அதுவேண்டும் என்றிருந்தபோது நீங்கள் வரவே இல்லை. எனக்கு ஆசைகள் இருந்தபோது நீங்கள் வரவே இல்லை. இப்போது எனக்கு எந்த ஆசையும் இல்லை. என்னை அப்படியே ஏற்றுக் கொண்டேன். வெகு சௌகரியமாக இருக்கிறேன். என் யதாஸ்தானத்தில் இருக்கிறேன். கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பதைப் பற்றிக்கூட எனக்கு அக்கறை இல்லாமல் போய்விட்டது. ஏதோ பிரார்த்தனை செய்தால் சௌகரியமாக இருக்கிறது என்பதால் பிரார்த்தனை செய்கிறேன். அவரைப்பற்றி நினைப்பதுகூடக் கிடையாது. என்னுடைய பிரார்த்தனைகள் இப்போது யார் பெயரிலும் இருப்பதில்லை. மூச்சு விடுவதைப்போல இயல்பாகப் பிரார்த்திக்கிறேன். அருமையாக இருக்கிறது. கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பது

பொருளில்லாத விஷயமாகிப் போய்விட்டது. கொஞ்சம் தாமதமாகத்தான் வந்திருக்கிறீர்கள். எனக்கு இப்போது எந்த ஆசையும் இல்லை.''

ஆனால் வந்த தேவதை விடுவதாக இல்லை. ''இது கடவுள் குற்றமாகிப் போகும். அவர் கேள் என்று சொல்லும்போது நீ கேட்டுத்தான் ஆகவேண்டும்.''

அவரோ மேலும் குழம்பிப் போனார். தோள்களைக் குலுக்கிக் கொண்டார். ''எதைக் கேட்பது? எதையாவது சொல்லுங்களேன். எல்லாவற்றையும் அப்படி அப்படியே ஏற்றுக் கொண்டேன். எனக்கு வெகுதிருப்தியாக இருக்கிறது. அதிகபட்சம் நீங்கள் கடவுளிடம்போய் என் நன்றியைத் தெரிவிக்கலாம். எல்லாமும் எப்படி எப்படி இருக்க வேண்டுமோ அப்படி அப்படி இருக்கின்றன. எதுவும் தேவை என்றில்லை. எல்லாமும் பரிபூரணமாக இருக்கிறது. எனக்கும் ஆனந்தமாக இருக்கிறது. பரவசமாக இருக்கிறது. அடுத்த கணத்தைப்பற்றி எனக்கு எதுவும் தெரியாது. ஆனால் இந்தக் கணம் நான் வெகு திருப்தியாக இருக்கிறேன். நீங்கள் போய்க் கடவுளுக்கு என் நன்றியைச் சொல்லிவிடுங்கள்.''

ஆனால் தேவதை மறுபடி வற்புறுத்தியது. ''முடியாது. நீ எதையாவது கேட்டுத்தான் ஆகவேண்டும். நாகரிகத்துக்காவது கேட்டுத்தான் ஆகவேண்டும். புரிந்து கொள்ளேன்.''

பிறகு அவர் சொன்னார். ''கேட்டுத்தான் ஆகவேண்டும் என்றால் அவரிடம் இப்போது எப்படி ஆசையற்று இருக்கிறேனோ அப்படியே ஆசையற்று என்றைக்கும் இருக்கவேண்டும் என்று சொல். கடவுள்தான் ஆசையற்ற நிலையை எனக்குத் தந்தவர்.''

இதையே ஏற்றுக் கொள்ளுதல் என்றும் சொல்லலாம். இரண்டுக்கும் பொருள் ஒன்றுதான்.

ஆசை என்றால் ஏதோ ஒன்றை ஒதுக்கி விடுதல் என்று பொருள். இருப்பதை விடுத்து வேறொருவ்ராக இருக்கவேண்டும் என்பது. ஆசையின்றி இருத்தல் என்பது ஏற்றுக் கொள்ளுதல். எது எது எப்படி எப்படி இருக்கிறதோ அப்படி அப்படி இருப்பதில் மகிழ்ச்சி காண்பது. மகிழ்ச்சியாக இருக்கிறாய் என்பதுதான் முக்கியம்.

லாவோட் சூ சொல்வதும் அதுதான். ''எப்படி இருக்கிறாயோ அதில் திருப்திகொள். வேறு ஏதும் தேவையில்லை. திடீரென எல்லாமும் நடக்கின்றன. ஆழ்ந்த ஏற்புடைமையில் அகந்தை தொலைந்து போகிறது.

மறுப்பதில்தான் அகந்தை வாழ்கிறது. எதை எப்போது மறுக்கிறாயோ அப்போதெல்லாம் அகந்தை இருக்க வருகிறது. இல்லை என்று

சொல்லும்போதெல்லாம் அகந்தை வலிமை அடைகிறது. ஆமாம் என்று சொல்லும்போது, ஜீவிதத்துக்கு முழுமையாக ஒப்புக் கொடுத்துவிட்டு ஆமாம் என்று சொல்லும்போது அதுதான் உனக்கு மிகப் பெரிய தியானத்துக்குள்ளான நுழைவு.

பிற தியானங்களுக்குள் போக முடியும். ஆனால் வெளியே வந்துதான் ஆகவேண்டும். இந்த ஒரு தியானத்துக்குள் போகும்போது மட்டுமே திரும்பி வராத தியானத்துக்குள் போய்விடுகிறாய். ஏனென்றால் இதற்குள் புகுந்து விட்டால் நீ இல்லாமல் போய்விடுகிறாய்.

மூன்றாவது கேள்வி:

**எந்தக் கேள்வியும் பலாத்காரமானது என்று சொல்கிறீர்கள். ஆனால் எங்களைக் கேள்வி கேட்க உற்சாகப்படுத்துகிறீர்கள். ஏன்?**

நீ பலாத்காரமானவன் என்பதாலும் அந்தப் பலாத்காரத்தைப் புடம்போட்டு நீக்கவேண்டும் என்பதாலும்தான். உங்களிடம் கேள்விகள் இருக்கின்றன. அவற்றைக் கேட்கும் தைரியம் இல்லாமல் இருக்கலாம். அதனால்தான் உங்களை உற்சாகப்படுத்தவேண்டி இருக்கிறது. கேள்விகள் இருக்கின்றன. அவற்றைக் கடந்து போகத்தான் வேண்டியிருக்கிறது. கேட்டுவிட வேண்டியதுதானே?

என்னுடைய பதில்கள் உன்னுடைய கேள்விகளை அழித்துப்போடும் என்று நான் சொல்ல மாட்டேன். என் பதில்களின் நோக்கம் அதுவல்ல. அவற்றுக்கு முற்றிலும் வேறான நோக்கங்கள் இருக்கின்றன. எல்லாக் கேள்விகளும் பயனற்றவை, வீணானவை, முட்டாள்தனமானவை என்பதை உணர வைக்கவே நான் பதில் சொல்கிறேன்.

கேள்விகள் கேட்பதை மனம் நிறுத்திவிடும் நிலைக்கு நீ வந்துவிட வேண்டும் என்பதுதான் என் விருப்பம். ஆனால் முடிவதில்லை. அவ்வளவு கேள்விகள் உள்ளே இருக்கின்றனவே. அவற்றுக்கு விடுதலை தந்துவிடு. அவற்றை அடக்கி வைக்காதே. தைரியமாக இரு. அவை முட்டாள் தனமானவை என்று நினைத்தாலும் கேட்காமல் இருக்காதே. அவற்றை மறைத்து மறைத்து வைத்தால் அவற்றிலிருந்து உனக்கு விடுதலையே கிடையாது. அவை சிறுபிள்ளைத்தனமாகத் தோன்றினாலும் கேட்டுவிடு. எல்லாக் கேள்விகளும் சிறுபிள்ளைத்தனமானவைதான்.

நான் உன்னுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்வதே இல்லை. எந்தக் கேள்விக்கும் பதில் சொல்லிவிட முடியாது. உன்னுடைய கேள்விகள் காய்ச்சலில் பிதற்றுகிறவனைப்போல. 108, 109, 110 என்று காய்ச்சல் ஏறிக்கொண்டே இருக்கிறது. பிதற்றுகிறான்.

''எல்லாம் நகர்ந்துகிட்டே இருக்குது. பாரு பாரு. அந்த டேபிள் பறக்குது.''

கேட்கிறான். ''எங்கே பறந்துக்கிட்டிருக்குது அந்த டேபிள்?''

அவனிடம் என்ன சொல்வது? என்ன சொன்னாலும் அது தவறாகப் போய்விடும். அந்த டேபிள்தான் நகராமல் கிடக்கிறதே. ஆனால் அவனிடம் சொல்லி நம்பவைக்க முடியாது. நகரவில்லையப்பா. இங்கேதான் இருக்குது என்று சொல்லிப்பார். நம்பவே மாட்டான். யாரையும் அவரவர் அனுபவங்களுக்கு எதிராக எதையாவது சொல்லி நம்பவைக்க முடியாது.

எப்படி அவரவர் அனுபவத்துக்கு எதிராக எதையாவது சொல்லி நம்பவைப்பது? அவரவர் அனுபவங்கள் துணை புரியும் போதுதான் நம்பிக்கை சாத்தியம். இல்லையேல் இல்லைதான். அவனுக்கு டேபிள் பறந்து கொண்டிருக்கிறது. சன்னல் வழியாக வெளியே போய்க் கொண்டிருக்கிறது. டேபிளுக்கு இறக்கைகள் இருக்கின்றன. டேபிளுக்கு மட்டுமா? அவன் படுத்திருக்கிற கட்டிலுக்கும்தான். அதுகூடப் பறப்பதற்குத் தயாராக இருக்கிறது. என்ன சொல்லி அவனை நம்பவைப்பது?

அவனை நம்பவைக்க முயன்றால் நீ பைத்தியக்காரனாகிப் போவாய். பைத்தியக்கார டாக்டர்தான் நம்பவைக்க முயல்வார். ''கவலைப்படாதே. அந்த டேபிள் திரும்பி வந்துவிடும். நாங்க பாத்துக்கறோம். கவலைப்படாதே. என்ன வேணுமோ எல்லாம் செய்யறோம்'' என்பார்கள். அவனுடைய காய்ச்சலை இறக்கப் பார்ப்பார்கள். காய்ச்சல் இறங்கிப் போனால் டேபிள் திரும்பி வந்துவிடும். காய்ச்சல் ஓய்ந்து போனால் டேபிள் அதனுடைய இடத்தில் அப்படியே இருக்கும். அது எப்போதும் அங்கேயேதான் இருந்திருக்கிறது. ஒரு இஞ்ச்கூட நகரவில்லை.

இதுதான் நீ இருக்கும் சூழ்நிலை. நான் பார்க்கிறேன். எனக்குத் தெரிகிறது. நீ காய்ச்சலில் பிதற்றுகிறாய் என்பது நன்றாகத் தெரிகிறது. இந்தப் பிதற்றல் வெகு சூட்சுமமானது. எந்தத் தெர்மோ மீட்டரும் அளக்க முடியாதது. அது ஓர் உட்காய்ச்சல். உடம்பின் சூடு அதிகமாவதல்ல. உனக்குள் நீ காய்ச்சலில் பிதற்றிக் கொண்டிருக்கிறாய். பிறகென்ன? கேள்விகள், கேள்விகள், கேள்விகள் என்று கிளம்பிக்கொண்டே இருக்கின்றன. புற்றீசல்கள்போலப் பறந்துகொண்டே இருக்கின்றன. அவற்றைக் கேட்டுத்தொலைக்க நான் உனக்கு உதவுகிறேன். அவற்றை அப்படியாவது ஒழித்துக் கட்டலாம் என்றுதான். இது ஒருவகையான புடம்போடும் முயற்சி. எரித்து ஒழிப்பது. இது தியானத்தின் ஒரு பகுதி.

நான் சொல்வதைக் கேட்கக்கேட்கக் கேள்விகள் கேட்பதில் எந்தப் பயனும் இல்லை என்பதைத் தெரிந்துகொள்வாய். கேள்வி கேட்பதே

வியர்த்தம் என்பதைத் தெரிந்துகொள்வாய். இதைப் புரிந்து கொள்ளும்போது உன் மனநிலையில் பெரியதொரு மாற்றம் வந்து சேர்கிறது. எல்லாக் கேள்விகளும் மறைந்து போகின்றன.

எல்லாக் கேள்விகளும் மறைந்துவிடும்போது பதில் வந்து சேர்கிறது. மறந்து விடாதே. எத்தனை கேள்விகள் இருக்கின்றனவோ அத்தனை பதில்கள் இல்லை. ஒரே ஒரு பதில்தான் இருக்கிறது. எல்லாக் கேள்விகளுக்கும் ஒரே பதில்தான். லட்சக்கணக்கான கேள்விகள் இருக்கின்றன. ஆனால் பதில் மட்டும் ஒன்றே ஒன்றுதான். ஒரே ஒரு பதில். பதிலே ஆகிப்போன பதில். அதுதான் ஆன்ம அறிவு. எனவே ஆன்மாவைப்பற்றித் தெரிந்துகொள்ள நான் உனக்கு உதவுகிறேன்.

ஒரு ஸூபி கதை.

சிலர் ஒரு ஸூபி மடத்தைத்தாண்டிப் போய்க்கொண்டிருந்தார்கள். உள்ளே என்னதான் நடக்கிறது என்று தெரிந்துகொள்ள எட்டிப் பார்த்தார்கள். ஒரே சத்தம். இரைச்சல். குதித்து ஆடிக்கொண்டு இருந்தார்கள். சரிதான் பைத்தியம் பிடித்தவர்கள் என்று சொல்லிக் கொண்டார்கள். "இது ஒரு பைத்தியக்காரத்தனமான ஆசிரமம். இங்கே வந்தவர்களுக்கு ஞானோதயம் கிடைக்கும் என்று நினைத்துக் கொண்டிருந்தோம். ஆனால் இங்கேயோ இவர்கள் பைத்தியம் பிடித்துத் திரிகிறார்கள்." அத்தனை இரைச்சலுக்கும் நடுவே குரு உட்கார்ந்திருந்தார். அத்தனை பைத்தியக் காரத்தனமான காட்டுக் கூச்சலுக்கு நடுவில் அமைதியாக உட்கார்ந்திருந்தார்.

இவர் ஏன் அமைதியாக உட்கார்ந்திருக்கிறார் என்று சிந்தித்தார்கள். அவர்களுள் ஒருவர், "அவரு பாவம். களைப்பா இருக்கும். எத்தனை நேரமா இந்தப் பைத்தியக்காரத்தனத்தைக் கேட்டுக்கிட்டு இருக்காரோ!" என்றான்.

சில மாதங்களுக்குப் பின் அவர்கள் மறுபடி அந்த ஆசிரமத்தைத் தாண்டிப்போக வந்தது. அந்தப் பைத்தியக்காரர்களுக்கு என்ன ஆகிப் போயிருக்கும் என்று எட்டிப் பார்த்தார்கள். அப்போது அவர்கள் அனைவரும் மிக மௌனமாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார்கள். ஒரு வார்த்தைகூட இல்லை. வெகுவாக அமைதி. உள்ளே போனவர்கள் பயந்து போனார்கள். யாரும் இல்லைபோல இருக்கிறதே. எங்கேயாவது பைத்தியம் பிடித்து ஓடிவிட்டார்களோ? உள்ளே போனபோது அனைவரும் இருக்கக் கண்டார்கள். ஆனால் மிக மௌனமாக இருக்கக் கண்டார்கள்.

சில மாதங்களுக்குப் பின் மறுபடி அந்த ஆசிரமத்தை அவர்கள் கடக்க நேர்ந்தது. மீண்டும் அங்கேபோய்ப் பார்த்தார்கள். யாரையும் காணோம்.

குரு மட்டுமே இருந்தார். என்ன நடக்கிறது இங்கே என்று அவரிடம் விளக்கம் கேட்டார்கள்.

''முதல் தடவை நீங்க இந்த வழியா போறப்போ அவங்க எல்லாம் உள்ளே இருக்கறதை வெளியே கொட்டிக்கிட்டு இருந்தாங்க. ஆரம்ப கால சாதகர்கள் அப்போ. அடுத்த தடவை போனப்போ அவர்கள் என்ன ஏது என்று விவரம் தெரிஞ்சுக்கிட்டாங்க. அமைதியாயிட்டாங்க. அதான் மௌனமா உட்கார்ந்திருந்தாங்க: செய்யறதுக்கு ஒண்ணும் இல்லே. மூணாவது தடவை போனப்போ அவங்க இங்கே இருக்க வேண்டிய அவசியம் தீர்ந்து போச்சு. உலகத்துலே எங்கே போனாலும் மௌனமா இருக்க முடியும்னு ஆகிப் போச்சு. அதனாலே அவங்களை அனுப்பி வெச்சுட்டேன். அடுத்த ஆளுக வர்ற வரைக்கும் காத்திருக்கிறேன். அடுத்த தடவை நீங்க இந்த வழியிலே போறப்போ பைத்தியக்காரத்தனத்தை மறுபடி பார்ப்பீங்க'' என்றார்.

கேளுங்கள் என்று உங்களைத் தூண்டக் காரணம் உங்களுடைய மனதை வெளியேகொண்டு வரணும்கறதுதான். நீங்களாகவே மௌனித்துப் போகலாம். என்னுடைய பதில் எல்லாம் உங்களுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்லும் முயற்சியே இல்லை. அவற்றைக் கொன்றுவிடும் முயற்சிதான். அவற்றைக் கொலை செய்துவிடும் முயற்சிதான். நான் ஒரு கொலைகாரனாக இருக்கலாம். ஆனால் நான் போதிக்கிறவன் அல்ல. உங்களுக்கு நான் எதையும் சொல்லித்தரப் போவதில்லை. உங்களுடைய கேள்விகளை அழிக்கிறேன்.

எல்லாக் கேள்விகளையும் அழித்துப் போட்டால் உங்களுடைய தலைகளை வெட்டியாயிற்று. உங்களைக் கொன்றுவிடுகிறேன். பிறகு நீங்கள் முழுக்க மௌனித்து விடுகிறீர்கள். திருப்தியாக நிறைந்து போனவர்களாக ஆகிப் போகிறீர்கள். எந்தப் பிரச்சனையும் இருப்பதில்லை. கணத்துக்குக்கணம் வாழ்கிறீர்கள். ஒவ்வொரு கணத்தையும் ஆனந்தமாக அனுபவிக்கிறீர்கள். எந்தப் பிரச்சனையும் இருப்பதில்லை.

நான் தத்துவ வாதத்துக்கு எதிரானவன். ஆனால் தத்துவவாதம் செய்யவேண்டி இருக்கிறது. என்னுடைய பணியே பிணி தீர்ப்பதுதான். நான் ஒரு தர்க்கவாதி அல்ல. உன்னுடைய காலில் ஒரு முள் தைத்து விட்டது. இன்னொரு முள்ளைக் கொண்டுவந்து அந்த முள்ளை எடுக்கிறேன். முதல் முள்ளும், இரண்டாவது முள்ளும் ஒரே மாதிரியான முட்கள்தான். அவற்றுக்கிடையே எந்த வித்தியாசமும் இல்லை. முதல் முள்ளை இரண்டாவது முள்ளை வைத்து எடுத்தானபின் இரண்டு முட்களையும் வீசிவிடுகிறேன்.

உங்களுடைய கேள்விகளை வெளிக் கொணரும்போது அவற்றின் இடத்தில் என்னுடைய பதில்களை வைத்துக் கொள்ளுங்கள் என்று நான் சொல்லவில்லை. என்னுடைய பதில்களையும் தூக்கிப்போட்டு விடுங்கள் என்கிறேன். இல்லையென்றால் என்னுடைய பதில்களால் உங்களுக்குப் பிரச்சனைதான் வரும். என்னுடைய பதில்களைச் சுமந்து திரியாதீர்கள். அவை மருந்துகள். அவை முட்கள். மற்ற முட்களை வெளியே கொண்டுவரப் பயன்படும். அதன் பிறகு இரண்டையும் தூக்கி வீசிவிட வேண்டியதுதான்.

நான்காவது கேள்வி:

**மேற்கத்திய ஞானிகளில் ஒருவர் வெர்னர் எர்ரார்டு. வாழ்வின் போக்கில் நீங்கள் தீர்த்து வைக்க நினைத்த பிரச்சனைகளும் பொறுத்துக் கொள்ள நினைத்திருந்த பிரச்சனைகளும் தாமாகவே இல்லாமல் போய்விடுகின்றன என்கிறார். இது எப்படித் தியானத்தோடு தொடர்புடையதாகிறது? இரண்டும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையா?**

எர்ரார்டு சொன்னது மிகச் சரியான வார்த்தை. ஆனால் அவரைத் தவறாகப் புரிந்துகொள்ளலாம். அவர் சொல்வதெல்லாம் லாவோட் சு சொன்னதைப்போல அவ்வளவு ஆழமானவை. அவரைத் தவறாகப் புரிந்துகொள்ளலாம்தான்.

புரிந்துகொள்ளப் பார். ஆழ்ந்த உண்மைகள் எப்போதும் ஆபத்தானவை. அறியாதோர் கேட்டால் அவை இன்னமும் அபாயமாகிப் போகின்றன. உன்னுடைய முட்டாள்தனத்தோடு சேரும் ஞானம் மிகப்பெரிய வீழ்ச்சிக்குக் கொண்டு போய்விடும்.

ஆமாம். அது ரொம்பச் சரிதான். பிரச்சனைகளைத் தீர்த்துவைக்க முயல்கிறாய். அல்லது அவற்றைப் பொறுத்துக் கொள்கிறாய். அவை வாழ்வின் போக்கில் தாமாகவே கழிந்து போகின்றன. மிகச் சரியாகத்தான் சொல்லியிருக்கிறார். அது அப்படித்தான் நடக்கிறது. ஆனால் நீ கேட்கும் கேள்வி வேறு. அப்படி இருப்பது தியானத்துக்கு எதிரிடையானதா என்கிறாய். இப்படிக் கேட்கும்போது உன் முட்டாள்தனம் வெளிப்பட்டு விட்டது?

தியானமும் வாழ்வின் ஒரு பகுதிதான். வேறு எந்தக் காரியத்தையும் செய்வதைப் போலத்தான் தியானமும். வாழ்வின் ஒரு பகுதி அல்ல என்று எடுத்துக்கொண்டு ஏன் தியானத்தைப் பார்க்க வேண்டும்? தியானமும் வாழ்வின் ஒரு பகுதிதான். அதையும் கடந்து வரவேண்டி இருக்கிறது.

உனக்குள் ஏதோ ஒரு தேவை இருப்பதால் நீ தியானத்துக்கு வந்திருக்கிறாய். இல்லையேல் நீ ஏன் இங்கே வர வேண்டும்? உலகம் முழுக்க இருப்பவர்கள் எல்லோரும் என்னிடம் வந்திருக்கிறார்களா என்ன? சிலர்தான் வந்திருக்கிறார்கள். அவர்களுக்கும்தான் நான் இருக்கிறேன், உங்களுக்கு இருப்பதைப்போல. பூனாவில் இருக்கிறவர்கள் எல்லோரும் என்னிடம் வரவில்லையே. ஆனால் பல்லாயிரம் மைல்கள் கடந்து சிலர் வந்திருக்கிறீர்களே!

உனக்குள் ஏதோ ஒன்று இருக்கிறது. தியானத்துக்கான தாகம். உடற்பசி மட்டும் வாழ்வாகாது. காமம் மட்டும் வாழ்வாகாது. தியானமும் வாழ்வின் ஒரு பகுதிதான். வேறு எதையும் போலத்தான் அதுவும். நீ அதைக் கடந்துபோக வேண்டி இருக்கிறது. மற்றவர்களுக்குக் கடக்க வேறு விஷயங்கள் இருக்கின்றன. அவ்வளவுதான்.

எர்ரார்டு சொன்னது முழுக்கச் சரிதான். வேறு எதுவும் தேவை யில்லை. சும்மா வாழ்ந்தால் போதும். எல்லாமும் தாமாகத் தோன்றித் தாமாக அடங்கிப் போகின்றன. ஆனால் தியானம் வாழ்வின் ஒரு பகுதி. யோகா வாழ்வின் ஒரு பகுதி. அவற்றைக் கடந்துபோக வேண்டி இருக்கிறது. அதிலிருந்து தப்ப முடியாது. தப்பிப்போக முயற்சி செய்தால் வாழ்வில் எதைத் தவிர்த்து வந்திருக்கிறாயோ அதன் நிழல் உன்னைத் தொடர்ந்துகொண்டே இருக்கும். உன் தலைக்குமேல் வட்டமிட்டுக் கொண்டே இருக்கும். எதையோ செய்யாமல் இருக்கிறோமே என்ற உணர்வு இருந்துகொண்டே இருக்கும்.

தைரியமாக இரு. எதிலிருந்தும் தப்பிப்போக நினைக்காதே. உன்னுடைய அக வாழ்க்கை எங்கெல்லாம் உன்னை அழைத்துப் போகிறதோ அங்கெல்லாம் தயக்கமின்றிப் போ. எங்கே போகிறோம் என்பதைப்பற்றிக் கவலைப்படாதே. சில சமயம் அது பாதை தவறி அழைத்துப் போவதும் உண்டு. எனக்குத் தெரியும். ஆனால் வழிதவறிப் போவதும் வாழ்வின் ஒரு பகுதிதான். யாரும் எப்போதும் சரியாகவே இருக்கவேண்டும் என்பது சாத்தியம் இல்லை.

எப்போதும் மிகச் சரியாகவே இருக்கவேண்டும் என்று வாழ் கிறவர்கள் கடைசியில் மிகப்பெரிய தோல்விகளைத்தான் பெறு கிறார்கள். வழிதவறிப் போகிறோமே என்ற கவலையே வேண்டாம். வாழ்க்கை பாதைமாறி அழைத்துப் போனாலும் போய்ப் பார். மகிழ்ச்சியாகப் போ. எந்தச் சக்தி உன்னை வழிமாற்றி அழைத்துப் போகிறதோ அதே சக்தி உன்னைச் சரியான வழிக்கும் கொண்டு போகும். அந்தப் பயணமும் கடைசியாகச் சாதிக்கப் போகிற வளர்ச்சிக்குத் தேவையானதாக இருக்கலாம்.

கடைசியில் எல்லாமும் ஒன்றோடொன்று மிகச் சரியாகப் பொருந்தி வ்ருகின்றன என்பதுதான் என்னுடைய அனுபவம். நீ செய்த நல்லது கெட்டது, சரியானது தவறானது, ஒழுக்கமானது ஒழுக்கம் கெட்டது எல்லாமும் ஒன்றோடொன்று மிகச் சரியாகப் பொருந்தி வருகின்றன என்பதுதான் உண்மை. அந்த அளவுக்கு வாழ்க்கை பிரமாதமானது. திரும்பிப் பார்க்கும்போது நடந்ததெல்லாம் அப்படி அப்படியே இருக்கட்டும் என்றுதான் இருக்கும். ஏனென்றால் எந்த ஒரு பகுதியை மாற்றினாலும் மொத்தமும் மாறிப் போகிறது.

இதைத்தான் ஏற்புடைமை என்பது. இந்துக்கள் விதி என்று சொல்வதும் முகம்மதியர்கள் கிஸ்மத் என்று சொல்வதும் இதுதான். வெகு சுலபமாக இந்த நோக்கைக் கைக்கொள்ளலாம். என்ன நடந்தாலும் சரி, அதை உன்னுடைய விதியின் ஒரு பகுதியாக ஏற்றுக்கொள். அதற்குள் புகுந்துவிடு. உன்னை அதிலிருந்து விலக்கி வைக்காதே.

தவறு செய்ய வேண்டி இருக்கிறதா? முழுக்கத் தவறு செய். கீழே விழ வேண்டி இருக்கிறதா? மொத்தமாகக் கீழே விழுந்துவிடு. குடித்துவிட்டுக் கீழே விழுகிறவனைப்போல. எந்த எதிர்ப்பையும் காட்டாதே. காட்டினால் அதைத் தவற விட்டுவிடுவாய். இருட்டில்தான் வாழ வேண்டும் என்றால் மகிழ்ச்சியோடு வாழ். நடனமாடிக் கொண்டு வாழ். ஏன் துயரப்பட வேண்டும்? உன்னைச் சுற்றியிருப்பது நரகம் என்று தோன்றினால் அதை அப்படியே உணர். அதுவும் உன் விதியின் ஒரு பகுதி. உன் வளர்ச்சியின் ஒரு படிநிலை.

நரகத்தைத் தாண்டி வருவது சிரமம்தான். எனக்குத் தெரியும். ஆனால் வளர்ச்சி என்பதே சிரமமானதுதானே? ஒரு பிரச்சனையைச் சந்திக்கும் போது ஒரு சிக்கலைச் சந்திக்கும்போது தப்பித்து ஓடிப் போகலாம் என்றுதான் இருக்கிறது. அதை எதிர்கொள்ள விரும்புவதில்லை. கோழையாக இருக்கத்தான் விருப்பமே.

ஆனால் அப்படிச் செய்தால் அதைத் தவறவிட்டுவிடுவாய். எது உன்னுடைய பகுதியாகிப் போய் உன்னுடைய முழுமையை ஆக்க வேண்டி இருக்கிறதோ அதைத் தவற விட்டுவிடுவாய். உன்னுடைய கடைசி லயம், கடைசிச் சுருதி கெட்டுப்போகும்.

முழுக்க வாழ் என்கிறேன். இதில் எந்த நிபந்தனையும் இல்லை. எந்த நிபந்தனையுமற்ற வாழ்வை வாழ் என்கிறேன். உனக்குள்ளிருந்து தியானம் செய் என்றொரு குரல் கேட்டால் தியானம் செய். உள்ளிருந்து ஒரு குரல் குடி என்றால் குடித்துவிடு. குடிகாரனாகும் அளவுக்குக் குடித்துக் கொண்டிரு. முழுமையாக இரு. முழுமையாக எதையும்

பார்த்த பின்னரே ஒருவர் அதைக் கடக்க முடியும். முழுமையின் மூலமாகத்தான் ஒருவருக்கு நிலைமாற்றம் சாத்தியம். ஏனென்றால் முழுமைமூலம் மட்டுமே ஒருவர் தான் என்ன செய்கிறோம் என்பதைத் தெரிந்துகொள்ள முடியும்.

என்னிடம் வருகிறவர்களில் சிலர் தம்மிடம் மிகையான கோபம் இருப்பதாகச் சொல்கிறார்கள். இனியும் அவ்வளவு கோபம் தமக்கு ஆகாது என்கிறார்கள். வேண்டுமென்கிற அளவுக்கு அதனால் அவர்கள் சிரமப்பட்டாயிற்று என்கிறார்கள். அவர்கள் வாழ்க்கையே அதனால் துயரமாகிப் போய்விட்டது என்கிறார்கள். அதற்காக மிக வருந்துகிறார்கள். மீண்டும் மீண்டும் கோபப்படாமல் இருக்க முயல்கிறார்கள். இனி கோபமே படுவதில்லை என்று சொல்லிக்கொள்கிறார்கள். தம் சக்தி அனைத்தையும் அப்படிக் கோபப்படாமல் இருக்கச் செலவு செய்கிறார்கள். ஆனால் சில மணி நேரத்துக்குள் அத்தனையும் மறந்து விடுகிறார்கள். மறுபடி என்னவோ நடக்கிறது. அவர்கள் கோபத்தின் உச்சிக்குப் போய்விடுகிறார்கள். என்ன செய்வது?

அவர்களிடம் நான் சொல்வதுண்டு. வருத்தப்படாதே. அங்கே இருந்து ஆரம்பி. வருத்தப்படாமல் இருக்கவாவது முடியுமல்லவா? அதைப்பற்றிய குற்றக் குறுகுறுப்பு வேண்டாம். கோபப்பட்டு விட்டாய். உனக்குக் கோபம் வரும் என்பதை ஏற்றுக்கொள். சரி. முழுக்கக் கோபப்படு. கோபப்படுகிறேனே என்ற வருத்தம் முழுக்கக் கோபப்படுவதற்கு உன்னை விடுவதில்லை. கொஞ்சம் கோபம் தங்கிப் போய்விடுகிறது. அப்படித் தங்கிப் போய்விடும் கோபம் விஷமாகிப் போகிறது. கான்சர் வளர்வதைப் போலத்தான். அது உன் வாழ்க்கை மொத்தத்தையும் பாதிக்கிறது.

கோபப்படு. கோபத்தில் இருக்கும்போது நானே கோபம். அதனால் கோபப்படுகிறேன் என்று சொல்லிக்கொள். வேறு யாரும் பின்னால் இருந்து கோபம் என்ற அந்த நிகழ்வைப் பார்க்க வேண்டியதில்லை. நீயேதான் கோபம். அது ஒரு அக்னியாகிப்போகும். நரகத்துத் தீயாகிப்போகும்.

வெகு சிரமம்தான். என்றாலும் அனுபவித்துத்தான் ஆகவேண்டி இருக்கிறது. ஒருமுறை நரகத்துத் தீயில் விழுந்துவிட்டால் முதல் முறை தான் சுதாரித்துக்கொள்ள வேண்டி இருக்குமோ என்னவோ? தீக்குள் விழுந்தபின் அதைப்பற்றி மறுபடி மறுபடி முடிவெடுக்க என்ன வேண்டி இருக்கிறது? அந்த ஒரு அனுபவம் போதும். மறுபடி அந்தத் தீயின் பக்கம் போகவே மாட்டாய். அப்படிப் போவதில்லை என்று சபதம் போட வேண்டியது ஏதுமில்லை. அதைப்பற்றிப் பாதிரியாரிடம் புலம்பி மன்னிப்புக் கேட்க வேண்டியதில்லை. அதையும் அனுபவிக்க ஆரம் பித்து விடுகிறார்கள்.

ஒரு பெண் ஏழாவது தடவையாகப் பாவ மன்னிப்புக் கேட்க சர்ச்சுக்கு வந்தாள். பாதிரியாருக்குக்கூட ஒரே ஆச்சரியம். ஒவ்வொரு முறை வரும்போதும் ஒரே பாவத்துக்கு மன்னிப்புக் கேட்கிறாளே! தன் கணவனைத் தவிர்த்து மற்றொருவனோடு உடல் உறவு கொண்டு விட்டாளாம்.

எனவே அவர் கேட்டார். ''இந்தப் பாவத்தை ஏழு தடவை செய்தாயா? ஒரே ஒரு தடவைதானா?''

''ஒரே ஒரு தடவைதான்.''

''அப்படியானால் ஏன் இத்தனை தடவை பாவ மன்னிப்புக் கேட்கிறாய்? ஏற்கெனவே ஏழுமுறை பாவ மன்னிப்புக் கேட்டுவிட்டாய்.''

''அதைப் பத்திப் பேசறது எனக்கு ரொம்பத் திருப்தியா இருக்குது. அவ்வளவு அருமையான அனுபவம். அதை நினைச்சுப் பாத்தாக்கூடப் போதும்.''

கற்பனையில் அதை மீண்டும் மீண்டும் அனுபவிக்கத் தோன்றுகிறது. பாதிரியாரிடம் சொன்னாலும் பாதகமில்லை.

பாவமன்னிப்புக் கேட்பதும் வருந்துவதும் ஒருவகையான மகிழ்ச்சியான அனுபவம் ஆகிப்போகிறது. அதுவும் அதைப்பற்றி மிகைப்படுத்திச் சொல்லியாவது அனுபவிக்கிறார்கள். அதையும் நான் பார்த்துவிட்டேன். ஸெயிண்ட் அகஸ்டின் தன்னுடைய ஒப்புதல்கள் என்ற புத்தகத்தில் மிகைப்படுத்திப் பேசுகிறார். அதை அவர் அனுபவித்துச் சொல்கிறார். அவ்வளவு பாவங்கள் செய்ய முடியும் என்பதே கவர்ச்சியாகத் தெரிகிறது.

இந்தியாவில் காந்தியை எடுத்துக் கொள்ளலாம். அவருடைய சுயசரிதைகளைப் படித்துப்பார். மிகைப்படுத்தியே எழுதியிருக்கிறார். தன்னுடைய பாவங்கள்பற்றிப் பேசிக்கொண்டே இருக்கிறார். என்னவோ அதை அனுபவித்து அனுபவித்துப் பேசுவதைப்போல இருக்கிறது. மனோதத்துவத்தில் இதற்கு ஒரு விளக்கம் தருகிறார்கள். தங்களுடைய பாவங்களை மிகைப்படுத்திப் பேசும்போது இப்போது தான் எவ்வளவு பெரிய மகானாக இருக்கிறோம் என்ற திருப்தி கிடைப்பதாகச் சொல்கிறார்கள். சாதாரணமான பாவங்களை எல்லாம் விட்டுவிட்டு அவ்வளவு பெரிய பாவங்களைச் செய்தவர்களாம். இப்போதோ அவ்வளவு பிரமாதமான மகான் ஆகிவிட்டார்களாம். இடைப்பட்ட தூரம் வெகு அதிகம்தான். என்ன ஒரு பெரிய புரட்சி அவர்கள் வாழ்வில்!

மிகப்பெரிய பாவிதான் மிகப்பெரிய மகானாக இருக்க முடியும். எப்படிச் சாதாரண பாவி அசாதாரணமான மகான் ஆவது? ஒரு சிகரெட் புகைக்கிறாய். ஒரு சிகரெட் புகைத்த பாவத்துக்காக நீ ஸெயிண்ட் அகஸ்டின் ஆக முடியுமா அல்லது காந்தி ஆக முடியுமா? ஒரு பெண்ணைப் பார்த்தாய். ஆசைப்பட்டாய். அதனால் காந்தி ஆகிவிட முடியுமா? போதாது, போதாதப்பா போதாது. சிறு சிறு பாவங்களைச் செய்தவனைக்கொண்டு பெரிய மகானைப் படைக்க முடியாது. நீ மிகப் பெரிய பாவியாக இருக்கவேண்டி இருக்கிறது.

எனவே சுயசரிதை எழுதும்போது அதை அப்படியே நம்பிவிடக் கூடாது. ஆயிரம் சுயசரிதைகளாவது படித்திருப்பேன். இதுதான் என்னுடைய கருத்து. கதைவிடுவதில் எந்தக் கதையும் சுயசரிதையை விஞ்ச முடியாது. எல்லாச் சுயசரிதைகளும் கதைகள். பிரமாதமான கற்பனைக் கதைகள். புனைகதைகள். தன்னைப் புகழ்ந்தே எழுதுகிறார்கள். அல்லது தன்னைப் பெரிய பாவியாக்கி வைத்து எழுதுகிறார்கள். ஆனால் இரண்டும் பொய். ஆனால் அப்படிச் செய்யும்போது தான் சாதாரணமானவன் அல்ல என்ற உணர்வைத் தருகிறார்கள். சாதாரணமானவனாக இருக்க இந்த அகந்தை விடுவதில்லை.

ரின்ஸாயிடம் ஒருவர் கேட்டார். ''நீங்க என்னதான் செய்யறீங்க? எதைச் சாதகம் பண்றீங்க?''

அவர் வெகு சாதாரணமானதைச் சொன்னார். அதை வைத்துக் கொண்டு சுயசரிதை எழுத முடியுமா பாருங்கள். ''எனக்குப் பசிக்கும்போது சாப்பிடுகிறேன். தூக்கம் வரும்போது தூங்கிவிடுகிறேன். அவ்வளவுதான்.''

இதை வைத்துக்கொண்டு எப்படி ஒரு சுயசரிதை எழுதுவது? ரின்ஸாய் ஒரு பெரிய மகான் என்று யார் ஒப்புக் கொள்வது? அதைப் போன்றவர் எப்படி மகான் ஆக முடியும்?

ரின்ஸாய் இறந்த பின் அவருடைய சீடர் ஒருவர் பிரசங்கங்கள் செய்து வந்தார். அவருக்கு எதிரான இன்னொரு வகுப்பைச் சேர்ந்த ஒருவர் அவருடைய பிரசங்கத்துக்கு வந்தார். அவர் பேச்சைக் கேட்க நிறையப் பேர் வருகிறார்கள் என்று இவருக்குப் பொறாமை.

எனவே எழுந்து நின்றார். ''ஒரு கேள்வி. உங்களுடைய குருவைப்பற்றி நிறையத்தான் பேசுகிறீர்கள். அப்படி என்ன அற்புதங்களை அவர் செய்துவிட்டார்? என்னுடைய குருவைப் பார். ஆற்றின் இந்தக் கரையில் நின்று கொண்டு ஒரு பேப்பரில் எழுதுவார். ஆற்றில் நிறைய வெள்ளம். கடக்க முடியாத அளவுக்கு வெள்ளம். ஆனால் அக்கரையில்

நின்றுகொண்டு பேப்பரைப் பிடித்துக் கொண்டிருக்கும் ஒருவனுடைய பேனா அவர் இங்கே எழுதுவதை அப்படியே அட்சரம் பிறழாமல் அங்கே எழுதும். இப்படி ஏதாவது அற்புதம் செய்திருக்கிறாரா உன் குரு?''

''எனக்கு அவர் செய்த ஒரே ஓர் அற்புதம்தான் தெரியும். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கணமும் அதைத்தான் செய்து கொண்டிருந்தார்.''

மண்டபம் முழுக்க அமைதி. எல்லோருக்கும் என்ன சொல்லப் போகிறார் என்று தெரிந்துகொள்ள ஒரே ஆவல். அப்படி என்ன அற்புதம் செய்திருக்கிறார் ரின்ஸாய்?

அந்தச் சீடர் சொன்னார். ''பசித்தபோது சாப்பிட்டார். தூக்கம் வந்தபோது தூங்கினார். அது ஒன்றுதான் அவர் செய்த அற்புதம்.''

இதிலென்ன அற்புதம் இருக்கிறது என்கிறாயா? இது மிக ஆழமான ஓர் அற்புதம்தான். முழுமையாக இயல்பாக இருப்பது என்று பொருள். எப்போதும் போராடிக்கொண்டே இருக்கிறாய். ஆயிரத்தொரு காரியம் செய்ய வேண்டி இருக்கிறது. பசித்தபோது சாப்பிட முடியவில்லை. பசி இல்லாதபோது சாப்பிடுகிறாய். ஏனென்றால் அது சாப்பாட்டு நேரம் என்கிறாய்.

தூக்கம் வரும்போது தூங்கப் போவதில்லை. நடன நிகழ்ச்சி ஒன்று நடக்கிறது. அல்லது சினிமா ஒன்று ஓடுகிறது. பார்க்க வேண்டும். தூங்கக் கூடாது. தூக்கக் கலக்கத்தில் நடனத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய். அல்லது சினிமா பார்த்துக் கொண்டிருக்கிறாய். சினிமா உன் உணர்வுகளை வெகுவாகத் தூண்டிவிட்டு விட்டது. வந்த தூக்கம் போய்விட்டது. தூக்க மாத்திரை சாப்பிட்டும் தூங்க முடியவில்லை.

இது இயற்கைக்கு மாறானது. இதுவே நமது இயல்பாகிப் போய்விட்டது. எனவே இயற்கையாக இருப்பது ஓர் அற்புதமாகி விட்டது. மிகப்பெரிய அற்புதம்தான். சாப்பிடுவது தூங்குவது குடிப்பது தென்றல் காற்றை அனுபவிப்பது போன்ற சாதாரண சமாச்சாரங்களில் பெரிய அற்புதங்களைச் செய்ய வேண்டி இருக்கிறது. சாதாரண செயல்களைச் செய்வதில், அவற்றில் ஆனந்தப்படுவதில் வாழ்க்கை முழுக்க ஒரு கொண்டாட்டமாக ஆகிப்போகிறது.

எர்ரார்டு சொன்னது சரிதான். லாவோட் சுவின் அடியொற்றித்தான் பேசியிருக்கிறார். ''வாழ்வின் போக்கில் நீங்கள் தீர்த்து வைக்க நினைத்த பிரச்சனைகளும் பொறுத்துக் கொள்ள நினைத்திருந்த பிரச்சனைகளும் தாமாகவே இல்லாமல் போய்விடுகின்றன.'' வாழ்க்கையை அதன்

முழுமையில் வாழ்ந்து விடு. அதனுடைய அனைத்துப் பருமானங்களிலும் போய்ப் பார். ஒவ்வொரு தளத்திலும் அனுபவித்துப் பார். அப்படி அனுபவிப்பதை முழுக்க அனுபவி. கடைசியில் அப்படி அனுபவித்து வாழ்ந்த ஒவ்வொன்றும் உனக்குச் சகாயமாக இருப்பதைக் காண்பாய். ஒவ்வொன்றும்தான் என்கிறேன். உனக்கு அவ்வளவு துயரத்தைத் தந்த உன் மனைவியும்தான். நீ வெகுவாகப் பாசத்தைக் கொட்டி வைத்திருந்தும் சின்ன வயதிலேயே இறந்துவிட்ட உன் குழந்தையும்தான். நொடிந்துவிட்ட வியாபாரமும் அதனால் ஏறக்குறைய முடிந்தே போய்விட்ட உன் வாழ்வும்தான். ஆமாம் - ஒவ்வொன்றும்தான். தோல்வியும் வெற்றியும். வலியும் ஆனந்தமும். சரியும் தவறும். வழி தவறிப் போய்விட்டு மீண்டு வந்ததும்தான். எல்லாமும்தான் சகாயமாக இருக்கின்றன.

இந்த அமளிகளில் இருந்து ஒரு லயம் பிறக்கிறது. ஆனால் எதையும் முழுக்க வாழவேண்டி இருக்கிறது. எல்லோரும்தான் இந்த லயத்தைச் சென்று சேர்கிறார்கள் என்று சொல்லமாட்டேன். அது ஒரு சாத்தியம்தான். ஒருவர் போய்ச் சேர்ந்து விடலாம். மற்றவர் தவற விட்டுவிடலாம். தவற விடுகிறவர்கள் அதை எப்படியும் சாதித்துவிட வேண்டும் என்று கடுமையாக முயற்சிக்கிறவர்கள்தான். அதைச் சென்று சேர்கிறவர்கள். அப்படிச் சென்று சேர வேண்டும் என்பதைப் பற்றி அவ்வளவாகக் கவலைப்படாதவர்கள். அவர்கள் கணத்துக்குக் கணம் வாழ்கிறவர்கள்.

அந்தக் கடைசி லயம், அந்த உச்ச ஸ்தாயி ஒரு கூட்டு விளைவு. எனவே நீ எங்கே இருந்தாலும் அங்கே இருப்பதை அனுபவி. நன்றியுடையவனாக இரு. உன்னிடம் என்ன இருந்தாலும் சரி அதை அனுபவி. ஆழ்ந்த நன்றி உணர்வோடு இரு. அது மட்டுமே உன்னுடைய பிரார்த்தனையாக இருக்கட்டும். எங்கே போனாலும் முழுக்கப் போ. விலைமாதிடம் போகிறாயா? முழுக்கப் போய்ச்சேர். உன்னுடைய மனைவியிடம் போகும்போதுகூட முழுக்கப் போகாதவன் நீ என்பது எனக்குத் தெரியும். தண்ணீரைக் குடிக்கும் போதுகூட முழுக்கக் குடிக்காதவன் நீ.

இப்படிப் பின்னப்பட்டுப் போன வாழ்க்கை உச்சத்தை அடைய முடியாது. எப்போதும் பகுதி பகுதியாக வாழ்ந்து பின்னப்படுத்தி வைத்திருக்கும் இந்த வாழ்வு இந்த லயத்தைக் கொணர முடியாது. அப்படிப்பட்ட வாழ்க்கை புயலின் அமளியில்தான் போய் முடியும். அதனால்தான் சாகும்போது சாவைக்கண்டு பயந்துகொண்டே சாகிறாய். சாவு உன் வீட்டுக் கதவை தட்டும்போது நடுநடுங்குகிறாய். வாழ்வின் லயத்தைச் சாதிக்காததால்தான் அப்படி நடுங்குகிறாய். அதற்குள் சாவு வந்து தொலைத்துவிட்டதே. வாழ்வை வாழவே இல்லை - அதற்குள் சாவு

வந்துவிட்டது. இன்னமும் முழுமையாகவில்லை. அவ்வளவு ஏன்? பிறக்கவே இல்லை. அதற்குள் சாவு வந்துவிட்டது. நடுங்குகிறாய்.

வாழ்வை வாழ்ந்துவிட்டவன், தன் ஒவ்வொரு நாளையும் வாழ்ந்து கழித்து விட்டவன், சாவை அழகாக வரவேற்கிறான். அவனுக்கு இனி செய்வதற்கு ஏதும் இல்லை அல்லவா? எல்லாவற்றையும் செய்து முடித்தாயிற்று. எல்லாவற்றையும் வாழ்ந்து கழித்தாயிற்று. எல்லாத் தளங்களுக்கும் போய்ப் பார்த்தாகி விட்டது. வாழ்க்கை தரக்கூடியதை எல்லாம் இவன் தனக்குள் சேர்த்து வைத்துக் கொண்டாயிற்று. வாழ்வின் தேனைச் சேகரித்து விட்டான். இப்போது இறக்கத் தயாராக இருக்கிறான். இனி ஒன்றும் இல்லையே.

உனக்குத் தெரியுமா? ஒரு ஸ்பூன் தேனைச் சேகரிக்க ஒரு தேனீ ஐந்தாயிரம் மலர்களுக்குப் போகவேண்டி இருக்கிறது. ஒரு ஸ்பூன் தேனுக்கு ஐந்தாயிரம் மலர்களா? மலைப்பாக இருக்கிறதா? ஒரு பவுண்டு தேனுக்காக தேனீ பல்லாயிரம் மைல்கள் சுற்ற வேண்டி இருக்கிறது. விஞ்ஞானிகள் அளந்து வைத்திருக்கிறார்கள். ஒரு ஸ்பூன் தேனுக்கு ஐந்தாயிரம் மலர்கள். ஐந்தாயிரம் மட்டுமல்ல, பல ஐந்தாயிரம் அனுபவங்களுக்குப் பின்னர்தான்...

ஒன்றை மட்டும் மறந்துவிடாதே. எங்கே இருந்தாலும் முழுமையாக இருந்துவிடு. இல்லை என்றால் ஒரு மலருக்குப் போவாய். தேனெடுக்காமல் திரும்பிவிடுவாய். மனிதனுக்கு ஏற்படக்கூடிய ஒரே துயரம் அதுதான். அந்தத் துயரம்தான் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதத்தினருக்கு ஏற்பட்டுக்கொண்டே இருக்கிறது. அவ்வளவு அவசரம் உனக்கு.

தேனீயைப்பற்றி நினைத்துப்பார். ஒரு மலருக்குப்போய்ச் சேர்ந்தவுடன் இன்னொரு மலருக்குப் போவதற்கு அவசரப்பட்டுக் கொண்டிருக்கிறது என்றால் அந்த மலரில் இருக்கும் தேனை எடுக்காமல் இன்னொரு மலருக்கு அவசரமாகப் பறக்கும். அப்படியே அந்த மலருக்குப் போய்ச் சேர்ந்தவுடன் இன்னொரு மலருக்குப்போகும் அவசரத்தில் அதில் இருக்கும் தேனையும் விட்டுவிட்டுப் போய்விடும். ஐந்தாயிரம் என்ன ஐந்தாறு லட்சம் மலர்களுக்குப் போய்விட்டுத் தேன் ஏதும் எடுக்காமல்தான் வந்து சேரும்.

அப்படிப்பட்ட தேனீயாக இருக்காதே. ஒரு மலருக்குப் போகும்போது உண்மையாகவே அந்த மலருக்குப் போ. இந்த உலகத்தில் இருக்கும் மற்ற மலர்களைச் சுத்தமாக மறந்து போய்விடு. அந்தக் கணம் வேறு எந்த மலரும் இந்த உலகில் இல்லை என்று எடுத்துக்கொள். ஒரு தேனீயாக இருந்து அந்த ஒரு மலரைச் சுற்றி வட்டமிட்டுப் பறந்து ரீங்கரித்து அந்த மலரை அனுபவி.

எந்த அளவுக்கு முடியுமோ அந்த அளவுக்கு அதனோடு முழுக்க இருந்துவிடு. அப்படியானால்தான் நீ வாழ்வின் தேனைச் சேகரிக்க முடியும். இறக்கும்போதும் ஆனந்தமாக இறக்க முடியும். பரவசத்தோடு இறக்க முடியும். எந்தப் புகாரும் முணுமுணுப்பும் இல்லாமல் இறக்க முடியும்.

எல்லாக் கணங்களையும் அவற்றின் முழுமையில் வாழ்ந்திருந்தால், விழிப்போடு வாழ்ந்திருந்தால், சாகும் கணத்தில் எல்லாவற்றையும் உன்னால் ஆசீர்வதிக்க முடியும், உன்னுடைய நண்பர்களையும் விரோதிகளையும். ஆம் விரோதிகளைக்கூடத்தான். அவர்கள் இல்லாமல் அந்த உச்சத்துக்கு நீ போய்ச் சேர்ந்திருக்க முடியாது. வாழ்க்கை எனும் அதிரகசிய நிகழ்வின் ஒரு பகுதிதான் அவர்கள். அவர்களும் ஒரு பகுதிதான்...

**ஐந்தாவது கேள்வி:**

> **ஒருமுறை கேள்வியிலேயே பதில் அடங்கி இருக்கிறது என்று சொன்னீர்கள். எனவே கேள்வியின் இயல்பு பதிலின் இயல்பைத் தீர்மானிக்கிறது என்றாகிறது. மனம் கேட்கக்கூடிய கேள்வி களிலேயே அடிப்படையான கேள்வி எதுவாக இருக்க முடியும்?**

மனம் எப்போதும் அடிப்படையான கேள்வியைக் கேட்கவே முடியாது. மனம் கேட்கக் கூடியது. எல்லாமும் மேலோட்டமானதாகத்தான் இருக்க முடியும். மனதைத் தவிர்த்து உன் ஜீவிதத்தில் இருந்து கேள்வி எழும்போது அது வார்த்தைகளால் ஆனதாக இருக்காது. அது ஜீவிதத்தின் இயல்பில் இருக்கும். நீயேதான் கேள்வியாகிப் போவாய். அப்போது அது அடிப்படைக் கேள்வியாக ஆகிப்போகிறது.

ஒரு ஸூபி ஞானி மசூதிக்குத் தினமும் வருவார். அவர் ஒரு வார்த்தைகூட இல்லாமல் வெகுநேரம் அங்கே நின்றிருப்பார். இப்படிப் பல வருடங்கள் கழிந்தன. பார்த்தவர்களுக்கு இவர் என்னதான் செய்கிறார் என்று தெரிந்துகொள்ளும் ஆவல் வந்துவிட்டது.

யாரோ ஒருவர் கேட்டே விட்டார். "நீங்கள் எதுவுமே சொல்வதில்லை. உங்கள் உதடு அசைவதைக்கூட நாங்கள் பார்த்தது இல்லை. ரொம்பக் கவனமாத்தான் உங்களைப் பார்த்துக்கிட்டு வந்திருக்கிறோம். மனசுக்குள்ளேகூட ஒண்ணும் சொல்றாப்படி தெரியல்லே. அப்படியே பாறை மாதிரி நிக்கறீங்களே! என்ன பிரார்த்தனை இது?"

அவர் சொன்னார். "ஒரு பிச்சைக்காரன் ஓர் அரண்மனைக்கு முன்னால் நின்றிருந்தான். அது பேரரசர் ஒருவருடையது. பேரரசர் வெளியே வந்தார். அவனைப் பார்த்தார். என்ன வேண்டும் உனக்கு? என்ன

கேட்கிறாய்? என்றார். அந்தப் பிச்சைக்காரன் சொன்னான். என்னைப் பார்த்தும் புரிந்துகொள்ள முடியவில்லை என்றால் கேட்பதால் என்ன பயன் இருக்கப் போகிறது? இன்னோர் இடத்துக்குப் போய்ப் பார்த்துக் கொள்கிறேன். என்னைப் பார். குளிரில் ஆடையின்றி இருக்கிறேன். நடுநடுங்கிக் கொண்டிருக்கிறேன். என்னுடைய வயிற்றைப் பார். முதுகோடு ஒட்டிப் போயிருக்கிறது. என் கைகளைப் பார். சதையே இல்லை. எலும்புக்கூடாக நிற்கிறேன். அப்படியும் எனக்கு என்ன வேண்டும் என்று கேட்கிறாய். என்னுடைய தோற்றம் போதாதா எனக்கு என்ன வேண்டும் என்று சொல்ல? அரசன் பயந்து போனான். அவன் சொன்னது சரியாக இருந்தது. அவனுக்கு நிறையக் கொடுத்து அனுப்பினான்.

அவர் தொடர்ந்தார். இந்த வழியாகப் போய்க் கொண்டிருந்தேன். அன்றிலிருந்து பிரார்த்தனை செய்வதை நிறுத்திவிட்டேன். இந்தப் பிரபஞ்சத்தின் நாயகனிடம் நான் என்ன சொல்ல இருக்கிறது? என்ன துயரத்தில் நான் இருக்கிறேன் என்பது அவருக்குத் தெரியாதா என்ன? நான் சொல்லித்தான் காட்ட வேண்டுமா? அறுதியிட்டுச் சொல்ல வேண்டுமா? வாய்வலிக்கச் சொல்ல வேண்டுமா? என் தோற்றத்தைப் பார்த்து அவர் தெரிந்து கொள்ளவில்லை என்றால் அவரைக் கேட்டு என்ன பயன்? அப்படியானால் அது பயனற்றுப் போய்விடும். என்னுடைய தோற்றத்தை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை என்றால் என்னுடைய மொழியை அவரால் புரிந்துகொள்ள முடியாது. என்னுடைய பிரார்த்தனை மௌனமானது. கேட்கப்படாதது என் கேள்வி. ஆசையில்லாதது என் ஆசை. அதுதான் நான். நான் ஒட்டுமொத்த ஜீவிதம்.

இதுதான் அடிப்படையானது. இதுதான் அஸ்திவாரம். இதுதான் புரட்சிகரமானது. இதுதான் வேரிலிருந்து வருவது. *Radical* என்ற வார்த்தை *roots* என்ற வார்த்தையில் இருந்து வருவது. ரேடிக்கலான, அடிப்படையான கேள்வி மனதிடம் இருந்து வருவதில்லை. மனம் அதைக் கேட்க முடியாது. மனம் அதைப் பொருத்த அளவில் ஒரு மலடு.

மனம் கடலின் அலைகள் போலத்தான். எந்த அலை ஆழமான அலை என்று கேட்க முடியுமா என்ன? எந்த அலையும் ஆழமானது அல்ல. எப்படி இருக்க முடியும்? அலைகள் கடல் மேலாகத்தானே இருக்க முடியும்? ஆழத்தில் அலைகள் இருக்க முடியாது. ஆழத்தில் எந்த அலையும் இல்லை.

மனம் மேற்புறத்தே இருப்பது. அலைகளைப்போல. மனம் எழுப்பும் எந்தக் கேள்வியும் மேம்போக்கான கேள்வியாகத்தான் இருக்கும். மனத்தைக் கழித்துப் போட்டபின்தான் அடிப்படைக் கேள்வி கேட்க முடியும். அடிப்படைக் கேள்வி மனம் கழிந்த கேள்வி. அது ஜீவிதத்தின்

கேள்வி. அப்போது வார்த்தைகளால் ஆன ஒரு கேள்வியைக் கேட்டு நீ நிற்பதில்லை. யார் அதற்கு வார்த்தைகளைத் தருவது? மனத்தை ஓரம்கட்ட வேண்டும். உன்னுடைய ஜீவிதமே ஒரு கேள்வியாக வேண்டும்.

அந்த அடிப்படைக் கேள்வியைக் கேட்கும்போதுதான் உன்னுடைய குரு தன்னை உனக்கு முழுக்கத் தரமுடியும். மேம்போக்கான கேள்வியைக் கேட்கும்போது அடிப்படையான கேள்விக்கான பதிலைத் தரமுடியாது. ஏனெனில் அது செவிடன் காதில் ஊதிய சங்காகிப் போகும். செத்துப்போன நெஞ்சத்துக்குப் போய்ச்சேரும். ஒரு கேள்வியைக் கேட்கும்போதே அதற்கான பதிலும் நிர்ணயிக்கப்பட்டு விடுகிறது.

**ஆறாவது கேள்வி:**

**எங்களை மூத்தப்பர்கள் என்று சொன்னீர்கள். எங்களுடைய முற்பிறவிகளில் வேறு குருக்களோடு இருந்திருந்தோம் என்றால் அவர்கள் சொன்னதை எல்லாம் எப்படி நாங்கள் தவறவிட்டு விட்டிருப்பது சாத்தியம் என்கிறீர்கள்?**

ஏனென்றால் நீங்கள் நிலைத்துப் போனவர்கள். கொஞ்சம் நிலைமாறத் தயாராக இருந்து விடுங்கள். இல்லையென்றால் நான் சொல்வதையும் தவறவிட்டு விடுவீர்கள்.

**ஏழாவது கேள்வி:**

**லாவோட் சூ கிழவராகவே பிறந்தார் என்று சொன்னீர்கள். எப்படி அவர் தன்னுடைய ஞானத்தைச் சாதித்தார்? கிழவராகவே பிறப்பதற்கும் ஒரு குரு தேவையாக இருந்தாரா என்ன? அந்த அளவுக்கு ஞானத்தோடு பிறக்க அவருக்கு ஒரு குரு இருந்தாரா என்ன?**

உனக்கு நகைச்சுவை உணர்வே கிடையாதப்பா. ஒரு ஜோக்கை உன்னால் புரிந்துகொள்ள முடியவில்லையே. இதுவெல்லாம் குறியீடாகச் சொன்ன கதைகள். அதன் அளவில் அது அருமையான கதை. ஆனால் கேள்விகள் கேட்க ஆரம்பித்தால் அசிங்கமாகிப்போகும்.

அப்படித்தான் எதுவும் தன் கவித்துவத்தையும், அற்புதத்தையும் இழந்து விடுகிறது. இதைத்தான் பல காலமாகவே செய்து கொண்டிருந் திருக்கிறோம். இறைஞானம் அத்தனையும் அப்படிப்பட்ட முட்டாள் தனமான கேள்விகளின் தொகுப்புத்தான்.

யேசு கிறித்து உண்மையாகவே கன்னி ஒருத்திக்கு மகனாகப் பிறந்திருப்பாரா? இது கேள்வி. அப்படிச் சொல்வது ஒரு குறியீடு

என்பதைப் புரிந்துகொள்ளாமல் கேட்கும் கேள்வி. யேசு கிறிஸ்து மரணித்த பின் உண்மையாகவே உயிர்த்தெழுந்தாரா? இன்னுமொரு கேள்வி. இதுவும் ஒரு குறியீடுதான். எண்பத்து நான்கு வயதுக் கிழவராக லாவோட் சு பிறந்தாரா? அப்படியானால் அவர் கருப்பையில் எண்பத்து நான்கு வருடங்கள் வாசம் செய்தாரா? என்ன கேள்வி இது? இது அழகான ஒரு ஜோக். லாவோட் சுவே இதைப் பரப்பியிருப்பாரா என்றுதான் நான் நினைக்கிறேன். வேறு யாரும் இப்படிப்பட்ட சூட்சுமமான விஷயத்தைச் சொல்லிப்போயிருக்க முடியாது.

இதைப் புரிந்துகொள்ள முடியும் என்றால் புரிந்து கொள்வாய். புரியவில்லை என்றால் கேள்வி கேட்காதே. அதை மறந்துவிடு. அப்படிப்பட்ட கேள்வி அதை முழுக்க அழித்துச் சிதைத்துவிடும்.

ஒரு ஜோக் சொல்லும்போது மூன்று வகையான சிரிப்புகள் தோன்றும் என்பார்கள். அதை உடனடியாகப் புரிந்து கொண்டவர்கள் சிரிப்பது முதல் வகைச் சிரிப்பு. ஜோக்கை உடனடியாகப் புரிந்துகொள்ள வேண்டும். சொல்வதற்கும் புரிந்து கொள்வதற்கும் இடையே எந்தக் கால அவகாசமும் இருக்கக் கூடாது. இல்லையென்றால் உனக்கு நகைச்சுவை உணர்வு இல்லையென்றுதான் பொருள். திடீரெனத் தாக்குவது ஜோக். திடீரென எங்கோ உனக்குள் சென்று தைப்பது ஜோக். அது என்ன என்று உனக்குத் தெரிந்துவிடுகிறது. அதை மற்றவருக்கு விவரித்து நீ ஏன் சிரித்தாய் என்று நியாயம் கற்பிப்பது எல்லாம் சாத்தியமில்லாமல் இருக்கலாம். எந்த அளவுக்கு அதை விளக்க முற்படுகிறாயோ அந்த அளவுக்கு அது புதிராக ஆகிப் போகிறது. ஏன் சிரித்தாய்? அந்தச் சிரிப்பு சூட்சுமமான சிரிப்பு. அது எப்படி நடக்கிறது?

ஒருவர் ஒரு ஜோக் சொல்லும்போது அது இரண்டு தளங்களில் நகர்கிறது. அப்படித்தான் சிரிப்பு தோன்றுகிறது. ஒரு தளத்தில் எல்லாமும் சாதாரணமானதாக இருக்கிறது. அதில் எந்தச் சிறப்பும் இருப்பதில்லை. பிறகு திடீரென முத்தாய்ப்பான வரி வந்து விழுகிறது. திடீரென ஒரு திருப்பம். எதிர்பாராத திருப்பம்தான்.

அதனால்தான் ஏற்கெனவே கேட்டுவிட்ட ஜோக் உன்னை மறுபடி சிரிக்க வைப்பதில்லை. ஏனென்றால் அப்போது அந்த எதிர்பாராத திருப்பமும் இருப்பதில்லை. எதிர்பாராத அந்தத் திருப்பம் வந்து சேர்கிறபோது... அதற்கு முந்தைய விநாடிவரை எதிர்பார்த்திருக்க மாட்டாய். எல்லாம் சம தரையில் போய்க்கொண்டிருந்தது. திடீரென எவரெஸ்ட் சிகரத்தின்மேல் இருப்பதைப்போல இருக்கிறது. எல்லாம் தலைகீழாக மாறிப் போய்விட்டது. அந்த மாற்றம் அவ்வளவு கேலிக்

குரியதாக இருக்கிறது. தர்க்கத்துக்குக் கட்டுப்படாததாக இருக்கிறது. பகுத்தறிவுக்கு ஒவ்வாததாக இருக்கிறது. சிரிப்பில் வெடிக்கிறாய். ஒரு ஜோக்கைப் புரிந்துகொள்கிறாய் என்றால் உடனடியாகப் புரிந்து கொள்கிறாய். அது சடோரியைப்போல, சமாதியைப்போல.

இரண்டாவது வகைச் சிரிப்பும் இருக்கிறது. இவர்களுக்கு ஒரு ஜோக்கைப் புரிந்துகொள்ளக் கொஞ்சம் கால அவகாசம் தேவைப்படுகிறது. அப்படியாகும்போது அது அவர்களுடைய அறிவுக்கு மட்டும் போய்ச் சேருகிறது. அவர்களுடைய முழு ஜீவிதத்துக்கும் போய்ச் சேர்வதில்லை. அவர்கள் சிரிக்கிறார்கள்தான். ஆனால் அவர்களுடைய சிரிப்பு உதட்டளவிலேயே இருக்கிறது. அது ஓர் அறிவுத்தனமான சிரிப்பு.

முதல் வகைச் சிரிப்பு வயிற்றிலிருந்து வருகிறது. இரண்டாவது வகைச் சிரிப்பு தலையிலிருந்து வருகிறது. அவர்கள் புரிந்து கொள்கிறார்கள். ஆனால் புத்தி எப்போதுமே இடையிட்டு விடுகிறது. எதையும் உடனடியாகப் புரிந்து கொள்வதில்லை. அதீத புத்திசாலிகூடக் கொஞ்சம் முட்டாள்தனமாகத்தான் இருக்கிறான். அறிவின் இயல்பு அப்படிப்பட்டது. அது மகிழ்ச்சியில் துள்ளிக் குதிக்காது. அது தர்க்க நடை போடுகிறது. அதற்குக் கொஞ்சம் நேரம் தேவையாகிறது. அது ஒரு நிகழ்ச்சியல்ல. நிகழ்வுதான். படிப்படியாக நடப்பது. படிப்படியாகப் போய் முடிவுக்கு வருவது.

அது இரண்டாவது வகை. வெளிறிப்போன சிரிப்பு. ஆழமான சிரிப்பு அல்ல. தளர்வைத் தருவதல்ல. அதில் எதுவும் புடம் போடப்படுவதில்லை. அறிவார்த்தமானது. மண்டையில் ஏதோ பளிச்சிடுகிறது. அலைகளைத் தோற்றுவிக்கிறது. அவ்வளவுதான். ஆனால் முதல்வகைச் சிரிப்பு ஆழ்ந்தது. அசலாக நடப்பது. ஒரு ஜோக் சடோரியாவது. அந்தச் சிரிப்பில் மனம் முழுக்க மறைந்துவிடுகிறது.

மூன்றாவது வகைச்சிரிப்பும் இருக்கிறது. மற்றவர்கள் சிரிக்கிறார்களே நாமும் சிரிக்கலாம் என்று சிரிப்பது. அவர்களுக்கு ஒன்றும் புரிவதில்லை. ஆனால் மற்றவர்கள் முட்டாள்கள் என்று எடுத்துக்கொள்ளக் கூடாது என்பதற்காகவே சிரிக்கிறவர்கள். என்னதான் சிரிக்கிறார்கள் என்றாலும் அவர்கள் அதைப் புரிந்துகொள்வதே இல்லை. அவர்கள் சிரித்துத் தொலைக்கவேண்டி இருக்கிறது.

முல்லா நஸ்ருதீன் ஒருமுறை பிரான்சுக்குப் போனான். அவனுடைய மனைவி அவனோடு இருந்தாள். அவர்கள் ஒரு காமிக்ஷோ பார்க்கப் போனார்கள். மனைவிக்கு ஒரே ஆச்சரியம். எப்போது மேடையில் இருக்கும் ஜோக்கர் ஒரு ஜோக் சொன்னாலும் அல்லது ஏதாவது செய்தாலும்

முல்லா வெகு சத்தமாகச் சிரித்தான். மற்றவர்கலளவிட அதிகம் சத்தமாகச் சிரித்தான். மற்றவர்கள் திரும்பிப் பார்க்கும் அளவுக்குச் சத்தமாகச் சிரித்தான்.

அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. அவனுக்கு பிரெஞ்சு மொழி தெரியாது என்பது அவளுக்குத் தெரியும். எனவே, ''முல்லா! உன்கூட நான் முப்பது வருஷம் வாழ்ந்தாச்சு. உனக்கு பிரெஞ்சு மொழி தெரியும் என்று எனக்குத் தெரியவே தெரியாது. எப்படிப் புரிஞ்சுக்கிட்டே? ஏன் இவ்வளவு சத்தமா சிரிக்கறே?'' என்று கேட்டுவிட்டாள்.

''எனக்கு அவன் மேலே வெகு நம்பிக்கை. அவன் என்னவோ வேடிக்கையாகச் சொல்ல வேணும். நாம சிரிக்கனும் இல்லையா? ஏன் கடைசியா சிரிக்கறவனா இருக்கனும்? முதல்லேயே சிரிச்சு வெச்சுடலாம் இல்லையா? அப்படிச் சிரிக்கறப்போ சத்தமா சிரிக்கனும். இதுலே என்ன செலவா ஆகப்போகுது? நான் அனுபவிச்சுச் சிரிக்கிறேன்.''

இதுதான் மூன்றாவது வகைச் சிரிப்பு. எதுவுமே நடக்கவில்லை. ஒரு பாசாங்குதான். என்னவோ வேடிக்கை நடக்கிறது என்று நினைக்கிறாய். அவனை நம்புகிறாய். மற்றவர்கள், சிரிக்கும் மற்றவர்கள்மீது நம்பிக்கை வைக்கிறாய். முட்டாள் என்று யாரும் எடுத்துக்கொள்ளக் கூடாது என்பதற்காகச் சிரிக்கிறாய்.

ஒரு ஜோக் சொன்னவுடனே சுற்று முற்றும் பார்த்து இந்த மூன்று வகைச் சிரிப்பையும் உன்னால் இனம் காண முடியும்.

இது ஒரு லாவோட் சு ஜோக். யாரும் கருப்பையில் எண்பத்து நான்கு வருடங்கள் இருக்க முடியாது. அப்படியே லாவோட் சு இருக்க முடியும் என்றாலும் அவருடைய அம்மாவை நினைத்துப்பார். லாவோட் சு ஞானியாக இருக்கலாம். அதனால் அவர் எண்பத்து நான்கு வருடம் கருப்பையில் இருக்கலாம். ஆனால் அந்த அம்மா? பாவம் அந்த அம்மா. ஒன்பது மாதம் சுமப்பதிலேயே ஏகப்பட்ட சிரமம். எண்பத்து நான்கு வருடங்களா? அதற்கு வெகு நாட்களுக்கு முன்பே அவர் செத்துப் போவாள்.

இல்லையப்பா இல்லை. அது வெகு சூட்சுமமான ஒரு ஜோக். லாவோட் சு ஞானியாகவே பிறந்தார் என்பதுதான் அது. ஒரு குறியீடு. அவருடைய குழந்தைப் பிராயத்தில் இருந்தே ஞானியாக இருந்தார் என்பதுதான். அதுதான் அதற்கு ஒரே அர்த்தம். அவருக்கு இருந்த ஞானத்துக்கு அவர் கிழவனாகவே பிறந்திருக்க வேண்டும் என்பதுதான்.

யேசு கிறிஸ்து பரிசுத்தமானவர். அவர் எப்படிக் காமத்தின் விளைவாகப் பிறந்திருக்க முடியும்? அவரும் காமத்தின் விளைவாகத்தான் பிறந்திருக்க வேண்டும். பிறப்பதற்கு வேறு வழியே இல்லை. சாதாரண உடல்உறவின் மூலமாகத்தான் அவரும் பிறந்திருக்க வேண்டும். ஆனால் அவருடைய பிறப்புக்கு என்று ஓர் அருமையான கதை சொல்லி விட்டார்கள்.

அந்தக் கதை நிஜமல்ல. என்றாலும் அந்தக் கதையில் ஓர் உண்மை இருக்கிறது. நிஜம் என்பது என்ன? உண்மை என்பது என்ன? நிஜம் என்பது காரிய சாத்தியமானது. யேசுவின் தாய் கன்னியாக இருக்க முடியாது. சாதாரண காரிய சாத்தியங்களைப்பற்றி நினைத்துப் பார்த்தால் அது சாத்தியமே இல்லைதான். ஆனால் அவர் கன்னியாக இருந்தார். இல்லையென்றால் அவ்வளவு பரிசுத்தமான ஒருவரை அவர் எப்படித் தன் குழந்தையாகப் பெற்றெடுத்திருக்க முடியும்? அவர் கன்னிதான். அவருக்கு ஒன்றுமே தெரியாமல் இருந்திருக்கலாம். சரியான வெகுளியாக இருந்திருக்கலாம். ஆண் வாசமே படாத வெகுளியாக இருந்திருக்கலாம். இதுதான் அதன் விளக்கம்.

ஆண்வாசமே படாதவள்போல... இந்தப் ''போல'' என்ற வார்த்தையில்தான் முடிச்சு அவிழ்கிறது. உடல்உறவு என்றாலே என்ன என்று தெரியாதவளைப்போல இருந்திருக்க வேண்டும். ஆனால் இந்தப் ''போல'' என்ற வார்த்தையைச் சற்றே நீட்டினால் அவற்றுக்கு வலிந்து பொருள் கூறினால் முட்டாள்தனமாகத்தான் போகும். எல்லா இறை இயல் அறிஞர்களும் முட்டாள்களாகத்தான் இருக்க வேண்டும். அவர் ஒரு கன்னிதான் என்று நிரூபிக்க முயல்கிறார்கள். கடவுள் ஒரு அசாதாரண நிகழ்ச்சியாக அதை அமைத்துவிட்டார் என்கிறார்கள். அந்தக் கால கட்டத்தில் நடந்த ஒரு அதிசய நிகழ்ச்சி என்கிறார்கள்.

வேறு எப்படியும் சொல்லி விளக்க முடியாத ஒரு விஷயத்தை அழகாகச் சொல்வதுதான் இதுவெல்லாம். யேசு ஒரு கன்னியிடம் பிறந்தவர் என்று சொல்வது. அவர் பரிசுத்தமான மூலத்தில் இருந்து வந்தவர் என்று சொல்வது. உலகத்தின் அசுத்தம் இன்னதெனத் தெரியாத வெகுளியும், பரிசுத்தமானவளுமான மேரியிடம் பிறந்தவர் என்று சொல்வது. அவ்வளவுதான். அதை விளக்கித்தான் ஆகவேண்டும் என்று வலியுறுத்தாதே. ஏனென்றால் எந்த விளக்கமும் அதனுடைய தாத்பரியத்தைக் கொச்சைப்படுத்திவிடும்.

**கடைசிக் கேள்வி:**

**நீங்கள் ஒரு சாந்நித்தியமே தவிர வேறு எவருமில்லை என்றீர்கள். எதுவும் செய்வதில்லை என்று சொன்னீர்கள். ஆனால் எனக்கும்**

*மற்றவருக்கும் வேறு தெரிகிறது. உங்களுடைய கருணையால் நீங்கள் என்றும் எங்கள் மீது தாக்கம் செலுத்துகிறீர்கள் என்று படுகிறது. உங்களுடைய சாந்நித்தியத்துக்கு எங்களை வர வைக்கிறீர்கள் என்று தோன்றுகிறது. இது எங்களுடைய கற்பனைதானோ?*

என்னுடைய சாந்நித்தியம் செய்வதைத்தவிர நான் வேறு எதையும் செய்ய முடியாது. நான் ஒன்றும் செய்வதில்லை என்று சொல்லும்போது நான் செய்கிறேன் என்ற உணர்வு என்னிடம் இல்லை என்றுதான் சொல்கிறேன். கர்த்தா கரைந்து போய்விடுகிறார். எனவே கர்த்தா இல்லாமல் கர்மா எங்கே வந்தது?

என்றாலும் என்னென்னவோ நடக்கிறது. நடக்கும் எதற்கும் நானே கர்த்தா என்று சொல்லிக்கொள்ள முடியாது. கர்த்தா நான் அல்ல. நானே இல்லாதவன். எந்த லேபிளும் இல்லாதவன். நான் ஒரு திறப்பு. அவ்வளவுதான். என்னுடைய சாந்நித்தியத்தில் இருந்தால் பலவும் சாத்தியப்படுகிறது. என்னுடைய சாந்நித்தியம் உன்னை எப்படியாவது தொடவிட்டாய் என்றால், கரைய விட்டாய் என்றால், உன்னுடைய ஒரு பகுதியாக ஆகவிட்டாய் என்றால், நிறையத்தான் நடக்கும்.

நடக்க முடியாததுகூட நடக்கும். ஆனால் நான் கர்த்தா அல்ல. நடப்பது நடக்கிறது. குறிப்பாக நான் எதையும் செய்வதில்லை.

நீ எப்படி நடப்பதைப் பார்த்துக் கொண்டிருக்கிறாயோ அப்படியே நானும் பார்த்துக் கொண்டிருக்கிறேன். சூரியனிடம் போ. நன்றி சொல். இருட்டை விரட்டி விட்டாயே உனக்கு நன்றி என்று சொல்லிப் பார். காலம் காலமாக இருட்டைத் துரத்திக் கொண்டே இருந்திருக்கிறாயே உனக்கு நன்றி என்று சொல்லிப் பார். சூரியனுக்கு ஒரே ஆச்சரியமாகத்தான் இருக்கும். இருட்டு என்றாலே என்ன என்று எனக்குத் தெரியாதப்பா. நான் அதைப் பார்த்ததே இல்லை. நான் அதை அழித்ததே இல்லை. பார்த்ததே இல்லை எனும்போது அழித்ததெப்படி? என்றுதான் சூரியன் சொல்லவேண்டும். என்றாலும் நடப்பது நடந்துகொண்டேதான் இருக்கிறது. வெளிச்சம் வருகிறது. இருட்டு மறைந்து விடுகிறது.

இங்கே இருக்கும் சாந்நித்தியத்தை அனுமதித்தால் நிறையச் சாத்தியங்கள் கண்கூடாகும். இருட்டு மறையும். ஆனால் நான் கர்த்தா அல்ல. நான் எதையும் உன்மேல் திணிப்பதில்லை. அதில் வன்முறை இருக்கும். எனக்கும் வன்முறைக்கும் வெகுதூரம். அப்படியே வன்முறை இல்லை என்றாலும் நான் கர்த்தா அல்ல என்பதால் நான் அதைச் செய்கிறேன் என்பதே இல்லை. எனக்குள் வந்து பார்த்தால் அங்கே

யாரையும் பார்க்க மாட்டாய். அந்தக் கோயில் காலியாகக் கிடக்கிறது - எதுவுமே இல்லாதது ஒன்று மட்டுமே அந்தக் கோயில்.

ஆமாம். நான் உனக்கென்று எதையும் செய்வதில்லை. என்றாலும் நிறையத்தான் நடந்து கொண்டிருக்கிறது. எனவே இதைக் கற்பனை என்று நினைக்காதே. இது கற்பனை என்று நினைக்க வைப்பதும் இந்தச் சாதுரியமான மனதுதான். அப்படி நம்ப வைத்துவிட்டால் மனம் மூடிக் கொள்ளலாமே. இது ஒரு கற்பனை... ஒரு படம்... இது அல்லது அது என்று ஏதாவது சொல்லி வைத்துவிட்டால் மனம் மூடிக் கொள்ளலாம் பார். பிறகென்ன? ஏதும் நடக்காது நின்றுபோகும்.

இந்த மனதின் குறக்களியெல்லாம் காது கொடுத்துக் கேட்காதே. என்னோடு இருக்கும்போது மனத்தோடு இருக்காதே. நான் மனமற்றவன். என்னோடு இருக்க ஒரே வழி மனத்தைக் கழித்தவனாக இருப்பதுதான். பிறகு எல்லாமும்தான் நடக்கும். யாரும் எதையும் செய்வதில்லை. அவை தாமாக நடக்கின்றன.

என்னோடு மௌனமாக அமர்ந்திருக்கும்போது நிம்மதியாக உட்கார்ந்திருக்கும்போது நீ வளர்கிறாய். யாரும் எதையும் செய்வதில்லை. நீ எதுவும் செய்வதில்லை. நானும் எதையும் செய்வதில்லை. சும்மா உட்கார்ந்திருந்தாலே போதும். உனக்குள் இருக்கும் ஜீவிதம் தானாக வளர்கிறது.